ஸ்ரீ

அதிவீரராமபாண்டியன்

இயற்றிய

# திருக்கருவைக்கலித்துறையந்தாதி



திருவல்லிக்கேணி

சே. கிருஷ்ணமாசாரியரும்,

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரும்

இயற்றிய

உரையுடன்

சென்னை:

வைஜயந்தி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விலை அணா 8.

1915

# பதிற்றுப்பத்தந்

பொலிவையுடைய திருக்கருவையி லெழுந்தருளிய விறை
ய்யுளால் அந்தாதித் தொடையா யமைந்த நூலென ஐந்து
தியாய் விரவித்தொக்க அன்மொழித்தொகை நிலைத்தொட
என்னும் பிரபந்தத்திற்குக் காரணக்குறியாய் வந்தது.
திருப்பதி அது இடவாகுபெயராய் இறைவன் மேல
ந்துச் செய்யுள் ஒவ்வோர் சந்தமாக வரும் நூறு
யராய் நின்றது. அந்தாதி அந்தம் ஆதி எனப் பிரிந்து
மற்றொரு செய்யுளின் முதலில்வர அந்தாதித்துத் தொடு
ருசொல்லாய்ப் பிரபந்தத்தின் மேனின்றன. திருக்கரு
ாக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர்.
பத்து உருபும் பயனுந் தொக்க ஏழாம் வேற்றுமை
தாடர். பதிற்றுப்பத்து பதிற்றுகிய பத்தென நிற்றலால் ப
லைத்தொடர். பதிற்றுப் பத்தந்தாதி உருபும் பயனுந் தொ
ற்றுமைத் தொகை நிலைத்தொடர். பதிற்றுப்பத்து பத்தாகிய
து நூறு என்னும் இலக்கத்தின்மேல் நிற்கிறது. திரு என்பவை
ற்கையடையாக்கிக் கருவையி லெழுந்தருளிய இறைவன்மே
அந்தாதித் தொடையா யமைந்த நூலென நான்கு சொல்
ன்மேனின்ற தெனினு மமையும்.

பொருட்டொடர் நிலைச்செய்யுளாற் றொடுத்த காப்பியம்
டர் நிலைச்செய்யுளாற் றொடுத்த நூல்மேனின்றது. பதி
ண்பா, பத்துக் கலித்துறை பொருட்டன்மை தோன்ற அந்
பப்பத்தாகப் பலசந்த விருத்தங்கள் முதலிய செய்யுளி
தோன்ற நூறுசெய்யுளால் இடையிற் பாடும் புலவன் கார
தந்தமையால் பதிற்றுப் பத்தந்தாதியெனக் காரணவாக்
ருகின்றது.

## காப்பு.

### அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

ாகருவைப்பதிற்றுப்பத்தந்தாதிச்சொல்லலங்கன்முற்
ானவுருவாங்களவீசனளினசரணமிசைச்சாத்தத்
வருவிபொழிதடக்கைத்தறுகட்சிறுகட்புகர்மா
ாவெண்பிறைக்கோட்டுங்களை

ஞானவடிவாகிய, கஜாசன் —

மானது, நளினம் சரணமிசை

ல் சாத்த, தானம்—மதத்தை, அருவ—யாறுபோல,

க—நீண்ட துதிக்கையையும், நறுகண் சிறுகண் — அ

சிறிய திருக்கணகளையும், புகர்முகத்து—புள்ளிவாய்ந்த

னல்—வளர்ந்த, இளவெண்பிறை — இளமைவாய்ந்த வெ

யொத்த, கோடு—கொம்பையுமுடைய, குணகுஞ்சரத்தின்

, அடிதொழுவாம்—திருவடியை வணங்குவாம்.

ானுக்குச் சாங்கம் உபாங்கமும் திருவருள் வடிவாக

வாங்கள வீசன் எனவும், எண்சாணுடம்புக்குச்

லால் அத்தலத்தில் எழுந்தருளிய குணவிநாயகனைக் குண

ஞர். நளினசரணம் இரண்டும் வடசொல்லாதலால் "

ம் நின்ற வுயிர்முன்" என்ற சூ—ஆல் ஒருமொழி முத

ாது "இடையுரிவடசொலின்" என்ற சூ—ஆல் இயல்பாயிற்

ரபது மது. பிறைத்தொழிலாகு பெயராய்ச் சந்திரன்

, அகரவீறு கெடுதல் சந்தி, ஐ புடைபெயர்ச்சி விகுதி.

## நூல்.

சீரார்கமலச்சேவடியென்சிந்தையிருத்தியுனதுதிருப்

ராயிரமுமெடுத்தோதிப்பெம்மான்கருவையெம்மானென்

ராவமுதமுண்டவர்போலனந்தானந்தத்தகநெகிழ

வாராவின்பமறிவித்தாயறியேனிதற்கோர்வரலாறே.

ள்.) சீர் ஆர்—பொலிவமைந்த, கமலம் சே அடி—தாமரை

னது திருவடியின்கீழ், என் சிந்தை இருத்தி—எனது மன

து—உனது திருபேர் ஆயிரம் உம—உனது ஆயிரந் திருந

ு ஓதி—எடுத்துக் கூறி, பெம்மான்—பெருமானே, கருவை

நக்கருவையில் எழுந்தருளிய எமதிறைவனே, என்று—

ரா அமுதம்—தெவிட்டாத வமுதத்தை, உண்டவர்போ

ால, அனந்த ஆனந்தத்து—அளவில்லாத பேரானந்தத்த

ம் நெக்குவிட்டுருக, வாரா இன்பம்—பிறர்க்கமையாத

அறிவித்தாய்—அடியேனுக்குத்தந்தருளினாய், இதற்கு—அ

வரலாறு—அடியேனிடத்து நிகழும் நற்செய்கையை,

ன், (இஃதோர் பெருவியப் பென்றபடி.)

டத்து அன்பு ஓர் தினையளவு மில்லாதிருக்கத் தே

ரு பெருவியப் பென்பார் அறியேனிதற்கோர்

றப் பெயரெச்சம். ஆர் பகுதி.

ஸ்ரீ

# திருக்கருவைக்கலித்துறையந்தாதி.

'திரு' என்னும் பலபொருளொருசொல், வடமொழியிலே 'ஸ்ரீ' என்பதுபோல, தமிழிலே தேவர்கள், அடியார்கள், ஞானநூல்கள், மந்திரங்கள், புண்ணியஸ்தலங்கள் முதலிய மேன்மையையுடைய எப்பொருள்களுக்கும் விசேஷணபதமாகி, அவற்றிற்குமுன்னர் மகிமைப்பொருளை உணர்த்தி வரும்: ஸ்ரீஅரங்கேசுவரர், ஸ்ரீமாணிக்கவாசகர், ஸ்ரீவாதுளாகமம், ஸ்ரீபஞ்சாக்ஷரம், ஸ்ரீசாலிவாடிபுரம், ஸ்ரீபாதம் எனவும்; திருமுருகர், திருநாளைப்போவார், திருக்கோவையார், திருவைந்தெழுத்து, திருநெல்வேலி, திருவடி எனவும் வழங்குமாற்றால் அறிக: இதனை ஸ்ரீ என்பதன் சிதைவென்பாருமுளர். இங்கே 'திரு' என்பது, கருவைக்கு அடைமொழி; கலித்துறையந்தாதிக்கு அடைமொழியாகவுமாம்.

கருவை - சிவஸ்தலங்களில் ஒன்று; இது, பாண்டியநாட்டில் உள்ளது. கரிவலம்வந்தநல்லூர் எனப்படும்: குலசேகரபாண்டியன் வேட்டையாடும்போது எதிர்ப்பட்ட ஒருயானையைத் துரத்த, அது வேகமாகப்போய்க் கடவுள் இருந்த புதரை வலமாகச் சென்று பிறகு சிவகணமாகப்பெற்றமையால், அத்தலம் இப்பெயர் பெற்றது. இவ்வூரில் எழுந்தருளியுள்ள சிவபிரான் திருநாமம் - பால்வண்ணநாதர், முகலிங்கர், திருக்களாவீசர். அம்மை - ஒப்பனை தேவி. தலவிருட்சம் - திருக்களா.

கலித்துறையந்தாதி - கட்டளைக்கலித்துறையினால் நூறுபாடல்பாடுவது. பதிற்றந்தாதி நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல் நூற்றந்தாதியாம். அதாவது - நூறுவெண்பாவினாலேனும், நூறுகட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுவது. இந்நூல், அந்தாதித்தொடையால் அமைந்த நூறுகட்டளைக்கலித்துறைகளையுடையது. அந்தாதி - அந்தத்தை ஆதியாகவுடையது: அன்மொழித்தொகை; வடமொழித்தொடர், தீர்க்கசந்தி. அந்த ஆதி எனப் பிரிக்க. அந்தாதியாவது - முன்நின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம் பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல், மண்டலித்தலெனப்படும். இது, தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாம். சொற்றொடர்நிலைச்செய்யுள் பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்ற வகையில், இது - சொற்றொடர்நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும்.

எனவே, திருக்கருவையென்னுந் திருப்பதியைப்பற்றிப் பாடியதோர் நூலென்பது, பொருள்; அத்திருப்பதியில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானைப் பாடியதென்பது கருத்து.

ஆசிரியர் தொல்காப்பியனார், செய்யுளியலில் "விருந்தே தானும், புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்பதனால் 'விருந்துதானும் பழங்கதை

மேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்து வரத் தொடுக்கப்படுந் தொடர்நிலைமேலது' என்று கூறினமையின், இவ்வந்தாதி அங்ஙனங்கூறிய விருந்தா மென்று உணர்க ; இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திரரூபமானது. இதனை, குட்டித்திருவாசக மென்று வழங்குவதும் உண்டு.

கட்டளைக்கலித்துறையின் இலக்கணம் :—பெரும்பாலும் முதல்நான்கு சீர்கள் ஈரசைச்சீர்களும் ஐந்தாஞ்சீர் விளங்காய்ச்சீருமான நெடிலடி நான்கு கொண்டு, அடிதோறும் வெண்டளை பிறழாமல், நேரசை முதலாயின் ஓரடிக்கு ஒற்றொழிந்த எழுத்துப் பதினாறும், நிரையசை முதலாயின் அவ்வெழுத்துப் பதினேழுமாய் ஏகாரவீற்றதாய் வருவது. இது, வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா என்ற நால்வகைப்பாவில் கலிப்பாவின் இனமான கலித்தாழிசை கலித்துறை கலிவிருத்தம் என்ற மூன்றில் ஒன்றாகிய கலித்துறையினும் வேறுபட்டுவருவது.

## அதிவீரராமபாண்டியர்.

இந்நூலாசிரியராகிய அதிவீரராமபாண்டிய ரென்பவர், தென்னாட்டில் மதுரைமாநகரத்திற் செங்கோல்செலுத்திய சந்திரவமிசத்து அரசர்களில் ஒருவர். இவர்காலம் ஏறக்குறைய ஆயிரம்வருஷங்களுக்கு முன்பென்றும், இவருடைய ஜ்யேஷ்டசகோதரரது பெயர் வரதுங்கராமபாண்டிய ரென்றுங் கூறுவர். இவர்செய்தனவாகச் சொல்லப்படும் வேறுநூல்கள் - நைடதம், கூர்மபுராணம், லிங்கபுராணம், காசிகாண்டம், திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி, திருக்கருவைவெண்பாவந்தாதி, நறுந்தொகை [வெற்றிவேற்கை] முதலியன. இவர்செய்துள்ள நூல்களால், இவர் இலக்கிய இலக்கணங்களிலும் பலவகைக் கலைஞானநூல்களிலும் மிகத்தேர்ச்சிபெற்ற மகாகவியென நன்றாகத் தெரிகின்றது. இவர் செய்துள்ள நூல்களில் முதல் நான்கு நூல்களால், இவர்க்கு வடமொழிப்பயிற்சி மிகுதியாக இருத்தல் வேண்டுமென நன்கு துணியப்படுகின்றது. திருக்கருவைவிஷயமாக இவர்பாடிய மூன்று அந்தாதிகளாலும், இவர்க்குப் பரமசிவனிடத்திலுள்ள மெய்யன்பு தெளிவாக வெளியாகின்றது. கொக்கோக மெனப்படும் மதனநூலும் இவர் செய்த தென்பது சிலர்கொள்கை.

இவர் இந்த அந்தாதிகள் இயற்றியதற்குக் காரணம் :—இவர்க்குக் காமவொழுக்கமிகுதியால் தொழுநோய் நேர்ந்ததுபற்றிக் கழிவிரக்கங்கொண்டு திருக்கருவைத்தலத்தில்வந்து சிவபிரான்மீது அந்தாதிகள்மூன்றையும் பாடித் துதித்தமாத்திரத்தில் அந்நோய் நீங்கப்பெற்று நற்கதிபெற்றனர் என்று கூறுவர்.

இவர்க்குக் கல்விகற்பித்த ஆசிரியர் - சுவாமிநாததேவர். தீக்ஷாகுரு - அகோரசிவாசாரியர். இந்தஇரண்டு ஆசிரியரையும்பற்றித் தாம்பாடிய சில நூல்களில் வணக்கங் கூறியுள்ளார்.

---

## காப்பு.

காப்பு - காத்தல். அது, இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்தைக் குறிக்கும். ஆகவே, கவி தமக்கு நேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்லதோர் கடவுளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து. கடவுள்வணக்கம், இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்க மென்றும், ஏற்புடைக்கடவுள்வணக்க மென்றும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம் தாம் குலதெய்வமாகக் கொண்டு ஆராதிக்கின்ற கடவுளை வணங்குதல். இதற்கு உதாரணம் - வைஷ்ணவசமயத்தார் விஷ்ணுவையும், சைவமதத்தவர் சிவனையும் வணங்குதல் போல்வன. ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது - தாம் தாம் செய்ய எடுத்துக்கொண்ட காரியத்துக்குத் தகுதியையுடைய கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - இராமாயணங்கூறுபவர் இராமனையும், கந்தபுராணமுரைப்பவர் சுப்பிரமணியமூர்த்தியையும் வணங்குதல் போல்வன. இக்காப்புச்செய்யுள், சிவபிரானது மூத்ததிருக்குமாரரான விநாயகரைப் பற்றியது. சைவசமயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள், தம்மைச் சரணமடைந்தவர்கள் தொடங்குந் தொழில்கட்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மை அடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கின்ற செய்கைகட்குப் பலஇடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேச்வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தியைக் குறித்ததாதலால், வழிபடுகடவுள் வணக்கமாம்.

> நீட்டும் பனுவற் கருவையந் தாதித் தெரியலெந்தை
> சூட்டும் படிக்குத் துணைசெய்த வாசுடர் சூழ்பிறங்க
> லெட்டின் புறத்து முனிமொழி பாரத மென்றுநிற்கக்
> கோட்டுந் தவளப் பிறைக்கோட்டு மும்மத குஞ்சரமே.

(இ - ள்.) முனி மொழி பாரதம் - வியாசமுனிவன் கூறியருளிய மகாபாரதமானது, என்றும் - எப்பொழுதும், நிற்க - (உலகத்தில்) நிலைபெற்று விளங்கும்படி, (அப்பாரதத்தை), சுடர் சூழ் - (சூரிய சந்திரர் ஆகிய இரு) சுடர்களும் வலம் வருகின்ற, பிறங்கல் - மேருமலையாகிய, எட்டின் புறத்து - ஏட்டினிடத்தில், கோட்டும் - எழுதிய, தவளம் பிறை கோடு - வெண்மையான பிறைச்சந்திரன் போன்ற ஒற்றைத்தந்தத்தையும், மும் மதம் - மூன்றுமதங்களையுமுடைய, குஞ்சரம் - யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள்,— நீட்டும் - (என்னால்) எழுதப்பெற்ற, பனுவல் - நூலாகிய, கருவை அந்தாதி - திருக்கருவைக்கலித்துறையந்தாதி யென்னும் பெயரையுடைய, தெரியல் - பாமாலையை, எந்தை சூட்டும் படிக்கு - எனது பரமபிதாவாகிய சிவபிரான் அணிந்துகொள்ளும்படி, துணை செய்த ஆ - உதவிசெய்த விதம் என்ன ஆச்சரியம்! [மிகவும் வியக்கத்தக்கது என்றபடி]; (எ - று.)

இங்ஙனம் விநாயகமூர்த்தியை வணங்கியதனால், எடுத்த கருமம் இடையூறின்றி இனிதுமுடியு மென்பது, கருத்து. இது, வாழ்த்து வணக்கம் வரு

பொருளுரைத்தல் என்ற மூன்றுவகையான மங்களங்களுள், வாழ்த்தின் பாற்படும்; வணக்கத்தின்பாற்படுமெனவுரைப்பினுமாம். கருவையந்தாதிப் பனுவல்தெரியல் என்றது, திருக்கருவையி லெழுந்தருளிய சிவபெருமான் மீது மலர்கள்கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலைபோன்று சொற்கள்கொண்டு தொடுக்கப்பட்ட பாமாலையாகிய பிரபந்தமென்க. மேருமலையைச் சூரிய சந்திரர்கள் நாடோறும் வலம்வருகின்றன ரென்பது, நூல் துணிபு. வேத வியாசமகாமுனிவர் மகாபாரதநூலை இயற்றிவருகிறபொழுது, விநாயகர் அந் நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவருகையில், இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோய்விட, வல்லவனுக்குப் புல்லும் ஆயுதமென்றவகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப் பறித்து அதனையே எழுதுகருவியாகக்கொண்டு அம்மகாபாரதத்தை யெழுதி முடித்தன ரென்பது, இங்குக் குறித்த வரலாறு. "நீடாழியுலகத்து மறைநாலொடைந்தென்று நிலைநிற்கவே, வாடாததவவாய்மைமுனிராசன் மாபாரதஞ் சொன்னநாள், ஏடாகவடமேருவெற்பாக வங்கூரெழுத்தாணி தன், கோடாக வெழுதும் பிரான்" என்ற வில்லிபுத்தூரார்வாக்கு இங்குக் கருதத்தக்கது. 'முனிமொழி பாரதம் என்றும் நிற்க' என்றது, ஒருகாலத்தும் அழியாத நான்குவேதங்களோடு இந்தப் பாரதம் ஐந்தாம்வேதமென்று பிரசித்திபெற்று விளங்க என்றவாறு. "ஸர்வஸ்யகாத்ரஸ்ய சிர: ப்ரதாநம்" என்றபடி உடம்பினுள் தலைமைபெற்ற உறுப்பாகி உத்தமாங்க மென்று பெயர்பெற்ற தலை யானைத்தலையாயிருத்தல்பற்றி, விநாயகக்கடவுளை 'குஞ்சரம்' என்றே கூறினர். மும்மதங்களாவன - கர்ணமதம் கபோலமதம் பீஜமதம் என்பன. இது, 'குஞ்சரம்' என்றதற்கு ஏற்பக் கூறிய இயற்கையடைமொழி.

தெரியல் - தெரிந்தெடுக்கப்பட்ட மலர்களையுடையது என மாலைக்குக் காரணப்பெயர்; விளங்குவது என்பதுபற்றிய பெயருமாம். எந்தை - என் தந்தை என்பதன் மரூஉ. ஆ - ஆறு என்பதன் விகாரம்; விதமென்பது, பொருள். 'ஆறு' என்ற சொல் வியப்புப்பொருள்குறிக்குமிடத்து இவ்வாறு பயனிலை தொக்குவருதல், இயல்பு; இப்படி ஆறென்றசொல் முடிபின்றி வியப்புப்பொருள் குறித்துவருதலை, "வெள்ளைவாகனக்குரிசில் வின்மைவல்லப மிருந்தவாறே" என்ற பாரதத்திலும், "பூங்காவிரிப்புனற்கோயிலுள்ளே மிக்கபோகமெல்லாம், யாங்காண யோகத்துயில்கொண்டவாறு" என்ற பிள்ளைப்பெருமாளையங்கார்வாக்கிலுங் காண்க. சுடர்என்றது - ஆகுபெயரால், சூரிய சந்திரரைக் குறிக்கும். பிறங்கல் - (நெடுந்தூரத்தாராலும் காணப்படுமாறு ஓங்கி) விளங்குவது என மலைக்குக் காரணக்குறி. முனி - மநநசீலன். குஞ்சரம் - காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்பது என்றும், துதிக்கையையுடையது என்றும் காரணங் கூறுவர்.

---

## நூல்.

1. சீரணிகொன்றைச்சடைக்காடுமுக்கண்ணுஞ்செம்முகமுங்
காரணிகண்டமுநான்குதிண்டோளுங்கருவைப்பிரான்
வாரணிமென்முலையொப்பனைபாகமும்வண்கமலத்
தேரணிசெம்பொற்றுணைத்தாளுமென்னெஞ்சிடங்கொண்டவே.

(இ - ள்.) கருவை பிரான் - திருக்கருவையிலெழுந்தருளியுள்ள சிவபிரானது, சீர் அணி கொன்றை சடை காடும் - அழகுபொருந்திய கொன்றைமலரையணிந்த (கபர்த்தமென்னுஞ்) சடைத்தொகுதியும், முக் கண்ணும் - மூன்று கண்களும், செம் முகமும் - சிவந்த திருமுகமும், கார் அணி கண்டமும் - (விடமுண்டதனாற்) கருநிறம்பொருந்திய திருக்கழுத்தும், நான்கு திண் தோளும் - வலிய நான்குதிருத்தோள்களும், வார் அணி மெல் முலை ஒப்பனை பாகமும் - கச்சையணிந்த மெல்லிய தனங்களையுடைய ஒப்பனையென்னுந் திருநாமம்பூண்ட உமாதேவியைக் கொண்டுள்ள இடப்பாகமும், வண் கமலத்து ஏர் அணி செம்பொன் துணை தாளும் - வளப்பமுள்ள தாமரைமலரின் அழகைக்கொண்ட சிவந்த செம்பொன்னினாலாகிய வீரக்கழலை யணிந்த இரண்டு திருவடிகளும், என் நெஞ்சு - எனது மனத்தை, இடம் கொண்ட - (தமக்கு) வாழுமிடமாகக் கொண்டன; (எ - று.)

யான் எப்பொழுதும் திருக்கருவைச் சிவபெருமானது சடை முதலியவற்றையே தியானிப்பே னென்பதாம்; "இறைப்பொழுதும் நீங்கா திரு கண்ணும் நெஞ்சுங், கறைக்களமுஞ் செஞ்சடிலக்காடும் - பிறைக்கொழுந்தும், புண்டரிக வாண்முகமும் பூங்களவினீழலோன், ஒண்டாளப்புன்மூரலும்" என்றார் வெண்பாவந்தாதியிலும். இறைவனுக்குக் கண்மூன்றும் முச்சுடராம். திருப்பாற்கடல் கடைந்தகாலத்து அதனினின்று உண்டான ஆலாகலவிஷத்தைக் கண்டு அஞ்சியோடின தேவர்களின் வேண்டுகோளால் சிவபிரான் அதனை உண்டு கண்டத்தில் நிறுத்தியதனால், 'காரணிகண்டம்' எனப்பட்டது. ஒப்பனை - அலங்காரம்; உடையவளுக்குப் பண்பாகுபெயர். ஒப்பனையென்பது - திருக்கருவைச்சிவபிரானது தேவியாரின் திருநாம மென்பர். 'சடைக்காடும்' என்று தொடங்கி 'துணைத்தாள்' என்று முடித்தமையால், இது - கேசாதிபாதபரியந்தமாக நூலாசிரியர் சிவபிரானைத் தாம் அநுபவிக்குந்தன்மை பெறப்படும்.

எல்லாநூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுவது மரபாதலால், 'சீர்' என்று தொடங்கினார்; "வழிபடுதெய்வ வணக்கஞ்செய்து, மங்கலமொழிமுதல்வகுத், தெடுத்துக்கொண்ட விலக்கண விலக்கியம், இடுக்கணின்றி யினிது முடியும்," "சீர் மணி பரிதி யானை திரு நில முலகு திங்கள், கார் மலை சொல் லெழுத்துக் கங்கை நீர் கடல் பூத் தேர் பொன், எருமிவைமூவாறும் இதன்பரியாயப்பேரும், ஆருமங்கலச்சொல் செய்யுளாய்ந்து முன்வைக்க நன்றாம்" என்பன நோக்குக.

கொன்றை - அதன்மலர்க்கு முதலாகுபெயர். செம்பொன் - அதனாலாகிய கழலுக்குக் கருவியாகுபெயர். கொண்ட - 'அன்' சாரியை பெறாத பலவின்பால்முற்று: ('அன்' சாரியை பெறின் 'கொண்டன' என நிற்கும்.)

'ஒப்பனை பாகம்' என்பதில் அடங்கிய கதை:—முன்னொருகாலத்திற் கைலாசகிரியிலே சிவபிரானும் உமாதேவியும் ஏகாஸநத்தில் நெருக்கமாக வீற்றிருந்தபொழுது, பிருங்கியென்னும் மகாமுனிவர் பரமசிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்ய விரும்பி ஒருவண்டுவடிவமெடுத்து அவ்வாசனத்தை இடையிலே துளைத்துக்கொண்டு அதன்வழியாய் நுழைந்துசென்று அம்பிகையை விட்டுச் சிவபிரானைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்ய, அதுகண்ட பார்வதீதேவி தன்பதியை நோக்கி 'முனிவன் என்னைப் பிரதக்ஷிணஞ்செய்யாமைக்கு ஏது என்ன?' என்று வினவ, உருத்திரமூர்த்தி 'இம்மைமறுமைகளில் இஷ்டசித்தி பெற விரும்புபவர் உன்னையும் முத்திபெறவிரும்புபவர் என்னையும் வழிபடுவர்; இது நூல்துணிபு' என்று சொல்ல, அது கேட்ட தேவி 'இறைவனது வடிவத்தைப் பிரிந்து தனியேயிருந்ததனாலன்றோ எனக்கு இவ்விழிவு நேர்ந்தது' என்று இரங்கி, தான் சிவபிரானை விட்டுப் பிரியாதிருக்குமாறு கருதி, புண்ணியக்ஷேத்திரமாகிய கேதாரத்திற் சென்று தவம்புரிந்து வரம்பெற்று அப்பிரானது வடிவத்திலே இடப்பக்கத்தைத் தனக்கு இடமாக அடைந்து அவ்வடிவிலேயே தான் ஒற்றுமைப்பட்டு நின்றனளென்பதாம். இங்ஙனம் வலப்பாகம் சிவரூபமும் இடப்பாகம் பார்வதீரூபமு மாகுமாறு தனதுவடிவத்தில் ஒருபங்கை அம்பிகைக்குக் கொடுத்துத் தான் ஒருபங்காயுள்ள சிவபிரான் அர்த்தநாரீசுவரமூர்த்தியாவன். (௧)

2. இடங்கொண்டசென்னிநிலனுறத்தேவரிறைஞ்சமன்றி
னடங்கொண்டிடப்பண்டுநான்செய்ததெத்தவநாண்மலர்சேர்
தடங்கொண்டவாவிபுடைசூழ்கருவைத்தனிமுதலே
வடங்கொண்டபூண்முலையொப்பனைகேள்வவிவ்வையகத்தே.

(இ - ள்.) நாள் மலர் சேர் - அன்றுபூத்த [புதிய] மலர்கள் பொருந்திய, தடம் கொண்ட - விசாலமான, வாவி - நீர்நிலைகளால், புடை சூழ் - (எல்லாப்) பக்கங்களிலும் சூழப்பெற்ற, கருவை - திருக்கருவையென்னுந் திவ்வியதலத்திலெழுந்தருளிய, தனி முதலே - ஒப்பற்ற முதற்கடவுளே! வடம் கொண்ட பூண் முலை - முக்தாஹாரம் முதலாகிய ஆபரணங்களை யணிந்த தனங்களையுடைய, ஒப்பனை - ஒப்பனைதேவியார்க்கு, கேள்வ - கணவனே!—இ வையகத்து - இந்த நிலவுலகத்திலே, தேவர் - தேவர்கள், இடம் கொண்ட சென்னி - (தமது) பெருமைபொருந்திய தலைகள், நிலன் உற - தரையிற் படுமாறு, இறைஞ்ச - வணங்கும்படி, மன்றில் - திருச்சபைகளில், நடம் கொண்டிட - (நீ) திருநடனஞ்செய்ய, (அதனைச்சேவித்தற்கு), நான் பண்டு செய்தது - நான் முற்பிறப்பிற் செய்தது, எ தவம் - எவ்வகையான அருந்தவமோ? (எ - று.)

நான் முற்பிறப்பில் அரும்பெருந்தவஞ்செய்ததனால்தான், தேவர்களும் பயபக்திவிநயங்களுடன் வந்து தண்டனிடும் நினது திருநடனதரிசனம்

இப்பிறப்பில் எனக்கு நேர்ந்தது என்பதாம். இப்பிறப்பில் தமக்குத் திருநடனதரிசனங் கிடைத்ததுபற்றி இந்நூலாசிரியர் தமது முற்பிறப்பின் தவத்தை ஊகிப்பதனால், இச்செய்யுள் - அநுமாநாலங்காரத்தின்பாற்படும். சிதம்பரத்தில் கனகசபையில் வியாக்கிரபாத பதஞ்சலி முனிவர்கட்காகவும், மதுரையில் வெள்ளியம்பலத்தில் தடாதகைப்பிராட்டியாரின் திருக்கலியாண மகோற்சவத்துக்கு வந்த தேவர் முனிவர்கட்காகவும், திருநெல்வேலியில் தாமிரசபையில் வேதபுருஷன் முதலியோர்க்காகவும், திருவாலங்காட்டில் இரத்தினசபையில் காளிதேவிக்காகவும், திருக்குற்றாலத்தில் சித்திரசபையில் அகத்தியமுனிவர் முதலியோர்க்காகவும் சிவபிரான் திருநடனஞ் செய்தருளுகின்றனனென்க ; இந்நடனங்களைத் தரிசித்தற்பொருட்டு வானுலகத்தவரான தேவர்களும் இந்நிலவுலகத்திற்கு வந்து தமது தலைகள் மண்ணிற்படும்படி கீழ்விழுந்து ஸாஷ்டாங்கமாகச் சேவிப்பரென்பது, முதலடியின் கருத்து. சாதாரணமாகப் பிறரைவணங்கவேண்டாத சென்னி யென்பார் 'இடங்கொண்ட சென்னி' என்றார். தனிமுதல் - முதற்கடவுளான மும்மூர்த்திகளுள்ளும் முதல்வன் என்றபடி.

தேவர் - மற்றெல்லாரினும் மிக்குவிளங்குபவ ரென்பது, அவயவப்பொருள். தவம், வாவி - தபஸ், வாபீ என்ற வடசொற்கள் சிதைந்து வந்தன. பூண் - காரணப்பொதுப்பெயர். (உ)

3. வையந்தொறுங்கலிக்கோடையில்வாடிவருந்துமுயி
ருய்யும்படிக்கோருறுதிகண்டேனுமைபாகம்வைத்த
மெய்யன்கருவைப்பிரான்செழுமாணிக்கவெற்பனைய
செய்யன்கனைகழற்றாமரைப்போதின்றிருநிழலே.

(இ - ள்.) வையம் தொறும் - (நான் செய்தவினைகட்கு ஏற்பப் பிறப்பெடுத்த) இடங்களிலெல்லாம், கலி கோடையில் - தீவினையின் கொடுமையினால், வாடி - வாட்டமடைந்து, வருந்தும் - வருந்துகின்ற, உயிர் - (எனது) உயிரானது, உய்யும் படிக்கு - ஈடேறும்வண்ணம், ஓர் உறுதி - அழிவில்லாததோர் புகலிடத்தை, கண்டேன்-அறிந்துகொண்டேன்; (அது யாதெனில்),— உமை பாகம் வைத்த மெய்யன் - உமாதேவியை வாமபாகத்திற் கொண்ட திருமேனியையுடையவனும், செழு மாணிக்கம் வெற்பு அனைய செய்யன் - செழுமையான மாணிக்கமலைபோன்ற செந்நிறமுடையவனுமாகிய, கருவை பிரான் - திருக்கருவைச் சிவபெருமானது, கனை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த, தாமரை போதின் - (திருவடித்) தாமரைமலரின், திரு நிழலே - அழகிய நிழலேயாம் ; (எ - று.)

திருக்கருவைச் சிவபிரானது திருவடிநீழல், தீவினைப்பயனாக நேர்ந்த பலபிறவிகளிலும் தாபமுற்று வாடிய எனது உயிர்க்கு அவ்வெப்பத்தைத் தீர்த்துக் குளிர்ச்சியைத்தரு மென்பதாம் ; " காதம்பலவுந் திரிந்துழன்றேற்கு அங்கோர்நிழலில்லை நீருமில்லை உன், பாதநிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்குங்காண்கின்றிலேன்," " நிறைப்பான்கழலன்றிச் சன்மவிடாய்க்கு

நிழலில்லையே" என்றார் பிறரும். வெயிலில்அடிபட்டுவருந்தியவர்க்கே நிழலின் இன்பம் தெரிதல் இயல்பா மென்பது, இச்செய்யுளில் விளங்குதல் காண்க. நிழலின் இனிமையை உணர்த்தவேண்டித் திருவடிகளை 'தாமரைப் போது' என்று உருவகமுகத்தாலேயே கூறினர். கலிக்கோடை யென்றது-தீவினைப்பயனால் சேர்ந்த பிறவித்துயரத்தை யுணர்த்தும். அவை, தன்னைப் பற்றிவருவதாகிய ஆத்யாத்மிகமும், தெய்வச்செயலால் நிகழ்வதாகிய ஆதிதைவிகமும், பிறவுயிர்களைப்பற்றி சேர்வதாகிய ஆதிபௌதிகமுமான தாபத்ரயங்களாம். சிவபெருமான் செந்நிறமுடையனாதல்பற்றி, அப்பிரானுக்கு மாணிக்கவெற்பு உவமை கூறப்பட்டது.

வையந்தொறும், தொறு - இடப்பன்மைகுறிக்கும் இடைச்சொல். கண்டேன் என்றவிடத்து, காணுதல்-அறிதலென்னும் பொருளது. உமை=உமா: இச்சொல்லுக்கு, உ - அம்ம, மா - வேண்டா என்று பொருளாம்: இமவானுக்கும் மேனகைக்கும் புதல்வியாய்ப்பிறந்த பார்வதீதேவி தான் மிக்க இளமையில் சிவபெருமானை மணஞ்செய்துகொள்ளவிரும்பித் தவஞ்செய்யச் செல்லுகையில், பெற்றோரால் ' அம்ம ! வேண்டா ' என்று தடுக்கப்பட்டதுபற்றி, இவட்கு இப்பெயர் அமைந்தது. செய்யன் - செம்மையென்ற பண்பினடியாப் பிறந்த ஆண்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். போது - மலரும்பருவத்து அரும்பு. (௩)

4. திருவுங்குலனுமனையுஞ்சிறாருஞ்சிறந்தசெவ்வி
யுருவுந்தவமுங்கடிதெய்தலாமுமைமாதுகொங்கை
மருவும்புயத்தர்களாநிழலார்செக்கர்வானநிறம்
பொருவுஞ்சடிலர்திருத்தொண்டின்மேலன்புபூண்டவர்க்கே.

(இ - ள்.) உமை மாது கொங்கை மருவும் புயத்தர் - பார்வதீதேவியினது தனங்களைத் தழுவுகின்ற தோள்களையுடையவரும், செக்கர் வானம் நிறம் பொருவும் சடிலர் - செவ்வானத்தின் நிறத்தை யொத்த [சிவந்த] சடையை யுடையவருமாகிய, களா நிழலார் - திருக்களாமரத்தின்நிழலி லெழுந்தருளியிருக்குந் திருக்கருவைச்சிவபிரானது, திருத்தொண்டின்மேல் - அடிமைத்திறத்தில், அன்பு பூண்டவர்க்கு - ஆவலுடையவர்கட்கு,— திருவும் - செல்வத்தையும், குலனும் - உயர்குலத்தையும், மனையும் - நல்லமனைவியையும், சிறாரும் - புதல்வர்களையும், சிறந்த செவ்வி உருவும் - சிறப்புப்பெற்ற அழகிய ரூபத்தையும், தவமும் - (மற்றுமுள்ள) புண்ணியப்பயன்களையும், கடிது எய்தல் ஆம் - விரைவில் அடைதல்கூடும் ; (எ - று.)

திருக்கருவைச் சிவபிரானுக்கு மெய்யன்போடு திருத்தொண்டுபூண்டு ஒழுகுபவர், அதன் பயனாக இம்மைமறுமைப்பயனனைத்தையும் பெற்று மேம்படுவரென்றவாறு. மனை - மனைவிக்கு இடவாகுபெயர். 'சிறார்' என்று பன்மையாகக் கூறியதனால், "மக்களைப் பெற்று மகிழ்வ ரில்வையத்தே" என்றவாறு பலபுதல்வரைப் பெறுவ ரென்பது, பெறப்படும். திருக்கருவையில் சிவபெருமான் திருக்களாமரத்தின் கீழலி லெழுந்தருளி யிருத்தலால், அவரை

'களாசிழலார்' என்றார். இதுபற்றியே, இவ்வகைப்பிரபந்தங்களில் செய்யுள் தோறும் பிரபந்தத்தலைவன் பெயரையேனும் தலப்பெயரையேனும் கூறும் மரபிற்கு ஏற்க, வேறாக இத்தலத்துச் சிவபிரான் திருநாமம் இச்செய்யுளிற் குறிக்கப்படவில்லை யென்க. செவ்வி - பண்படியாப்பிறந்த பெயர். செக்கர் - பண்புப்பெயர். சடிலர்=ஜடிலர்: ஜடையையுடையவர்: வடமொழித்தத்தி தாந்தநாமம். (௪)

5. பூண்டவராவும்புலித்தோலுடையும்புவனமுட்ட
நீண்டவராலுமறியாச்சரணமுநீண்முடியுந்
தாண்டவராயர்முகலிங்கநாதர்தமியனுக்கோ
ராண்டவராகிவந்தேதிருக்காட்சியளித்தனரே.

(இ - ள்.) தாண்டவராயர் - நடராஜப்பெருமானாகிய, முகலிங்கநாதர் - திருமுகம் விளங்கிய லிங்கவடிவமாகவுள்ள திருக்கருவைச் சிவபெருமான்,— தமியனுக்கு - வேறுகதியற்ற எனக்கு, ஓர் ஆண்டவர் ஆகி வந்து - ஒப்பற்ற தலைவராக எழுந்தருளி,— பூண்ட - தாம் அணிந்துள்ள, அராவும் - பாம்பையும், புலி தோல் உடையும் - புலித்தோலாடையையும், புவனம் முட்ட நீண்டவராலும் அறியா சரணமும் - (தமதுதிருமுடி) அண்டத்தின் மேன்முகட்டில் முட்டும்படி (திரிவிக்கிரமாவதாரமாக) நீண்ட திருமாலினாலும் (தேடியுங்) காணமுடியாத திருவடியையும், நீள் முடியும் - (அவ்வாறே பிரமனாலுங் காண வொண்ணாத) நீண்ட திருமுடியையும், திரு காட்சி அளித்தனர் - தரிசனந் தந்தருளினார்; (எ - று.)

சிவபெருமான் பிரபஞ்சவாழ்க்கையில் உழன்று வருந்திய என்னைத் தமது நிர்ஹேதுககிருபையால் வலியத்தடுத்து ஆட்கொண்டு காட்சிகொடுத் தருளினா ரென்பதாம். பூண்ட என்ற அடைமொழி 'புலித்தோலுடை' என் பதனோடும் இயையும். தாண்டவராயர் - தாண்டவராஜர். தாளலயங்களுடன் இயலுங் கூத்து, ந்ருத்யம் எனப்படும்: இது - லாஸ்யம் தாண்டவம் என்னும் இருவகுப்பினது: அவற்றுள் லாஸ்யமென்பது-மென்மையினால் இனிமையாக ஆடுவது: தாண்டவமென்பது - மென்மையின்றி உத்தமமாக ஆடுவது. இவற் றின் விரிவை, பரதசாஸ்திரத்திற் காணலாம். முகலிங்கநாதர் - லிங்கவடி வத்தில் திருமுகத்தின் தோற்றம் அமையப்பெற்ற கடவுள்: இது, இவ் வூர்ச் சிவபெருமானது திருநாமங்களு ளொன்றும். தமி - தனி.

**'பூண்டஅராவும் புலித்தோலுடையும்' என்பதில் அடங்கிய கதை:—** பரமசிவன் தன்னைமதியாத தாருகவன முனிவர்களது மனநிலையைப் பரி சோதிக்கநினைந்து ஒருவிடவடிவங்கொண்டு அவர்கள்வீடுகள்தோறுஞ் சென்று பிக்ஷாடனஞ்செய்து தன்னைநோக்கிக் காதல்கொண்ட அவர்கள்பத்தினிமார் களது கற்புநிலையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறாமற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்றுசெய்து அவ்வோமத்தீயினின்று மெழு ந்த நாகங்கள் பூதங்கள் மான் புலி யானை முயலகன் வெண்டலை முதலிய

வற்றைச் சிவனைக் கொன்றுவிடும்படி ஏவ, சிவபெருமான் தன்மேற்சீறிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும் பூதங்களைக் கணங்களாகவும் கொண்டு, மானைக் கையிலேந்தி, புலியைத் தோலையுரித்து உடுத்து, யானையினுட் சென்று உடல்பிளந்து அதன் உரிவையைப் போர்த்துக்கொண்டு, முயலகனை முதுகிற் காலானூன்றி, வெண்டலையைக் கையிற்பற்றிச் சடைமேலணிந்து அவற்றையெல்லாம் பயனிலவாகச் செய்துவிட்டன னென்பதாம்.

புவனம்முட்ட நீண்ட கதை:—மகாபலியென்னும் அசுரராஜன் தன் வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையும் வென்று மூன்றுஉலகங்களையும் தன்வசப்படுத்தி அரசாண்டு செருக்குக்கொண்டிருந்தபொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்து வேண்ட, அப்பெருமான், குள்ளவடிவான வாமனாவதாரங்கொண்டு அந்தப்பலியினிடஞ் சென்று தன்காலடியால் மூவடி மண் வேண்டி அதுகொடுத்தற்கு அவன் இசைந்தவுடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தை யளாவி வளர்ந்து ஓரடியாற் பூலோகத்தையும் மற்றோரடியால் மேலுலகத்தையும் அளந்து மூன்றாமடிக்காக அவன்முடியிற் காலை வைத்து அவனைப் பாதாளத்திலழுத்தி அடக்கின னென்பதாம்.

'நீண்டவராலும் அறியாச் சரணம்' என்பதி லடங்கிய வரலாறு:—தாம்தாம் முதற்கடவுளென்னுங் கருத்துக்கொண்டு ஒருவர்க்கொருவர் பகைமைபூண்டு போர்தொடங்கிய பிரமவிஷ்ணுக்களின் மாறுபாட்டை யொழித்தற்பொருட்டுப் பரமசிவன் அவ்விருவர்க்கும் நடுவில் பெரியதொரு சோதிவடிவமாய்த் தோன்றி நின்று, 'இதன் அடியையும் முடியையும் தேடுங்கள்' என்றுசொல்ல, 'அதனை முன்னங்கண்டவரே முதல்வர்' என்றுசொல்லிப் பிரமன் அன்னப்பறவைவடிவமாய் முடியைக்காண விண்பறந்தும் விஷ்ணு பன்றியுருவமாகி அடியைக்காண மண்ணிடந்துஞ் சென்று பலகாலந்தேடியும் முடியடிகளைக் காணமற்போயின ரென்பதாம். இவ்வரலாற்றால், அம்முழுமுதற்கடவுளின் திறம் எவராலும் அறிதற்கொண்ணாத தென்பது பெறப்படும். (ரு)

6. அளியுமளிதருமானந்தமாகியளவிறந்த
களியுமிரண்டற்றகாட்சியுங்காட்டிக்கருணைசெய்தார்
வெளியும்பவனமுந்தீயுந்தண்ணீரும்வியனிலமு
மொளியொன்றியவுருவக்களவீசருளத்திருந்தே.

(இ - ள்.) வெளியும் - ஆகாயமும், பவனமும் - காற்றும், தீயும் - நெருப்பும், தண் நீரும் - குளிர்ச்சி பொருந்திய ஜலமும், வியன் நிலமும் - பெரிய பூமியும், (ஆகிய பஞ்சபூதங்களையும்), ஒளி ஒன்றிய உருவம் - ஒளிபொருந்திய தமதுஉருவமாகக்கொண்ட, களஈசர் - திருக்களாமரத்தின் கீழெழுந்தருளியுள்ள திருக்கருவைச் சிவபிரான்,—உளத்து இருந்து - (எனது) மனத்தின்கண் வீற்றிருந்து,—அளியும் - (தமது நிர்ஹேதுகமாகிய) கருணையையும், அளிதரும் - அத்தண்ணளியாலுண்டாகின்ற, ஆனந்தம் ஆகி - இன்பமயமாய், அளவு இறந்த - வரம்பில்லாமற் சுரக்கின்ற, களியும் - பெருங்களிப்பையும்,

இரண்டு அற்ற காட்சியும் - (நான் வேறு சிவம் வேறு என்று) இரண்டாகக் கொள்ளாத அத்வைதஞானத்தையும், காட்டி - எனக்கு உண்டாக்கி, கருணை செய்தார் - (என்மீது) அருள் செய்தார்; (எ - று.)

திருக்கருவைச் சிவபெருமான் தமது நிர்ஹேதுக கிருபையால் சிவாத்வைதஜ்ஞானத்தை எனக்கு அருள்செய்து யான் வரம்பிலின்பமடையுமாறு கருணைபுரிந்தன ரென்பதாம். அளிதருமானந்தமாகி அளவிறந்த களி - சிவபிரானது திருக்கருணையால் தோன்றிய சிவாத்துவைதஜ்ஞாநத்தாலுண்டாகுஞ் சுகோதயத்தில் நிகழும் பேரின்பம். இரண்டற்ற காட்சி - நிர்விகற்பஞானம். "சங்கரனோடொக்கவுறைந்து இவரவனை அவனிவரை விடாதே யுடந்தையாய்ச் சிவன்றோற்றமொன்றுமே காண்பர்" என்றபடி தான் அவன் என்னும் வேறுபாடு இல்லாதவாறு சிவனைத் தரிசித்துத் தந்மயமாதல்; விகல்பம் - வேறுபாடு: அஃது இன்மை - நிர்விகல்பம்; இதுவே சிவாத்வைத மெனப்படும். த்வைதம் - வேற்றுமை - (ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறெனல்:) அதற்கு எதிரானது - அத்வைதம் பஞ்சபூதங்களினாலேயே இயன்ற இவ்வுலகங்களிலுள்ள பொருள்களிலெல்லாம் இறைவன் வியாபித்து அவற்றிற்கு நியாமகனாக நிற்கின்றானென்பது, 'வெளியும்......களவீசர்' என்ற தொடரினால் விளங்கும்; பாஞ்சபூதிகமான பொருள்களையெல்லாம் சிவபிரான் தனக்குத் திருமேனியாகக்கொண்டு அவற்றின்குணங்கட்கெல்லாம் நியாமகனாய் நிற்கின்றானென்பது, கருத்து. இவ்வாறு இருக்குங் கடவுளின் சொரூபமுணர்தல், இரண்டற்றகாட்சியென்று நூல்களிற் கூறப்படுகின்றதென்க. ஐம்பெரும்பூதங்களுள் முதலில் ஆகாயமும், ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து அப்பும், அப்பிலிருந்து பிருதிவியும் தோன்றின முறைமை மூன்றாமடியில் விவரிக்கப்பட்டது. பரஞ்சோதியென்று சொல்லும்படி இறைவன்திருமேனி பேரொளிவடிவமானமையால், அது, 'ஒளியொன்றியவுருவம்' எனப்பட்டது. களவீசரென்பது - களவு ஈசர் என்றும், கள ஈசர் என்றும் பிரியத்தக்கது. இவற்றுள், முதலது - குறியதன் கீழ் ஆகாரம் குறுகி உகரமேற்றதும், பின்னது - குறியதன்கீழ் ஆகாரங் குறுகியதனோடு மாத்திரம் நின்றதுமாம். (சு)

7. உள்ளக்கமலத்தினிற்களவீசரொன்னொப்பனையோ
டெள்ளத்தனையுமகலாக்குடிகொண்டிருளறுத்துக்
கள்ளக்கலரொடுங்கூடாதெளியனைக்காத்தளித்த
வள்ளற்குணத்தின்றகுதியையேதென்றுவாழ்த்துவனே.

(இ - ள்.) கள ஈசர்—,—ஒப்பனையோடு - தமதுதேவியாரோடு,—என் - எனது, உள்ளம் கமலத்தினில் - மனமாகிய தாமரையில், எள் அத்தனையும் அகலா - எள்ளளவும் [மிகச்சிறுபொழுதும்] நீங்காமல், குடி கொண்டு - எழுந்தருளியிருந்து, இருள் அறுத்து - அஜ்ஞாநவிருளை அறக்கெடுத்து, கள்ளம் கலருடன் கூடாது - வஞ்சனைக்குணமுள்ள கீழ்மக்களோடு (யான்) சேராதவாறு, எளியனை - ஏழையாகிய அடியேனை, காத்து அளித்த - பாதுகாத்தரு

ளிய, வள்ளல் குணத்தின் தகுதியை - உதாரகுணத்தின் பெருமையை, ஏது என்று வாழ்த்துவன் - என்னவென்று சொல்லித் துதிப்பேன், (யான்)? (எ-று.)

அறிவென்பது சிறிதுமில்லாத என்மீது கருணைகொண்டு எனது ஹ்ருதயாரவிந்தத்திலெழுந்தருளியிருந்து பலபடியாக உதவிய சிவபிரானது உதார குணத்தை வரையறுத்துச்சொல்லவொண்ணாதென்பதாம். ஒருவரை நற்கதியிற்சேரவொட்டாது நரகத்திற் செலுத்துவனவான அஜ்ஞாநமும், அதனால் தோன்றுந் தீயிணக்கமுமாகிய இவ்விரண்டினின்றுந் தம்மைக்காத்த பேருதவியை இச்செய்யுளாற் பாராட்டிக் கூறினரென்க: இதனால், தமதுவிரோதி ஸ்வரூபம் நீங்கியமை பெறப்படும். எள் - சிறுமைக்குக் காட்டுவதோரளவை. பொருள்களின் உண்மைத்தன்மை புலனாகாதபடி மறைத்தல்பற்றி, அஜ்ஞாநம் 'இருள்' எனப்பட்டது. வள்ளல்குணமாவது - அருளாமைக்குஉரிய தீக்குணங்கள் பல தம்மிடத்து நிறைந்திருக்கவும் தாம் வேண்டியிராவாதிருக்கையில்தானே இறைவன் இறைவியோடும் வலியத் தம்மிடத்தில் வந்து தமது தீக்குணத்தை யொழித்து ஆட்கொண்டருளிய உதாரகுணம். அகலா - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம். கலர் - துஷ்டர்: வடமொழி. (எ)

8. வாழ்த்திடநாவுண்டுபாவிக்கநீயுண்டுமண்ணிலுறத்
தாழ்த்திடச்சென்னியுமுண்டுகண்டாய்தண்களவின்மல
ரூழ்த்திடநீழலுறைவாரடியுண்டுனைநிரயம்
வீழ்த்திடுவாருமுண்டோநெஞ்சமேயென்மெலிவதுவே.

(இ - ள்.) நெஞ்சமே - (எனது) மனமே!—வாழ்த்திட - (சிவபெருமானது திருக்குணங்களைக் கூறி) வாழ்த்துதற்கு, நா உண்டு - (நம்மிடத்தில்) நாக்கு உள்ளது; பாவிக்க - (இடைவிடாமல் அப்பிரானைத்) தியானிப்பதற்கு, நீ உண்டு - நீ இருக்கிறாய்; மண்ணில் உற தாழ்த்திட - பூமியிற் பொருந்தும்படி வணங்குவதற்கு, சென்னியும் உண்டு - தலையும் உள்ளது; தண் களவின் மலர் - குளிர்ந்த திருக்களாமரத்தின் புஷ்பங்கள், ஊழ்த்திட - சொரிய, நீழல் - (அதன்) நிழலில், உறைவார் - வாழ்கின்ற சிவபிரானது, அடி - திருவடிகள், உண்டு - (நமக்கு நற்கதியளிப்பதற்குச்) சித்தமாகவுள்ளன; (அங்ஙனமாக), உனை - உன்னை, நிரயம் வீழ்த்திடுவாரும் - நரகத்தில் தள்ளுபவர்களும், உண்டோ - உளரோ? [ஒருவருமிலர்]; (ஆதலால்), மெலிவது என் - (நீ) வருந்துவதற்குக் காரணம் யாதோ? (எ - று.)—கண்டாய் - முன்னிலையசை; தேற்றமுமாம்.

கடவுள் தன்னைவழிபட்டு ஈடேறுமாறு நமக்குத் திரிகரணங்களையும் தந்து, நமக்குத் தீக்கதி சேரவொட்டாது பாதுகாத்தற்கும் தான் சித்தனாக இருக்கையில் மெலிவதற்குக் காரண மொன்றுமில்லை யென்று தமது நெஞ்சிற்கு அறிவுறுத்தியவாறு. சிவபிரான் தன்னைச்சரணமடைந்த மார்க்கண்டேயனென்னும் பரமபக்தனைப் பாதுகாக்கும்பொருட்டுக் கூற்றுவனை யுதைத்த திருப்பாதங்களை யுடையவனாதலால், அவனை வழிபடுகின்ற நமக்கும் தீக்கதிசேரவொட்டாது அப்பிரான் காத்திடுவ னென்பது, 'களவின்...நீழலுறை

வாரடியுண்டு உனை நிரயம் வீழ்த்திடுவாரு முண்டோ' என்பதன் குறிப்பு. திரிகரணங்களுள் மெய்யைக் கூறவேண்டியவிடத்துச் சென்னியைக் கூறியது, உத்தமாங்கமாதலி னென்க.

அருமையான மனிதப்பிறப்பெடுத்ததற்குப் பயன் - பசுபதியாகிய சிவபிரானை வாக்கினால் துதித்தலும், மனத்தினால் நினைத்தலும், தலையினால் வணங்குதலுமே யென முன்னிரண்டடிகளில் விளங்கும்; "கண்ணுதலாலய நோக்குங் கண்களே கண்கள் கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள், பெண்ணொருபாகனைப் பணியுந் தலைகளே தலைகள் பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள், பண்ணவன் சீர்பாடு நன்றாவே நன்று பரஞ்சரிதையே கேட்கப்படுஞ் செவிகளே செவிகள், அண்ணல்பொலங்கழல்நினைக்கு நெஞ்சமே நெஞ்சம் அவனடிக்கீ ழடிமைபுகும் அடிமையே அடிமை" என்ற பிரமோத்தரகாண்டமும் இங்கு நோக்கத்தக்கது. "நாவாயிலுண்டே நமோநாரணாவென்று, ஓவாதுரைக்குமுரையுண்டே - மூவாத, மாக்கதிக்கட்செல்லும்வகையுண்டே யென்னொருவர், தீக்கதிக்கட் செல்லுந் திறம்" என்ற பாசுரத்தின் வாய்பாடு கொண்டது, இச்செய்யுள்.

உண்டு - இருதிணை யைம்பால் மூவிடங்கட்கும் பொதுவான குறிப்பு வினைமுற்று. சென்னியும், உம்மை - இறந்ததுதழுவியது. நீழல் - நீட்டல் விகாரம். நிரயம் - தற்சமவடசொல். மெலிவதுவே - உயிர்வரக் குற்றியலுகரம் கெடாது நின்றது. (அ)

9. மெலிவிக்குநோய்க்குமடவாரிழைத்தவினைக்குமுயிர்
நலிவிக்குங்காலபடர்க்குமஞ்சேனறமிழ்நாவலரான்
மலிவிக்குங்கீர்த்திக்களவீசர்கூன்பிறைவாணிலவாற்
பொலிவிக்குஞ்செஞ்சடையார்தடுத்தாளப்புகுந்தபின்னே.

(இ - ள்.) கூன் பிறை - (தமதுமுடிமீது அணிந்த) வளைந்த பிறைச்சந்திரனது, வாள் நிலவால் - ஒளிபொருந்திய நிலாவினால், பொலிவிக்கும் - விளங்குகின்ற, செஞ் சடையார் - செந்நிறமான சடையை யுடையவராகிய, தமிழ் நாவலரால் மலிவிக்கும் கீர்த்தி களவீசர் - தமிழ்ப்புலவர்களாற் சிறப்பித்துப் பாடப்பெற்ற புகழையுடைய திருக்கருவைச் சிவபெருமான், தடுத்து - (பிரபஞ்சவாழ்க்கையில் உழலாதபடி என்னை) விலக்கி, ஆள - ஆட்கொள்ள, புகுந்த பின் - தொடங்கிய பிறகு,—மெலிவிக்கும் நோய்க்கும் - (உடம்பை வலியழியச் செய்கின்ற)வியாதிகட்கும், மடவார் இழைத்த வினைக்கும் - இளமகளிர் செய்கிற காமமயக்கத்திற்கும், உயிர் நலிவிக்கும் காலபடர்க்கும் - (அந்திமகாலத்தில்) உயிரைவருத்த வருகின்ற யமதூதர்க்கும், அஞ்சேன் - (இனி) அஞ்சமாட்டேன், (யான்); (எ - று.)

பிரபஞ்சவாழ்க்கையில் உழலாதவாறு கடவுளால் தாம் தடுத்தாளப் பெற்று அவனது கருணைக்கு இலக்காகிவிட்டமையால், இனித் தம்மைக் கருமத்தினால் வருவனவான நோய்களாலும் யமபடராலும் ஒன்றும் நலிவுசெய்ய

முடியாது என்ற துணிபுகொண்டும், சிவபிரானே வலியத்தடுத்தாட்கொண்டு காக்குமாறு புரிந்த திருவருள்நோக்கம் தம்மிடத்துப்பதித்திருக்கையில் இனி மகளிர்மோகவலையில் மனஞ்சிக்காது என்ற பேருறுதிகொண்டும், நோய் முதலியவற்றிற்கு அஞ்சே னென்கிறா ரென்க. எவ்வகைநோய்க்கும் இறைவன் மருந்தாவ னென்பது, இங்குப் போதரும்.

மடம் - இளமை; அதனையுடையவர் மடவார்; இனி, மகளிர்க்கு உரிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்ற குணங்கள் நான்கனுள் மடமைக்குண முடையவர்: மடமாவது - எல்லாமறிந்தும் ஒன்றும் அறியாதுபோலிருத்தல்: கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை யெனவும்படும். காலன் என்ற வடமொழிப்பெயர்-(பிராணிகளின்) ஆயுட்காலத்தைக் கணக்கிடுபவனென்று காரணப்பொருள்படும். படர் - தூதர்: வடசொல். நாவலர் - நாக்கினாற் பாடல்பாட வல்லவர். கீர்த்தி - உரையென்னுந் தென்மொழியின் பொருள் கொண்ட வடமொழி. பொலிவிக்கும் = பொலியும்: தன்வினைப்பொருளில் வந்த பிறவினை: இதனை, வடநூலார் 'ஸ்வார்த்தேணிச்' என்பர்.

'பிறைநிலவாற் பொலிவிக்குஞ் செஞ்சடையார்' என்பதில் அடங்கிய கதை:—சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவினிமுதலிய இருபத்தேழுநட்சத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் உரோகிணியென்பவளிடத்து மிகவுங்காதல்கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங்கூடி வாழ்ந்திருக்க, மற்றைமகளிரது வருத்தத்தை நோக்கி, முனிவன் அவனை 'க்ஷய மடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்து கலைகளுங் குறைந்து மற்றைக்கலையொன்றையும் இழப்பதற்குமுன்னம் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்புரிந்து அவ்வொற்றைக்கலையைத் தன் தலையிலணிந்து மீண்டுங் கலைகள்வளர்ந்துவரும்படி அநுக்கிரகித்தன னென்பதாம். இவ்வரலாற்றால், சிவபிரான் தன்னையடைந்தார்க்குக் குறைதீர்த்தருளுந் தன்மைய னென்பது விளங்கும். (௯)

10. புகுவதுமூப்புவனப்போடிளமையும்போயதினி
மிகுவதுநோயுந்துயருமென்றாலடன்மேவலரூர்
நகுவதன்முன்னெரித்தோர்களவீசரைநாம்பணியத்
தகுவதுகாணெஞ்சமேயிதுபோலுஞ்சதிரில்லையே.

(இ - ள்.) நெஞ்சமே - (எனது) மனமே!—வனப்போடு - உடம்பினழகுடனே, இளமையும்—, போயது - கழிந்திட்டது; புகுவது - இனி விரைவில் உண்டாவதற்குஉரியது, மூப்பு - முதுமைப்பருவம்; இனி - இனிமேல், நோயும் - வியாதியும், துயரும் - (அதனாலுண்டாகுந், துன்பமும், மிகுவது - மிகவும்வளர்ந்து வருத்துதற்குஉரியன; என்றால்—, அடல் - வலிமையையுடைய, மேவலர் - பகைவர்களாகிய அசுரர்களது, ஊர் - திரிபுரங்களை, நகுவதன்முன் எரித்தோர் - சிரித்தற்குமுன்னே எரித்துஅழித்தவராகிய, களவீசரை—, நாம் பணிய தகுவதுகாண - நாம்வணங்குதல் தக்கதாம்; இது போலும்- இச்செயலைப்போன்ற, சதிர் - சாமர்த்தியம், இல்லை - வேறொன்றுமில்லை.

உடல் நிலைகுலைந்து அழியுந்தருணத்தி லிருத்தலால், அது அடியோடு கெடுதற்குமுன்னே அவ்வுடலினுள்ளிருக்கும் உயிர் நற்கதிபெறுமாறு சிவ பெருமானை வணங்குவதே இப்போது செய்வதற்குஉரிய தக்கஉபாய மென் பதாம். 'மேவலரூர்நகுவதன்முன்னெரித்தோர்' என்ற தொடர் - சிவபிரான் தமக்குப்பகைவராய் எதிர்ந்த திரிபுரத்துஅசுரர்களை அழித்ததுபோல, அப் பிரானைச்சார்ந்த நமது தீவினைகளையும் அக்கடவுள் மிக எளிதில் எரித்து விடுவ ரென்ற கருத்தைக் குறிப்பித்தலால், கருத்துடையடைமொழியணி யின்பாற்படும். மேவலரூர்நகுவதன்முன்னெரித்தோர் என்றது - காரியத் தின் விரைவைக் குறிக்கும்: இவ்வாறு காரியம் முன்னும் காரணம் பின் னும் நிகழ்ந்தனவாகக் கூறுவது - மிகையுயர்வுநவிற்சியணி; இதனை, வட நூலார் அத்யந்தாதிசயோக்தி யென்பர். இளமைப்பருவம் கழியுங்காலத்தில் தன்னுடனிருந்த அழகும் அழிதல் இயல்பாதலால் 'வனப்போடு இளமையும் போயது' என்றும், முதுமைப்பருவம் பிணிக்கும் துன்பத்துக்கும் ஆதாரமா யிருத்தலால் 'புகுவது மூப்பு; இனி மிகுவது நோயுந் துயரும்' என்றும், வெகு விரைவில் ஈடேறுதல் கர்மம் ஜ்ஞாநம் முதலிய உபாயங்களால் இயலா தாகையால் அவற்றையொழித்துச் சிவபெருமான் திருவடிகளை உபாயமாகக் கொள்ளுதலே எளிதில் ஈடேறுதற்குஉரிய உபாய மென்பார் 'களவீசரை நாம் பணியத்தகுவது; இதுபோலுஞ் சதிரில்லை' என்றுங் கூறினர்.

மிகுவது நோயுந் துயரும் - ஒருமைப்பன்மைமயக்கம்: தனித்தனி மிகுவது என்க. மேவலர் - பொருந்ாதவர் எனப் பகைவர்க்குக் காரணக் குறி. ஈசர் - எல்லாப்பொருளையும் நியமிப்பவர்: வடசொல். பணிய என்னும் செயவெனெச்சம், தொழிற்பெயர்த்தன்மைப்பட்டு 'தகுவது' என்ற பய னிலைக்கு எழுவாயாக நின்றது. சதிர் - சதுரனிடத்திலுள்ள குணம்.

மேவலரூர்எரித்த கதை :—தாரகாசுரனதுபுத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து பிரமனிடம் பெருவரம்பெற்று மயனென்பவனால் சுவர்க்கம் பூமி பாதாளம் என்னும் மூன்றுஇடங்களிலும் முறையே பொன் வெள்ளி இரும்பினால் அரணவகுத்து இயற்றப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய மூன்று பட்டணங்களைப் பெற்றுச் சிவபூஜைசெய்துகொண்டு அச்சிவபக்தியின் மகி மையால் எவர்க்கும் அழிக்கவொண்ணாதவராய் அத்தகைய மற்றும்பல அசுரர்க ளோடு அந்நகரங்களுடனே தாம்நினைத்தஇடங்களிற் பறந்துசென்று பல விடங்களின்மேலும் இருந்து அவ்வவ்விடங்களைப் பாழாக்கிவருகையில், அத் துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டு கோளினால் திருமால் மாயையினால் ஜிநாவதாரமும் புத்தாவதாரமுஞ் செய்து பற்பலதீயவழிகளைக் கற்பித்து உபதேசித்து மயக்கி அவ்வசுரர்களைச் சிவ த்வேஷிகளாகச் செய்துவிட்டபின்பு, தேவர்கள்பிரார்த்தனைப்படி சிவபெரு மான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களையும் நான்கு குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை வில்நாணியாகவும், விஷ்ணுவை

வாயுவாகிய சிறகு அமைந்த அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்த சன்னத்தனாகிச் சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து அச்சிரிப்பினின்று தோன்றிய நெருப்பினால் அவ்வசுரர்கள் பலரையும் பட்டணங்களோடு எரித்தருளின னென்பதாம். (௧0)

11. சதுரானனனுந்திருநெடுமாலுஞ்சதமகனுங்
கதிராயிரம்விரிக்குஞ்சுடரோனுங்கலாதரனு
மதிரார்கலிக்கிறையுந்தொழுதேத்தவருள்புரிந்தோன்
முதிராமுகிழ்முலையொப்பனைகேள்வன்முகலிங்கனே.

(இ - ள்.) முதிரா - இளமைமாறாத, முகிழ் முலை - தாமரையரும்பு போன்ற தனங்களையுடைய, ஒப்பனை - ஒப்பனையம்மைக்கு, கேள்வன் - கணவனாகிய, முகலிங்கன் - முகலிங்கப்பெருமான்,—சதுர ஆனனனும் - (நான்கு திக்கையும் நோக்கிய) நான்கு முகங்களையுடைய பிரமனும், திரு நெடு மாலும் - ஸ்ரீமகாவிஷ்ணுவும், சதமகனும் - நூறுஅசுவமேதயாகங்கள் செய்து தேவ ராஜ்யத்தைப்பெற்ற இந்திரனும், ஆயிரம் கதிர் விரிக்கும் சுடரோனும் - (தனது) ஆயிரங்கிரணங்களை வெளிவீசுகின்ற சூரியனும், கலாதரனும் - (பதினாறு) கலைகளைத் தரித்தவனான சந்திரனும், அதிர் ஆர்கலிக்கு இறையும் - ஒலிக்கின்ற கடலுக்கு அரசனாகிய வருணனும், தொழுது ஏத்த - வணங்கித் துதிக்க, அருள் புரிந்தோன் - கருணை செய்தான்; (எ - று.)

பிரமன் முதலிய எல்லாத்தேவர்களும் சிவபிரானது திருவருளினாலேயே ஸத்தை பெறுகின்றன ரென்று அச்சிவபிரானது தேவாதிதேவனாந்தன்மையை வெளியிட்டவாறு. கதிர் ஆயிரம் விரிக்குஞ் சுடரோன் - ஸஹஸ்ரகிரணனான சூரியன். சதுராநநன், சதமகன், கலாதரன், முகலிங்கன் - வடசொற்கள். ஆர்கலி - நிறைந்தஓசையையுடையது எனப் பொருள்படுங் காரணக்குறி; வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இச்சொல், 'அதிர்' என்ற அடைமொழி பெற்றுவந்ததனால் உறப்புப்பொருள் கருதாது கடலென்ற மாத்திரமாக நின்றதென்க. "பெற்றாள் சகதண்டங்களனைத்தும் மனைபெற்றும், முற்றாமுகிழ்முலையாள்" என்ப வாதலால், 'முதிராமுகிழ் முலை யொப்பனை' என்றார். (௧௧)

12. முகலிங்கன்றென்கருவைக்களவீசன்முதல்வனன்பர்
புகலிங்குலிகச்சடிலப்பிரான்புழைக்கையுரிநல்
லகலிங்கமாகவுடுத்தோனடியர்க்கடிமைசெய்யா
திகலிங்கெவனெஞ்சமேமுத்திசார்தலெளிதல்லவே.

(இ - ள்.) நெஞ்சமே—!—முதல்வன் - முழுமுதற்கடவுளும், அன்பர் புகல் - தொண்டர்கட்கு அடைக்கலமாயிருப்பவனும், இங்குலிகம் சடிலம் பிரான் - சாதிலிங்கம் போன்ற [செந்நிறமாகிய] சடைமுடியையுடைய தலைவனும், புழைக் கை உரி நல்ல கலிங்கம் ஆக உடுத்தோன் - யானைத்

தோலைச் சிறந்த ஆடையாகத் தரித்தவனும், முகலிங்கன் - முகலிங்கனென்னும் திருநாமமுடையவனுமாகிய, தென் கருவை கள ஈசன் - தெற்கின்கணுள்ள திருக்கருவையிற் களாமரத்தின்கீழ் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது, அடியர்க்கு - அடியார்களுக்கு, அடிமை செய்யாது - தொண்டுசெய்யாமல், இங்கு-இப்போது, இகல் - மாறுபடுவது, எவன் - யாதுகாரணமோ? (நீ இவ்வாறே இருப்பாயாயின்), முத்தி சார்தல் - நற்கதியடைதல், எளிது அல்ல - எளிமையான காரியமாகாது [மிகவும் அருமையானதேயாம்]; (எ - று)

சிவபிரானடியார்கட்கு அடிமைசெய்தால்தான் முத்திசித்திக்குமென்று தமது நெஞ்சத்தை நோக்கி உபதேசித்தவாறு. அன்பர் புகல் இங்குலிகச் சடிலப் பிரான் என்று ஒருதொடராக எடுத்து - தொண்டர்களால் துதிசெய்யப்படுகின்ற செக்கிறமான சடைமுடியையுடைய கடவுள் என்றும் உரைக்கலாம். இப்பொருளில், புகல் என்பது - வினைத்தொகையாம்; முன்னைய பொருளில், புகுதற்கு உரிய இடம் எனக் காரணக்குறியால் வந்த பெயர்ச்சொல். புழைக்கை-துவாரத்தையுடைய துதிக்கையையுடையது என வேற்றுமைத்தொகையன்மொழி. உரி - உரித்தெடுக்கப்படுவது; தோல்: செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர். (கெடாதாயின், உரிவையென நிற்கும்.) முத்தி=முக்தி; பற்றுக்களை விட்டு அடையுமிடமென வடமொழிக்காரணச்சிறப்புப்பெயர்: 'வீடு' என்ற தமிழ்மொழியும் இப்பொருளதே.

புழைக்கையுரியைக் கலிங்கமாக உடுத்த கதை:—அருந்தவமியற்றிப் பெருவரம்பெற்ற கஜாசுரனென்பவன் தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாது வருத்தித் துரத்த, அஞ்சியோடிவந்து சரணமடைந்த அவர்களது வேண்டுகோளினாற் பரமசிவன் சென்று தன்னை யெதிர்த்துப் போர்செய்ய வந்த அவ்வசுரனைக் காலாலுதைத்துத்தள்ளிக் கொன்று தோலையுரித்துப் போர்த்தன னென்பதாம். இனி, தாருகவனத்துமுனிவ ரேவிய யானையினுட் சென்று உருத்திரமூர்த்தி உடல்பிளந்து அதனுரிவையைப் போர்த்துக்கொண்டன னென்றுங் கூறுவர்.

இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. திரிபாவது - ஒவ்வோரடியிலும் முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டு முதலிய பலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள் வேறுபடுவது; இதனையும் யமக வகையி லடக்குவர் ஒருசாரார். (௧௨)

13. அல்லும்பகலுமொழியாதுதம்புகழாதரித்துச்
சொல்லும்படிக்குக்கவிநாவளித்தெனைத்தொண்டுகொண்டார்
வல்லுங்குழைமுலையொப்பனைபாகர்வரிசிலையாக்
கல்லுங்குழைத்தபுயத்தர்களாநிழற்கண்ணுதலே.

(இ - ள்.) வல்லும் குழை முலை ஒப்பனை பாகர் - (ஒப்பாகமாட்டாமையாற்) சூதாடுகருவியும் தளர்ந்து பின்னிடுகின்ற தனங்களையுடைய உமாதேவியை வாமபாகத்தி லுடையவரும், வரி சிலை ஆ கல்லும் குழைத்த புயத்தர் - கட்டமைந்த வில்லாக மகாமேருமலையையும் வளைத்த திருக்கையை

யுடையவரும், களா நிழல் கண் நுதல் - திருக்களாநிழலி லமர்ந்த நெற்றிக் கண்ணையுடையவருமாகிய சிவபெருமான்,— தம் புகழ் - தமது திருக்கீர்த்தியை, ஆதரித்து - விரும்பி, அல்லும் பகலும் ஒழியாது சொல்லும் படிக்கு - இரவும் பகலும் இடைவிடாது சொல்லுமாறு, கவி நா அளித்து - கவி பாட வல்ல நாவைத் தந்து, எனை தொண்டு கொண்டார் - என்னை அடிமையாக்கிக் கொண்டார்; (எ - று.)

இரும்பை ரஸமிட்டுப் பொன்னுக்குவதுபோல, ஐம்பொறிகட்கு இலக்காகிக் கல்நெஞ்சனாய்த் திரிந்த என்னைத் திருவருள்நோக்கஞ்செய்து திருத்திப் பணிகொண்டு எப்பொழுதும் தனது திருப்புகழ்களையே கவிபாடித் துதிக்குங் கவனசக்தியையுங் கொடுத்தருளினன் இறைவனென்பதாம்; "நன்கவிஞனாக வியனுவளித்து நாடோறுந், தன்கழலே பாடுந் தரமளித்தான்" என்றார் வெண்பாவந்தாதியிலும். மகளிர்தனத்துக்குப் பிரசித்தஉபமானமாகக் கூறப்படுகின்ற சூதாடுகருவியையும் தனது அழகின்மிகுதியால் குழையச்செய்கின்ற தனங்கள் என்று உபமானத்திற்கு உபமேயத்தினுங் குறைபாடுதோன்றக் கூறியது - எதிர்நிலையணியின்பாற்படும். வரிசிலையாக் கல்லைக்குழைத்த புயத்தர் என்ற தொடர் - எனதுகன்னெஞ்சையும் தம்திறத்துக் குழையச்செய்து கவிபாடுவித்தற்கு ஏற்ற திறமுடையவர் என்ற பொருளைக் குறிப்பிக்கும். இவ்வாறு ஒருபொருளை உட்கொள்ளுமாறு அடைமொழியமையவைத்தது - கருத்துடையடைமொழியணியாம். வல்லும், கல்லும், உம்மை - உயர்வுசிறப்பு. கல் என்ற பொதுப்பெயர் இங்குச் சிறப்பாய், மேருமலையைக் குறித்தது. ஆ - ஆக என்பதன் விகாரம். கண்நுதல் - கண்ணை நுதலிலுடையவனென வேற்றுமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (கங)

14. கண்கொண்டுபார்த்தவிடந்தொறுந்தோன்றுங்கருவைப்பிரான்
விண்கொண்டதிங்கள்குடிகொண்டவேணியும்வெண்ணகையும்
பண்கொண்டவேதப்பவளச்செவ்வாயும்பணைப்புயமுந்
தண்கொண்டகொன்றைத்திருமார்புந்தாமரைத்தாள்களுமே.

(இ - ள்.) கருவை பிரான் - திருக்கருவையிலெழுந்தருளியிருக்குஞ் சிவபிரானது, விண் கொண்ட திங்கள் குடி கொண்ட வேணியும் - வானத்திற் சஞ்சரிக்கின்ற பிறைச்சந்திரன் தங்கப்பெற்ற சடைமுடியும், வெள் நகையும் - வெண்மையான சிரிப்பும், பண் கொண்ட வேதம் பவளம் செம் வாயும் - ஸ்வரங்களைக்கொண்டுள்ள வேதங்களை முதலில்வெளியிட்ட பவழம்போலச் சிவந்த வாயும், பணை புயமும் - பருத்த திருக்கைகளும், தண் கொண்ட கொன்றை திருமார்பும் - குளிர்ச்சிபொருந்திய கொன்றைமலர்மாலையை யணிந்த அழகிய திருமார்பும், தாமரை தாள்களும் - செந்தாமரைமலர்போன்ற திருவடிகளும், கண் கொண்டு பார்த்த இடம் தொறும் தோன்றும் - (எனது) கண்பார்வை செல்லுமிடமுழுதுங் காணப்படும்; (எ - று.)

எப்போதும் திருக்கருவைச் சிவபிரானையே இடைவிடாமல் தியானிக்கின்ற எனது அந்தத்தியானத்தின் முதிர்ச்சியால் சிவபெருமானது திருவுரு

வம் எப்போதும் என்கண்செல்லுமிடங்களிலெல்லாம் வெளிப்பட்டுத்தோன்று மென்பதாம்: "என்கண்ணிடத்திலகலாதசெல்வ னெழிலார்களாவின்முதல் வன்" என்றார் பதிற்றுப்பத்தந்தாதியிலும். கடவுளின் கேசாதிபாதபரியந்த மான அவயவங்களில் ஈடுபட்டுக் கூறியவாறு. சிரிக்கும்போது பற்களினொளி வெளித்தோன்றுதல்பற்றி, வெள்ளொளி யெனப்பட்டது; பற்களின் வெள் ளொளியை நகைமேலேற்றிக்கூறிய உபசாரவழக்கு. வேதம் - உதாத்தம் அநு தாத்தம் ஸ்வரிதம் ப்ரசயம் என்னும் நான்குஸ்வரங்களையுடைய தாதலால், 'பண்கொண்டவேதம்' என்று கூறப்பட்டது. சிவபிரான் ஆதியில் தமது திருவாக்கால் வேதங்களை வெளியிட்டமைபற்றி, 'வேதப்பவளச்செவ்வாய்' என்றார்: "மறைமுதற்கிளந்தவாயான் மதிமுகிழ்முடித்தவேணி, யிறைவர்" என்றதுங் காண்க. (கச)

15. தாளாலுதைத்தது கூற்றுவன்மார்பந்தடக்கையுகிர்
வாளாலறுத்தது நான்முகன்சென்னிமணிவலயத்
தோளால்வளைத்தது மாமேருநெற்றிச்சுடர்விழியால்
வேளாடல்செற்றகருவாபுரியுறைவிண்ணவனே.

(இ - ள்.) கருவா புரி உறை விண்ணவன் - திருக்கருவையென்னுந் தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான், (தனது), தாளால் - பாதத் தால், உதைத்தது - உதைத்துத்தள்ளியது, கூற்றுவன் மார்பம் - யமனது மார் பாகும்: தட கை உகிர் வாளால் - பெரியகையிலுள்ள நகங்களாகிய வாளி னால், அறுத்தது - கிள்ளியறுத்தது, நான்முகன் சென்னி - பிரமனது (ஐந் தாந்) தலையாகும்; மணி வலயம் தோளால்- இரத்தினமிழைத்துச்செய்த (கேயூர மெனப்படும்) வளையலை யணிந்த தோளினால், வளைத்தது - (வில்லாக) வளைத் தது, மா மேரு - மகாமேருபர்வதமாகும்; நெற்றி சுடர் விழியால் - நெற்றியி லுள்ள அக்கினிஸ்வரூபமான திருக்கண்ணினால், செற்ற(து) - எரித்தழித் தது, வேள் ஆடல் - மன்மதனது வலிய உடம்பாகும்; (எ - று.)

சிவபெருமான் செயற்கரியதொழிலைச் செய்து தனது உறுப்புக்களாற் பகைவரை வலியொடுக்கும் பேராற்றல்படைத்தவ னென்பதாம்: "மூரலாற் றூளான் மூளரித்திருக்கண்ணாற், காருலாஞ்சோலைக் கருவேசர் - நேரலரூர், சுட்டார் வெங்கூற்றை யுதைத்தார் தொல்வேளையெய்ய, வொட்டாதெரித்தா ருடல்" என்றார் வெண்பாவந்தாதியிலும்.

வேள் - விருப்பம்; ஆண்பெண்களுக்கு விருப்பத்தை யுண்டாக்குங் கட வுளுக்கு ஆகுபெயர்: இனி, கண்டாரால் விரும்பப்படுங் கட்டழகையுடையவ னெனினுமாம்: இச்சொல் முருகக்கடவுளுக்கும் பெயராக வழங்குத லுண்டு; இங்கு முன்னும் பின்னும் வந்த சொற்களால், காமவேளை யுணர்த்திற்று. ஆடல் - அடல் என்பதன் நீட்டல்: வலிமையென்பது பொருள்: ஆகுபெய ரால், வலிமையையுடைய உடலை யுணர்த்திற்று: இனி, ஆடல் - தன்மீது மலரம்புகளை யெய்த குறும்புததொழில் எனினுமாம்; இப்பொருளில், இச்

சொல் - 'ஆடு' என்னும் முதனிலையடியாகப் பிறந்த தொழிற்பெயர். செற்ற- செற்றது என்பதன் விகாரம்; இனி, இச்சொல்லை இவ்வாறுகொள்ளாமல் பெயரெச்சமாகக்கொண்டு, 'நெற்றிச்சுடர்விழியால் வேளாடல்செற்ற' என்ற தொடரை 'கருவாபுரியுறைவிண்ணவன்' என்ற தொடர்க்கு அடைமொழி யாக்கி, சிவபெருமானது திறமையை விளக்கவேண்டி முதல்மூன்றடிகளிலும் அப்பிரானது ஒவ்வோருறுப்புச் செய்த தொழிலைக் கூறிய ஆசிரியர் ஈற்றடியி லும் அவ்வாறே கூறாது அடைமொழியாகக் கூறினாரெனின், கீழ்க்கூறிவந்த வகையினும் மாறுபடவுரைத்ததாகு மாதலால், எடுப்பழிவு [ப்ரக்ரமபங்கம்] என்னுங் குற்றமாம்; அன்றியும், ஒன்றுசெய்ததொழிலைப்பற்றிச் சொல்ல வேண்டியவிடத்து அதனைத் தனியே எடுத்துக்கூறாது அடைமொழியினுட் புகவைத்தலும் ஒரு குற்றமாம்; இதனை, வடநூலார் 'அவிம்ருஷ்டவிதேயாம் ஸம்' என்பர். இச்செய்யுளிலுள்ள ஒவ்வொரு வாக்கியத்திலும் செயப்படு பொருள் செய்ததுபோலக் கூறப்பட்டது; "செயப்படுபொருளைச் செய் ததுபோலத், தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே" என்றார் நன்னூலார்.

'தாளாலுதைத்தது கூற்றுவன் மார்பம்' என்பதிலடங்கிய கதை:— மிருகண்டு என்னும் முனிவன் பிள்ளையில்லாக்குறையால் பிரமனைக்குறித் துப் பெருந்தவஞ்செய்தபோது பிரமன் பிரதியக்ஷமாகி, 'அறிவின்மையும் உறுப்புக்குறையும் பெரும்பிணியும் தீக்குணமு முடையனாய் நூறுபிராயம் உயிர்வாழும் புதல்வன் வேண்டுமோ? கூரிய அறிவும் அழகிய வடிவமும் நோயின்மையும் நற்குணமுமுடையனாய்ப் பதினாறுபிராயமே வாழும் குமா ரன் வேண்டுமோ? இவ்விரண்டில் நீ விரும்புவது யாது?' என்று வினவ, முனிவன் 'ஆயுள்சிறிதேயெனினும் அறிவும் அழகும் குணமுஞ் சிறந்து பிணி யிலனாகுஞ் சற்புத்திரனையே வேண்டுகின்றேன்' என்று தன்கருத்தை விண் ணப்பிக்க, நான்முகக்கடவுள் அவ்வாறே அநுக்கிரகித்தனன். அங்ஙனம் ஊழ்வினையாற் பதினாறுபிராயம் பெற்றுப் பிறந்த புத்திரனான மார்க்கண்டே யன் தனது அற்பாயுசைக் குறித்து வருந்திய தாய்தந்தையரைத் தேற்றித் தான் விதியைக்கடந்து வருவதாகச் சொல்லி, தீர்க்காயுசுபெறுதற்பொருட் டுத் தினந்தோறுஞ் சிவபூஜை செய்து வருகையில், பதினாறுபிராயம் பூர்த்தி யாகவே, யமன் தூதரை யனுப்ப, அவர்கள் மார்க்கண்டேயனது தவக்கன லால் அவனையணுகமாட்டாது அவன் செய்யுஞ் சிவபூசைச்சிறப்பைக் கண்டு அஞ்சி வெருண்டோடி யமனிடஞ் செய்திசொல்ல, யமனும் கோபித்துத் தனது மந்திரியான காலனை யேவ, அவன் வந்து நயபயங்களால் அழைக்கவும் மார்க்கண்டேயன் 'வரமாட்டேன்' என்றுசொல்லிவிட, பிறகு, யமன் மிகக் கோதித்துத் தானே நேரில்வந்து மார்க்கண்டேயனைக் காலபாசத்தாற் கட்டி யிழுக்கத் தொடங்குகையில், அம்முனிகுமாரன் சிவலிங்கத்தைத் தழுவிக் கொள்ள, யமன் சிவலிங்கமுமுட்பட வலித்திழுக்கும்போது அளவிலாற்ற லுடையவனான சிவபிரான் கோபாநுக்கிரகங்களுடன் அங்குநின்று வெளிப் பட்டு யமனைக் காலாலுதைத்துதள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறு

பிராயமாகவே அநேககற்பகாலமளவும் இனிதுவாழும்படி தீர்க்காயுசுகொடுத்தருளின னென்பதாம்.

**நான்முகன் சென்னி யறுத்த கதை:**—ஒருகாலத்திற் பிரமன் தானே முதற்கடவுளென்று கூறிச் செருக்குற்றிருக்கையில், சிவபெருமான் தாமே முதல்வனென்று தெரிவிக்குமாறு திவ்வியசொரூபத்தோடு அவனெதிரில் தோன்ற, அப்பிரமனது ஐந்தாம்முகம் 'எனது நெற்றியினின்று தோன்றிய நீயோ முதல்வன்?' என்றுகூறிச் சிவனைப் பழித்தவளவில், அப்பெருமான் தனது அம்சமான வைரவமூர்த்தியை நோக்கியருள, அவன் தனது இடச்கை விரலின் நகத்துநுனியால் அவ்வைந்தாந்தலையைக் கொய்துவிட, அக்கபாலம் அப்படியே அவன்கையி லொட்டிக்கொள்ளுதலும், உருத்திரமூர்த்தி தருமத்தை உலகத்தவர் அறிந்து அநுஷ்டிக்குமாறு தான் அநுஷ்டித்துக்காட்டும்படி வயிரவனை நோக்கி, 'இப்பாவந் தொலைய நீ பிச்சையெடுக்கவேண்டும்' என்று உரைக்க, அவன் அங்ஙனமே பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று கைக்கபாலத்தோடு பிக்ஷாடநஞ்செய்து திரிந்து, பின்பு காசியைச்சேர்கையில் அந்த க்ஷேத்திரமகிமையால் உடனே கபாலம் கையைவிட்டுநீங்கிற் றென்பதாம்.

**வேளாடல் செற்ற கதை:**—முன்னொருகாலத்திலே கைலாசகிரியில் சிவபிரான் சனகர்முதலிய நால்வர்க்கு யோகநிலையை யுணர்த்துதற்பொருட்டுத் தான் யோகஞ்செய்துகொண்டிருக்கையில், பிரமனேவலால் மலரம்புகளையெய்து தனது தவத்தைக் கெடுக்கலுற்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணைவிழித்து அதன்நெருப்புக்கு இரையாய் உடம்புஎரிந்து சாம்பலாய்ப் போம்படி செய்தன னென்பதாம். இவ்வரலாற்றினால், மெல்லிய மலரம்பாகிய கருவியைக்கொண்டே பிரமன் முதல் எறும்பீறாகவுள்ள எல்லாவுயிர்களையும் வெல்லும் வில்வன்மையுடைய மன்மதனையும் மிக எளிதில் வென்றனனெனச் சிவபிரானது வெற்றித்திறம் விளங்கும். (௧௫)

16. விண்ணிடுவில்லும்புனன்மேற்குமிழியுமின்னுமென்ன
மண்ணிடைத்தோன்றியழியுமிக்காயத்தைமாய்விலதென்
றெண்ணிடுமெண்ணந்தவிர்த்தழியாமுத்தியேறுதற்குப்
பண்ணிடுமேனிகண்டூர்களவீசர்பொற்பாதங்களே.

(இ - ள்.) **களவீசர்** - திருக்களாமரத்தின்கீ ழெழுந்தருளியிருக்கிற சிவபெருமானது, **பொன் பாதங்கள்** - அழகிய திருவடிகள்,— **விண் இடு வில்லும்** - வானத்தில் தோன்றுகின்ற இந்திரதநுசும், **புனல் மேல் குமிழியும்** - நீரினிடத்துத் தோன்றுகின்ற மொக்குளும், **மின்னும்** - மின்னலும், **என்ன** - போல, **மண்ணிடை தோன்றி அழியும்** - பூமியில் தோன்றி இறக்கின்ற, **இ காயத்தை** - இந்த மனிதசரீரத்தை, **மாய்வு இலது என்று** - அழியாமல் நிலைத்து நிற்பது என்று, **எண்ணிடும்** - (அஜ்ஞாநத்தால்) நினைக்கின்ற, **எண்ணம்** - எண்ணத்தை, **தவிர்த்து** - நீக்கி, **அழியா முத்தி ஏறுதற்கு** - (எப்பொழுதும்) அழியாமல் நிலைத்துநிற்கின்ற முத்தியுலகத்தில் ஏறிச்செல்வதற்கு, பண்

ணிடும் - அமைக்கப்பட்டுள்ள, ஏணி - உபாயமாகும்; (எ - று.)—கண்டீர் - முன்னிலையசை: தேற்ற மெனினுமாம்.

கீழிடத்திலிருந்து மேலிடத்தி லேறுதற்கு ஏணி இன்றியமையாக் கருவியாதல்போல, நிலவுலகத்திலிருந்து மேலுலகமாகிய முத்தியுலகத்தி லேறுதற்குச் சிவபெருமானது திருவடிகள் இன்றியமையாத உபாயமாகுமென்பதாம்; "ஏணியாம் மாக்கதிக்குக் கண்ணன் திருவல்லிக், கேணியான் சீர்" என்றார் பிறரும். இந்திரவில்லும் நீர்க்குமிழியும் மின்னலும் இப்பொழுது தோன்றுவதென்று முன்புதெரியாதிருந்து சடக்கெனத்தோன்றி உடனே உருவழிந்து மாய்வதில், உடம்பிற்கு உவமையாம்; "வானிடுவில்லின்வரவு," "படுமழை மொக்குளிற் பல்காலுந்தோன்றிக், கெடுமிதோர்யாக்கை," "மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள்" என்பன காண்க. "நில்லாதவற்றை நிலையின வென்றுணரும், புல்லறிவாண்மை கடை" என்றவாறு நிலையில்லாத உடம்பை நிலையுள்ளதென்று மாறாகக்கருதுதல் புல்லறிவாகுதலால், நற்கதிபெறவிரும்பி நல்லறிவை நாடுபவர் அப்புல்லறிவைத் தவிர்த்த பின்னரே முத்திபெறுவரென்க. (கசு)

17. பாதாரவிந்தமுஞ்செஞ்சடைக்காடும்பஞ்சாயுதனும்
வேதாவுமின்னமுங்காண்பரியானையென்மெய்த்தவத்தா
னாதாவென்றேத்திக்கருவைக்களாவினறுநிழற்கீழ்க்
காதார்வரிவிழியொப்பனையாளொடுங்கண்டனனே.

(இ - ள்.) (தனது), பாத அரவிந்தமும் - தாமரைபோன்ற திருவடிகளையும், செஞ் சடை காடும் - சிவந்த சடையின்தொகுதியையும், (முறையே), பஞ்ச ஆயுதனும் - ஐந்து ஆயுதங்களையுடைய திருமாலும், வேதாவும் - பிரமனும், (பன்றியாகி மண்ணிடந்தும் அன்னமாகி விண்பறந்தும்), இன்னமும் காண்பு அரியானை - இன்னமுங் கண்டறியமுடியாத சிவபெருமானை,— என் மெய் தவத்தால் - எனது உண்மையான ஊழ்வினைப்பயனால், நாதா என்று ஏத்தி - 'எனதுதலைவனே!' என்று துதித்து,—கருவை களாவின் நறு நிழல் கீழ் - திருக்கருவையில் திருக்களாமரத்தினது நறுமணமுள்ள நிழலின்கீழ், காது ஆர் வரி விழி ஒப்பனையாளொடும் - காதளவும் நீண்ட செவ்வரிபரந்த திருக்கண்களையுடைய ஒப்பனையம்மையோடும், கண்டனன் - தரிசிக்கப்பெற்றேன், (யான்); (எ - று.)

திரிமூர்த்திகளுள் மற்றையிருமூர்த்திகளாலும் காணப்பெறாத சிவபெருமானை யான் எனது மெய்த்தவத்தாற் காணப்பெற்றே னென்று, தாம் நல்வினையாற்பெற்ற பேற்றை வியந்துகூறியவாறு. சிவபிரான் பக்தியையுடைய தம்மைப்போன்ற அடியார்க்கு மிகவும் எளியவனென்றும், பக்தரல்லாத பிறர்க்கு மிகவும் அரியவனென்றும் கூறியபடியாம்: 'பூமருவுவேதன் புயல்வண்ணன் கண்டறியாத், தாமமணிமுடியுந் தாளிணையும் - யாமறிய, வாழுங் கருவைவளநகரில் வந்துநின்றான், தாழுஞ்சடைக்களவீசன்" என்னும் வெண்பா

வந்தாதி இங்கு ஒப்புநோக்கத்தக்கது. சிவபெருமானைத் தாம் வத்துமாறு நேர்ந்தது தமது முன்னையநல்வினையே யென்பார் 'என்மெய்த்தவத்தால் நாதா வென்றேத்தி' என்றார்: "விண்ணவர்மகுடகோடி வீழ்ந்திறைஞ்சும் விரை மலர்ச்சேவடிமிசையே,..............கண்ணினீர்வாரக் கருவையம்பரனே கடவுளே யென்றெடுத்தேத்தப், புண்ணியம்புரிந்தேன்" என்றார் பதிற்றுப்பத்தந்தாதியிலும். பாதாரவிந்தம் பஞ்சாயுதன் காண்பரியான், செஞ்சடைக்காடு வேதா காண்பரியான் என முறையே சென்று இயைதலால், முன்னிரண்டடி முறைநிரனிறைப்பொருள்கோளாம்.

பஞ்சஆயுதன் - ஸுதர்ஸநமென்னுஞ் சக்கரமும், பாஞ்சஜந்யமென்னுஞ் சங்கமும், கௌமோதகியென்னுங் கதையும், நந்தகமென்னும் வாளும், சார்ங்க மென்னும் வில்லும் ஆக ஐந்து ஆயுதங்களை யுடையவன்; திருமால். வேதா என்னும் வடசொல்லுக்கு - படைப்புத்தொழிற்கடவுளென்று பொருளாம்.()

18. கண்டேன்கருவைப்பெருமான்றிருவடிகண்டுபற்றிக்
கொண்டேன்பரசமயங்குறுகேன்புல்லர்கூட்டநண்ணிப்
பண்டேபுரிந்தபழவினையாவையும்பற்றறுத்துத்
தொண்டேபுரிவதல்லாற்பின்னைவேறுதொழிலில்லையே.

(இ - ள்.) (யான் முன்னை நல்வினையின்பயனால்), கருவை பெருமான் திருஅடி - திருக்கருவைச் சிவபெருமானது திருவடிகளை, கண்டேன் - தரிசிக்கப்பெற்றேன்; கண்டு பற்றிக்கொண்டேன் - அவற்றைத் தரிசித்தபின்பு (உபாயமென்று) உறுதியாகக் கைக்கொண்டேன்; (இனிமேல்), பர சமயம் குறுகேன் - (சற்சமயமாகிய சைவசமயத்தைவிட்டுப்) புறச்சமயங்களிற் சென்று சேரமாட்டேன்; (இனி எனக்கு),—புல்லர் கூட்டம் நண்ணி - அறிவீனர்களுடைய கூட்டுறவைப் பெற்று, பண்டு புரிந்த - முன்னேசெய்து (சஞ்சிதமாகச்) சேர்த்த, பழ வினை யாவையும் - பழவினைகளையெல்லாம், பற்று அறுத்து - (தொடர்புஅறுமாறு) அடியோடு ஒழித்து, தொண்டே புரிவது அல்லால் - (சிவபிரானுக்கு) அடிமைசெய்வதேயல்லாமல், பின்னை வேறு தொழில் இல்லை - மற்றும் வேறுதொழில் ஒன்றுமில்லை; (எ - று.)

சிவபெருமானது திருவருளால் அப்பெருமானது திருவடிகளையே உபாயமாகப்பற்றிய எனக்கு, பரசமயங்களிற்சேர்தலில்லையாகி, தீயிணக்கத்தால் தோன்றிய பண்டைப்பழவினைகளையெல்லாம் அடியோடொழித்து அப்பிரானுக்குத் தொண்டுபுரிதலே தொழிலாகு மென்பதாம். 'கருவைப்பெருமான்திருவடி' என்ற தொடர் - இடையேநின்று, முன்னுள்ள 'கண்டேன்' என்றதையும், பின்வரும் 'கண்டுபற்றிக்கொண்டேன்' என்பதையும் தழுவுதலால், இடைநிலைத்தீவகம் எனப்படும்; இதனை, மத்யமதீப மென்பர் வடநூலார். பழவினை - முற்பிறப்புக்களிற் செய்யப்பட்டதனால் தம்மைச்செய்த உயிர்க்குத் தம்பயனாகிய துன்பத்தைப் பிற்பிறப்புக்களில் தவறாதுதருவதாய் அநாதியாக வருகின்ற தீவினை; இது - ஊழ் என்றுஞ் சொல்லப்படும்.

பரசமயம் - சைவமல்லாத மற்றைச்சமயங்கள் : அவையாவன - வைஷ்ணவம் ஶாக்தம் ஸௌரம் காணபதம் கௌமாரம் என்பன. அறுவகைமதம் - கபிலமதம் கணாதமதம் பதஞ்சலிமதம் அக்ஷபாதமதம் வ்யாஸமதம் ஜைமினிமதம் என்றும்; பௌத்தம் ஜைநம் பைரவம் காளாமுகம் லோகாயதம் சூந்யவாதம் என்றும் பலவகையாகக் கூறப்படும். தொண்டே, ஏகாரம் - பிரிநிலை. 'புல்லர்கூட்டம் நண்ணிப் பரசமயங்குறுகேன்' என்று இயைத்துப் பொருளுரைப்பினுமாம்.

19. இல்லாமைதுன்பமிரவுகல்லாமையிழிவுமடி
பொல்லாதநோய்முதலானவெல்லாமன்றுபோர்விசயன்
வில்லாலடியுண்டபால்வண்ணநாதர்வியன்புகழைச்
சொல்லாதவரையன்றேபிறப்பேழுந்துயர்செய்யுமே.

(இ - ள்.) இல்லாமை - வறுமையும், துன்பம் - துக்கமும், இரவு - இரத்தலும், கல்லாமை - படியாமையும், இழிவு - தாழ்வும், மடி - சோம்பலும், பொல்லாத நோய் - மிகக்கொடிய வியாதிகளும், முதல் ஆன - முதலாகவுள்ள, எல்லாம் - எல்லாத்தீமைகளும்,—அன்று - முற்காலத்தில், போர் விசயன் வில்லால் - போர்செய்த அருச்சுனனது விற்கழுந்தினால், அடியுண்ட- அடிபட்ட, பால்வண்ண நாதர் - பால்போன்ற வெண்ணிறமுடைய திருக்கருவைச்சிவபிரானது, வியன் புகழை - சிறந்த கீர்த்தியை, சொல்லாதவரை அன்றே—,பிறப்பு ஏழும்-(வினைப்பயன்தொடரும்) எழுவகைப்பிறப்பிலும், துயர் செய்யும் - துன்பஞ்செய்யும்; (எ - று.)

சிவபெருமானது திருப்புகழைத் துதியாதவர்களை வறுமை துக்கம் முதலிய எல்லாத்துன்பங்களும் வந்து வருத்து மென்பதாம்; எனவே, சிவபெருமானது திருப்புகழைத் துதிப்பவர் வறுமை துக்கம் முதலிய துன்பமொன்றுமின்றி இனிதுவாழ்வ ரென்பது, பெறப்படும். இல்லாமை - நுகரப்படும் பொருளொன்றுமில்லாமை; எனவே, வறுமையாம்: இனி, அறிவில்லாமை எனக் கொள்வாருமுளர். இரவு - இல்லாமைபற்றி நிகழுஞ் செயல். மடி - நல்ல செயல் யாதுஞ்செய்யாது வீணேகாலங்கழிக்குஞ் சோம்பல்தன்மை. இனி, 'மிடி' என்ற பாடத்துக்கு - தாரித்திரியம் என்று பொருளாம். பால்வண்ணர் என்பது - திருக்கருவையிலெழுந்தருளிய சிவபெருமானது திருநாமங்களு ளொன்று; இது, வெண்மைநிறமுடைமையால் வந்த பெயர். பிறப்பேழ் - வினைப்பயன் தொடரும் எழுவகைப்பிறப்பு: அவையாவன - தேவர் மனிதர் விலங்கு புள் ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்பன.

**விசயனதுவில்லா லடியுண்ட கதை:**—பாசுபதம்பெறத் தவநிலைநின்ற அருச்சுனனை அழிக்கத் துரியோதன னேவலாற் பன்றிவடிவாய் வந்த மூகாசுரன்மேல் வேடவடிவமாகி வந்த சிவபெருமான் அம்பெய்ய, அதுபிளக்கு முன்னே அருச்சுனன் அம்பொன்று எய்து வராகத்தை விழுத்த, அதுகாரணமாக அவ்விருவர்க்கும் உண்டான போரிற் பரமசிவன் எதிரியினது வில் நாணியை யறுக்க, பார்த்தன் அவ்விற்கழுந்தாற் கடவுளது முடியி லடித்தான்.

பின்பு சிவபிரான் தனது நிஜரூபத்தோடு காட்சிகொடுத்து அவன் வேண்டு கோளின்படி பாசுபதாஸ்திரத்தையும் வில் அம்பறாத்தூணி முதலியவற்றையும் அருளிப்போயின னென்பதாம். இவ்வரலாற்றினால், அன்பர்கள் செய்யுங் குற்றத்தைப் பொறுத்து அருள் செய்யுந் தன்மையன் சிவபிரானென்பது விளங்கும். (கக)

20. செய்யன்கரியமிடற்றன்வெண்ணீற்றன்செம்பாதிப்பச்சை
மெய்யன்செழும்பொற்சடாடவியான்வெவ்வனலெடுத்த
கையன்கருவைப்பெருமானிருவினைகட்டறுக்கு
மையன்சரணஞ்சரணமென்றோதுமருமறையே.

(இ - ள்.) செய்யன் - செந்நிறமுடையவனும், கரிய மிடற்றன் - (விடமுண்டதனால்) கறுத்த கண்டத்தை யுடையவனும், வெள் நீற்றன் - வெண்மையான விபூதியையுடையவனும், செம் பாதி பச்சை மெய்யன் - (தனது திருமேனியிற்) சரிபாதியாகப் பசுமைநிறமுள்ள வடிவமுடையவனும், செழும் பொன் சடா அடவியான் - செழித்த பொன்மயமாகிய சடைத்தொகுதியையுடையவனும், வெம் அனல் எடுத்த கையன் - வெம்மையாகிய அக்கினியை யேந்திய திருக்கையையுடையவனும், இரு வினை கட்டு அறுக்கும் ஐயன் - (அடியார்களது) இரண்டு வினைகளையும் தொடர்பற ஒழிக்கின்ற தலைவனும், கருவை பெருமான் - திருக்கருவையிலெழுந்தருளியிருப்பவனுமாகிய சிவபெருமானது, சரணம் - திருவடிகளே, சரணம் - (யாவர்க்கும்) அடைக்கலமாம், என்று—, அரு மறை - (உணர்வதற்கு) அருமையான வேதங்கள், ஓதும் - பலமுறை கூறும்; (எ - று.)

சிவபெருமானது திருவடிகளே தஞ்ச மென்பது, வேதத்தின் தேர்ந்த கருத்து என்பதாம். சிவபிரானது அர்த்தநாரீசுவரமூர்த்தியாகிய உருவத்தில் வலப்பாதியாகிய சிவரூபம் செந்நிறமாகவும், இடப்பாதியாகிய அம்பிகைவடிவம் பசுநிறமாகவும் இருத்தலை உட்கொண்டு 'செய்யன் செம்பாதிப்பச்சை மெய்யன்' என்றார்: "மணியுமானாய் மரகதத்திரளுமானாய்" என்ற தேவாரமும், "வலப்பாகஞ் செழும்பவளச்சோதியென்ன வானீலச்சோதியென்ன மற்றைப்பாகங், கலப்பான திருமேனி" என்ற பாரதமும் காண்க. கருமை நீலம் பசுமை என்ற நிறங்களை அபேதமாகக்கூறுதல், கவிசமயம். சிவபெருமான் தனது வலப்பால்மேற்கரத்தில் அக்கினியை யேந்தியுள்ளானென அறிக. நல்வினையும் பிறப்பிற்கு ஏதுவாதலால், அதனையுஞ்சேர்த்து 'இருவினைகட்டறுக்கு மையன்' என்றார்; "இருள்சே ரிருவினையுஞ் சேரா" என்று திருவள்ளுவர் கூறுவதும் இதுபற்றியே. தேவஜந்மம் நல்வினைப்பயனாற் பெரிதும் இன்பம் நுகருமாறு நேர்வதாயினும் அத்தேவர்களும் அந்நல்வினை முடிந்தவளவிலே அவ்வுடம்பு ஒழிய மீளவும் இவ்வுலகத்திற் கருமவசத்திற்கு ஏற்ப வேறுபிறவி கொள்பவராதலும், உயிரைப் பந்தப்படுத்துவதிற் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலப் புண்ணியஜந்மமும் பாபஜந்மமும் சமமேயாதலும், இவ்விருவகைக் கருமங்களையும் முற்றும் ஒழித்தவர்

களே சிற்றின்பத்திற்கும் பெருந்துன்பத்துக்குமே இடமான எழுவகைப் பிறப்புக்களிலும் புகுதாமற் பேரின்பத்திற்கே இடமான மீளாவுலகமாகிய முத்தியிற் சேர்ந்து மீளவும் பிறத்தலிலராவ ரென்பதும் உணர்க. சரணமென்னுஞ் சொல் இரண்டனுள், முன்னது - சரணம் என்ற வடமொழியின் திரிபும், பின்னது - ஸரணம் என்ற வடமொழியின் திரிபுமாம்.

'செய்யன் கரிய மிடற்றன் வெண்ணீற்றன் செம்பாதிப் பச்சை' என்ற அடியில் ஒன்றற்கொன்று மாறுபாடான நிறங்களையுணர்த்துஞ் சொற்கள் அமைந்திருப்பது, முரண்தொடையாம்; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றது காண்க. இது - பொருளால் வந்த முரண்தொடையாம். (உ0)

21. அருமறையோ திபென்பல் வேள்விமுற் றியென்னுதராவா
னருமதைகங்கைமுதற்புனன்மூழ்கியென் னுண்மலர்சேர்
மருமலிசோலைக்கருவைப்பிரான்றிருமந்திரத்தை
யொருமுறையோதித்துறக்கம்புகாதவுணர்விலரே.

(இ - ள்.) நாள் மலர் சேர் - புதிய மலர்கள் பொருந்திய, மரு மலி - நறுமணம் நிரம்பிய, சோலை - சோலைகள்சூழ்ந்த, கருவை - திருக்கருவையி லெழுந்தருளிய, பிரான் - சிவபிரானது, திருமந்திரத்தை - சிறந்தமந்திரமாகிய பஞ்சாட்சரத்தை, ஒரு முறை ஓதி - ஒருகால் உச்சரித்து, (அதன்பயனாக), துறக்கம் புகாத - மேலுலகத்தைச் சென்றுசேராத, உணர்வு இலர் - நல்லறிவு இல்லாதவர்கள்,—(தாம் நற்பயன்பெறவேண்டுமென்று கருதி), அரு மறை ஓதி என் - அரிய வேதங்களை ஓதினால் என்ன? பல் வேள்வி முற்றி என் - பலவகை யாகங்களைச் செய்தால்தான் என்ன? ஆதரவால் - மிக்கவிருப்பத்தோடு, நருமதை கங்கை முதல் புனல் மூழ்கி என் - நருமதை கங்கை முதலிய புண்ணியதீர்த்தங்களில் நீராடினால்தான் என்ன? [ஒருபயனுமில்லை என்றபடி]; (எ - று.)

சிவபெருமானுக்கு உரிய பஞ்சாட்சரங்களை உச்சரித்து அப்பெருமானுக்கு ஆட்படுதலால்மாத்திரம் கருமமொழிந்து வீடுபெறலாமே யன்றி, வேதமோதுதல், வேள்விசெய்தல், புண்யதீர்த்தங்களில்ஸ்நாநஞ்செய்தல் முதலிய வெறுந்தொழில்களால் வினையொழிந்து நற்கதிபெற முடியாதென்பதாம். உண்மையறிவின்றிச் செய்யப்படுகின்ற ஒழுக்கங்கள் சிறிதும் பயன் தரமாட்டா வென்பது, கருத்து. வேதங்களைப் பலகால் ஓதுவது பலயாகங்களைச்செய்வது பலபுண்யதீர்த்தங்களிற்சென்று ஸ்நாநஞ்செய்வது முதலிய காயக்கிலேசங்களான தொழில்களைச் செய்தும் பெறுதற்கரிய நற்பதவியை, ஒருகால் சிவபிரானது திருமந்திரத்தை உச்சரித்தமாத்திரத்தாற் பெறலாகுமென்று அம்மந்திரத்தின் மகிமையை உணர்த்தியவாறு. 'ஆதரவால்' என்பதை 'அருமறையோதியென்', 'பல்வேள்விமுற்றியென்' என்றவற்றோடுங் கூட்டலாம். இங்கு 'ஆதரவால்' என்று அடைமொழிகொடுத்துக் கூறியத

ஞல், நெருப்பென்று உணராது மிதித்தாலும் அது மிதித்தவர்பாதங்களைச் சுடுதல்போலத் திருமந்திரத்தை ஆதரவின்றி உச்சரித்தாலும் அது தவறாது நற்பயனைத் தருமென்பது, தொனிக்கும்.

ஓதி, முற்றி, மூழ்கி என்ற செய்தெனெச்சங்கள் - ஓதினல் முற்றினல் மூழ்கினல் எனச் செயினென்னும் வினையெச்சமாகப் பொருள்படுதலால், எச்சதிரிபுகளாம். மந்த்ரம் - (தன்னை) மநநஞ்செய்தவரைக் காப்பதென்று காரணப்பொருள்படும் பெயர். துறக்கம் - (ஸம்ஸாரபாசபந்தங்களைத்) துறந்து அடையும் இடம் எனக் காரணக்குறி. (உக)

22. உணங்குந்தவத்தர்கருத்திலும்வேதத்திலுச்சியிலு
மணங்கொண்டசோலைக்கயிலாயவெற்பிலுமாமறையோர்
கணங்கொண்டுபோற்றிசெய்பொன்னம்பலத்துங்கருவையினு
மிணங்கும்பொருளென்னிதயாரவிந்தத்திருக்கின்றதே.

(இ - ள்.) உணங்கும் தவத்தர் கருத்திலும் - (உடம்பு) வாடுதற்குக் காரணமான தவத்தையுடையவர்களது மனத்திலும், வேதத்தின் உச்சியிலும் - வேதங்களின் அந்தங்களான உபநிஷத்துக்களிலும், மணம் கொண்ட சோலை கயிலாயவெற்பிலும் - நறுமணம் பொருந்திய சோலைகளையுடைய திருக்கைலாசமலையிலும், மா மறையோர் கணம் கொண்டு போற்றி செய் பொன் அம்பலத்தும் - சிறந்த வேதமுணர்ந்த அந்தணர்கள் கூட்டங்கூடி வணங்குகின்ற திருச்சிற்றம்பலத்திலும், கருவையிலும் - திருக்கருவையென்னுந் திவ்விய தலத்திலும், இணங்கும் - அன்போடு எழுந்தருளிய, பொருள் - பரம்பொருள்,—என் இதய அரவிந்தத்து - எனது மனமாகிய தாமரையில், இருக்கின்றது—; (எ - று.)

சிவபெருமானை அடியேன் அன்போடு தியானித்தல்பற்றி அப்பெருமான் நான் நினைத்தபடியெல்லாம் எனது மனத்தில் திருவுள்ளமுவந்து வந்து எழுந்தருளியிருக்கின்றனனென்பது தோன்ற இங்ஙனங் கூறினர். இனி, சிவபிரான் வேதாந்தங்களிலும் திருக்கைலாசத்திலும் பொன்னம்பலத்திலும் திருக்கருவையிலும் எழுந்தருளியிருப்பதுபோல என்மனத்திலும் எழுந்தருளியிருக்கின்றனனென்றுமாம். இருக்கின்றதே என்ற ஏகாரததால், முனிவர் கருத்து முதலிய உயர்வான இடங்களி லிருக்கவேண்டிய பரம்பொருள் எனதுஇதயமாகிய தாழ்ந்தஇடத்திலிருப்பது என்னவியப்போ! என்ற கருத்துத் தொனிக்கும். "இருக்குந் திருக்கோயில் ஏழையேன் நெஞ்சோ, மருக்கொள் கயிலைவரையோ - திருக்களவோ, சோதிமணிமன்றோ சுடர் விசும்போ பால்வண்ணா, ஓதுமறையோ வுனக்கு" என்றார், வெண்பாவந்தாதியில். 'மாமறையோர் கணங்கொண்டு போற்றிசெய் பொன்னம்பலம்' என்றது - தில்லைவாழந்தணர் மூவாயிரவர் ஏத்துகின்ற கனகசபையை. (உஉ)

23. இருக்கும்புராணமுமாகமகோடியுமென்றுலகிற்
பெருக்குங்கொழுகொம்புமீதேறிமுத்திப்பிரசமலர்

குருக்குமெய்ஞ்ஞான மணம்வீசுந் தேனுண்டுகொள்ளைவண்டு
செருக்குங்களவினிழற்கீழ்முளைத்தசிவக்கொழுந்தே.

(இ - ள்.) கொள்ளை வண்டு - தொகுதியாகிய வண்டுகள், தேன் உண்டு - தேனைப் பருகி, செருக்கும் - களிப்புக்கொள்ளுதற்கு இடமான, களவின் - திருக்களாமரத்தினது, நிழல் கீழ் - நிழலின் கீழே, முளைத்த - தோன்றிய, சிவம் கொழுந்து - பரமசிவமாகிய இளங்கொடியானது, — இருக்கும் - வேதங்களும், புராணமும் - புராணங்களும், ஆகம கோடியும் - தொகுதியான ஆகமங்களும், என்று - என்று சொல்லப்பட்டு, உலகில் பெருக்கும் - உலகத்தில் நிறைந்துள்ள, கொழுகொம்பு மீது - கொள்கொம்பின்மேல், ஏறி - ஏறிப்படர்ந்து,— முத்தி பிரசம் மலர் - முத்தியாகிய தேன்நிறைந்த புஷ்பத்தை (உடையதாகி), குருக்கும் - மேன்மையாக விளங்குகின்ற, மெய் ஞானம் - தத்துவ ஞானமாகிய, மணம் - இனிய வாசனையை, வீசும் - வீசாநிற்கும் ; (எ - று.)

சிவபெருமான் வேதம்முதலியவற்றால் ஓதப்படுதலால் உலகத்தவரால் அறியப்பெற்று, அஜ்ஞானத்தின்தொடர்பென்பது சிறிதுமில்லாமல் தத்துவ ஞானமே நிரம்பியுள்ள முத்தியுலகத்தைத் தன்னையடைந்த அடியார்க்குத் தந்தருள்வனென்பதாம். சிவபெருமானை இளங்கொடியாகவும், அப்பிரானது ஸ்வரூபரூபகுணவிபவங்கள் முதலியவற்றை விளக்கிக்காட்டக்கூடிய வேதஆகமபுராணங்களை இளங்கொடி ஏறிப்படர்ந்து பரவுதற்கு ஏற்ற கொழு கொம்பாகவும், அப்பிரானால் அளிக்கப்படுகின்ற பேரின்பத்தையுடைய முத்தியைப் படர்ந்த அக்கொடியீன்ற தேன்நிறைந்த மலராகவும், அம்முத்தியினிடத்துத் தோன்றும் மெய்ஞ்ஞானத்தை அம்மலர்வீசும் நறுமணமாகவும் உருவகஞ்செய்தன ரென்க.

வேதத்தின் ஒருவகையான பகுப்பைக் குறிக்கின்ற இருக்கு என்னுஞ் சொல், இங்கு இலக்கணையால் வேதங்களையே யுணர்த்திற்று ; இனி, நான்கு வேதங்களுள் ருக்வேதம்முதலதாகையால், தலைமைபற்றி அது எடுத்துக்கூறப்பட்ட தெனினுமாம் ; வேதங்கள் - ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்பன. புராணம் - பிரம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும். ஆகமம் - காமிகம் முதல் வாதுளம் ஈறாகவுள்ள இருபத்தெட்டாம் ; இவை - சரியை கிரியை யோகம் ஞானம் இவற்றை விளக்குகின்ற பதினூலாம். கொழுகொம்பு - கொள்கொம்பு. குருக்கும் - நிறமென்னும் பொருளை யுணர்த்தும் குரு என்னும் பெயர்ச்சொல்லினடியாப் பிறந்த பெயரெச்சம். (உ௩)

24. கொழுந்தும்பைவேணிமுடிக்களவீசகுறித்துநெஞ்சிற்
றொழுந்தொண்டருக்கருளுங்கருவேசதொனிவிளைக்குஞ்
செழுந்தொண்டைவாய்ச்சியர்காமாதுராகத்திற்சிந்தையழிந்
தழுந்தும்பொழுதிலும்யான்மறவேனுன்னடியிணையே.

(இ - ள்.) கொழும் தும்பை வேணி முடி களவீச - செழுமையாகிய தும்பைமலரை யணிந்த சடைமுடியையுடையவனான திருக்களாமரத்தின்கீழ்

எழுந்தருளியிருக்குந் தலைவனே! நெஞ்சில் குறித்து தொழும் தொண்டருக்கு அருளும் கருவேச - மனத்தினால் தியானித்துவணங்குகின்ற அடியார்கட்குக் கருணைபுரிகின்ற திருக்கருவைச் சிவபெருமானே!—தொனி விளக்கும் - இனிய ஓசையை யுண்டாக்குகின்ற [இன்குரலையுடைய], செழுந் தொண்டை வாய்ச்சியர் - செழுமையாகிய கொவ்வைக்கனியையொத்த [சிவந்த] வாயை யுடைய மகளிரது, காம அநுராகத்தில் - காமவின்பத்தில், சிந்தை அழிந்து - மனவுறுதி குலைந்து பரவசப்பட்டு, அழுந்தும் பொழுதிலும் - மூழ்கிக்கிடக் கும்போதிலும், உன் இணை அடி - உனது திருவடிகளிரண்டையும், யான் மறவேன் - நான் மறக்கமாட்டேன்; (எ - று.)

நான் சிற்றின்பத்தில் மூழ்கிக்கிடக்கையிலும் என்மனம் உன்திருவடி களை மறவாது நிற்கு மென்பதாம்: "இருக்கிலும் நிற்கும்போதும் இரவு கண்டுயிலும்போதும், பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியுண்ணுய்க் கும்போதும், முருக்கிதழ்க்கனிவாயாரை முயங்கிநெஞ்சழியும்போதும், திருக் களாவுடையநம்பா சிந்தை யுன்பாலதாமே" என்றார் பதிற்றுப்பத்தந்தாதியி லும். அழுந்தும்பொழுதிலும் மறவேன் என்ற சிறப்பும்மையால், சிவபிரான் திருவடிகளை மறத்தற்குஉரிய காலம் அது வென்பது, தோன்றும்.

தும்பை, தொண்டை என்பன - முறையே அவற்றின் மலர்க்கும் கனிக் கும் முதலாகுபெயர்கள். வேணி என்ற வடசொல்லில், ஈயீறு இகரமாயிற்று. கருவை என்ற சொல்லை ஆகாரவீறுக்கி, குணசந்தியாக 'கருவேச' என்றார். தொனி - த்வநி; வடசொல். வாய்ச்சியர் - பெண்பன்மை. காம + அநுராகம்: காமாநுராகம்; தீர்க்கசந்திபெற்ற வடசொற்றொடர். ஆசையென்றபொரு ளுணர்த்தும் அநுராகம் என்பது, இங்கு, அவ்வாசையினால்விளையுஞ் சிற்றின் பத்தைக் குறித்தது: இலக்கணை. இனி, இத்தொடரை ஒருபொருட்பன் மொழியெனக்கொண்டு, மிக்ககாமத்தில் என்று பொருள்கூறினுமாம். (உச)

25. அடியேனினைவுக்கடங்காவறிவையளித்துநெஞ்சிற்
குடியேபுகுந்தென்னையாளநின்றான்கொண்டன்மேனியனும்
படியேழுந்தேடியுங்காணுமுழுமுதற்பானிறவெண்
பொடியேறுமேனியன்றென்கருவாபுரிப்புண்ணியனே.

(இ - ள்.) கொண்டல் மேனியனும் - நீர்கொண்ட காளமேகம்போன்ற திருமேனியையுடைய திருமாலாலும், படி ஏழும் தேடியும் - (வராகரூபியாய்க்) கீழேழுலகங்களிற் சென்று தேடப்பெற்றும், காணு - காணமுடியாத, முழு முதல் - (மும்மூர்த்திகளுள்ளும்) முதல்வனான கடவுளும், பால் நிறம் வெள் பொடி ஏறு மேனியன் - பால்போன்ற வெண்ணிறத்தையும் வெண்மையாகிய திருநீற்றையுமுடைய திருமேனியையுடையவனும், தென் கருவாபுரி புண்ணி யன் - தென்திசையிலுள்ள திருக்கருவையி லெழுந்தருளிய புண்ணியஸ்வரூ பியுமாகிய சிவபெருமான்,—அடியேன் நினைவுக்கு அடங்கா அறிவை அளித்து - அடியேனது எண்ணத்திற்குள் அடங்காத [அதனிலும் மிகவிசாலமாகிய] உண்மையறிவைக் கொடுத்து, நெஞ்சில் குடிபுகுந்து - (எனது மனத்தின்)

நிலையாக எழுந்தருளியிருந்து, என்னை ஆள நின்றான் - அடியேனைக் காப்பாற்றுமாறு சித்தனாக இருக்கிறான்; (எ - று.)

தேவரெல்லாரினுஞ் சிறந்தவனான திருமாலாலும் அறியப்படாத சிவபெருமான், காரணமின்றி என்மீது எழுந்த பெருங்கருணையினால் தானே வலியவந்து அடியேனுக்கு ஆவனசெய்து, என்னைக்காக்குமாறு எனதுநெஞ்சையே வாழுமிடமாகக் கைக்கொண்டருளினான்; அப்பிரானது பெருங்கருணை என்திறத்து இருந்தவாறு என்னே! என வியந்தவாறு. "அதிசய முளதிற்காட்டி அகம்புறந்தானுக் காட்டித், துதிசெயக்கவிநாக்காட்டித் தொடக்கறு நேயங்காட்டி, மதியினிற்களிப்புங்காட்டி வந்தெனை யாளாக்கொண்டான், கதியெனவுலகம்போற்றக் களாநிழலமர்ந்தநாதன்" என்றது, பதிற்றுப்பத்தந்தாதி.

அறிவுக்கு ஆதாரமாகிய மனத்தினும் அம்மனத்தின்கண் அடங்கி நிற்க வேண்டிய அறிவாகிய ஆதேயம் பெரிதென்பது படக் கூறியதனால், 'நினைவுக்கடங்காவறிவையளித்து' என்பதில் மீதூதியணிதோன்றுமென்னலாம். கொண்டல் - நீரைக்கொண்டிருப்பது எனக் காளமேகத்துக்குத் தொழிலாகு பெயர். மேனியனும், உம்மை - உயர்வுசிறப்பு. படி எழு - அதலம் விதலம் சுதலம் தலாதலம் ரஸாதலம் மகாதலம் பாதாளம் என்ற கீழுலகங்களேழு: உம்மை - இனைத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை. பானிறம் என்பதை மேனிக்கு அடைமொழியாக்காது வெண்பொடிக்கு அடைமொழியாக்கின், வெண்மையென்ற அடைமொழி நின்றுவற்றுமென்க: இனி, பால் வெண்ணிறம் பொடி ஏறுமேனியன் என்று கூட்டிப் பொருளுரைப்பினும் பொருந்தும். (உரு)

26. புண்ணியனொப்பனைபாகன்புராதனன்பூங்கடுக்கைக்
கண்ணியனெங்கள்கருவைப்பிரான்களவீசனன்பர்க்
கண்ணியன்றன்னடியாருடன்கூடவறிவொன்றிலாத்
தண்ணியவென்னைத்தடுத்தாட்கொளநின்றதற்பரனே.

(இ - ள்.) புண்ணியன்-புண்ணியசொரூபியானவனும், ஒப்பனை பாகன்-ஒப்பனையம்மையை இடப்பாகத்திற் கொண்டவனும், புராதனன் - அநாதியானவனும், கடுக்கை பூ கண்ணியன் - கொன்றைமலர்மாலையைச் சூடியவனும், அன்பர்க்கு அண்ணியன் - (தன்னிடத்து) மெய்யன்புடையார்க்கு நெருங்கியருள்செய்பவனும், எங்கள் கருவை பிரான் - எமது நாட்டிலுள்ள திருக்கருவையி லெழுந்தருளியுள்ள சுவாமியுமாகிய, களவு ஈசன்—, தன் அடியாருடன் கூட - தனதுமெய்த்தொண்டர்களுடன் சேர்வதற்கு, அறிவு ஒன்று இலா - உண்மையறிவு சிறிதும் இல்லாத, தண்ணிய என்னை - மிகத்தாழ்ந்த என்னை, தடுத்து - (பிரபஞ்சவாழ்க்கையில் உழலாமல்) விலக்கி, ஆள் கொள நின்ற - அடிமைகொள்ளுமாறு நின்ற, தற்பரன் - சிறந்தகடவுளாவான்; (எ - று.)

காமவசத்தனாய் மகளிர்பக்கல் மோகங்கொண்டு பிரபஞ்சவாழ்க்கையில் அலைந்துதிரிந்து சிவபெருமானது திருவருளுக்குப் பாத்திரமாதற்கேற்ற நல்

வினை சிறிதுமின்றித் தன்னடியாருடன்சேர்தற்கு இயைபில்லாது மிகவுந் தாழ்ந்த என்னை, திருக்கருவைச்சிவபெருமான் தனது நிர்ஹேதுககிருபையினால் தடுத்து ஆட்கொண்டருளினு னென்பதாம். அறிவொன்றிலாத் தண்ணியஎன்னைத் தடுத்துத் தன்னடியாருடன்கூட ஆட்கொளநின்ற தற்பரன் கருவைப்பிரான் என்றுகூட்டிப் பொருளுரைப்பினுமாம். "வேனிற்சிலைவேள்தொடுகணைக்கும் விளங்குமகளிருளங்கவற்றும், பானற்கொடியவிழிவலைக்கும் பற்றுய் வருந்தி யநுதினமும், ஈனத்துயரக்கடலழுந்தும் எனையும் பொருளா அடிமைகொண்டாய், ஞானத்துருவே தமிழ்க்கருவைநம்பா பொதுவினடித்தோனே," "சுடரே வலியத்தடுத்தாண்ட துணையே" என்பர் பதிற்றுப்பத்தந்தாதியிலும்.

புராதனன் - தனக்குமுன்னே தோன்றினுர் ஒருவருமின்றித் தானே முதலில் தோன்றியவன். கண்ணி - நெற்றியின்மாலை. அன்பர்க்கு அண்ணியன் - "பத்துடையடியவர்க் கெளியவன்:" அன்பில்லாதார்க்குச் சேய்மையன் என்பது, இத்தொடரில் தொனிக்கும். அண்ணியன் - அண்மை என்னும் பகுதியடியாய்ப் பிறந்த பெயர். தற்பரன் - தன்னினுஞ்சிறந்த கடவுள் ஒருவருமின்றித் தானே சிறந்த கடவுளா யிருப்பவன். (உசு)

27. பரகதிக்கேவைப்பையோவறியேன்பெரும்பாதகர்போ
நரகதிக்கேவைப்பையோவறியேனெங்குநானுறினுஞ்
சரகதிக்கேசெல்விடையாய்களாவுறைசங்கரனே
வரகதிக்கேற்றநின்பாதாரவிந்தம்வழுத்துவனே.

(இ - ள்.) சர கதிக்கே செல் விடையாய் - அம்பின் வேகம்போல (விரைந்து) செல்கின்ற விருஷபத்தை வாகனமாகவுடையவனே! களா உறை சங்கரனே - திருக்களாமரத்தின்கிழலில் நித்தியவாசஞ்செய்கின்ற சிவபிரானே!— பர கதிக்கே வைப்பையோ - (அடியேனை) உயர்ந்த கதியாகிய முத்தியுலகத்திற் சேருமாறு கருணைபுரிவாயோ? அறியேன் - அறிந்திலேன்; (அன்றி), பெரும் பாதகர் போம் நரகம் திக்கே வைப்பையோ - பெரும்பாவிகள் செல்கின்ற நரகத்தினிடத்தில்தானே சேருமாறு செய்வாயோ? அறியேன்—; நான் எங்கு உறினும் - நான் எவ்விடத்திற் சேர்ந்தாலும், வர கதிக்கு ஏற்ற - சிறந்த முத்திப்பதவியைக் கொடுத்தற்குஉரிய, நின் பாத அரவிந்தம் - உனது திருவடித்தாமரைகளை, வழுத்துவன் - துதிப்பேன்; (எ - று.)

திருக்கருவைச்சிவபெருமானே! தலைவன் திருவுள்ளத்தின்படியே செல்வது அடியவனுக்குக் கடமை யாதலால், அடியேன் நினக்கு அடிமைப்பட்ட பின்பு, எனக்கு நீ முத்தியுலகம் அளித்தாலும் நரகலோகமே அளித்தாலும் ஒருநிகராகவே பாவித்து, எங்கிருந்தாலும் உனதுதிருவடிகளையே இடைவிடாதுதியானிப்பே னென்பதாம். இதனுல், அடியவர் தாம்பெறுகின்றபேற்றைப்பற்றிச் சிறிதுங் கவலைகொள்ளாது இறைவனிடத்துப் பக்திப்பெருங் காதலையே பெரும்பேருகக் கொள்வரென்பது பெறப்படும்; "மேலாம்பதத்

தில் விடுவையோ வன்றி யென்னை, யேலாநரகத் திடுவையோ," "உத்திவாளரா முடித்த பால்வண்ணனே யுனது, பத்தி வேண்டுவதன்றியே நரகிடைப்படினும், முத்திவேண்டிலேன்" என்பர் மற்றையந்தாதிகளிலும்.

சரகதி - சரத்தின்கதிபோன்ற கதி. மிக்கவிரைவுடன் செல்வதில் விடைக்கு அம்பு - உவமை. பரகதிக்கே, நரகதிக்கே, ஏகாரங்கள் - பிரிநிலை. விடை - வ்ருஷம் என்ற வடசொல்லின் சிதைவு. முதலடியில் கதிக்கு என்பது - கதியில் என ஏழனுருபின்பொருளில் வந்ததும், மூன்றாமடியில் சரகதிக்கு என்பது சரகதியால் என மூன்றனுருபின்பொருளில் வந்ததும் - வேற்றுமைமயக்கமாம். ஸங்கரன் - (அடியார்க்குச்) சுகத்தைச் செய்பவன்: வடமொழிக் காரணச்சிறப்புப்பெயர். (உஎ)

28. வழுத்துதல்போற்றல்வணங்கல்குழைதன்மகிழ்தனெஞ்சிற்
பழுத்தவன்புற்றுப்பலகாலுருகுதல்பாவனைபோய்
முழுத்தவின்பக்கடன்மூழ்கிக்களித்தன்முகலிங்கன்றா
ளழுத்தவென்சென்னிகொடுத்தபின்பெற்றததிசயமே.

(இ - ள்.) முகலிங்கன் - திருக்கருவைச்சிவபெருமான், தாள் - (தனது) திருவடிகளை, அழுத்த - அழுந்தவைக்கும்படி, என் சென்னி - எனது தலையை, கொடுத்த பின் - சமர்ப்பித்த பிறகு [தலையை வணக்கியபிறகு],—வழுத்துதல் - துதித்தலையும், போற்றல் - வாழ்த்துக்கூறுதலையும், வணங்கல் - வணங்குதலையும், குழைதல் - நெகிழ்தலையும், மகிழ்தல் - சந்தோஷித்தலையும், நெஞ்சில் பழுத்த அன்பு உற்று பல கால் உருகுதல் - மனத்தில் முதிர்ந்த அன்பு கொண்டு பலமுறை உருகுதலையும், பாவனை போய் முழுத்த இன்பம் கடல் மூழ்கி களித்தல் - (பக்திப்பெருக்கினால்) எண்ணமொழிந்து [பரவசப்பட்டு] நிறைந்தபேராநந்தக்கடலில் மூழ்கிப் பெருங்களிப்புக்கொள்ளுதலையும், பெற்றது - (யான்) அடைந்தது, அதிசயமே - வியப்பாகுமோ? (எ - று.)

எனவே, சிவபிரான் தனது திருவடிகளை வணங்கிய என் சென்னிமீது பொறித்தபின்பு, பக்திப்பெருக்கின்செயல்களான வழுத்துதல் முதலியன என்னிடத்துத் தோன்றியதில் ஒருசிறிதும் வியப்பில்லை யென்பதாம்: ஒன்றுக்கும்பற்றாத தம்மையும் ஒருபொருளாகக்கொண்டு அருள்புரிந்து தமது முடியின்மேல் சிவபெருமான் திருவடிவைத்த பெருந்தகைமையை வியந்தவாறு. சிவபிரானது திருவடிகளைத் தலைமீது கொண்டு வணங்கும் பக்தர்கட்கு வழுத்துதல் முதலியன தோன்றுதல் இயல்பேயென்க. "கண்டகண்கள்புனல்பாயக் களிப்பா யுள்ளங்கரையழிய, விண்டமொழியும் நாக்குழற விம்மிமேனிமயிர்பொடிப்பப், பண்டைவசம்போய்ப் பரவசமாய்ப் பரமாநந்தத் தளிநறவ, மூண்டுதெவிட்டா வருள்புரிந்தான் கருவைவாழு முரவோனே" என்ற பதிற்றுப்பத்தந்தாதி இங்கு நோக்கத்தக்கது. முகலிங்கம் என்பது, சிவபிரானது அறுபத்துநான்குமூர்த்தங்களு ளொன்று. பாவனைபோய் என்பதற்கு-(யான்அடியவன்போல) நடித்த தன்மைமாறி [உண்மையானபக்தனாகி]

என்றும், (கடவுளைத்) தியானிக்கின்ற தன்மை மிகுந்து என்றும் பொருள் கூறலாம். அதிசயமே, ஏகாரம் - வினவகையால், எதிர்மறைகுறித்தது. (உஅ)

29. பெற்றேனொருவர்பெறாப்பெரும்பேறுபிறவித்துன்ப
மற்றேனினிமற்றடைவதுண்டோவரண்மூன்றெரியச்
சற்றேமுறுவல்செய்தோர்களவீசர்பொற்றாளிணைக்குக்
குற்றேவல்செய்யத்தமியேனிதயங்கொடுத்தவன்றே.

(இ - ள்.) அரண் மூன்று எரிய - (இரும்பு வெள்ளி பொன் என்னும் இவைகளாலியன்ற) மதிளையுடைய திரிபுரங்களும் சாம்பலாய் எரிந்தொழியுமாறு, சற்று முறுவல் செய்தோர் - சிறிது புன்சிரிப்புக்கொண்டவராகிய, களாஈசர் - திருக்கருவைச்சிவபிரானது, பொன் தாள் இணைக்கு - பொன்போன்ற இரண்டு திருவடிகட்கும், குறு ஏவல் செய்ய - திருத்தொண்டுபுரியும்படி, தமியேன் - அடியேன், இதயம் - (எனது) மனத்தை, கொடுத்த அன்றே - சமர்ப்பித்த நாள் தொடங்கியே,—(நான்),—ஒருவர் பெறா - (பக்தரல்லாதவர்) எவரும் அடைந்திராத, பெரும் பேறு - பெரிய புருஷார்த்தத்தை, பெற்றேன் - அடைந்தேன்; பிறவி துன்பம் அற்றேன் - பிறப்புக்களினாலாகிய துன்பங்கள் நீங்கப்பெற்றேன்; இனி மற்று அடைவது உண்டோ - இனிமேல் வேறு அடையவேண்டிய பயனும் (எனக்கு) உளதோ? [எல்லாப்பயனையும் அடைந்தே னென்றபடி]; (எ - று.)

சம்சாரத்தில் அலைந்து பிறகு நன்ஞானமுண்டாகி அதனிடத்து வெறுப்புக்கொண்டவர்கள் வேண்டுபவை இரண்டு; அவையாவன - வேண்டுவன பெறுதலும் [இஷ்டப்ராப்தியும்], வேண்டாதன ஒழிதலும் [அநிஷ்டநிவ்ருத்தியும்] ஆம். வேண்டுவனவாவன - சிவபெருமானிடத்தும் அவனது அடியார்களிடத்தும் அன்புகொள்ளுதல் முதலியன: வேண்டாதனவாவன - பிறவித்துன்பங்கள்: இவை இரண்டும் தமக்குக் கைகூடியதனால், இனி அடையற்பாலது ஒன்றுமில்லை யென்று தமதுஉள்ளநிறைவை இதனால் வெளியிட்டனரென்க. திரிகரணங்களினாலும் இறைவனை வணங்குதல் அன்பர்களது கடமையாதலாலும், தாம் பாடல்தொண்டு செய்வதனால் வாயினால் வணங்குதல் பெறப்பட்டதனாலும், மற்றை இரண்டுகரணங்களால் சென்னியால் வணங்கியதைக் கீழ்ச்செய்யுளினாற் கூறி, மனத்தால் வணங்குதலை இச்செய்யுளால் வெளியிட்டன ரென்க. ஒருவர் பெறாப் பெரும்பேறு - அலாபலாப மெனப்படும். பிறவித்துன்பங்கள் - ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்பன: இவற்றினிலக்கணங்கள் கீழ்க்கூறப்பட்டன. குற்றேவல் - சிவகைங்கரியம்.

பெற்றேன், அற்றேன் என்பன - தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகக்கூறப்பட்ட காலவழுவமைதிகள். பேறு - பெறப்படுவது: செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டு முதல்நீண்ட பெயர். 'இனி' - எதிர்காலங்குறிக்கும் இடைச்சொல். மற்று என்னும் இடைச்சொல் - பிறிது என்னும் பொருளது. மூன்று-நகரங்களைக் காட்டுதலால், எண்ணலளவையாகுபெயராம்.

30. கொடுங்காலபாசத்தைவீசிவெங்கூற்றுக்கொதித்துமுனிந்
தடுங்காலமுநின்னடிமறவேனலையாழிவெம்பப்
படுங்காலகூடவிடமுண்டுதேவர்பயங்கெடுத்து
விடுங்காலகாலகருவாபுரியுறைவேதியனே.

(இ - ள்.) (பாற்கடல்கடைகையில்), அலை ஆழி வெம்ப - அலைகளை யுடைய பாற்கடல் கொதிக்கும்படி, படும் - (அதனிடத்துத்) தோன்றிய, காலகூட விடம் - மிக்ககொடுவிஷத்தை, உண்டு - உட்கொண்டு, தேவர் பயம் கெடுத்துவிடும் - தேவர்களது அச்சத்தை அடியோடு ஒழித்தருளிய, கால கால - யமனுக்கும் யமனானவனே! கருவாபுரி உறை வேதியனே - திருக்கருவைநகரி லெழுந்தருளியுள்ள அந்தணனே!—வெம் கூற்று-கொடிய யமன், கொடுங் காலபாசத்தை வீசி - (தனது) கொடுமையான காலபாசத்தை (என் மேல்) வீசியெறிந்து, கொதித்து முனிந்து - மனம் வெம்பிச் சினங் கொண்டு, அடும் காலமும் - (என்னை) வருத்துகின்ற அந்திமகாலத்திலும், நின் அடி மறவேன் - உனது திருவடிகளை மறக்கமாட்டேன், (யான்); (எ - று.)

எல்லாக்கரணங்களும் ஒடுங்கி அறிவுமழுங்கும் அந்திமகாலத்திலும் யான் உனது திருவடிகளையே மறவாமல் தியானிப்பே னென்று தமது மன வுறுதியை வெளியிட்டவாறு. ஒருவாது உயிர் உடலைவிட்டு நீங்குகின்ற அந்திமகாலத்தில் நினைக்கின்றவாறே மேல்நிகழு மென்பது நூல்களின் துணிபு ஆதலால், அதற்கேற்ப 'நின்னடி மறவேன்' என்றார். கூற்று வனையும் உதைத்துத்தள்ளின திருவடி யாதலால், அத்திருவடியை அந்திம காலத்தில் தியானிக்கின்ற எனக்கும் யமபாதை நேராதவாறு சிவபெருமான் திருவருள் புரிவ னென்பது, 'காலகால நின்னடி மறவேன்' என்றதன் குறிப்பு. பாற்கடலினின்று தோன்றிய ஆலாகலமென்ற விஷத்தைக் கண்டு தேவர்கள் யாவரும் அஞ்சி நடுங்கி ஓடிச் சரணமடைய, அச்சமயத்தில் அவர்க ளது வேண்டுகோட்கு இரங்கி அவ்விஷத்தை உட்கொண்டு அவர்களை யெல் லாம் சிவபெருமான் பாதுகாத்தருளின னாதலால், அப்பிரானை, 'அலையாழி வெம்பப் படுங் காலகூடவிடமுண்டு தேவர்பயங்கெடுத்துவிடும் வேதியன்' என்றார்: இவ்வரலாற்றினால், செயற்கரியசெயல் செய்து உயிர்களைப் பாது காக்கும் விசித்திரசக்தியும் திருவருளு முடையவன் சிவபிரா னென்பது விளங்கும்.

காலபாசமென்பது, யமனது கயிற்றுவடிவமான ஓராயுதம். கூற்று - உட லையும் உயிரையும் கூறுபடுத்துங் கடவுள். கொதித்து முனிந்து - ஒருபொருட் பன்மொழி. ஆலாகலவிஷத்தைக் காலகூடமென்றார், விஷமென்ற ஒப்புமை பற்றி. வேதியன் என்றதற்கு - வேதத்தை ஆதியில் வெளியிட்டவ னென்றும், வேதங்களினாற் பிரதிபாதிக்கப்படுகின்றவ னென்றும் பொருள்கூறலாம்.

31. வேதியனேயென்றுஞ்சிதாவேயென்றுமேனியுமைப்
பாதியனேயென்றும்பால்வண்ணனேயென்றும்பானிறவெண்

பூதியனேயென்றுநாத்தழும்பேறப்புகழ்ந்துபுகழ்ந்
தோதியநேரமெல்லாந்தமியேனெஞ்சுருகியதே.

(இ - ள்.) வேதியனே என்றும் - வேதியனே என்று விளித்தும், சீதரனே என்றும் - விஷத்தை (க் கண்டத்தில்) தரித்தவனே! என்று விளித்தும், மேனி உமை பாதியனே என்றும் - திருமேனியில் உமாதேவியை இடப்பாதியிலுடையவனே! என்று விளித்தும், பால் வெள்நிறம் பூதியனே என்றும் - பால்போன்ற வெண்ணிறமான விபூதியைத் தரித்தவனே! என்று விளித்தும், பால் வண்ணனே என்றும் - பால்வண்ணனே! என்று விளித்தும், நா தழும்பு ஏற - (எனது) நாக்கில் வடுவுண்டாம்படி, புகழ்ந்து புகழ்ந்து-பலபடியாகத் துதித்து, ஓதிய நேரம் எல்லாம் - (உன்னைக்) கூறிய காலங்களி லெல்லாம், தமியேன் நெஞ்சு - எனது மனம், உருகியது - நெகிழ்ந்து கரைந்திட்டது; (எ - று.)

நினது திருப்பெயர்களைக் கூறித் துதிக்கும்பொழுதெல்லாம் என்மனம் உருகுமென்பதாம்: இதனால், கல்நெஞ்சையும் கரைத்து உருக்கவல்ல சிவபிரானது திருநாமமகிமையை வெளியிட்டவாறு. சீதரன் - ஸ்ரீதரன் என்ற வடசொல்லின் திரிபு: ஸ்ரீ - விஷம். புகழ்ந்து புகழ்ந்து - அடுக்கு, பலமுறை பற்றியது. இனி, வேதியனே - பிரமனே! என்றும்—, சீதரனே - இலக்குமியை மார்பில்தரித்த திருமாலே! என்றும் பொருள்கூறி, சிவபெருமான் திரிமூர்த்திஸ்வரூபியாதலால், வேதியனே சீதரனே மேனியுமைப்பாதியனே! என்று விளித்தாரெனக் கூறுவாருமுளர்; "முனியே நான்முகனே முக்கண்ணப்பா" என்றாற் போல. (௩௧)

32. உருவாயுருவினொளியாயொளியினொளிகடந்த
வருவாயனைத்துயிராகிநின்றாய்குண்டகழுடுத்த
கருவாபுரேசவிறுதியிற்கூற்றுவன்கைப்படுநாள்
வெருவாதழைத்திடுவேன்வரல்வேண்டும்விடுவிக்கவே.

(இ - ள்.) உரு ஆய் - உருவமுள்ள பொருள்களாகியும், உருவின் ஒளி ஆய் - உருவமுள்ள பொருள்களினிடத்து ஒளிவடிவமாகியும், ஒளியின் ஒளி கடந்த அரு ஆய் - ஒளிவடிவமாயிருத்தலோடு பிரகாசிக்கின்றதன்மை நீங்கிய உருவமில்லாத அருவப்பொருளாகியும், அனைத்து உயிர் ஆகி - எல்லாவுயிர்களுமாகியும், நின்றாய் - நின்றவனே! குண்டு அகழ் உடுத்த - ஆழமுள்ள அகழியினாற் சூழப்பட்ட, கருவா புரம் - திருக்கருவைநகரி லெழுந்தருளியுள்ள, ஈச - தலைவனே!— இறுதியில் - (எனது) அந்திமகாலத்தில், கூற்றுவன் கை படும் நாள்-(நான்) யமன்கையில் அகப்படும்போது [மரணவேதனைப் படும்போது], வெருவாது-கலங்காமல், அழைத்திடுவேன் - (உன்னை) அழைப்பேன்; விடுவிக்க - (அவ்யமன்கையினின்று அடியேனை) விடுவிக்கும் பொருட்டு, வரல் வேண்டும் - (நீ) எழுந்தருளவேண்டும்; (எ - று.)

எப்போதும் உன்னைத் துதித்துப் பழகிய பயிற்சியின் மிகுதியால் எனது அந்திமகாலத்திலும் நான் மறவாது உன்னைத் துதிப்பே னென்றாலும், கரணங்கள் ஒடுங்கி அறிவுசோர்கின்றகால மாதலால் அப்போது பூர்ணசக்தியில்லாது துதிக்கும் என்தோத்திரத்திற்கும் மனமிரங்கிக் காட்சிதந்து யமபாதையை விடுவித்து நற்கதியருளவேண்டு மென்று அப்போதைக்கு இப்போதே கூறுகின்றன ரென்க. "நலனழிந்து மூப்படைந்து நாணழிந்து நோயாற், புலனழிந்து கண்புதையும்போதில் - உலக, விறைவியொடும் பால்வண்ணா வென்றென் றுனையே, மறுகியழைப்பே னோடிவா" என்றார் வெண்பாவந்தாதியிலும். சிவபெருமான் தான் உருவமுள்ளபொருள்களின் வடிவாய் நிற்றலால் 'உருவாய்' என்றும், உருவமுள்ளபொருள்களில் அந்தர்யாமியாய் உறைந்து அவற்றிற்கு நாமரூபங்களை யுண்டாக்குதலால் 'உருவினொளியாய்' என்றும், ஒளிவடிவமாயிருக்குங் கடவுளே கட்புலனாகாது அருவப்பொருளாய் நிற்றலால் 'ஒளியின்ஒளிகடந்த அருவாய்' என்றுங் கூறினார். சிவபிரானே உருவப்பொருளாகியும், அப்பொருள்களின் உள்ளே உறையும் அந்தர்யாமியாகியும், அருவப்பொருளாகியும், எல்லாவுயிர்களாகியும் உள்ளா னென்பது, முதலிரண்டடியின கருத்து. (௩௨)

33. விடத்தக்கதிந்தவிடக்குடனானெனல்வேர்களைந்து
சுடத்தக்கதென்றுமொழியாவெகுளித்துரிசகற்றி
யடத்தக்கதுமனச்சங்கற்பநெஞ்சத்தகவயலி
னடத்தக்கதுகளவீசர்பொற்றாளென்னுநாற்றினையே.

(இ - ள்.) இந்த விடக்கு உடல் - (பலவகைத்துன்பங்கட்கும் இடமாகிய) இந்த மாம்ச சரீரம், விட தக்கது - வெறுத்துவிடத்தக்கது [உபேட்சிக்கத்தக்கது]; நான் எனல் - 'நான்' என்று பாராட்டும் அகங்காரம், வேர் களைந்து சுட தக்கது - அடியோடொழித்து எரிக்கத்தக்கது; என்றும் - எப்போதும், ஒழியா - (உடலை விட்டு) நீங்காத, வெகுளி துரிசு - கோபமாகிய குற்றத்தை, அகற்றி - நீக்கி, மனம் சங்கற்பம் - மனத்தினது வீணானகற்பனையெண்ணம், அட தக்கது - அடியோடு ஒழிக்கத்தக்கது; களா ஈசர் பொன் தாள் என்னும் நாற்று - திருக்கருவைச்சிவபிரானது அழகியதிருவடியாகிய நாற்று, நெஞ்சத்து அகம் வயலில் - மனத்தினிடமாகிய கழனியில், நட தக்கது - (நற்பயன்விளையுமாறு) நடுதற்குத்தகுந்தது; (எ - று.)

இந்தமாம்சதேகத்தினிடத்து அபிமானத்தை யொழித்து அகங்காரத்தை விட்டுக் கோபத்தையும் மனச்சங்கற்பத்தையும் முதலறக்கெடுத்துச் சிவபிரானது திருவடிகளை எப்போதும் நெஞ்சிற் பதியவைக்கவேண்டு மென்பதாம். "வினையின்வந்தது வினைக்குவிளைவாயது, புனைவனநீங்கிற் புலால்புறத்திடுவது, மூத்துவிளிவுடையது தீப்பிணியிருக்கை, பற்றின்பற்றிடங் குற்றக்கொள்கலம், புற்றடங்கரவிற் செற்றச்சேக்கை, அவலக்கவலை கையாறழுங்கல், தவலாவுள்ளந் தன்பாலுடையது, மக்கள்யாக்கை யிது" என்றவாறு தூயதல்லாததாகுதலால், 'விடத்தக்கது இந்த விடக்குடல்' என்றார். தானல்

லாத உடம்பை யான் என்று பற்றுச்செய்வது, அகங்கார மெனப்படும்: தத்துவவுணர்ச்சியால் அதனைத் தானல்லாத தென்ற உண்மை தெளிந்து அதன்கண் பற்றைவிடுதல் இன்றியமையாதது என்பதை விளக்க 'நானெனல் வேர்களைந்துசுடத்தக்கது' எனப்பட்டது: இங்கு, உபலக்ஷணத்தால், தன்னோடு இயைபுஇல்லாத பொருளை எனதென்றுகருதும் மமகாரத்தையும் விட வேண்டு மென்பது கொள்க. "சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னும், ஏமப்புணையைச் சுடும்" என்றவாறு தன்னையும் தன்இனத்தையும் அழிக்குந்தன்மையதான வெகுளியை யடக்குவது இன்றியமையாத தென்றார். "எண்பதுகோடி நினைந்தெண்ணுவன" என்றபடி மனத்தின் வீணான கற்பனையெண்ணங்கள் கடவுளைத் தியானித்தற்குரிய பயன்படுங்காலத்தை வீண்படுத்து மாதலால், அச்சங்கற்பம் ஒழியற்பாலதாம். திருவடி நெஞ்சிற் பதிந்து பலநறபயன்கள் விளைதற்குக் காரணமாய் நிற்றலால் அதனை 'நாற்று' எனவும், அதற்கு இடங்கொடுத்து நிற்றலால் நெஞ்சத்தை 'வயல்' எனவும் உருவகஞ்செய்தனர். "சிறக்கத்தக்கது கருவையான் திருவடிநேயம், மறக்கத் தக்கது மற்றுளசமயத்தின்மயக்கம், துறக்கத்தக்க திவ்வுடம்பை யானென்றுறு தொடர்பு, பிறக்கத்தக்கது சிவாநந்தவாரியின்பெருக்கே" என்ற செய்யுளின் வாய்பாடுகொண்டது, இச்செய்யுள்.

நாற்றினை - இன் ஐ - சாரியைகள்: இவ்வாறுகொள்ளாது இரண்டாம் வேற்றுமைவிரியாகக்கொண்டு பொருள்கூறின் எடுப்பு ஜுறி என்னுங் குற்றத்திற்கு இடமாதல் காண்க. இனி, விடக்கூடல் முதலியவற்றில் இரண்டனுருபு தொக்கதெனக் கொண்டு பொருள்கூறுவாரு முளர். நாற்று - நாறுவது [தோன்றுவது] எனக் காரணக்குறி. (ங.க.)

34. நாற்றடந்தோடிசையெட்டிலுந்தட்டநரகளிக்குங்
கூற்றடுந்தாளெழுபாதலம்போய்ப்புகக்கொன்றைநறு
வூற்றெழும்பொன்முடியண்டகடாகமொளிக்கநின்று
பாற்றிருமேனிக்களவீசனுடும்பவுரிகொண்டே.

(இ - ள்.) பால் திருமேனி களவீசன் - பால்போன்ற [வெண்மையான] திருமேனியையுடைய திருக்கருவைச்சிவபிரான்,—நால் தட தோள் - (தனது) நான்கு பெரியதோள்களும், திசை எட்டிலும் தட்ட - எட்டுத்திக்குக்களிலும் போய் முட்டவும்,—நரகு அளிக்கும் கூற்று அடும் தாள் - நரகலோகத்தைப் பாதுகாக்கின்ற யமனை அழித்த பாதம், எழு பாதலம் போய் புக - (கீழுலகங்களுள்) ஏழாவதாகிய பாதாளலோகத்திற் சென்றுபுகவும்,—கொன்றை நறு வூற்று எழும் பொன் முடி - (தன்மீது அணிந்த) கொன்றைமலர்களிலிருந்து தேன் ஊற்றெழுந்துபாய்கின்ற அழகிய திருமுடி, அண்ட கடாகம் ஒளிக்க - உலகவுருண்டையின் மேன்முகட்டை மறைக்கவும்,—நின்று-(இவ்வாறு பெரியதொருவடிவத்துடன்) நின்று, பவுரிகொண்டு ஆடும் - சுழன்றுகொண்டு திருநர்த்தனஞ்செய்வன்; (எ - று.)

சருவசங்காரகாலத்திற் சிவபெருமான் திருநடனஞ்செய்கின்ற திருவுருவத்தின் வளர்ச்சியைக் கூறியவாறு. "முடிகடந்தது ககனகோளகை நெடுமுகட்டினுக்கப்பாலும், அடிகடந்தது பாதலமேழினுக் கப்புறத் தனலோடும், துடிகிடந்தகை கடந்தன திசைந்த மாறேல்புகழ்க்களாவீசன், பொடிகிடந்தபான்மேனியன் திருநடம் புகலுதற்கெளிதோ" என்றார் பதிற்றுப்பத்தந்தாதியிலும். எழு - ஏழாவதுஎன்ற பொருளைத் தந்தது; இலக்கணை. பவுரி - சுழன்றுசுழன்று ஆடுங் கூத்து. (நச)

35. கொண்டாளப்பெற்றவர்தம்மடியார்கள்குறைசெயினுந்
தண்டாமுனிவுற்றிகழ்தல்செய்யார்தமியேன்பிழைநூ
றுண்டாயினும்பொறுத்தாளுந்தகைமையுனதுகடன்
கண்டார்நகைப்பர்களவீசநீயென்னைக்கைவிடினே.

(இ - ள்.) கொண்டு ஆள பெற்றவர் - (தம்மைஅடைக்கலமடைந்தவரை) ஆட்கொண்டு பாதுகாக்கின்ற தலைவர், தம் அடியார்கள் குறை செயினும் - தமதுஅடியவர்கள் குற்றஞ்செய்தாலும், தண்டா முனிவு உற்று இகழ்தல் செய்யார் - நீங்காத கோபங்கொண்டு இகழமாட்டார்கள்; (ஆதலால்), தமியேன் - அடியேனிடத்தில், பிழை நூறு உண்டாயினும் - மிகப் பலதவறுகள் இருப்பினும், பொறுத்து ஆளும் தகைமை - (அதுகாரணமாகத் தண்டியாமல் அக்குற்றங்களைப்) பொறுத்து அடிமைகொள்ளும் பெருந்தன்மையைக்காட்டுதல், உனது கடன் - உனக்குக் கடமையாகும்; களவீச —! நீ —, என்னை கைவிடின் - என்னை (ஆட்கொண்டு பாதுகாவாமல்) உபேட்சித்தால், கண்டார் - பார்த்தஎல்லோரும், நகைப்பர் - (அப்படி உபேட்சித்த உன்னைப்) பரிகசிப்பார்கள்; (எ - று.)

தம்மையே கதியென்று நம்பிச் சரணமடைந்தவரைக் குற்றம்பாராது பாதுகாத்தல் உலகவியல்பு; ஆதலால், உன்னையேநம்பிச் சரணமடைந்த அடியவனாகிய என்னையும் குற்றம்பாராட்டாது பாதுகாக்கவேண்டியது நினது கடமை யென்பதாம். இச்செய்யுளில், அடியார்களது பிழைகளைப் பாராமல் பாதுகாத்தல் தலைவரது இயல்பு என்ற பொதுப்பொருளைக்கொண்டு, எனது குற்றத்தைப் பாராது பாதுகாத்தல் நினதுகடன் என்ற சிறப்புப்பொருளைச் சமர்த்தித்தது - வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். சகலகல்யாண குணபரிபூர்ணனெனப்படுகின்ற இறைவன் "அடியாரிழைத்த பிழைகோடி நெஞ்சினறியாத ஆதிமுதல்வன்" என்று கூறப்படுமாறு அக்குணங்களெல்லாவற்றிலும் தலைமைக்குணமாகிய கருணையைக் கைக்கொண்டு நில்லாவிடின் அவனதுகுணங்கட்கே ஒரிழிவாதலால், 'களவீச நீ என்னைக் கைவிடின் கண்டார் நகைப்பர்' என்றார். வேறுகதியின்றிச் சரணமடைந்தவரைக் காவாது கைவிட்டால் விட்டவரையே பலரும் இகழ்வ ரென்றபடி. "நானிலத்தோர்முன்னே நலனழிந்து நானிருந்தாற், கானநறும்பூங்களவீச - ஈனமுறைத், தென்னைச் சிரிப்பரென் றெண்ணாதே எம்பெருமான், உன்னைச்சிரிப்பாரு முண்டு" என்ற வெண்பாவந்தாதி ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது. (நரு)

36. கைவிட்டுக்கால்விட்டுக்கண்கள்பஞ்சிட்டுக்கலங்கியுயிர்
மெய்விட்டுப்போம்பொழுதஞ்சேலஞ்சேலென்றுவேலைவென்று
மைவிட்டெறிக்குங்கண்ணொப்பனையோடுமழவிடைமே
னெய்விட்டசூலப்படையண்ணலேவந்துநின்றுகொள்ளே.

(இ - ள்.) நெய் விட்ட - நெய்பூசப்பெற்ற, சூலம் படை - சூலாயுதத்தையுடைய, அண்ணலே - பெருமையிற்சிறந்தவனே !—கை விட்டு - கைகள் சோர்வடைந்து, கால் விட்டு - கால்கள் (நடக்கமாட்டாதபடி) வலிமை குறைந்து, கண்கள் பஞ்சு இட்டு - கண்கள் (பார்வைகுறைந்து) பஞ்சடைந்து, கலங்கி - கலக்கங்கொண்டு, உயிர் மெய் விட்டு போம் பொழுது - (எனது) உயிர் உடலைவிட்டுப் போகுங் காலத்தில் [அந்திமதசையில்], வேலை வென்று - வேற்படையைச் சயித்து, மை விட்டு எறிக்கும் - அஞ்சனமெழுதப்பெற்று (ஒளி) வீசுகின்ற, கண் - கண்களையுடைய, ஒப்பனையோடு - ஒப்பனையம்மையுடன், மழ விடைமேல் - இளமையாகிய விருஷபத்தின்மேல் ஏறி, அஞ்சேல் அஞ்சேல் என்று - அஞ்சாதே அஞ்சாதே என்று சொல்லிக்கொண்டு, வந்து நின்று - (எனக்கு எதிரில்) எழுந்தருளிக் காட்சிகொடுத்து நின்று, (என்னை), கொள் - (நினது திருவடியிற்) சேர்த்துக்கொள்வாய்; (எ - று.)

எனது கரணங்கள் யாவும் வலியொடுங்கி உயிர்போகின்ற அந்திமகாலத்தில் நின்னை நினைப்பது அரியதொருகாரியமாதலால், அக்காலத்து என்செயலைக் கருதாது மறுபிறப்பில்லாதபடி அஞ்சாதேயென்று அபயமளித்து நினது திருவடிகளைத் தந்தருளவேண்டுமென்று வேண்டியவாறு; " சாதல்முடிகிற் றனைமறந்து நாவிறங்கும், மாதுயரிற் சற்றும் வழுத்தறியேன் - ஆதலினால், அப்பொழுதைக் கிப்பொழுதே யன்பால் வழுத்துகின்றேன். ஒப்பனையாள்பாகா வுனை " என்றார் வெண்பாவந்தாதியிலும். முதலடியால், மரணாவஸ்தையை வெளியிட்டவாறு.

அஞ்சேல் அஞ்சேல் என்ற அடுக்கு - அச்சம் ஒழியுமாறு தேற்றுதற்பொருளை விளக்குஞ் சொற்றொடரின் அநுவாதம். மழ - இளமைகுறிக்கும் உரிச்சொல். துருப்பிடியாமைப்பொருட்டுச் சூலம் முதலிய ஆயுதங்களில் நெய்பூசுதல், இயல்பு. இனி, நெய்விட்ட சூலம் - பகைவரது நிணந்தோயப்பெற்ற சூலம் எனினுமாம். அண்ணல் - ஆண்பாற் சிறப்புப்பெயர் : பெருமையிற் சிறந்தவனென்று பொருள். (நடசு)

37. நின்றாள்வழுத்தநினைவுதந்துள்ளினிலைதிறம்பிக்
குன்றாவகையென்னையாட்கொண்டதாற்கொடியேன்புரிதீ
னன்றாகக்கொள்வதல்லாற்பிழைநாடலைநாடினருக்
கொன்றாய்ப்பலவுருவாங்கருவாபுரியுத்தமனே.

(இ - ள்.) நாடினருக்கு - விரும்பின அடியார்கட்கு, ஒன்று ஆய் - ஒப்பற்ற கடவுளாகியும், பல உரு ஆம் - (உலகிலுள்ள) எல்லாப்பொருள்களின் வடிவமாகியு மிருக்கிற, கருவாபுரி உத்தமனே - திருக்கருவைநகரி லெழுந்த

ருளிய சிறந்த கடவுளே!—நின் தாள் வழுத்த - உனது திருவடிகளைத் துதிக்கும்படி, நினைவு தந்து - (அடியேனுக்கு) எண்ணத்தைக் கொடுத்து, உள்ளில் நிலை திறம்பி குன்றாவகை - மனத்தில் உறுதியழிந்து மாறுபட்டுக் குறையாதபடி, என்னை—, ஆள்கொண்டதால் - (நீ) அடிமைகொண்டதனால்,—கொடியேன் புரிதல் - தீயவனாகிய யான் செய்யுந் தொழில்களை, நன்று ஆக கொள்வது அல்லால் - நல்லதொழிலாகத் திருவுள்ளத்திற் கொள்வதேயல்லாமல், பிழை நாடலை-(அத்தொழிலிற் சிறிதும்)குற்றமுளதாகக் கருதமாட்டாய்.

நீ உனது திருவடிகளைத் தியானிக்கும்படி திருவருள்புரிந்ததோடு உன்னையன்றி வேறுநாடாத மனவுறுதியையும் எனக்குத்தந்து ஆட்கொண்டாயாதலால், நான்செய்யுந் தொழில்களிற் குற்றத்தைக் கருதாமலிருப்பதன்றி அதனைக் குணமாகவுங் கொள்கின்றா யென்பது பெறப்படு மென்பதாம். "என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தா ரென்பர் போலும்" என்று பிறசமயத்தார் கூறியதும் காண்க. இவ்வாறு அடியார்செய்த குற்றத்தைக் கடவுள் குணமாகக்கொள்ளுதல் - வாத்ஸல்ய மெனப்படும்: (வாத்ஸல்யமாவது - அன்றுஈன்ற கன்றின்மீது உள்ள அசுத்தங்களைத் தாய்ப்பசுவானது சிறிதும் அருவருப்புக்கொள்ளாமல் அன்போடு நாவினால் நக்கிப் போக்கியமாகக்கொள்ளுதல் போல்வது ; வத்ஸம் - கன்று.) ஒப்பற்ற கடவுளாகிய சிவமே எல்லாப்பொருள்களாகவும் நிற்கின்ற தென்னுஞ் சிவாத்வைதம்பற்றி, 'ஒன்றாய்ப் பலவாங் கருவாபுரியுத்தமன்' என்றார். நாடலை - 'நாடு' என்னும் பகுதியினடியாப்பிறந்த முன்னிலையொருமை யெதிர்மறை வினைமுற்று. கொண்டது - தொழிற்பெயர். (௩௭)

38. உத்திப்புயங்கமுடிக்களவீசவுனதுபத
பத்திக்குரியபழவடியார்தம்மைப்பாமகளுஞ்
சுத்தக்கமலையுநல்லிந்திராணியுந்தோய்வதற்குச்
சித்தத்துமால்கொண்டுசேர்விடந்தேடியுஞ்செல்குவரே.

(இ - ள்.) உத்தி - படப்புள்ளிகளையுடைய, புயங்கம்- நாகத்தை, முடி- திருமுடிமேல் (ஆபரணமாகத்) தரித்த, களவீச—! உனது பதம் பத்திக்கு உரிய - உனது திருவடியிற் பக்திசெய்வதற்கு உரியவர்களான, பழம் அடியார் தம்மை - பழமையான அடியார்களை,— பாமகளும் - சரசுவதியும், சுத்தம் கமலையும் - பரிசுத்தமான தாமரைமலரில் வசிக்கின்ற இலக்குமியும், நல் இந்திராணியும் - அழகிய இந்திராணியும், தோய்வதற்கு - கூடிவாழ்வதற்கு, சித்தத்து மால் கொண்டு - மனத்தில் மோகங்கொண்டு, சேர்வு இடம் தேடியும் - (அவர்கள்) சேர்ந்துள்ள இடத்தைத் தேடியும், செல்குவர் - போவார்கள்.

சிவபெருமானது அடியார்களைச் சரசுவதி முதலியோர் நாடிச்சேர்வரென்று, சிவபக்தர்களின் பெருமையை விளக்கியவாறு : என்றது - சிவபக்தர்கட்குக் கல்வியும் செல்வமும் இந்திரபதவியும் வழிதேடி வந்துஅடையுமென்பதாம். இனி, சிவபெருமானிடத்துப் பக்திசெலுத்தியவர்களே அச்

சிவபெருமானது திருவருளால் பிரமனாகவும் விஷ்ணுவாகவும் இந்திரனாகவும் தோன்றுவரெனினுமாம்.

உத்தி - படப்புள்ளி: "உத்திவாளரா முடித்த பால்வண்ணனே" என்ற விடத்திலும் இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளது. புயங்கம்-புஜங்கம்: (கால்களில்லாமையால்) மார்பினாற் செல்வதென்றும், வளைந்து செல்வதென்றுங் காரணப்பொருள்படும். பாமகள் - பாவிற்குஉரிய மகள்: ஸரஸ்வதியின் அருளினால்தான் பாடல்பாடுந் திறமை யுண்டாகு மென்ற கொள்கை பற்றி, அவளை 'பாமகள்' என்றார்: வடமொழியிலே கவிசக்தியை 'ஸாரஸ்வதம்' என்று கூறுதலும் இதுபற்றியே. கமலை - கமலத்தில் வீற்றிருப்பவள்: கமலா என்ற வடசொல் ஆவீறு ஐயாயிற்று. இந்திராணீ - இந்திரன் மனைவியென்ற பொருளில் வருவதாய், 'இந்திரன்' என்பதன் பெண்பாலான வடமொழி. மால் - காமமயக்கம். (௩௮)

39. செல்வச்செருக்கர் தலைவாயிறோறுந் திரிந்துதிரிந்
தல்லற்றுயர்கொண் டிளைத்துவிட்டேனடியேனினியப்
புல்லர்க்கெளிமைபுகலாமற்காத்தருள்பூந்தடமு
மல்லற்பழனமுஞ்சூழ்கருவாபுரிவானவனே.

(இ - ள்.) பூ தடமும் - தாமரைப்பூக்கள் நிறைந்த தடாகங்களும், மல்லல் பழனமும் - வளப்பம்பொருந்திய வயல்களும், சூழ் - சூழ்ந்துள்ள, கருவாபுரி - திருக்கருவைநகரி லெழுந்தருளியுள்ள, வானவனே - தேவனே!—அடியேன்—,செல்வம் செருக்கர் தலைவாயில் தோறும் - செல்வச்செருக்குடையவர்களது வீட்டுவாயில்களிலெல்லாம், திரிந்து திரிந்து - பலபடியாக அலைந்து, அல்லல் துயர் கொண்டு - பெருந்துன்பமடைந்து, இளைத்துவிட்டேன் - சோர்ந்துபோனேன்; இனி - இனிமேல், அ புல்லர்க்கு - அந்த அற்பர்களிடத்தில், எளிமை புகலாமல் - ஏழைமைப்பேச்சைச் சொல்லாதபடி, காத்து அருள் - (அடியேனைப்) பாதுகாத்தருள்வாய்; (எ - று.)

நிலையில்லாத செல்வத்தையும் அகங்காரம் மமகாரம் முதலிய இழிகுணங்களையும் உடையரான அற்பமனிதரை யடுத்து அவர்வீடுகள்தோறுஞ் சென்று திரிவதனால் ஒருபயனும் பெறாமல் வாளா வருந்தினேன்; இனி அவ்வற்பர்களிடத்திற் சென்று எளிமைப்படாதபடி அடியேனைக் குறிக்கொண்டு பாதுகாக்கவேண்டு மென்பதாம். "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்துநோக்கிப், புகத்தாம்பெறாஅர் புறங்கடைபற்றி, மிகத்தாம் வருந்தியிருப்பரே" என்றவாறு செல்வர்களது வீட்டினுள்ளே சென்று இரத்தற்கு நுழையத்தொடங்கி வாயில்காவலாளர்களால் தடுக்கப்பட்டுத் தாம் உள்ளே நுழையப்பெறாமல் வாயிற்புறத்தைப் பிடித்து வருந்தும்படி நேர்ந்த பழம்பிறப்புக்களை நினைத்து 'செல்வச்செருக்கர் தலைவாயில்தோறுந் திரிந்துதிரிந், தல்லல்துயர்கொண்டிளைத்துவிட்டேன்' என்றார். "பதமறிந்து வாய்பார்த்துப் பற்றாதபுல்ல, ரிதமறிந்தாங் கின்சொலியம்பி - மதிகலங்கி, நன்னாள்கழித்துவிட்டேன்" என்றார் வெண்பாவந்தாதியிலும். அல்லல் துயர் - ஒருபொருட்பன்மொழி. (௩௯)

40. வானவரிந்திரனிந்திரைகேள்வன்மறைவிரிஞ்சன்
றானவரென்றுபுகல்வதுண்டோசமரிற்சிலையாற்
கானவனெற்றுங்களவீசான்றுகடல்விடத்தைப்
போனகமாகவமுதுசெய்யாவிடிற்பூதலத்தே.

(இ - ள்.) சமரில் - போரில், கானவன் - காட்டில் வசித்தவனாகிய அருச்சுனனால், சிலையால் - விற்கழுந்துகொண்டு, எற்றும் - அடிக்கப்பெற்ற, களவீசர்—, அன்று - (பாற்கடல்கடைந்த) அக்காலத்தில், கடல் விடத்தை - அக்கடலினின்று தோன்றிய ஆலாகலவிஷத்தை, போனகம் ஆக - உணவாகக் கொண்டு, அமுது செய்யாவிடின் - அமுதுசெய்யாதிருப்பாராயின்,—பூதலத்து - இப் பூமியில், வானவர் - தேவர்களும், இந்திரன் - (அத்தேவர்கட்குத்தலைவனாகிய) இந்திரனும், இந்திரை கேள்வன் - திருமகள்கொழுநனாகிய திருமாலும், மறை விரிஞ்சன் - வேதங்களையோதுகின்ற பிரமனும், தானவர் - அசுரர்களும், என்று—, புகல்வது - சொல்லுதல், உண்டோ - உண்டாகுமோ?

சிவபெருமான் பாற்கடலினின்று தோன்றிய கொடுவிடத்தை அமுது செய்யாதிருப்பின், வானவர் தானவர் என்கிற சாதிகளும் அவர்கட்கெல்லாந் தலைவரான இந்திரன் விஷ்ணு பிரமன் என்னுந் தேவர்களும் ஆகிய யாவரும் அடியோடு அழிந்துபோயிருப்பார்கள்; அவ்வாறு அழியாதபடி சிவபெருமான் விஷத்தையுண்டதனால்தான், தேவர்கள் தாமும் இந்திரன் பிரமன் முதலிய பேர்களைச் சொல்லிக்கொண்டு திரிகின்றன ரென்பதாம். சிவபிரான் விஷத்தையுண்ட இவ்வரலாற்றினால், அப்பிரானது செயற்கரியசெயல் செய்து உயிர்களைப்பாதுகாக்கும் விசித்திரசக்தியும் திருவருளும் பரத்துவமும் விளங்கும்: " கற்பங்கடந்து கடவுளராய் வாழ்வரோ, பொற்பங்கயன் முதலாம் புத்தேளிர் - அற்புதமே, தெவ்வடக்கு சூலத்தார் தென்கருவைநாதனார், வெவ்விடத்தை யுண்ணாவிடின் " என்பது, வெண்பாவந்தாதி.

இந்திரன் - பரமைசுவரியமுடையவன்; இந்திரை - பரமைசுவரியங்கட்குத் தலைவி: இவ்விரண்டும் - காரணவிடுகுறிப்பெயராய் வரும் வடசொற்கள். விரிஞ்சன் - (அன்னப்) பறவையாற் சுமக்கப்படுபவ னென்றும், பஞ்சபூதங்களைப் படைப்பவனென்றும் அவயவப்பொருள்படும் வடமொழி. சமர் = ஸமரம். (சo)

41. பூதகணத்தொடுவேதாவுந்தாளம்புடைக்கவொரு
பாதமெடுத்துப்பவுரிகொள்வோய்பண்டையாகமத்தும்
வேதசிரத்தும்பொலிகளவீசமெலியவரு
மேதமகற்றுவதுன்கடனென்கடனேத்துவதே.

(இ - ள்.) பூத கணத்தொடு - பூதகணங்களும், வேதாவும் - பிரமனும், தாளம் புடைக்க - (நர்த்தனத்திற் சதிமிதித்தற்கு ஏற்பத்) தாளங்கொட்ட, ஒரு பாதம் எடுத்து - ஒருகாலைத் தூக்கிக்கொண்டு, பவுரி கொள்வோய் - திருநடனஞ் செய்பவனே! பண்டை ஆகமத்தும் - பழமையாகிய (இருபத்

தெட்டுச்) சைவாகமங்களிலும், வேத சிரத்தும் - வேதங்களின் முடிவாகிய உபநிடத்துக்களிலும், பொலி - விளங்குகின்ற, களவீச—! ஏத்துவது - (உன்னைத்) துதிப்பது, என் கடன் - எனது கடமையாகும்; (அதற்குப்பதிலாக), மெலிய - (யான்) வருந்துமாறு, வரும் - (என்னை நலிய) வருகின்ற, ஏதம் - (பிறவித்) துன்பங்களை, அகற்றுவது - நீக்கிப் பாதுகாப்பது, உன் கடன் - உனது கடமையாகும்; (எ - று.)

உன்னை வணங்கித்துதித்தல் எனதுகடமை; இக்கடமையை யான்செய்திட்டே னாதலால், இனி எனது பிறவித்துன்பங்களை யொழித்து முத்தியளித்துப் பாதுகாத்தல் உனதுகடமை யென்பதாம். "என்செய லுன்றனி லினிய மலர் சாத்துவதே, உன்செய லென்றன்பமொழிப்பதே - மின்புரையும், வேணியாய் தென்கருவைவேந்தே யனலேந்தும், பாணியாய் வேதாதிபா" என்பர் வெண்பாவிலும். சிவபெருமான் திருநடனஞ்செய்யும்போது பூதங்களும் பிரமனும் தாளங்கொட்டுவ ரென்க. ஒருகாலைத் தூக்கியவண்ணம் மற்றொருகாலாற் கூத்தாடுதல், 'குஞ்சிதநடனம்' எனப்படும். சிவபெருமானது சுவரூபத்தைச் சைவாகமங்களும் உபநிஷத்துக்களுமே உள்ளபடி யுணர்த்துவன வாதலால், 'பண்டையாகமத்தும் வேதசிரத்தும் பொலிகளவீச' என்றார்.

42. ஏத்தியமூவர் தமிழ்மாலைசாத்துமிணையடிக்கென்
னாத்தரும்புன்சொற்றொடைபுனைவாய்செம்பொனாட்டிலைந்து
காத்தருநாண்மலர்சூடும்புரிசடைக்காட்டெருக்கம
பூத்தருமாலைபுனைகளவீசபுராந்தகனே.

(இ - ள்.) புர அந்தகனே - திரிபுரங்களை யெரித்தழித்தவனே! செம் பொன் நாட்டில் - சிவந்த பொன்மயமான தேவலோகத்திலுள்ள, ஐந்து கா - ஐந்து தேவதருக்களும், தரும்-கொடுக்கிற, நாள் மலர்- அன்றுமலர்ந்த [புதிய] மலர்களை, சூடும் - அணிந்துள்ள, புரி சடை காடு - முறுக்கிக்கட்டிய சடைத் தொகுதியில், எருக்கு தரு பூ மாலை - எருக்கஞ்செடியினின்று உண்டாகும் மலர்களாலாகிய மாலையை, புனை - அணிந்த, களவீச—! ஏத்திய - (பாடல் பாடித்) துதித்த, மூவர் - மூன்று நாயன்மார்களது, தமிழ் மாலை - தமிழ்ப்பா மாலையை, சாத்தும் - அணிந்துகொண்ட, இணை அடிக்கு - (உனது) இரண்டு திருவடிகளில், என் நா தரும் புல் சொல் தொடை - எனது நாவினாற் பாடும் இழிவானபாமாலைகளையும், புனைவாய்-(விருப்பத்தோடு) அணிந்துகொள்வாய்.

மிகவுஞ்சிறந்த கற்பகமரங்களின் மலர்களோ டொப்ப மிகவும் இழிவான எருக்கமலர்களையும் சிவபெருமான் சடைமேலணிந்துகொள்ளும் இயல்பின னாதலால், அவ்வாறே தத்துவஞானங்கனிந்த மெய்யடியார்கள் பத்தியோடு திருவாய்மலர்ந்தருளிய சிறந்த தமிழ்ப்பாசுரங்களாகிய தேவாரத்தோடொப்ப அறிவில்லாத தமது மிகத்தாழ்ந்த பாடல்களையும் அங்கீகரிப்ப னென்னுந் துணிபுபற்றி, இவ்வாறு வேண்டுகின்றன ரென்க. 'செம்பொனாட்டிலைந்து காத்தருநாண்மலர்சூடும் புரிசடைக்காட் டெருக்கம்பூத்தருமாலை புனை' என்ற அடைமொழி - முன்னிரண்டடியிற் கூறிய விஷயத்துக்கு உபகாரப்பட

வேண்டுமென்னுங் கருத்துப்பட உரைக்கப்பட்டதனால், கருத்துடையடை மொழியணியாம். "போதமறியேன் புகன்றகவிவிண்ணப்பம், ஏதுந் திருச் செவியி லேறுமோ - சீதநிலாத், திங்க ளணியுந் திருச்சடைமேற் புன்பூளை, தங்கவணியுங் கருவேசா" என்ற வெண்பாவந்தாதி இங்குக் கருதத்தக்கது.

மூவர் - திருஞானசம்பந்தர் சுந்தரமூர்த்திகள் திருநாவுக்கரசர் என இவர். மூவர்தமிழ்மாலை - தேவாரம். தேவலோகம் செம்பொன்மயமான உலக மாதலால், அது - 'செம்பொனாடு' எனப்பட்டது. ஐந்துதேவதருக் கள் - மந்தாரம் பாரிஜாதம் ஸந்தாநம் கல்பம் ஹரிசந்தநம் என்பன. இவை களில் ஒவ்வொன்றும் பருத்து ஒருசோலைபோலப் பரவிவளர்ந்திருத்தலால், 'ஐந்துகா' என்றார். எருக்கம்பூ, அம் - சாரியை. பூ தரு - பூத்தந்த [பூவினை லாகிய] எனினுமாம். அந்தகன் - யமன்: புராந்தகன் - புரங்களுக்கு முடி வைச் செய்தவன். (சஉ)

43. புரந்தரன்பண்டைப்பழிதீரப்பொன்னிதழ்ப்பூங்கமல
நிரந்தரஞ்சாத்தவருள்புரிந்தோனிலவோடணிந்த
கரந்தையஞ்செஞ்சடைப்பால்வண்ணநாதன்கருணைபொங்கி
வரந்தருமோவறியேனளியேனிட்டமாமலர்க்கே.

(இ - ள்.) பண்டை - முற்காலத்தில், புரந்தரன் - தேவேந்திரனது, பழி - பிரமகத்திதோஷம், தீர - நீங்கவும், பொன் இதழ் பூ கமலம் - பொன் மயமான இதழ்களையுடைய தாமரைமலர்களை, நிரந்தரம் - எப்போதும், சாத்த- (தனக்கு அவ்விந்திரன்) சமர்ப்பிக்கவும், அருள் புரிந்தோன் - கிருபைசெய்த வனாகிய,— நிலவோடு - நிலாவையுடைய பிறைச்சந்திரனுடனே, அணிந்த - தரித்த, கரந்தை - கரந்தை மலர்களையுடைய, அம் - அழகிய, செம் சடை - சிவந்த சடையோடுகூடிய, பால்வண்ணநாதன்—,—அளியேன் - (கருணை யினால்) பாதுகாத்தற்கு உரியவனான அடியேன், இட்ட - (தனக்குச) சமர்ப் பித்த, மா மலர்க்கு-சிறந்த புஷ்பங்கட்கு, கருணை பொங்கி- திருவருள்மிகுந்து, வரம் தருமோ - (எனது) விருப்பத்தைத் தருவானோ' (அறியேன்); (எ-று.)

தேவேந்திரன் தனக்குப் பொற்றாமரைமலரையணிந்து வழிபட்டுப் பழி தீருமாறு அருள்புரிந்த சிவபிரான், அடியேன் மலர்கொண்டு பூசித்து வழி பட்டு வணங்குமாறு என்னையும் திருவருள்கொண்டு பாதுகாத்தல் முறை: அவ்வாறு திருவருள்பாலிப்பனோ? அன்றிக் கைவிடுவனோ என்பதாம். தேவர் கட்கெல்லாந் தலைவனாகிய இந்திரனிடத்துக் கருணைபுரிந்தவன் மனிதரிற் கடைப்பட்டவனாகிய என்னிடத்துக் கருணைபுரிவனோ? என்று ஐயங் கொண்டவாறு. கடம்பவனத்து வந்தமாத்திரத்தில் தனதுபாவம் நீங்கப் பெற்ற இந்திரன் அத்தலத்து எழுந்தருளிய சிவபெருமானிடத்துப் பொற்றா மரைப்பொய்கையினின்று தாமரைமலர்களைத் தான் நாடோறுஞ்சாத்தும்படி வரம்வேண்ட, அக்கடவுள் 'சித்திராபௌர்ணமிதோறும் நம்மைப் பூஜை செய்தால் வருடமுழுதும் பூஜைசெய்த பயன் கிடைக்கும்' என்று கட்டளை

யிட, அவ்வாறே தேவேந்திரன் வருடந்தோறும் செய்கின்றன னென்ற புராணகதையை உட்கொண்டு 'பொன்னிதழ்ப் பூங்கமலம் நிரந்தரஞ்சாத்த வருள்புரிந்தோன்' என்றார்.

புரந்தரன் - பகைவர்களினுடம்பை அல்லது நகரங்களை யழிப்பவன்; கமலம் - நீரை யலங்கரிப்பது; நிரந்தரம் - இடையீடில்லாத காலம்: இவை - வடசொற்கள். நிலவு - இலக்கணையால், பிறைச்சந்திரனைக் குறித்தது. பால்வண்ணநாதன் தருமோ - செய்யுமென் முற்று ஆண்பாலுக்கு வந்தது: 'அருள்புரிந்தோர்...பால்வண்ணநாதர் வரந்தருமோ' என்றபாடம் சிறவாது. அளியேன் - இரங்கி அருள்புரிதற்குஉரிய நான்.

முன்னரண்டடியிற் குறித்த வரலாறு:—முன்னொருகாலத்தில் தேவேந்திரன் செல்வச்செருக்கில் மூழ்கிப் பெண்மயலி லகப்பட்டுத் தனதுகுருவாகிய பிரஹஸ்பதி வருகையில் அவர்க்குச் செய்யவேண்டிய வழிபாடுகளைச் செய்யாதுபோக, அதுகாரணமாக அக்குரு சென்றவிடந்தெரியாது மறைந்துவிட, அப்போது பிரமதேவனதுகட்டளையின்படி த்வஷ்டாவின் புதல்வனாகிய விசுவரூபனென்னும் அசுரனொருவனைக் குருவாகக் கொண்டு அவனிடத்துத் தேவேந்திரன் ஒருயாகஞ்செய்யுமாறு வேண்ட, அவனும் புறத்திலே 'தேவர்கட்குச் செல்வமுண்டாகுக' என்று சொல்லி அகத்திலே தம்மவர்களான அசுரர்கட்கெல்லாம் நன்மையுண்டாகுமாறு நினைத்து யாகஞ்செய்ய, அதனையறிந்த தேவேந்திரன் சினந்து தனதுவச்சிராயுதத்தினால் அவனது சிரங்களைக் கொய்தமாத்திரத்தில் அவனைக்கொன்றதனாலாகிய பிரமகத்திதோஷம் தன்னை நெருங்கிப்பீடிக்க, தேவர்கள் அப்பாவத்தை மரம்முதலியவற்றிற்குப் பகிர்ந்துகொடுத்து இந்திரனைப் பழி நீங்கியவனாக்க, அப்போது த்வஷ்டா தனது மகனைக் கொன்றவனைப் பழிவாங்க நினைத்து யாகமொன்று செய்து விருத்திராசுரனை யுண்டாக்கி இந்திரனைக்கொல்லுமாறு ஏவ, இந்திரன் அவ்வசுரனோடு பொருது அவனையே கொல்ல, உடனே பிரமகத்திதோஷம் மற்றும் தேவேந்திரனை நெருங்கி நலிய, அப்போது இந்திரன் தனதுகுருவாகிய பிரகஸ்பதியின் சொற்படியே பூலோகத்திற்கு வந்து பல தலங்களிலுஞ் சென்று முடிவில் கடம்பவனத்தைச் சார்ந்து தனது பிரமகத்தி தோஷம் நீங்கப்பெற்று அங்குள்ள பொற்றாமரைப் பொய்கையினின்று பூக்கொய்து சிவபிரானது திருவடிகளி லிட்டு அருச்சித்து அப்பிரானது திருவருளினால் தனது பழையநிலையை யடைந்தன னென்பதாம். ()

44. மாமலரன்றிக்குருதிக்கண்சாத்தியமாயனுக்குந்
தீமலராழிப்படையளித்தாய்செழுந்தேறல்வளப்
பூமலர்கொண்டுன்றிருமேனிமுற்றும்பொதிந்தவந்தக்
காமனைமேயெனரித்தாய்கருவாபுரிக்காரணனே.

(இ - ள்.) கருவா புரி காரணனே - திருக்கருவையென்னும் நகரி லெழுந்தருளியுள்ள சிவபெருமானே!—மா மலர் அன்றி - சிறந்த தாமரைமலரே யல்லாமல், குருதி கண் சாத்திய - (சூன்றெடுத்ததனால்) இரத்தஞ் சொரியப்

பெற்ற கண்ணைச் சமர்ப்பித்த, மாயனுக்கு - திருமாலுக்கு, உன் - உனது, தீ மலர் ஆழி படை-நெருப்புச்சுவாலை வீசுகின்ற சக்கராயுதத்தை, அளித்தாய் - கொடுத்தருளினாய்; செழுந் தேறல் வளம் பூ மலர்கொண்டு - செழுமையாகிய தேன்பெருக்கையுடைய பொலிவுபெற்ற புஷ்பங்களைக்கொண்டு, உன் திரு மேனி முற்றும் பொதிந்த - உனது திருமேனிமுழுவதையும் மறைத்த, அந்த காமனை - அந்த மன்மதனை, என் எரித்தாய் - என்னகாரணத்தினால் எரிதழித்தாய்? (எ - று.)

தாமரைமலர்கொண்டு பூசிக்கத்தொடங்கிய திருமால் அத்தாமரைமலர் கிடைக்கப்பெறாமையால் அதற்குஈடாகத் தனது தாமரைபோன்ற ஊனக் கண்ணொன்றைக்கொண்டு திருவடிகளி லிடவும் அவனுக்கு நீ அருள்செய் தாய்; காமனோ, தாமரைமுதலிய ஐந்துமலர்களையேகொண்டு உனது திரு மேனிமுழுவதும் தூவவும் அவனிடத்துச் சிறிதும்அருளில்லாது கோபங் கொண்டு அவனையே எரித்தொழித்தாய்; இம்மாறுபாட்டிற்குக் காரணம் யாதோ? என்று வினாவியவாறு. இதனால், இறைவன் அகத்திலிருக்கும் பக்தியைக் கருதுபவனேயன்றிப் புறத்தேதோன்றும் பொருள்களைக் கருது பவனல்ல னென்பது பெறப்படும். "ஈசற்கு - நல்லோனெறிசிலையோ நன் னுதா லொண்கருப்பு, வில்லோன்மலரோ விருப்பு" என்றதுங் காண்க.

மாயன் - மாயையையுடையவன்; மாயையாவது - கூடாததையும் கூட்டு விக்குந் திறம்: கருநிறமுமாம். தீமலர்ஆழி - நெருப்பு மலர்கின்ற [மிகுதி யாகத்தோன்றுகின்ற] சக்கரம். மலராழி - வினைத்தொகை. ஆழி - (பகை வரை) அழிப்பது என்றாவது, வட்டவடிவமானது என்றாவது காரணப் பொருள்படும். தாமரை அசோகு குவளை முல்லை தேமா என்ற மலர்களைந் தும் - மன்மதனது பஞ்சபாணங்களாம். மலர் - சாதியொருமை. காமன் - விருப்பத்தைபுண்டாக்குங் கடவுள். காரணன் - எல்லாப்பொருள்கட்குங் காரணமானவன்; அன்றி, காரணாகமத்தினாற் பிரதிபாதிக்கப்படுபவனுமாம்.

திருமால் தருதிக்கண் சாத்திய வரலாறு:—சிவபெருமான் தனதுதிரு வடிவிரலால் தரையிற்கீறியுண்டாக்கிச் சலந்தராசுரனைக்கொன்ற சக்கராயுத த்தை அரக்கர்முதலியோரை அழித்தற்குப் பெறும்பொருட்டுத் திருமால் நாடோறும் ஆயிரந்தாமரைமலர்களைக்கொண்டு அச்சிவபெருமானை அருச் சித்து வழிபட்டுவருகையில், ஒருநாள் பரமசிவன் அவ்விஷ்ணுவினது அன்பு நிலையைப் பரிசோதிக்க எண்ணி ஒருமலரை மறைத்திட, திருமால் மனந் தளர்ந்து தனதுசெந்தாமரைமலர்போலுங் கண்களு ளொன்றைப் பறித்து அருச்சிக்க, சிவபிரான் திருவுள்ளமுவந்து சக்கராயுதத்தை யீந்தன னென் பதாம். "சலமுடையசலந்தரன்றனுடல்தடிந்த நல்லாழி, நலமுடையநார ணற்கன்றுதவியவாறென்னேடீ, நலமுடையநாரணன்றன் னயனமிடந்தரனடி க்கீ, ழலராகவிடவாழியருளினன்காண் சாழலோ" என்பது திருவாசகம். ()

45. காரணனேதென்கருவாபுரியிற்களாநிழற்கீழ்ப்
பூரணனேயென்புபூண்டவனேபொற்பொருப்புவில்லா

நாரணனேகணையாப்புரமூன்றெய்தநாயகனே
யாரணனேயப்பனேயடியேனுன்னடைக்கலமே.

(இ - ள்.) காரணனே—! என்பு பூண்டவனே - எலும்புமாலையை யணிந்தவனே! பொன் பொருப்பு வில் ஆ - பொன்மயமான மேருமலையை வில்லாகவும், நாரணனே கணை ஆ - திருமாலே அம்பாகவுங் கொண்டு, புரம் மூன்று எய்த - திரிபுரங்களையும் எய்து நீறாக்கின, நாயகனே - தலைவனே! ஆரணனே - வேதங்களினா லுணர்த்தப்படுபவனே! அப்பனே - பரமபிதாவே! தென் கருவாபுரியில் களா நிழல்கீழ் பூரணனே - தெற்கின்கணுள்ள திருக்கருவை நகரில் களாமரத்தின்நிழலி லெழுந்தருளியுள்ள நிறைந்தகடவுளே!—அடியேன்—, உன் அடைக்கலம் - உனது அடைக்கலப்பொருளாவேன்; (எ-று.)

யான் உன்னையே சரணமாக அடைந்து உன்னாற் பாதுகாக்கப்படும் பொருளாயினே னாதலால், என்னை ஒருகுறைவும் நேராதவாறு பாதுகாக்க வேண்டு மென்பதாம். பூரணன் - எங்கும்வியாபித்து நிரம்பியுள்ளவன்: எல்லாக்குணங்களாலும் நிரம்பியவனுமாம். நாரணன் = நாராயணன்: சிருஷ்டிப் பொருள்கட்கெல்லாம் இருப்பிடமானவ னென்றும், பிரளயப்பெருங்கடலை வாழுமிடமாகவுடையவ னென்றும், இன்னும்பலபடியாகவும் காரணப்பொருளுரைப்பர். அடியேன் உன்னடைக்கலம் என்றவிடத்து—தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதியும், இழிப்பினால் [பணிவுபற்றி] உயர்திணை அஃறிணையாக் கூறப்பட்ட திணைவழுவமைதியும் இருத்தல் காண்க.

'என்புபூண்டவன்' என்பதில் அடங்கிய கதை: —சர்வசங்காரகாலந் தோறும் ஒடுங்குகிற பிரமாது தலைகளையும் விஷ்ணுக்களது எலும்புகளையும் சிவபெருமான் மாலையாகத் தொடுத்து, 'எப்பொழுதும் அழிவில்லாமல் எஞ்சிநிற்கும் பொருள் தாம் ஒருவரே' என்று அப்பிரமனாதியோர் அறிந்து வழிபட்டு நற்கதியடைதற்பொருட்டு ஆபரணமாக அணிவ னென்பதாம். ()

46. அடைக்கிலரைந்துபுலனையுநெஞ்சத்தழுக்ககலத்
துடைக்கிலர்தொண்டுபுரியத்துணிகிலர்தூயபத்தி
படைக்கிலர்நின்புகழ்பாடிலர்காலபடர்பிடித்துப்
புடைக்கிலென்செய்திடுவார்களவீசபொறியிலரே.

(இ - ள்.) களவீச—!—பொறி இலர் - நல்வினையில்லாதவர்,—ஐந்து புலனையும் - (தமது) பஞ்ச இந்திரியங்களையும், அடைக்கிலர் - (அவை தம்தம் வழியிற் செல்லவொட்டாது) தடுத்துவைக்குந் திறமில்லார்; நெஞ்சத்து - (தமது) மனத்தில், அழுக்கு - (ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்) மலங்களும், அகல - நீங்கும்படி, துடைக்கிலர் - போக்குந்திறமுடையவரல்லர்; தொண்டுபுரிய - (உனது) கைங்கரியத்தைச் செய்யுமாறு, துணிகிலர் - துணியவும்மாட்டார்; தூய பத்தி படைக்கிலர் - (உன்னிடத்துப்) பரிசுத்தமான மெய்யன்பைக் கொள்ளவும்மாட்டார்; நின் புகழ் பாடிலர் - உனது திருப்புகழ்களை (வாயினாற்) பாடித் துதிக்கவும்மாட்டார்; (நற்றொழிலைச்செய்து தமது

வாழ்நாளைச்சபலமாக்காது வீணேகழித்த அவர்கள்),—(தமது அந்திமகாலத்தில்), கால படர் - யமகிங்கரர், பிடித்து புடைக்கில் - பிடித்து வருத்தும் போது, என் செய்திடுவார் - என்னசெய்ய மாட்டுவார்கள்? [ஒன்றுஞ் செய்ய மாட்டாது தவிப்பரென்றபடி]; (எ - று.)

உலகத்து மனிதர்கள் நல்லறிவுடனே தமதுவாணாளை வீணாளாக்காமல் பஞ்சேந்திரியங்களையடக்குதல் மும்மலங்களைப்போக்குதல் கைங்கரியஞ் செய்யத்துணிதல் முதலிய நற்றொழில்கள் புரிந்திடுவாராயின் இறுதியில் யமபாதைக்கு உள்ளாகாமல் நற்கதிபெறலா மென்பது, கருத்து. இவ்வாறு நற்றொழில்புரியாதவர்க்கோ யமனுக்குக் குற்றேவல்செய்தல் நேரிடு மென்பதாம். "கரங்கொண்டலர் தூவார் கண்கொண்டுபாரார், சிரங்கொண்டடியிறைஞ்சல் செய்யார் - உரங்கொண்ட, வற்றில்வருந்தென்கருவையீசனுக் காட்செய்யா மற், கூற்றுவற்காட்செய்வார் கணம்" என்பது, வெண்பாவந்தாதி.

ஐந்துபுலன் - இங்கு, இலக்கணையால், ஐம்பொறிகளைக் குறித்தன. ஐம்பொறிகள் - மெய் வாய் கண் மூக்குச் செவி என இவை. ஐம்பொறிகளையடக்குதல் - ஐம்பொறிகளையும் தம்தமக்குஉரிய ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை என்னும் ஐம்புலன்களின்மேற் செல்லவொட்டாது தடுத்தல். நெஞ்சத்துஅழுக்கு - மனக்குற்றம். தொண்டு - சிவகைங்கரியம். பொறி - ஊழ்: நல்வினையை யுணர்த்திற்று. பொறியிலர் - அறிவில்லாதவ ரெனினுமாம். ()

47. பொறியும்புலனுங்கலங்கியைம்மேலிட்டுப்புத்திகெட்டு
மறியும்பொழுதிலும்யான்மறவேன்மறியோடுமழுச்
செறியுங்கரம்புயமுஞ்செய்யவாயுந்திலகநுதற்
குறியுங்கருவைப்பெருமான்றிருமணக்கோலமுமே.

(இ - ள்.) பொறியும் - ஐம்பொறிகளும், புலனும் - (அவற்றிற்குஉரிய) ஐம்புலன்களும், கலங்கி - நிலைதடுமாறி, ஐ மேலிட்டு - கோழை மிகுதியாக (நெஞ்சில்) நிறைந்து, புத்தி கெட்டு - பிரஜ்ஞைதப்பிப்போய், மறியும் பொழுதிலும் - இறக்குந்தருணத்திலும்,—கருவை பெருமான் - திருக்கருவைச் சிவபெருமானது, மறியோடு மழு செறியும் கர அம்புயமும் - மானையும் மழுவையும் ஏந்திய தாமரைமலர்போன்ற திருக்கைகளையும், செய்ய வாயும் - சிவந்ததிருவாயையும், நுதல் திலகம் குறியும் - திருநெற்றியி லணிந்துள்ள திலகக்குறியையும், திருமணம் கோலமும் - திருக்கல்யாண கோலத்தையும், யான் மறவேன்—; (எ - று.)

யான் எப்போதும் சிவபிரானதுவடிவத்தைத் தியானித்து நிற்றலால், அவ்விறைவனை மறக்குமாறு நேரக்கூடிய அந்திமகாலத்திலும் அப்பிரானது திருவுருவத்தை மறவே னென்று தமதுதியானத்தினுறுதியை எடுத்துக் கூறின ரென்க.

பொறியும் புலனும் கலங்குதல் - ஐம்பொறிகள் தம்தமக்குஉரிய பரிசம் முதலிய புலன்களை அநுபவிக்குந்தன்மை குன்றிப்போதல். ஐம்மேலிடுதல் -

அந்திமகாலத்தில் நெஞ்சிற் கோழை மிகுதியாக அடைத்துக்கொள்ளுதல்; இனி, வாதநாடியும் பித்தநாடியும் ஒடுங்கிப்போகச் சீதளத்துக்குஉரிய ஶ்லேஷ்மநாடியே தலையெடுத்தலுமாம். காம்புயம் - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். அம்புயம் = அம்புஜம்: நீரில்தோன்றுவது. வாய்சிவந்திருத்தல்- உத்தமவிலக்கணம். (சஎ)

48. கோலமெடுத்துநடிப்பவர்போலப்பொய்க்கூடுபல
காலமெடுத்துக்கழித்துவிட்டேன்கருப்புச்சிலைமே
னீலமெடுத்துப்பொரவந்தகாமனைநீறுசெய்யப்
பாலமெடுத்தவிழியழலேவியபால்வண்ணனே.

(இ - ள்.) கரும்பு சிலைமேல் - கரும்பாகிய வில்லினிடத்தில், நீலம் எடுத்து - கருங்குவளைமலராகிய பாணத்தை எடுத்துத்தொடுத்து, பொர வந்த- (உன்மீது பிரயோகித்துப்) போர்செய்ய வந்த, காமனை - மன்மதனை, நீறு செய்ய - நீறாக்கும்படி, பாலம் எடுத்த விழி - நெற்றியிற்பொருந்திய கண்ணினின்று, அழல் ஏவிய - நெருப்பையேவி யழித்த, பால்வண்ணனே!— கோலம் எடுத்து நடிப்பவர்போல - வேஷம்பூண்டு கூத்தாடுபவர்போல, பொய் கூடு பல எடுத்து - பொய்யாகிய பலசரீரங்களை(ப் பலகாலங்களில்) மேற்கொண்டு, காலம் கழித்துவிட்டேன் - (எனது) காலங்களையெல்லாம் வீணாக்கினேன்; (எ - று.)

அளவிறந்தபலகாலங்களில் எண்ணத்தொலையாத மிகப்பல ஜந்மங்களெடுத்து உழன்று வருந்திப் பழுதே பலபகலும் போக்கியமைக்கு இரங்கியவாறு; இனியாயினும் அவ்வாறுஉழலாதபடி குறிக்கொண்டு பாதுகாத்தல் வேண்டு மென்பது, குறிப்பு. தாம்எடுத்த பலபிறவிகளிலும் உள்ளும்புறமும் ஒத்திராமல் எண்ணம்வேறு செயல்வேறாக இருந்து காலத்தை வீணே கழித்ததனால், கோலமெடுத்துநடிப்பவரைத் தமக்கு உவமையாகக் கூறினர்; உவமையணி. "நடித்தேன் பொய்க்கூடெடுத்து அவமே நன்னாள்கழிய" என்றார், பதிற்றுப்பத்தந்தாதியிலும்.

உயிராகியபறவை வந்து புகுந்து சிலகாலந்தங்கிப் பின்பு நீங்கிச்செல்லுங் கூடுபோலுதலால், உடம்பு 'கூடு' எனப்பட்டது: உவமையாகுபெயர். மன்மதனுக்குக் கரும்பு வில்லாதலை "ஆலைக்கரும்பு சிலை" என்றதனாலும் அறிக: மன்மதனது அம்புகள் - தாமரைமலர் மாமலர் அசோகமலர் முல்லைமலர் நீலோற்பலமலர் எனபன. இவற்றின்பயன் - முறையே, உந்மத்தம், மதநம், ஸம்மோஹம், ஸந்தாபம், வசீகரணம் என்பன: இவை செய்யும் அவஸ்தைமுறையே, சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்பன. அவையாவன—சுப்பிரயோகம் - சொல்லும் நினைவும்; விப்பிரயோகம் - வெய்துயிர்த்திரங்கல்; சோகம் - வெதுப்பும் துய்ப்பனதெவிட்டலும்; மோகம் - அழுங்கலும் மொழிபலபிதற்றலும்; மரணம் - அயர்ப்பும் மயக்கமும். "நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணவுநீக்கும்

அசோகு - வனத்திலுறு, முல்லை கிடைகாட்டும் மாதே முழுநீலங், கொல்லும் மதனம்பின்குணம்" என்ற இரத்தினச்சுருக்கத்தையும் காண்க. இவற்றில், ஐந்தாவதாகிய குவளையை எடுத்துக்கூறியது - அம்மலரே கொடியதாய் மரண வேதனையை யுண்டாக்குதலா லென்க.

நீலம் - பண்பாகுபெயர். பாலம் - வடசொல். விழிப்பது - விழி ; வினை முதற்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர். கரும்பு + வில் = கருப்புவில் ; சிறுபான்மை அல்வழியில் மென்றொடர் வன்றொடராயிற்று. (சஅ)

49. பால்வண்ணஞ்சொல்லென் றும்பங்கேருகவண்ணம்பாதமென்றுஞ்
சேல்வண்ணங்கண்ணென் றுமிவ்வண்ணமாதர் திறம்புகழ்ந்து
நூல்வண்ண நுண்ணிடையொப்பனைபாகநொந்தேனினியுன்
கால்வண்ணநாண்மலர்க்கோரளியாகக்கருத்தளியே.

(இ - ள்.) நூல் வண்ணம் - நூலின்தன்மைபோன்ற, நுண் இடை - மெல்லிய இடையையுடைய, ஒப்பனை - ஒப்பனையம்மையை, பாக - (வாம) பாகத்திற் கொண்டவனே!—'சொல் - பேச்சு, பால் வண்ணம் - பால்போல இன்சுவையுடையது,' என்றும்—, 'பாதம் - பாதங்கள், பங்கேருகம் வண்ணம்-தாமரைமலர்போல மென்மையும் அழகு முடையன', என்றும்—,'கண் - கண்கள், சேல் வண்ணம் - கெண்டைமீன்போலத் தோற்றமும் பிறழ்ச்சியு முடையன,' என்றும்—, இ வண்ணம் - இவ்வாறு, மாதர் திறம் புகழ்ந்து - மகளிரது அழகை வருணித்துக்கூறி, நொந்தேன் - (அதனால் யாதொரு பயனும் கிடைக்கப்பெறாமல்) வருந்தினேன்; இனி - இனிமேல், உன் கால் வண்ணம் நாள் மலர்க்கு - உனது திருவடிகளாகிற அழகிய அன்று மலர்ந்த தாமரையினிடத்தில், கருத்து - என்னெண்ணத்தை, ஓர் அளி ஆக - ஒரு வண்டுபோன்று இன்சுவையை அநுபவிக்கும்படி, அளி - கருணைசெய்வாயாக.

தாமதகுணத்தோடு சிற்றின்பவாசைகொண்டு மகளிர்பக்கல் ஈடுபட்டு அவரது அவயவங்கட்கு ஒப்புமைதேடி எடுத்துச்சொல்லிக் கொண்டாடி என்மனம் ஒருநிலையின்றித் திரிதலால், யான் மிகவும் அலுத்துப்போனேன் ; இனியாவது நீ உனது திருவடிகளின் போக்கியதையைக் காட்டி அங்குமிங்கும் அலைந்துதிரியவொட்டாது அதனைப் பிணித்து உன்திருவடிகளிலேயே ஈடுபடும்படி கருணைபுரியவேண்டு மென்பதாம். சிவபெருமானது திருவடிகளைத் தாமரையாகக் கூறியதற்கு ஏற்ப, அதில்ஈடுபட்டு அநுபவிக்கவேண்டிய தமது மனத்தை அத்தாமரைமலரில் தேனுண்ணும் வண்டாகக் கூறினர். உருவகவணி. வண்ணம் என்ற சொல் ஒருபொருளில்தானே பலமுறை வந்தது - சொற்பொருடபின்வருநிலையணியும், அளி என்ற சொல் வெவ்வேறு பொருளில் வந்தது - சொற்பின்வருநிலையணியுமாம். அளியாகக் கருத்தளி என்பதற்கு - (திருவடித்தாமரையில்) நான் வண்டாகும்படி (எனக்குக்)கருத்தைத் தரவேண்டு மென்று உரைப்பாரு முளர். பங்கேருஹம் - சேற்றில் முளைப்பது எனக் காரணப்பொருள்படும் ; தாமரைக்குக் காரணவிடுகுறி. ()

50. கருத்துறுமாயையிருளுக்குத்தீபங்கழிபிறவிப்
பெருத்தெழுநோவுக்கமிர்தசஞ்சீவினிபேதித்துள்ளம்
வருத்திடுதுன்பத்திரைவாரிதிக்குவடவைமன்றத்
தருத்தியினாடுங்கருவைப்பிரான்றிருவஞ்செழுத்தே.

(இ - ள்.) மன்றத்து - சபைகளில், அருத்தியின் - ஆதரத்தோடு, ஆடும் - நர்த்தனஞ்செய்கின்ற, கருவை பிரான் - திருக்கருவைச் சிவபெருமானது, திரு அஞ்சு எழுத்து - ஸ்ரீபஞ்சாட்சரமானது,—கருத்து உறு - மனத்திற் பொருந்திய, மாயை இருளுக்கு - அஜ்ஞாநமாகிய அந்தகாரத்திற்கு, தீபம் - ஒரு விளக்குப் போன்றது; கழி பிறவி - மிகப்பலபிறப்புக்களாகிய, பெருத்து எழு நோவுக்கு - மிகுதியாகநேர்கிற வியாதிக்கு, அமிர்த சஞ்சீவினி - (வியாதியைப்போக்கி உறுதியான வாழ்நாளைத் தருகின்ற) அமிருதசஞ்சீவினியென்னும் மருந்துபோன்றது; உள்ளம் பேதித்து - மனத்தை மாறுபடுத்தி, வருத்திடு - வருத்துகின்ற, துன்பம் - பிறவித்துன்பங்களாகிய, திரை வாரிதிக்கு அலைகளையுடைய கடலுக்கு, வடவை - வடவாமுகாக்கினிபோன்றது.

அஜ்ஞாநமாகிய அந்தகாரத்தை யொழித்தற்குக் காரணமாகி நிற்றலால் தீபமாகவும், பிறப்பாகிய அழிக்கவொண்ணாத வியாதியை நீக்கி நிலைநின்ற நற்கதியை யளித்தற்குக் காரணமாகி நிற்றலால் அமிருதசஞ்சீவினியாகவும், பிறவித்துன்பங்களை எரித்தொழித்தலால் வடவாமுகாக்கினியாகவும் சிவபெருமானது ஸ்ரீபஞ்சாட்சரத்தைப் பாராட்டிக்கூறினரென்க. இவ்வாறு ஒருபொருளிடத்துள்ள பலபண்புகளைக் கொண்டு அப்பொருளிற் பலபொருளின் தன்மையை ஏறிட்டுக்கூறுவது - பலபடப்புனைவணியாம்; வடநூலார் உல்லேகாலங்கார மென்பர். "விண்ணுறவடுக்கிய விறகின் வெவ்வழ, லுண்ணியபுகி லவையொன்றுமில்லையாம், பண்ணிய வுலகினிற் பயின்றபாவத்தை, நண்ணிநின்றறுப்பது நமச்சிவாயவே", "இல்லகவிளக்கது விருள்கெடுப்பது, சொல்லகவிளக்கது சோதியுள்ளது, பல்லகவிளக்கது பலருங்காண்பது, நல்லகவிளக்கது நமச்சிவாயவே" என்ற நமச்சிவாயப்பதிகத்துப்பாசுரங்கள் இங்குக் கருதத்தக்கன. வடவை - பெண்குதிரை; இது, கடலினிடையே இருந்துகொண்டு மழை முதலியவற்றினால் கடலின் நீர்ப்பெருக்கு மிகாதபடி தனது முகத்திலுள்ள நெருப்பினால் உறிஞ்சுமென்பது, நூற்கொள்கை; படபா-வடசொல். வாரிதி-நீர்தங்குமிடமெனக் கடலுக்குக் காரணக்குறி. (௫௰)

51. அஞ்செழுத்தோதித்திருநீறணிந்துன்னடிக்கமல
நெஞ்சழுத்தித்தொண்டுசெய்வதல்லாற்றண்ணிலாமதியின்
பிஞ்சழுத்துஞ்சடையாரியநாதபிறிதுசெய்யேன்
பஞ்சழுத்தும்பதத்தாரின்பவாரிபடியினுமே.

(இ - ள்.) தண் நிலா மதியின் பிஞ்சு அழுத்தும் சடை - குளிர்ந்த சந்திரிகையையுடைய இளம்பிறைச்சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய, ஆரிய நாத - ஆரியநாட்டார்க்குத் தலைவனே!—பஞ்சு அழுத்தும் பதத்தார் -

செம்பஞ்சுக்குழம்பையணிந்த பாதங்களையுடைய மகளிரது, இன்பம் வாரி - சிற்றின்பப்பெருக்கில், படியினும் - மூழ்கிக்கிடந்தாலும்,—அஞ்சு எழுத்து ஓதி - (உனது) ஸ்ரீபஞ்சாக்ஷரத்திருமந்திரத்தை வாயினாலுச்சரித்து, திருநீறு அணிந்து - விபூதியைத் தரித்துக்கொண்டு, உன் அடி கமலம் நெஞ்சு அழுத்தி - உனது திருவடித்தாமரைமலர்களை மனத்திற்பதியத் தியானித்துக்கொண்டு, தொண்டு செய்வது அல்லால் - கைங்கரியஞ்செய்வதேயல்லாமல், பிறிது செய்யேன் - (நான்) வேறொன்றுஞ் செய்யமாட்டேன்; (எ - று)

நான் எப்போதும் எனது திரிகரணங்களினாலும் உன்னையே வந்தித்து வழிபட்டுத் தொண்டுசெய்வேனென்பதாம். 'அஞ்செழுத்தோதி' என்பதனால் - வாக்கினாலும், 'திருநீறணிந்து' என்பதனால் - காயத்தினாலும், 'உன்னடிக்கமலம் நெஞ்சழுத்தி' என்பதனால் - மனத்தினாலும் ஆகத் திரிகரணங்களினாலும் தாம் தொண்டுசெய்யுந் தன்மையை விளக்கினாரென்க. "முருக்கிதழ்க்கனிவாயாரை முயங்கி நெஞ்சழியும்போதும், திருக்களாவுடையநம்பா சிந்தையுன்பாலதாமே" என்றது காண்க. திருக்கருவைநகர் ஆரியநாட்டிலிருக்கின்ற தலமாதலால், ஆரியநாதன் என்பது - திருக்கருவைச்சிவபிரான் திருநாமமாம். பஞ்சு - செம்பஞ்சுக்குழம்பிற்கு இலக்கணை: அதனை மகளிர் பாதத்திலணிதல், மென்மையும் செந்நிறமும் உண்டாதற்பொருட்டாம். (நக)

52. படியிற்பிறந்துவிழுந்திட்டயாக்கைபலகுவிந்தால்
வடிவிற்பெரியவடவரைபோலுமற்றிப்பிறப்பி
லடியற்கெளியகளவீசநின்னருளாக்கம்பெற்றேன்
முடிவிற்பழவடியேன்பிறவாவண்ணமுத்திநல்கே.

(இ - ள்.) அடியற்கு எளிய களவீச - அடியவனாகிய என்திறத்தில் எளிதில் திருவருள்பாலிப்பவனாகிய களவீசனே!—படியில் - இந்தப்பூமியில், பிறந்து விழுந்திட்ட - பிறந்து இறந்து விழுந்த, யாக்கை பல - பல (பிறவியில்நேர்ந்தனது) சரீரங்களெல்லாம், குவிந்தால் - ஒருங்குசேர்ந்தால், வடிவின் பெரிய - உருவத்தாற் பெரியதான, வட வரை போலும் - வடக்கின்கணுள்ள மகாமேருபருவதத்தை யொக்கும்; இ பிறப்பில் - இந்தப்பிறப்பிலே, நின் அருள் ஆக்கம் பெற்றேன் - நினது திருவருளாகிய பெருஞ்செல்வத்தைப் பெற்றேன்; (அதன்பயனாக), பழ அடியேன் - உனது பழந்தொண்டனாகிய யான், பிறவா வண்ணம் - இனிப் பிறப்பெடுத்து அலையாதபடி, முடிவில் - அந்திமதசையில், முத்தி நல்கு - மோக்ஷலோகத்தைத் தந்தருள்வாய்; (எ - று.)
—மற்று - வினைமாற்று.

"முன்னம்பிறந்த பிறப்போ முடிவில்லை" என்றபடி நான் இதுவரையிற் பலபிறவிகளையெடுத்து உழன்று வருந்தினேன்; இப்போது உனக்குப் பாடல்திருத்தொண்டு செய்யுமாறு வாய்த்திருத்தலால், உனது திருவருள் என்மீது பதிந்துநிற்றல் தெற்றென விளங்குகின்றது; இனியாவது யான் பிறந்திறந்து உழலாது பிறப்பற்று முத்தியடையுமாறு திருவருள்புரியவேண்டுமென்று வேண்டியபடி. இப்பூமியில் யான் இதுவரையில் எடுத்த பிறவி

களின் உடல்கள் ஒருசேரக்குவிந்தால் அக்குவியல் வடமேருவைப்போலாகு மென்றது - உய்த்துணர்வணியை அங்கமாகக்கொண்ட உவமையணி; இதனை வடநூலார் அங்காங்கிபாவேஸங்கராலங்கார மென்பர்: தென்மொழியில், உறுப்புறுப்பிச் சேர்வையணி எனப்படும். தாமெடுத்த பிறப்புக்கள் எல்லையில் லாதனவென்பது, இவ்வடியின் தேர்ந்தபொருள். "தாரரங்கா பலதாயர்தந்த, முலைப்பாற்கட லுன்திருக்கழலாணி வெண்முத்தெறியு, மலைப்பாற்கடலி னளவாமெனின் மற்றதுவுமன்றே" என்பதுபோன்ற வாய்பாடுகொண்டது, இச்செய்யுள். யாக்கை - தோல் எலும்பு முதலிய எழுவகைத்தாதுக்களாற் கட்டப்பட்டது எனக் காரணப்பொருள்படும். மேருமலை எங்கு முள்ளதென்றால் வடக்கின்கணுள்ளதென வேண்டுதலின், அதனை 'வடவரை' என்கின் றன ரென்பர். உயிர் எப்போதும் கடவுட்கு அடிமைப்பட்ட தாதலின், தாம் அடியவரென்பதைப் பலபிறவிகளிலும் அறியாதிருப்பினும் தம்மை 'பழவடி யேன்' என்று கூறல் தகும்; இனி, "எழுபிறப்பும்பழிப்பிலோம்" என்ற படி, தமதுகுலத்து முன்னோர் தொடங்கிச் சிவபிரானுக்கு அடிமை பூண்டு நிற்றலால், தம்மை 'பழவடியேன்' என்று கூறினருமாம். (ருஉ)

53. நல்காதொழியினுநல்கினுநின்னடிநாயடியேன்
பல்காலுமேத்திப்பணிதல்செய்வேனென்பருவரல்கண்
டொல்காதளித்துப்புரந்திடல்வேண்டுமுயர்விசும்பிற்
செல்காறிளைக்கும்பொழிற்கருவாபுரித்தேசிகனே.

(இ - ள்.) உயர் விசும்பில் - உயர்ந்த ஆகாசத்தில், செல் - வீசுகின்ற, கால் - காற்றானது, திளைக்கும் - நிரம்பப்பெற்ற, பொழில் - சோலைகளை யுடைய, கருவா புரி - திருக்கருவைநகரில்லெழுந்தருளிய, தேசிகனே - (எனது) மெய்ஞ்ஞானகுருவே!—(நீ), நல்காது ஒழியினும் - (என்விஷயத்தில்) கருணை செய்யாது உபேக்ஷித்துவிட்டாலும், நல்கினும் - கருணைசெய்தாலும், நின் அடி - உனது திருவடிகளையே, நாய் அடியேன் - நாய்போற் கடைப்பட்ட நான், பல் காலும் ஏத்தி - எப்போதும் துதித்து, பணிதல் செய்வேன் - வணங்கு வேன்; என் பருவரல் கண்டு - எனது பிறவித்துன்பங்களைப் பார்த்து, ஒல் காது - உபேக்ஷியாமல், அளித்து - கருணைபுரிந்து, புரந்திடல் வேண்டும் - (அடியேனைப்) பாதுகாக்கவேண்டும்; (எ - று.)

நீ என்னிடம் கருணைகொண்டு அருள்செய்தாலும் செய்யாவிட்டாலும் எனக்கு உன்னையொழிய வேறுகதியில்லை யாதலால், நான் எப்பொழுதும் உனதுதிருவடிகளையே தியானிப்பேன்; என்னைக் குறிக்கொண்டு பாதுகாத் தல் நினதுகடமை யென்பதாம்; "களைவாய் துன்பங் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்," "எண்ணியகரும முடியினும் முடியாதொழியினு மீச னைத்தொழுதல், புண்ணியம்," "தருதுயரந்தடாயே லுன்சரணல்லாற் சரணில் லை" என்பன இங்குக் கருதத்தக்கன. 'என்பருவரல்கண்டொல்காதளித்துப் புரந்திடல்வேண்டும்' என்பதற்கு - எனது (துன்பத்தையுண்டாக்கக்கூடிய) பாபத்தைக் கண்டு ('இவ்வளவுபாவியாகிய இவனை நாம் ஏற்ற நரகத்தில்

தள்ளாது பாதுகாத்தலும் தகுதியோ ?' என்று) உபேக்ஷியாமல் ('இவன் இப்போது நம்மையே சரணமடைந்ததனால் இவனைக் கைவிடலாகாது' என்று) கருணைகொண்டு பாதுகாத்தலே நினக்குத் தகுதியாகு மென்று பொருளுரைப்பினுமாம். இப்பொருளில், பருவரல் என்பது-இலக்கணையால், துன்பத்திற்குக் காரணமான பாவத்தைக் குறிக்கும். மற்றை நான்குபூதங்கட்கும் இடங்கொடுப்பதுபற்றியும், மற்றைப்பூதங்கட்கெல்லாங் காரணமாதல் பற்றியும், எல்லாப்பூதங்கட்கும் மேலிடத்திலிருப்பதுபோலத் தோன்றுதல் பற்றியும், 'உயர் விசும்பு' எனப்பட்டது. இனி, உயர் விசும்பில், செல் கால் - மேகங்களின் வரிசைகளை, திளைக்கும் - (தமது உயர்ச்சியால் அப்பாற்செல்லவொட்டாது) கட்டுப்படுத்துகின்ற, பொழில்சூழ் - சோலைகள்சூழ்ந்த, கருவாபுரி எனினுமாம். கருவாபுரிக்கு 'உயர்விசும்பில் செல்கால்திளைக்கும் பொழில்' என்ற அடைமொழி கொடுத்துக்கூறியது - அனைத்துலகங்களையும் தனது உடைமையாகவுடைய சிவபிரான் திருவுள்ளமுவந்து நித்தியவாசஞ்செய்வதற்கு ஏற்ற குளிர்ச்சியும் வளப்பமு முடைய இடமென்று தெரிவித்தற்கு என்க. 'செல்காரிளைக்கும்பொழில்' என்ற பாடத்துக்கு - செல்லுகின்ற மேகங்கள் இளைப்பாறப்பெற்ற பொழில் என்று பொருளாம். (ருந.)

54. தேசிகனாகக்கனவில்வந்தாண்டருள்செய்தவட
காசியனெங்கள்கருவைப்பிரான்கவைக்கோட்டுவிடை
வாசியனொப்பனைபாகனென்றேத்தியென்வாய்திறந்து
பேசியபோதுள்ளமானந்தவாரிபெருகியதே.

(இ - ள்.) 'தேசிகன் ஆக - நல்லாசிரியனாக, கனவில் வந்து - (எனது) கனவி லெழுந்தருளி, ஆண்டு - அடிமைகொண்டு, அருள்செய்த - கருணை புரிந்த, வட காசியன் - வடக்கின்கணுள்ள காசியென்னுந்தலத்தி லெழுந்தருளியவனும், கவை கோடு விடை வாசியன் - இரட்டைக்கொம்புகளையுடைய விருஷபத்தை வாகனமாகக்கொண்டவனும், ஒப்பனை பாகன் - ஒப்பனையம்மையை இடப்பாகத்திலுடையவனுமாகிய, எங்கள் கருவை பிரான்—,' என்று—, என் வாய் திறந்து ஏத்தி பேசிய போது - எனதுவாயைத்திறந்து புகழ்ந்து பேசிய காலத்தில், உள்ளம் -(எனது) மனத்தில், ஆனந்தம் வாரி பெருகியது-ஆனந்தவெள்ளம் பொங்கிவழிகின்றது ; (எ - று.)

தெவிட்டாத அமுதம்போன்றுள்ளதனால், உனது திருநாமங்களை உச்சரித்தமாத்திரத்தில் எனது மனத்தில் பேரானந்த முண்டாகின்ற தெனத் தமதுமனம் இறைவனது திருநாமங்களை யோதுவதிற் பேரன்புகொண்டிருத்தலை விளக்கியவாறு. கீழ்ச்செய்யுளிற் கருவாபுரித்தேசிகன் என்றதை, இச்செய்யுளின் முதலடியால் விளக்கினார். வாஜி என்ற வடசொல்லின் விகாரமாகிய குதிரையையுணர்த்தும் வாசியென்ற சிறப்புப்பெயர்-இங்கே பொதுப்பெயராய் வாகனமென்றமாத்திரமாய் நின்றது. இயல்பினால், பெருகியது என இறந்தகாலத்தாற் கூறினார் ; காலவழுவமைதி. காசி - கங்கைக்கரையிலுள்ளதொரு சிவதலம் ; இது, முத்திதரும் நகரம் ஏழனுள் ஒன்று. (ருச)

55. பெருங்காலெறியநடுங்குங்கொடியினிற்பீழையுற்றுக்
கருங்காலதூதரிற்றீயோர்நலியக்கருத்தழிந்தேன்
வருங்காலநஞ்சுண்டமரரைக்காத்தவரதமுத்தி
தருங்காலதண்டமிழ்த்தென்கருவாபுரிச்சங்கரனே.

(இ - ள்.) வரும் - (பாற்கடலினின்று) தோன்றிய, கால நஞ்சு - ஆல காலவிஷத்தை, உண்டு - அமுதுசெய்து, அமரரை காத்த - தேவர்களதுபயத்தை நீக்கிப் பாதுகாத்த, வரத - வரதனே! முத்தி தரும் கால - (நம்பிச்சரணமடைந்தவர்க்கு) மோக்ஷலோகத்தைத் தருகின்ற திருவடிகளையுடையவனே! தண் தமிழ் - குளிர்ந்த [இனிய] தமிழ்ப்பாஷை வழங்குகின்ற, தென் கருவாபுரி - தெற்கின்கணுள்ள திருக்கருவை யென்னுந் தலத்தி லெழுந்தருளியுள்ள, சங்கரனே - சிவபெருமானே!—கருங் கால தூதரின் தீயோர் - கருநிறமுள்ள யமதூதரைக்காட்டிலும் கொடியவர்களாகிய சிலர், நலிய - (என்னை) வருத்த, (அதனால்),—பெருங் கால் எறிய நடுங்கும் கொடியினில் - பிரசண்டமாருதம் வீசும்போது மிகவும் அலைகின்ற கொடியைப்போல, பீழை உற்று - பெருந்துன்பமடைந்து, கருத்து அழிந்தேன் - மனங்கலங்கிப்போனேன்.

அக்கலக்கத்தைநீக்கி நற்கதிபெறுமாறு உடனே திருவருள்புரியவேண்டுமென்பது, குறிப்பு. உண்ணவொண்ணாத நஞ்சை உண்டு அமரரைக்காத்தருளிய உனக்கு என்னைக் காத்தருளுதல் ஒரு பொருளன் றென்பது, மூன்றமடியில் விளங்கும். கருங்காலதூதரின் தீயோ ரென்றது - நற்கதியிற்செல்லவொட்டாது எப்பொழுதும் தங்கட்காகவே உழைக்கும்படி கால்கட்டித் தம்வசப்படுத்துகின்ற மனைவி மக்கள் முதலியோரை யென்னலாம்: இவர்களை யமதூதரினுந் தீய ரென்றது - பிரதிகூலராய் அந்திமகாலத்தில்மாத்திரம் வந்து வருத்துகின்ற அந்த யமபடர்கள்போலவல்லாமல் இவர்கள் அநுகூலர்போல எப்போதும் உடனிருந்து தம்மைக் கெடுத்தலா லென்க. ஆகவே, தூதரின் என்னுமிடத்து ஐந்தனுருபு - உறழ்பொருவாம்; உவமப்பொருவன்று. வரதன் - (அடியார்கட்கு வேண்டிய) வரத்தைக் கொடுக்குங் கடவுள். பாற்கடலினின்று தோன்றிய நஞ்சத்தைக் கண்டு அஞ்சிச் சரணமடைந்த தேவர்கட்கு அபயமளித்து அந்நஞ்சையுண்டு அத்தேவர்களது வேண்டுகோளை நிறைவேற்றின இறைவ னென்பார் 'வருங்காலநஞ்சுண்டு அமரரைக்காத்த வரத' என்றார். காலம் - ஹாலாஹலம் என்ற வடசொல்லின் திரிபாகிய ஆலகாலம் என்ற சொல்லின் குறை; நாமைகதேசோநாமக்ரஹணமாம்; இனி, நஞ்சு கருநிறமுடையதாயிருக்கு மென்ற காரணம் பற்றி, 'காலநஞ்சு' என்றுமாம்; காலம்=காளம் - கறுப்பு. இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. (௫௫)

56. சங்கக்குழையனைத்தென்கருவாபுரித்தாணுவைவான்
கங்கைச்சடையனைப்பாடல்செய்யாதுகவிப்புலவீ
ரங்கச்சுமைகொண்டெழுநான்குகோடியழிநரகப்
பங்கத்தில்வீழ்வென்னேபொன்றுவார்தமைப்பாடுவிரே.

(இ - ள்.) கவி புல்வீர் - கவிபாடுகின்ற புலவர்களே!—சங்கம் குழையனை - சங்கினாற்செய்த குழையென்னுங் காதணியை யுடையவனும், வான் கங்கை சடையனை - ஆகாசகங்காநதி தங்கப்பெற்ற சடையையுடையவனுமாகிய, தென் கருவா புரி தாணுவை - தெற்கின்கணுள்ள திருக்கருவையி லெழுந்தருளிய சிவபெருமானை, பாடல் செய்யாது - கவிபாடித் துதியாமல்,—அங்கம் சுமை கொண்டு - உடம்பாகிய பாரத்தை வைத்துக்கொண்டு, எழு நான்கு கோடி அழி நரகம் பங்கத்தில் வீழ - இருபத்தெட்டுக்கோடிக் கணக்கான அழிதற்குஉரிய நரகச்சேற்றில் வீழ்ந்துவருந்தும்படி, என்னோ - என்னகாரணத்தினாலோ, பொன்றுவார்தமை - (உங்களைப்போலவே) அழிந்தொழியுந்தன்மையுள்ளவர்களை, பாடுவிர் - பாடித்துதிக்கின்றீர்கள்? (எ - று.)

எல்லையில்லாத பரமைசுவரியமுடையவனும் அநந்தகல்யாணகுணகணநிதியும் என்றும்அழியாது நிலைத்துநிற்கும் பரம்பொருளும் கவிபாடித்துதித்தமாத்திரத்தில் மீளாவுலகமாகிய முத்தியுலகத்தைத் தந்தருள்பவனுமாகிய சிவபெருமானைக் கவிபாடித்துதியாமல், நிலையில்லாத செல்வத்தையும் அகங்காரம் மமகாரம் முதலிய இழிகுணங்களையு முடையவரும் வெகுவிரைவில் நசிக்குந்தன்மையருமான அற்பரைக் கவிபாடித்துதித்தலால் நீங்கள் உங்கட்குமுன்னமேயுள்ள நிலையையும்இழந்து அதோகதியடைவதேயன்றிப் பின் ஓர்பயனையும் பெறுதல் இயலாது ஆதலால், அங்ஙனஞ்செய்யலாகாது என்று மானிடம் பாடுகின்ற உலகத்தார்க்கு உபதேசித்தவாறு. வீழப்பொன்றுவார்தமை என்று இயைத்துப் பொருளுரைப்பினுமாம். சங்கக்குழையன் - "சங்கவெண்டோடுடையன்." தாணு - ஸ்தாணு; எப்போதும் அழியாதுநிலைநிற்பவனென்று சிவபிரானுக்குக் காரணக்குறி. பொன்றுவார்தமைப் பாடுவீர் என்றது - தங்களைப்பாதுகாத்துக்கொள்ள வகையின்றி அழிந்துவருந்துகின்ற அவர்கள் உங்களை எவ்வாறு பாதுகாக்கப்போகின்றார்களென்ற கருத்தைத் தரும். இனி, பொன்றுவார்தமை - என்றும்அழியாத சிவபிரான்போலன்றி இடையே அழிந்தொழியும் மற்றைத்தெய்வங்களை யெனினுமாம். எழுநான்குகோடிஅழி நரகம் - மிக்கபெரும்பாவங்களைச் செய்தோர் சென்று சேர்வதற்கென்று ஏற்பட்ட இருபத்தெட்டுக்கோடி கொடுநரகங்கள்; அவை - கோரம், கீழ்க்கோரம், அதிகோரம், கோரதரம், கோரரூபம், தாளதரம், பயாநகம், காளராத்திரி, பயோற்கடம், சண்டம், மகாசண்டம், சண்டகோலாலம், சண்டதரம், சரோருகம், சலசவதி, வீமம், வீமவீடணம், கரளம், விகரளம், குலிசம், முக்கோணம், ஐந்துகோணம், தீர்க்கதரம், பரிவர்த்துளம், மகாரௌரவம், அதிதமம், அதிசீதம், அதிவெப்பம் என்னும் இருபத்தெட்டனுள் ஒவ்வொன்றும் ஒவ்வொருகோடியாகப் பெருகு மென்பர்.

**வான்கங்கைச்சடைய னென்பதி லுள்ள கதை:**—சூரிய குலத்துத் தோன்றிய பகீரதசக்கரவர்த்தி கபிலமுனிவரது கண்ணின் கோபத்தீக்கு இலக்காய் உடலெரிந்து சாம்பராகி நற்கதியிழந்த தனதுமூதாதையரான சகரபுத்திரர் அறுபதினாயிரம்பேரையும் நற்கதிபெறுவித்தற்பொருட்டு நெடுங்கா

லந் தவஞ்செய்து கங்காநதியைத் தேவலோகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில் அதன் விசையோடுவரும் வெள்ளப்பெருக்கை ஏற்றுக்கொள் ளுதற்கு ஏற்ற வலிமை பூமிக்குஇல்லையென்ற காரணத்தால் அவ்வரசன் சிவ பிரானைப் பிரார்த்திக்க, அவன்வேண்டுகோளின்படி அப்பெருமான் அந்நதி யைச் சடைமுடியிலேற்றுப் பின்பு சிறிதுசிறிதாகப் பூமியில் விட்டருளின னென்பதாம். (ருசு)

57. பாடுவதுன்றிருநாமங்களுடொறும்பத்திசெய்து
சூடுவதுன்பொற்றிருவடித்தாமரைதொண்டுசெய்து
கூடுவதுன்னடியார்திருக்கூட்டமக்கூட்டத்துட
னாடுவதுன்னிலைகாண்கருவாபுரிநாயகனே.

(இ - ள்.) கருவாபுரி நாயகனே—!—நாள் தொறும் - தினந்தோறும், பத்தி செய்து - பக்திகொண்டு, பாடுவது - (நான்) பாடல்பாடித் துதிப்பது, உன் திருநாமங்கள் - உனது திருநாமங்களாகும்; சூடுவது - (தலைக்குஅலங் காரமாகத்) தரிப்பது, உன் திருவடி தாமரை - உனது அழகிய திருவடித்தாம ரைகளாகும்; தொண்டு செய்து - அடிமைசெய்து, கூடுவது - போய்ச்சேரு வது, உன் அடியார் திரு கூட்டம் - உனதுபக்தர்களின் திருக்கூட்டமாகும்; அ கூட்டத்துடன் - அந்தமெய்யடியார்கூட்டத்தோடு, நாடுவது - ஆராய்ச்சி செய்வது, உன் நிலை - உனதுதன்மைகளேயாகும்; (எ - று.)—காண் - முன் னிலையசை; தேற்றமுமாம்.

நான் எப்போதும் சிவபிரான் விஷயமாகவே எனதுபொழுதைப் போக் குவதனால், அவ்விறைவன் தவறாது என்மீது திருவருள்புரியவேண்டு மென் பதாம். 'நாடொறும் பத்திசெய்து' என்பதை எல்லாவாக்கியங்களோடுங் கூட்டுக. இறைவன் நிலையை, "எவனுயிர்க்குயிரா யெள்ளு மெண்ணெயும்போ லெங்கணு மிடையறாநின்றா, னெவ னனைத்துலகு மீன்று காத்தழிக்க விறை மைசான் மூவுரு வெடுத்தா, னெவன் முதலிடையீறின்றி யெஞ்ஞான்று மீறிலா மறைமுடியிருப்பான்"என்பது முதலாகக் கூறிய விடங்களிற் காண்க.

58. நாயினுந்தீயபிறவியெல்லாஞ்சென்றுநான்பிறந்து
மாயினுந்தேவர்பதவியில்வாழினும்வஞ்சமில்லாத்
தாயினுமன்புடையொப்பனைபாகநின்றாளிணைக்கீழ்
மேயினுமன்பொன்றுமேயடியேன்பெறவேண்டுவதே.

(இ - ள்.) வஞ்சம் இல்லா - வஞ்சனைக்குணமில்லாத, தாயினும் - பெற்ற தாயைக்காட்டிலும், அன்பு உடை - அன்பையுடைய, ஒப்பனை - ஒப்பனையம் மையை, பாக - வாமபாகத்திற் கொண்டிருப்பவனே! நான்—,நாயினும் தீய - (இழிந்தபிறப்பையுடையதாகிய) நாயைக்காட்டிலுங் கொடிய, பிறவி எல் லாம் - பிறப்புக்களிலெல்லாம், சென்று பிறந்து - போய்ப் பிறந்து, மாயினும் - அழிந்தாலும்,—தேவர் பதவியில் வாழினும் - தேவபதவியைப்பெற்று வாழ்ந்

தாலும், (அன்றி), நின் தாள் இணை கீழ் மேயினும் - நினது திருவடிகளின் கீழ்ப் பொருந்திவாழ்ந்தாலும், (எப்படியிருந்தாலுஞ்சரி), அடியேன் பெற வேண்டுவது - அடியேன் பெறும்படி விரும்புவது, அன்பு ஒன்றுமே - (உன் திறத்திற் கொள்ளும்) பக்தியொன்றுமேயாம் ; (எ - று.)

நான் எந்தநிலையையடைந்தாலும் உனது பக்தியொன்றையே வேண்டுவேனென்பதாம். இதனால், சிவபெருமானது விஷயமான பக்தியின்பெருமையும், அப்பக்தியினிடத்துத் தமக்குள்ள வேண்டற்பாட்டின் அருமையுந் தோன்றும். "வேண்டுவதொன்று தமியேனெப்பிறப்பும் வெந்தழல்நரகிடை விழினும், காண்டகுசிறப்பி னரம்பையர் சூழக் கற்பகநீழல் வைகிடினும், தூண்டகுசுடரே ளாநிழலமர்ந்தசோதியே கருவைநாயகனே, ஆண்டகாய் நினது திருவடிக்கமலத் தன்பெனு மழிவிலாப்பொருளே," "உத்திவாளரா முடித்த பால்வண்ணனே யுனது, பத்திவேண்டுவதன்றியே நரகிடைப்படினும்" என்றார் பதிற்றுப்பத்தந்தாதியிலும். தேவர்பதவி என்றது - அஷ்டவசுக்கள், அசுவினிதேவர்கள், ஏகாதசருத்திரர், துவாதசாதித்தியர், திக்பாலகர். என்பவர்களின் பதவி போல்வது. (நிஅ)

59. வேண்டியவேண்டியவெல்லாமெதிரும்வினையகலு
மீண்டியமுத்திப்பெருவாழ்வுசேருமிடரொழியும்
பாண்டியரேத்தக்கருவாபுரிநின்றபால்வண்ணனைப்
பூண்டிகழ்மென்முலையொப்பனைபாகனைப்போற்றினர்க்கே.

(இ - ள்.) பாண்டியர் ஏத்த - பாண்டியராசர்கள் துதிக்கும்படி, கருவாபுரி நின்ற - திருக்கருவையி லெழுந்தருளியுள்ள, பால்வண்ணனை - பால்வண்ணனென்னுந் திருநாமமுடையவனும், பூண் திகழ் மெல் முலை ஒப்பனை பாகனை - ஆபரணங்கள் விளங்குகின்ற மெல்லியதனங்களையுடைய ஒப்பனையம்மையை (இடப்)பாகத்திலுடையவனுமாகிய சிவபிரானை, போற்றினர்க்கு - வணங்கினவர்க்கு,— வேண்டிய வேண்டிய எல்லாம் எதிரும் - (தாம்) விரும்பிய எல்லாப்பொருள்களும் தாமேவந்துசேரும் ; வினை அகலும் - (பிறப்பிற்குக் காரணமான) இருவினைகளும் ஒழியும்; ஈண்டிய முத்தி பெரு வாழ்வு சேரும் - (இன்பம்) நிறைந்த வீட்டுலகத்தில் வாழ்கின்ற (என்றும் மீளுதலில்லாது நிலைத்துநிற்கின்ற) பெருவாழ்வும் கிடைக்கும் ; இடர் ஒழியும் - பிறவித்துன்பங்கள்யாவும் நீங்கும் ; (எ - று.)

திருக்கருவைச் சிவபெருமானை வழிபட்டார்க்கு இம்மைமறுமைப்பயன்கள் ஒருங்கே வாய்க்கு மென்பதாம். "செல்வமீயுஞ் சிறப்புமளித் துளத், தல்லறீர்க்கு மறிவையுதவிடும், கல்விநல்குங் கதிதரும் பொற்கிரி, வல்விலான் களவீசனை வாழ்த்தவே," "இசையுஞ் செல்வமுந் திருவு மின்பமும், அசைவிலாத பேரறிவு முத்தியும், விசையமுந் தருங் கருவைமேவினோன், திசையுடுத்தவன் சீர்படிக்கவே" என்பன பதிற்றுப்பத்தந்தாதி. வினையென்று பொதுப்படக் கூறியதனால், புண்ணியம் பாவம் என்ற இருவினையும் 'அடங்

கும்; நல்வினையும் தீவினைபோலப் பிறவியைநீக்கி மோக்ஷத்தையடைதற்குப் பொன்விலங்குபோன்று தடையாயிருத்தலால், அந்நல்வினையும் நீங்கிய பின்னரே முத்திகிடைக்கு மென்க. வேண்டிய வேண்டிய - பொருளின் பன்மை குறிக்கும் அடுக்கு: இச்சொல் - அஃறிணைப் பலவின்பாற் பெயர்.

60. போற்றிப்பணியுமடியார்பழவினைபோகவெறி
காற்றிற்சருகெனமாற்றும்பிரான்களவீசற்கன்பா
யாற்றுப்புனல்கொண்டுமஞ்சனமாட்டியலர்சொரியார்
கூற்றுக்கொதித்துவருநாளென்செய்வர்கொடியவரே.

(இ - ள்.) போற்றி பணியும் அடியார் - (தன்னைத்) துதித்து வணங்குகின்ற அடியார்களது, பழ வினை - பூர்வகர்மங்களை, எறி காற்றில் சருகு என - வீசுகின்ற பெருங்காற்றி லகப்பட்ட சருகுபோல, போக - (அவர்களைவிட்டு) ஒழியும்படி, மாற்றும் - போக்குந்தன்மையுள்ள, பிரான் - பிரபுவாகிய, களவீசற்கு—, அன்பு ஆய் - பக்திகொண்டு, ஆறு புனல் கொண்டு - ஆற்றின் தீர்த்தத்தைக் கொண்டுவந்து, மஞ்சனம் ஆட்டி - திருமஞ்சனஞ்செய்து, அலர் சொரியார் - மலர்கொண்டு அருச்சனை செய்யாதவராகிய, கொடியவர் - பாவிகள்,— கூற்று கொதித்து வரும் நாள் - யமன் சினங்கொண்டுவருகின்ற அந்திமகாலத்தில், என் செய்வர் - யாதுசெய்வார்களோ? (எ - று.)

சிவபிரானது திருவுள்ளத்திற்கு மிகவும்உவப்பாகிய அபிஷேகத்தையும் அர்ச்சனையையுஞ் செய்துவந்தவர்கள் அந்திமகாலத்தில் யமபாதையின்றி நற்கதிபெறுவ ரென்பதாம். சூறைக்காற்றி லகப்பட்ட சருகுகள் இருந்தவிடந்தெரியாது தாம் முந்திநின்ற இடத்தை விட்டு அப்பாற்சென்று விலகிவிடுதல் போல, சிவபிரானது அடியார்களின் நல்வினை தீவினைகளாகிய பழவினைகளிரண்டும் அப்பரமனதுதிருவருளால் அவ்வடியார்களிடத்தினின்று நீங்கி முறையே அவர்களது நண்பரிடத்தும் பகைவரிடத்துஞ் சென்று சேர்ந்துவிடுமென்ற நூல்துணிபைத் தெரிவித்தற்கு, 'அடியார்பழவினை எறிகாற்றிற்சருகெனப் போக மாற்றும் பிரான்' என்றார். 'ஆற்றுப்புனல்' என்றது - நல்ல நீர் என்ற கருத்தைத் தெரிவிக்கும். மஞ்சனம் - மஜ்ஜநம்: வடசொல். (சு0)

61. கொடியாடும்வெள்விடைகொன்றையிலாடுங்குலச்சுரும்பர்
முடியாடுங்கங்கைமுகமாடுமுச்சுடர்முற்றும்வெள்ளைப்
பொடியாடுமேனியாவாடுஞ்சோரிப்புலவுகமழ்
வடியாடுஞ்சூலக்கருவேசராடியமன்றிடத்தே.

(இ - ள்.) சோரி புலவு கமழ் - (பகைவரது) இரத்தத்தோடுகூடிய மாமிசம் நிறைந்து விளங்கப்பெற்றதும், வடி ஆடும் - கூர்மைபொருந்தியது மான, சூலம் - சூலமென்னும் ஆயுதத்தையேந்திய, கருவேசர் - திருக்கருவைச் சிவபிரான், ஆடிய - நர்த்தனஞ்செய்த, மன்றிடத்து - திருச்சபையில்,—கொடி - (அப்பிரானது) துவசத்திலே, வெள் விடை - வெண்மையாகிய ருஷபம், ஆடும் - அசைந்தாடும்; கொன்றையில் - (அப்பிரான் சடைமீது அணிந்துள்ள)

கொன்றைமலர்மாலையில், குலம் சுரும்பர் - கூட்டமாகிய வண்டுகள், ஆடும்—; முடி - (அப்பிரானது) சடைமுடியில், கங்கை - கங்காநதி, ஆடும்—; முகம் - திருமுகத்தில், முச் சுடர் - (சூரிய சந்திர அக்கினியர் என்னும்) முச்சுடர்களின் வடிவமாகிய மூன்றுதிருக்கண்களும், ஆடும்— ; முற்றும் வெள்ளை பொடி ஆடும் மேனி - எல்லாவிடமும் வெண்மையாகிய விபூதி நிறைந்துள்ள திருமேனியில், அரவு - (ஆபரணங்களாகிய) சர்ப்பங்கள், ஆடும்—; (எ - று.)

சிவபிரான் தாண்டவமாடுகையில், அவரைச்சார்ந்துள்ள பொருள்களெல்லாம் தாமும் கூடவே ஆடு மென்பதாம். சிவபிரானுக்கு ருஷபம் வாகனமாகவும் துவசமாகவும் அமையு மென்க. சிவபிரான் திருமார்பிலும் திருவரையிலும் திருத்தோள்களிலும் திருக்கரத்திலும், ஆரமாகவும் கச்சையாகவும் அங்கதமாகவும் கங்கணமாகவும் தரிப்பவை சர்ப்பங்களே யாதலால், திருமேனி முழுதிலும் அரவுஆடு மென்க. 'ஆடும்' என்ற சொல் ஒருபொருளிற் பலமுறை அடுக்கிவந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. முகமாடும் முச்சுடர் - இறைவனுக்குக் கண்மூன்றும் முச்சுடராம். சுரும்பு என்பது சுரும்பர்எனக் குற்றியலுகரத்துக்கு 'அர்' போலியாய் வந்தது. சொரிவது - சோரி எனக் காரணப்பெயர். (சுக)

62. மன்றிடத்தேநின்றுதாண்டவமாடுவன்வான்கயிலைக்
குன்றிடத்தேயண்டர்போற்றிடநிற்பன்குறித்துமன
மொன்றிடத்தேதன்னைத்தானாகப்பாவிப்பனுள்ளடியார்
கன்றிடத்தேயுதவுங்கருவேசன்கனல்வண்ணனே.

(இ - ள்.) கனல் வண்ணன் - நெருப்பின்சுவாலைபோன்ற செந்நிறமுடையவனும், உள் அடியார் கன்றிடத்தே உதவும் கருவேசன் - (தன்னைத்) தியானிக்கின்ற மெய்யடியார்கள் (துன்பத்தினால்) வருந்தும்போது (அவர்கட்குத்) துணைநிற்கின்ற திருக்கருவையிலெழுந்தருளியிருக்குந் தலைவனுமாகிய சிவபெருமான்,—மன்றிடத்தே - திருச்சபைகளில், நின்று - நின்றுகொண்டு, தாண்டவம் ஆடுவன் - திருநர்த்தனஞ்செய்வன்; வான் கயிலை குன்றிடத்தே - ஆகாயத்தையளாவிய திருக்கைலாயமலையினிடத்தில், அண்டர் போற்றிட நிற்பன் - தேவர்களெல்லாம் வணங்கும்படி நின்றருளுவன்; மனம் குறித்து ஒன்று இடத்து - மனமானது (ஒன்றைப்பற்றித்) தியானித்துப் பொருந்தியிருக்கின்றபோது, தன்னை தான் ஆக பாவிப்பன் - தனது உண்மையான பரஞ்சோதிவடிவத்தையே தான் தியானிப்பன்; (எ - று.)

சிவபெருமான் மன்றிடத்தில் தாண்டவமாடுதலும், கயிலைவெற்பில் நிற்பதும், தன்னைத்தானாகப்பாவித்தலும் எல்லாம் அடியார்கட்கு உதவுதற்பொருட்டேயாகு மென்பது, இச்செய்யுளின் கருத்தாம். ஒன்றானுங்குறைவின்றி எல்லாவிற்றாலும் பரிபூர்ணனான இறைவன் எவ்வாற்றாலாயினும் தன்னையுணர்ந்து உயிர்கள் ஈடேறவேண்டு மென்று நிர்ஹேதுகமாகப் பொங்குகின்ற பெருங்கருணையுடனே எல்லாத்தொழில்களையும் புரிகின்றா னென்பது, நூற்கொள்கை. ஸநகர் ஸநந்தநர் ஸநத்குமாரர் ஸநத்ஸுஜாதர் என்னுந் தேவ

ரிஷிகள் நால்வர்க்கும் தனது தவவொழுக்கத்தால் யோகஞ்செய்யும் வகையை இறைவன் உணர்த்தின னென்பது பிரசித்தம்; அவ்வாறு உணர்த்துகையில் "காரணந்து த்யேய:" என்ற வேதவாக்கியத்தின்படி காரணப்பொருள் எதுவோ அதுவே தியானித்தற்கு விஷயமாதலாலும், எல்லாப்பொருள்கட்கும் ஆதிகாரணமாகிய பரம்பொருளான தனக்குத் தியானவிஷயமாவது தன்னைப் பார்க்கிலும் வேறாக ஒன்றும் இல்லாமையாலும், 'குறித்து மனமொன்றி டத்தே தன்னைத் தானாகப் பாவிப்பன்' என்றார். இனி, இத்தொடர்க்கு - (தன் அடியார்கள்) தன்னைத்தியானிக்கும்போது ஸோஹம்பாவனையால் 'சிவோஹம்' என்று தியானிக்குமாறு திருவருள்புரிவ னென்று சிவாத்வைதமாகக் கூறுவர் ஒருசாரார். (சுஉ)

63. வண்ணங்கரியதிருமால்கழியென்புமாலிகையுந்
தண்ணங்கமலத்தயன்றலைமாலையுஞ்சாத்திமண்ணும்
விண்ணும்பொதிந்தவுகாந்தபிரளயமேவிநின்று
பண்ணொன்றுவீணைபயிலுங்களாவிற்பரஞ்சுடரே.

(இ - ள்.) களாவின் பரஞ்சுடர் - களாமரத்தின்கீ ழெழுந்தருளியுள்ள பெரியசோதிவடிவமான திருக்கருவைச் சிவபெருமான்,—கரிய வண்ணம் திருமால் - கருநிறமுடைய திருமாலினது, கழி என்பு மாலிகையும் - இறந்த உடம்பினின்று (எடுத்துத்தொடுத்த) எலும்புமாலையையும், தண் அம் கமலத்து அயன் - குளிர்ந்த அழகிய தாமரைமலரில் வசிக்கின்ற பிரமதேவனது, தலை மாலையும் - தலைகளைக்கொண்டுதொடுத்த மாலையையும், சாத்தி - அணிந்துகொண்டு,—மண்ணும் விண்ணும் பொதிந்த - நிலவுலகுக்கும் மேலுலகுக்கும் ஒருசேரநிகழ்கின்ற, உகாந்த பிரளயம் - யுகங்களின்முடிவாகிய பிரளயகாலத்தில், மேவி நின்று - (தான் ஒருவனே அழியாமற்) பொருந்தியிருந்து, பண் ஒன்று வீணை பயிலும் - இராகங்களமைந்த வீணையை (வைத்துக்கொண்டு) வாசிப்பான்; (எ - று.)

சிவபெருமான் எல்லாவுலகங்களும் அழிகின்ற கற்பாந்தகாலத்திலே பிரளயகாலந்தோறும் அழிகின்ற பிரமவிஷ்ணுக்களது தலைமாலையெலும்பு மாலைகளைத் தரித்துக்கொண்டு, எப்பொழுதும் அழியாமல் நிலைத்துநிற்கிற கடவுள் தானொருவனேயென்று விளங்குமாறு வீணைவாசித்துக்கொண்டு நிற்ப னென்பதாம். பிரளயம்முதலியன இறைவனது திருவிளையாட்டுச்செயல்களென்பது, இதனாற் போதரும். 'மண்ணும் விண்ணும் பொதிந்த உகாந்த பிரளயம்' என்றது - பிரமனுக்கு ஒருநாள் ஆகுந்தோறுந் தோன்றுகிற நைமித்திக பிரளயம்போலல்லாமல் யாவும்அழிகின்ற மகாபிரளய மென்று விளக்குதற்பொருட்டாம். உகாந்தம்=யுகாந்தம். இங்கு, யுகமென்றது - இலக்கணையால், கற்பத்தை யுணர்த்திற்று. பரஞ்சுடர் - உலகத்துத்தோன்றுகின்ற முச்சுடர்களினும் மிகவும் மேம்பட்டுத்தோன்றும் பேரொளிவடிவமான சிவபெருமான். (சுஙூ)

64. பரஞ்சுடர்முக்கட்பரமன்சதானந்தன்பற்றலர்முப்
புரஞ்சுடவாங்குபொருப்புவில்லான்பொருந்தாததக்கன்
சிரஞ்சுடக்கொய்துமுத்தீயிட்டபால்வண்ணன்றென்றிசைக்
னுரஞ்சுடத்தாளுதைத்தோன்றிருநாமங்களோதுமினே. [கோ

(இ - ள்.) பொருந்தாத - (மனத்திற்) பொருத்தமில்லாத [பகைமை பாராட்டுகின்ற], தக்கன் - தக்ஷமுனிவனது, சிரம் - தலையை, சுட - (கோபம்) வெதுப்பியதனால், கொய்து - அறுத்து, முத் தீ இட்ட - (கார்ஹபத்யம் ஆஹவநீயம் தக்ஷிணாக்நி என்னும்) மூன்றுபகுப்பையுடையதாகிய அக்கினியிலே வீழ்த்தி (யாகத்தை) யழித்த, பால்வண்ணன் - திருக்கருவைச்சிவபெருமானது, திருநாமங்கள் - திருப்பெயர்களை,— ' பரஞ்சுடர் - சிறந்தஒளிவடிவானவன், முக்கண் பரமன் - (முச்சுடராகிய) மூன்றுகண்களையுடைய உயர்ந்தவன், சதா ஆனந்தன் - ஒழிவில்லாத ஆனந்தமயன், பற்றலர் முப்புரம் சுட வாங்கு பொருப்பு வில்லான் - சத்துருக்களது திரிபுரங்களை யெரித்தொழிப்பதற்காக வளைத்த (மேரு) மலையாகிய வில்லையுடையவன், தென் திசை கோன் உரம் சுட தாள் உதைத்தோன் - தெற்குத் திக்குப்பாலகனாகிய யமன் அழியும்படி (அவனுடைய) மார்பில் திருவடியினால் உதைத்தவன்,' (என்று இவ்வாறாக), ஓதுமின் - சொல்லுங்கள்; (எ - று.)

சிவபெருமானது பலவகைத்திருநாமங்களை ஓதுமாறு உலகத்தார்க்கு அறிவுறுத்தியவாறு. சிவபெருமானது திருநாமசங்கீர்த்தநத்தாற் பெறலாகும் பயனை, "வரந்தருமிப்பார்புரக்கும் வாழ்வுதரும் விண்ணோர், தரந்தரும் பேரின்பந்தருமால் - பரந்து, துளவீசன்தேடுந் துணைத்தாட்கருவைக், களவீசனென்றுரைத்தக்கால்" என்ற திருக்கருவைவெண்பாவந்தாதிச்செய்யுளா லறிக. ஸதாநந்தன் [ஸதா + ஆநந்தன்] என்ற தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர் - தான் எப்போதும் ஆனந்தமயமாயிருப்பதோடு தன்னைச்சரணமாக அடைந்த அடியார்க்கும் அழியாப்பேரின்பமளிப்பவனென்ற பொருளைத் தரும்; இனி, ஸதாநந்தன் என்ற வடமொழித்தொடரின் விகாரமெனக்கொண்டு, சத ஆநந்தன் எனப்பிரித்து, எல்லையில்லாத ஆநந்தத்தையுடையவனென்றும் பொருள்கொள்ளலாம். இவ்வாறு பரம்பொருள் எல்லையில்லாத ஆனந்தகுணமுடையதென்பதை, தைத்திரியத்து ஆநந்தவல்லி முதலிய இடங்களிற் காணலாம். கொய்து - (வீரபத்திரக்கடவுளைக்கொண்டு) கொய்வித்து என்றபடி; ஏவுதற்கருத்தா.

**தக்கன் சிரங் கொய்த வரலாறு:**—தக்கன் - தக்ஷன். பிரமனது குமாரனாகிய இவன் தன்வேண்டுகோளின்படி தனதுமகளாய்த்தோன்றித் தாக்ஷாயணியென்றும் சதியென்றும்பெயர்கொண்ட உமாதேவியைச் சிவபிரானுக்கு மணஞ்செய்துகொடுத்தபின்பு, அப்பெருமானோடு மாறுபட்டு, அம்மகளையும் மருமகனையும் வரவழையாமல் சிவபிரானுக்கு அவிர்ப்பாகமுங் கொடாது அவமதித்துப் பெரியதொருயாகஞ்செய்கையில், உமாதேவி தான்மாத்திரம் அவ்வேள்விக்குச்சென்று அங்கு அம்முனிவன் தன்னை அலட்சியஞ்செய்து

தன்கணவனையும் பழித்தமைபற்றி அக்கினிபிரவேசஞ்செய்து தக்ஷபுத்திரியான உருவத்தை ஒழித்துவிட, அதனையறிந்து கோபங்கொண்ட சிவபெருமான் வீரபத்திரக்கடவுளை யுண்டாக்கித் தக்ஷனைத்தண்டிக்கும்படி அனுப்ப, அக்கடவுள் காளியோடும் பூதகணங்களோடுஞ் சென்று அம்முனிவனைத் தலைதுணித்து அவ்யாகத்தீயிலிட்டு அந்தயாகத்தைச் சின்னபின்னப்படுத்தினனென்பதாம். "கண்டு மற்றது வீரபத்திரனெனுங்கடவுள், கொண்டசீற்றமொடேகியே தக்கனைக்குறுகி, அண்டரோடு நீ யீசனையிகழ்ந்தனை யதனால், தண்டமீதென வாள்கொடே யவன்தலைதடிந்தான்," "அற்றதோர்சென்னி வீழுமு னிறைவ னங்கையினுற், பற்றி யாயிடையலமரும் பாவகற் பாராத், திற்றியீதெனக் கொடுத்தனன் கொடுத்தலுஞ் செந்தீ, மற்றொருர்மாத்திரைப் போதினின் மிசைந்தது மன்னோ" என்ற கந்தபுராணம் இங்குக் காணத்தக்கது. (சுச)

65. மின்கொண்டபொன்முடியாயிரமாயிரமெய்த்தொழில்கள்
பொன்கொண்டசேவடியாயிரமாயிரம்பூந்தடங்கண்
முன்கொண்டநாமங்களாயிரமாயிரமூரித்திண்டோள்
கொன்கொண்டசூலப்படைக்கருவாபுரிக்கொற்றவற்கே.

(இ - ள்.) கொன் கொண்ட - பெருமைபொருந்திய, சூலம் படை - சூலமென்னும் ஆயுதத்தை யேந்திய, கருவாபுரி கொற்றவற்கு - திருக்கருவையென்னுந் தலத்திற்குத் தலைவனாகிய சிவபெருமானுக்கு,—மின் கொண்ட பொன் முடி - ஒளிவீசுகின்ற பொன்மயமான கிரீடத்தையணிந்த தலைகள், ஆயிரம் - ஆயிரமாம்; மெய் தொழில்கள் - திருமேனியினுற்செய்யுந் தொழில்கள், ஆயிரம்—; பொன் கொண்ட சே அடி - பொன்மயமான சிவந்த திருவடிகள், ஆயிரம்—; பூ தட கண் - தாமரைமலர்போன்ற பெரிய கண்கள், ஆயிரம்—; முன் கொண்ட நாமங்கள் - (அடியவர்களால்) தியானிக்கப்படுகின்ற திருநாமங்கள், ஆயிரம்—; மூரி திண் தோள் - பெரியவலியதோள்கள், ஆயிரம்—; (எ - று.)

இங்கே ஆயிரமென்றது - அளவில்லாத தென்னும் பொருளது. அங்ஙனங் கொள்ளாவிடின், முடியாயிரம் சேவடியாயிரம் முதலியன சேராவாம். ஆகவே, அளவற்ற திருமுடி முதலியவற்றை யுடையவன் இறைவனென்பதாம். அபரிமிதமாய் அற்புதமாயிருக்கிற மகாஞானமும் மகாசக்தியு முடையவனென்பது, தேர்ந்தபொருள். சிவபெருமான் சகலஇந்திரியங்களாலேயாதல் ஓரிந்திரியத்தாலேயாதல் திருமேனியாலேயாதல் திவ்யாத்மஸ்வரூபத்தாலேயாதல் எல்லாவற்றையும் எப்போதும் எல்லாவிதத்திலும் அறிகின்றவனும் செய்கின்றவனுமாக விருக்கின்றானென்பது, கருத்து. இங்ஙனமேயன்றி, அனேகந்திருமுடிகள் அனேகந்தொழில்கள் அனேகந்திருவடிகள் அனேகந்திருக்கண்கள் அனேகந்திருத்தோள்கள் என்ற இவற்றையுடையான் சிவபெருமானென்பது, கருத்தன்று. அளவில்லாதகண்முதலியவற்றையுடையவன் எப்படி அளவில்லாத காட்சி முதலானவற்றை உடையவனுயிருப்பனோ

அப்படியே சிவபிரானும் என்று எடுத்துக்காட்டியபடியாம். இங்குச் சிலர், உலகமெல்லாம் சிவபெருமானுடைய ஸ்வரூபமாதலால், உலகத்திலுள்ளோருடைய முடி தோள் முதலியவையெல்லாம் அவனுடையனவா மென்று கருத்துக் கூறுவர்; அது, பலவிதத்திலும் பொருந்தாதெ‌ன அறிக. இது சிவபிரானுடைய திவ்யாத்மஸ்வரூபங் கூறியபடி.

கொன் - பெருமையுணர்த்தும் உரிச்சொல்; இனி, கொன் கொண்ட சூலப்படை - (பகைவர்க்கு) அச்சத்தைத் தன்னிடத்திற் கொண்ட சூலாயுதம் என அச்சப்பொருளதாகவும் பொருள்கூறலாம்; "அச்சம் பயமிலி காலம் பெருமையென், றப்பால் நான்கே கொன்னைச்சொல்லே" என்றது, தொல்காப்பியம். பொன்முடி யென்றதை அன்மொழித்தொகையாகவாவது, அடையடுத்த ஆகுபெயராகவாவது கொள்ளவே, சிரசை யுணர்த்தும். இனி, பொன் என்பதை, அதனாலாகிய கிரீடத்துக்குக் கருவியாகுபெயரெனக் கொண்டு, முடி - சிரசு எனினுமாம். முன் - முதனிலைத்தொழிற்பெயர். முன் கொண்ட - ஆதிதொடங்கிஏற்பட்ட என்றுமாம். நாமங்களாயிரம் - ஸஹஸ்ரநாமங்கள். (சுரு)

66. கொற்றக்கவிகைநிழற்றப்பொதுவறக்கோனடத்தி
முற்றப்புவனம்புரப்பவரேனுமுகலிங்கர்தாஞ்
சற்றுத்திருவருள்கோடினரேலத்தகுதிகெட்டுப்
பற்றற்றகூழுங்கிடையாதிரப்பரிப்பாரிடத்தே.

(இ - ள்.) புவனம் முற்ற - நிலவுலகம்முழுவதையும், கொற்றம் கவிகை நிழற்ற - வெற்றிக்குஅறிகுறியான (தமது) குடையானது நிழலைச் செய்ய, பொது அற - (பலஅரசர்க்குப்) பொதுவென்னுந்தன்மை நீங்க [ஏகசக்ராதிபதியாக], கோல் நடத்தி - தனிச்செங்கோல் செலுத்தி, புரப்பவர் ஏனும் - அரசாளுபவராயினும்,—முகலிங்கர் - திருக்கருவைச்சிவபெருமான், தாம்—, திருஅருள் சற்று கோடினர் ஏல் - திருவருள் சிறிதுமாறினராயின், அ தகுதி கெட்டு - (அவ்வரசர்கள்) அந்தத் தமது பெருமை யழிந்து, பற்று அற்ற கூழும் - பருக்கையில்லாத கூழும், கிடையாது - கிடைக்கப்பெறாமல், இ பாரிடத்தே - இந்தப்பூமியில், இரப்பர் - இரந்துதிரிவார்கள்; (எ - று.)

சிவபெருமானது திருவருள் சிறிதுகோடினாலும், அதன்பயனாக, ஒரு நாயகமாயோடவுலகுடனாண்ட சக்கரவர்த்திகளும் மிக்கவறுமையடைவரென்பதாம். சிவபெருமானது திருவருள் கோடினமாத்திரத்தில் இவ்வாறு ஆவரென்றதனால், அப்பிரானது திருவருள் சிறிதுதோன்றியமாத்திரத்தில் மிக்க வறியவரும் பெருஞ்செல்வச்சிறப்புப்பெற்று ஏகசக்ராதிபதியாக இந்நிலவுலகமுழுவதையும் ஆட்சிபுரிவரென்பது, அருத்தாபத்தியாற் பெறப்படும். புவனம் முற்றவும் புரப்பவர் இப்பாரிடத்தே யிரப்பர் என்றதனால், தாம் முன்பு செல்வராய் வாழ்ந்தவிடத்திலேயே அந்நிலைமைமாறி இரப்பரென அவர்கட்கு நேரும் இழிவை விளக்கியவாறு. கூழ் - மிகத்தாழ்ந்தஉணவு; அதனை இரப்பர் எனவே, மிகவுந்தாழ்ந்தவரிடத்தும் போய் இரப்பரென்பது பெறப்படும்.

67. பாரிடஞ்சூழ்வரத்தான்பலிகொண்டுந்தன்பாதமலர்
சேரடியார்க்குப்பெருவாழ்வளிப்பன்றிரைக்கடலிற்
கார்விடந்தானுண்டும்போற்றும்புத்தேளிர்கடும்பசிநோய்க்
காரமுதூட்டுவன்றென்கருவாபுரியாரியனே.

(இ - ள்.) தென் கருவா புரி ஆரியன் - தெற்குத்திசையிலுள்ள திருக்கருவைநகரி லெழுந்தருளியுள்ள சிவபெருமான்,—பாரிடம் சூழ் வர - பூதகணங்கள் (தன்னைச்) சுற்றிவர, தான் பலி கொண்டும் - தான் பிச்சையெடுத்தாலும்,—தன் பாதம் மலர் சேர் அடியார்க்கு - (தனது) திருவடித்தாமரை மலரை (நம்பிச்) சரணமடைந்த மெய்யடியார்கட்கு, பெரு வாழ்வு அளிப்பன் - மிக்க செல்வவாழ்க்கையை ஈந்தருளுவன்; (அவ்வாறே), திரைகடலில் கார் விடம் தான் உண்டும் - அலைகளையுடைய பாற்கடலில்தோன்றிய கருநிறமான ஆலாகலமென்ற விஷத்தைத் தான் உண்டாலும்,—போற்றும் - (தன்னைப்) புகழ்ந்து துதித்த, புத்தேளிர் - தேவர்களது, கடு பசி நோய்க்கு - கொடிய பசியாகிய நோயைத் தீர்ப்பதற்கு, ஆர் அமுது ஊட்டுவன் - அருமையாகிய தேவாமிருதத்தை உண்பிப்பன்; (எ - று.)

தான் வருந்தியாயினும் தன்னைநம்பிச் சரணமடைந்தாரைப் பாதுகாக்குஞ் சிவபிரானது கருணைத்திறத்தை வியந்தவாறு. 'தான்பலிகொண்டவன் தன் திருவடிகளைச் சேர்ந்தார்க்குப் பெருவாழ்வளிப்பன்', 'தன்பசிநோய்க்குக் கார்விடமுண்டவன் தன்னைப்போற்றும் புத்தேளிரது கடும்பசிநோய்க்கு ஆரமுதூட்டுவன்' என்ற வாக்கியங்களில் - மேல்நோக்கில் மாறுபாடு தோன்றுமாயினும் ஊன்றிப்பார்க்குமிடத்து இறைவனது விசித்திரசக்தியால் எல்லாம் நிகழலாமென அம்மாறுபாடு ஒழிந்திடுதலால், முரண்விளைந்தழிவணியாம். தாருகவனத்துமுனிவரது பத்தினிமாரின் கற்புநிலையைக் கெடுத்தற்காக விடசங்கமத்திருவுருவங் கொண்டபோதும், கையில் ஒட்டிக்கொண்ட பிரமகபாலம் நீங்குதற்காகப் பலதலங்களிலும் திரிந்தபோதும் சிவபெருமான் பிக்ஷாடனஞ் செய்தனனென உணர்க. வாழ்வு - வாழ்வுக்குக் காரணமாகிய செல்வத்திற்குக் காரியவாகுபெயர். ஆரியன் - ஆர்யன்; பூஜிக்கத்தக்கவன்; ஆரியநாட்டி லெழுந்தருளியிருப்பவனுமாம். (சுஎ)

68. ஆரியன்வேண்டதிருமேனிபூரித்தறமெலிந்த
சீரியன்செல்வக்கருவைப்பிரான்றிருத்தொண்டுசெய்யாப்
பூரியர்கூட்டம்புகாதன்பர்கூட்டம்புகுத்தியது
காரியங்காணெஞ்சமேபிறப்பேழுங்கடப்பதற்கே.

(இ - ள்.) நெஞ்சமே - மனமே!—ஆரியன் - ஆரியநாட்டானொருவன், வேண்ட - பிரார்த்தித்ததனால், திருமேனி பூரித்து - (தனது) திருவுடம்பு பருக்கப்பெற்று, அற மெலிந்த - (பிறகு) மிகவுந் தளர்ந்த, சீரியன் - சிறப்புடையவனாகிய, செல்வம் கருவை பிரான் - செல்வச்சிறப்புற்ற திருக்கருவைத்தலத்துச் சிவபெருமான்,—திரு தொண்டு செய்யா - (தனக்குத்) திருத்

தொண்டுகளைச் செய்யாத, பூரியர் கூட்டம் - கீழ்மக்களது கூட்டத்தில், (அடியேனை), புகாது - சேராதபடி (தடுத்து), அன்பர் கூட்டம் - (தனக்குத் தொண்டுசெய்யும்) மெய்யடியார்களது கூட்டத்தில், புகுத்தியது - சேருமாறு செய்தது,—(யான்), பிறப்பு எழும் - (வினைப்பயன்தொடரும்) எழுவகைப் பிறப்புக்களினின்றும், கடப்பதற்கு - தப்பிநற்கதிபெறுதற்கு அறிகுறியாகிய, காரியம் - செயலாகும்; (எ - று.)—காண் - தேற்றம்.

திருக்கருவைச்சிவபெருமான் அடியேனைத் தீயவருடன் கூடவொட்டாமல் தனதுமெய்யடியார்குழாத்துடன் கூடுமாறு திருவருள்புரிந்ததனால், இனி அடியேன் பிறவித்துன்பங்களொழிந்து நற்கதிபெற்று உய்வேனென்பதாம்.

முதலடியால் திருக்கருவைத்தலத்தைத் தன்னிலேயுடைய ஆரியநாட்டிலுள்ளாரொருவன் வேண்டியபோது அவனது வேண்டுகோளுக்கு இணங்கிச் சிவபெருமான் திருமேனி பூரித்தும் மெலிந்தும் காட்டினனென ஒருவாறாறு இருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது; அதன் விவரம், எமக்கு விளங்கவில்லை: (எவரேனும் எமக்குத் தெரிவிப்பாராயின், அதனை அவர்பெயருடன் அச்சிட்டு வெளிப்படுத்தி அவர்பக்கல் என்றும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம்.) 'திருவாதவூரடிகள்வேண்டச் சிவபெருமான் திருமேனிபூரித்து அருள்கூர்ந்தது:—திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் திருவாதவூரடிகளை அடிமைகொள்ளச் சிவபெருமான் அந்தணர்திருவுருவங் கொண்டெழுந்தருளியபோது என்று அறிக' என்று இச்செய்யுளின் முதலடியைக் குறித்துக் கூறினருமுளர். (சுஅ)

69. கடல்விடமுண்டிபுறங்காடரங்குகனலுருவ
மடல்விடையூர்திபுலியதளாடையழலுமிழ்வாய்ப்
படவரவாரங்கழிதலைதாரெனிற்பால்வண்ணனை
மடவரலொப்பனையெவ்வாறுசேருமனமகிழ்ந்தே.

(இ - ள்.) (சிவபிரானுக்கு),—உண்டி - உணவாவது, கடல் விடம் - பாற்கடலில் தோன்றிய ஆலாகலவிஷமாம்; அரங்கு - நடனஞ்செய்யுமிடம், புறங்காடு - சுடுகாடாம்; உருவம் - திருமேனியின்நிறம், கனல் - அக்கினியாம்; ஊர்தி - வாகனம், அடல் விடை - வலிமைபொருந்திய விருஷபமாம்; ஆடை - வஸ்திரம், புலி அதள் - புலித்தோலாம்; ஆரம் - ஆரம்முதலிய ஆபரணங்கள், அழல் உமிழ் வாய் படம் அரவு - விஷாக்கினியைக் கக்குகின்ற வாயையும் படத்தையுமுடைய பாம்புகளாம்; தார் - மாலை, கழி தலை - இறந்த (பிரமர்களது) தலைகளாம்; எனின் - என்றால், பால்வண்ணனை - (அப்படி உணவுமுதலியவற்றால் வெறுக்குமாறுஉள்ள) திருக்கருவைச்சிவபிரானை, மடவரல் - இளம்பெண்ணாகிய, ஒப்பனை - ஒப்பனைதேவி, மனம் மகிழ்ந்து - மனத்தில் திருப்திகொண்டு, எ ஆறு சேரும் - எப்படித் தழுவுவாள்? (எ - று.)

"யவ்வனமு மழகுஞ் சார்ந்த, நலம் வேண்டுமென் றிருப்பார் நாறுகுழற் கன்னிமார் நலத்தின்மிக்கார்" "கந்யா வரயதே ரூபம்", என்றபடி மகளிர் புரு

ஷனது அழகையே விரும்பி மணமகனாக வரிப்பது இயல்பு ஆதலால், உணவு உறையுள் வடிவம் ஊர்தி ஆடை ஆபரணம் என்னும் இவைகளில் ஒருவாற்றானுஞ் சிறப்புப்பெறாத சிவபெருமானை, மகளிரது நல்லிலக்கணங்களில் ஒன்றானுங் குறைவில்லாத பார்வதீதேவி எவ்வாறு விரும்பினாளோ என்று வியந்த இதனால், சிவபெருமான் வேண்டுதல் வேண்டாமை யில்லாத முழுமுதற்கடவுள் என்று துதித்தவாறு. இங்ஙனஞ் சிவபிரானைப் பழிப்பதுபோலப் புகழ்ந்த இது - வஞ்சப்புகழ்ச்சியணியின்பாற் படும்; இதனை வடநூலார் ‘வ்யாஜ ஸ்துதி’ என்பர். வேண்டுதல்வேண்டாமையில்லாதவனாகிய இறைவன் தனக்கென்று ஒன்றுமின்றி உணவுமுதலிய எல்லாவற்றையும் பிறர்பொருட்டாகவே கொள்பவனாதலின், உணவு அணிகலம் முதலியவற்றின் இழிதகைமையினால் அப்பிரானுக்குச் சிறப்புத் தோன்றுமேயன்றி இழிபு உண்டாகா தென்க. ஆரம் - மற்றையணிகலங்கட்கு உபலட்சணம்.

இமவானது புத்திரியாகப் பிறந்த உமாதேவி சிவபிரானை மணமகனாகப் பெறவேண்டுமென்று தவஞ்செய்தபோது அத்தேவியாரது தவநிலையைப் பரிசோதிக்குமாறு சிவபிரான் முதிய அந்தணவடிவங்கொண்டு சென்று அந்தப்பார்வதியைக் குறுகி, “ஆடைதோல் விடையேறுவ தணிகலமரவென்பு, கேடில்வெண்டலைமாலிகைகேழலின்மருப்பின்ன, வோடுகொள்கல மூண்பலி வெய்யநஞ்சு உலப்புற்றோர், காடதேநடம்புரியிடம் கண்ணுதற்கடவுட்கே,” “வேய்ந்துகொள்வது வெள்ளெருக்கறுகுநீர்வியன்கொன்றை, பாந்தள்நொச்சியே மத்தமென்றினையனபலவுண்டாற், சாந்தம்வெண்பொடி சூலமான்மழுத்துடிதழலங்கை, யேந்துகின்றது பாரிடஞ்சூழ்படையிறையோற்கே,” “அன்னை தாதைகேள்வடிவொடுகுணங்களிலனையானுக், கின்னவாகிய பலவளனுண்டவையெவையுந்தா, நின்னவாகவோதவம்புரிந்தெய்த்தனை நெடுந்தொல்சீர், மன்னன்மாமகட்கியைவதேயித்துணைவழக்கென்றான்” என்று சிவபிரானாகிய தன்னையே நிந்தித்துக்கூறியதும், “வேண்டுதல் வேண்டாமை யில்லதோர் விமலன்றன்னை, யீண்டுநீயிகழ்ந்தவெல்லாம் யாரையுமளிக்குமன்பு, பூண்டிடுகுறிகாணற்றாற் புகழ்ச்சியாமன்றி முக்க, ணாண்டகையியற்கையெல்லா மார்கொலோவறியகிற்பார்,” “போதனேமுதலாவுள்ளபுங்கவர் வழிபட்டேத்த, வேதமிலிறைமையாற்றல் யாவையும் புரிந்த நாதன், காதலும்வெறுப்புமின்றிக் கருணைசெய்நிலைமையேகாண், பேதைநீ யிகழ்ச்சியேபோற்பேசியதன்மை யெல்லாம்” என்று அந்தப் பார்வதீதேவியார் அதனை மறுத்துக்கூறியதும் இங்குக் காணத்தக்கன. (சுகூ)

70. மனப்பகையாகியவைவரைமாய்த்துன்வழியடியா
ரினத்துடனென்னையுமாட்கொள்வையோபண்டிகல்புரிந்த
புனத்துளவோனுங்கமலத்துவேதனும்போற்றிசெய்யுங்
கனற்றிருமேனிக்கருவாபுரியிற்கறைக்கண்டனே.

(இ - ள்.) பண்டு - முற்காலத்தில், இகல் புரிந்த - (ஒருவர்க்கொருவர்) மாறுபாடுகொண்ட, புனம் துளவோனும் - கொல்லையில்தோன்றுகின்ற திருத்

துழாயை யணிந்த திருமாலும், கமலத்து வேதனும் - தாமரைமலரில் வாழ்கின்ற பிரமதேவனும், போற்றி செய்யும் - வணங்கித் துதிக்கின்ற, கனல் திருமேனி - அனற்பிழம்பினுருவத்தையுடைய, கருவாபுரியில் கறை கண்டனே - திருக்கருவைநகரி லெழுந்தருளிய (விஷமுண்டதனாற்) கறுத்த திருக்கண்டத்தையுடைய சிவபெருமானே!—மனம் பகை ஆகிய ஐவரை - (நல்வழியிற்செல்கின்ற எனது) மனத்துக்கு (அவ்வழியிற்செல்லவொட்டாது) தடுக்கின்ற பகையாகிய பஞ்சேந்திரியங்களையும், மாய்த்து - (அவ்வாறு செய்யவொட்டாது) வலியடக்கி, உன் வழி அடியார் இனத்துடன் - உனது பழைய அடியார்களுடைய கூட்டத்தோடு, என்னையும் ஆள்கொள்வையோ - அடியேனையும் (ஒருவனாக) அடிமைகொள்வாயோ? (எ - று.)

அடியேனையும் உனதுமெய்யடியார்களுள் ஒருவனாக ஆட்கொண்டு என்னைவருத்துகின்ற பஞ்சேந்திரியங்களின் வலியை யொடுக்கி அதனால் மனங்கலங்காதவாறு திருவருள்செய்து எனக்கு நற்கதியருளவேண்டுமென்று வேண்டியவாறு. இந்திரியநிக்கிரகம் பண்ணாதவர்கள் சிவனடியார் கூட்டத்திற் புகுதற்கு உரியரல்ல ரென்க. மாறுபட்ட பிரமவிஷ்ணுக்களது அம்மாறுபாட்டை யொழித்து அடிமைகொண்டதுபோலவே, ஐம்பொறிகளால் மாறுபட்ட மனத்தையுடைய அடியேனையும் அம்மாறுபாட்டை யொழித்து ஆட்கொள்ளவேண்டு மென்ற குறிப்பு - விளிக்குக் கொடுத்துள்ள அடைமொழியாற் பெறப்படுதலால், இது - கருத்துடையடைமொழியணியாம். அஃறிணையாகிய ஐம்பொறிகளை 'ஐவர்' என உயர்திணையாற் கூறியது - செறலினால் வந்த திணைவழுவமைதி. (எ0)

71. கறைகொண்டசூலத்தலையிலுங்கையிற்கபாலத்திலு
நறைகொண்டபங்கயப்பொற்றாளிணையிலுநாங்கள்கண்டோ
மறைகொண்டதென்கருவைப்பெருமானுக்குமாயவனார்
நிறைகொண்டபேருடலும்பசுஞ்சோரியுநீள்கண்ணுமே.

(இ - ள்.) மறை கொண்ட - வேதங்களினாற் (பரம்பொருளென்று) கூறப்படுகின்ற, தென் கருவை பெருமானுக்கு - தெற்கின்கணுள்ள திருக்கருவைச் சிவபெருமானுக்கு,—கறை கொண்ட சூலம் தலையிலும் - இரத்தக்கறை பொருந்திய சூலாயுதத்தின் நுனியிலும், கையில் கபாலத்திலும் - கையிலொட்டிக்கொண்ட பிரமகபாலத்திலும், நறை கொண்ட பங்கயம் பொன் தாள் இணையிலும் - தேன்பொருந்திய தாமரைமலர்போன்ற அழகிய இரண்டு திருவடிகளிலும், (முறையே),—மாயவனார் - மாயையையுடைய திருமாலினது, நிறை கொண்ட பேர் உடலும் - உறுதிபொருந்திய பெரிய உடம்பையும், பசு சோரியும் - பச்சை [புது] இரத்தத்தையும், நீள் கண்ணும் - நீண்ட கண்ணையும், நாங்கள் கண்டோம்—; (எ - று.)

சிவபெருமானது திருக்கையிலேந்திய சூலத்தின் நுனியில் திருமாலினுடம்பும், கையிலுள்ள பிரமகபாலத்தில் திருமாலின் இரத்தமும், திருவடிகளில் திருமாலினது கண்ணும் பொருந்தியிருத்தலைக் கண்டோமெனச் சென்று

இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோளாம்; முறைநிரனிறையணி யெனவும்படும். இதனால், மும்மூர்த்திகளுள் முதல்வனென்று சிலராற்கருதப் படுகின்ற திருமாலுக்கு முதன்மை சிறிதுமில்லை யென்று நிரூபித்தவாறு.

சூலத்தலையில் மாயவனார்பேருடல் கண்டோ மென்றது - பாற்கடல் கடைந்தகாலத்தில் மத்தாகிய மந்தரமலை அழுந்தாவண்ணம் கூர்மாவதாரங் கொண்டு அதனைத் தாங்கி அதனினின்று எழுந்த அமுதத்தைத் திருமால் தேவர்கட்குப் பகிர்ந்துகொடுத்தபிறகு, அவ்வாமை கடல்களெல்லாவற்றையுங் கலக்கி உலகத்துயிர்களைப் புசித்து அழிக்கத்தொடங்கியபோது, அதுகண்டு அஞ்சிய தேவர் முதலியோர் சிவபெருமானைச் சரணமடைய, அப்பெருமான் அத்தே வர்கட்கு அபயமளித்துத் திருமாலாகிய ஆமையினருகிற் சென்று தனது திருக்கையிலிருந்த சூலாயுதத்தினால் அதனதுஉடலைக் குடைந்து அழித்தன லாகும்.

மாயவனார் பசுஞ்சோரி கண்டது கையிற்கபாலத்தி லென்றது - சிவபிரா னது அம்சமாகிய வைரவக்கடவுள் பிரமனதுசிரத்தைக் கிள்ளிய பாவத்தாற் பிச்சையேற்கத்தொடங்கிப் பலவிடங்களிலுஞ் சென்றதுபோலவே சிவகணங் களோடும் திருமாலினிருப்பிடத்திற்குச் செல்ல, திருமால் வந்த காரணத்தை வினவ, வைரவமூர்த்தி 'பலிக்கு வந்தோம்; உனது சிரத்திலிருந்து பெருகுஞ் செந்நீரைத் தருக' என்று வேண்ட, திருமால் அதற்குஇசைந்து தனது நகத்தினால் நெற்றியிலுள்ள நரம்பொன்றைப் பிளந்து வைரவமூர்த்தியினது கைக்கபாலத்தில் இரத்தஞ் சொரியும்படி விட, அவ்விரத்தப்பெருக்கு ஆயிரம் வருடம் இடைவிடாது ஒழுகியதனு லாகும். "உன்றலைப்படுசோரிநீரை யுகுத்தியென்ன நகத்தினால், தன்றனெற்றிபிளந்து சோரிதனைப் பொழிந்திட நம்பிரான், வென்றிசேரயனார் பெருஞ்சிரமீதி லேற்றன னூறுநூ, றென்று கூறிடு மாண்டுசெல்ல விளைத்து மாயன் விழுந்தனன்" என்பது கந்தபுரா ணச்சுருக்கம். சிவபிரான் சேவடியில் நீள்கண் கண்ட வரலாறு, கீழ்க் கூறப் பட்டது. (எக)

72. நீளமடுத்ததடந்தோடிசையைநெருங்கச்சக்ர
வாளமடுத்துச்சடைக்காடுசூழ்வரமாதுமையா
டாளமடுப்பச்சதுமறைபோற்றச்சரணமண்ட
கோளமடுப்பநடிக்குங்கருவைக்கொழுஞ்சுடரே.

(இ - ள்.) கருவை கொழுஞ் சுடர் - திருக்கருவையி லெழுந்தருளிய பெருஞ்சோதிவடிவாகிய சிவபிரான்,—(தனது), நீளம் அடுத்த தட தோள் - நீட்சிபொருந்திய பெரிய தோள்கள், திசையை நெருங்க - திக்குக்களின் எல்லையைச் சென்றுசேரவும்,—சடை காடு - சடைத்தொகுதி, சக்ர வாளம் அடுத்து சூழ்வர-சக்கரவாளமலையை யடுத்து நெருங்கிச்சூழவும்,—மாது உமை யாள் - உமாதேவி, தாளம் அடுப்ப - தாளங்கொட்டவும், சதுமறை போற்ற - நான்கு வேதங்களும் வணங்கித்துதிக்கவும்,—சரணம் - ஒரு திருவடி, அண்ட

கோளம் அடுப்ப - உலகவுருண்டையின் மேன்முகட்டில் நெருங்கவும், நடிக்கும் - திருநடனஞ்செய்தருளுவான்; (எ - று.)

யாவும் அழிகின்ற சர்வசங்காரகாலத்தில் இவ்வாறு சிவபிரான் நடனஞ் செய்தருளுவ னென்க. சக்ரவாளம் - ஏழு மகாத்வீபங்களைச் சூழ்ந்திருக்கின்ற ஏழுபெருங்கடல்களுக்கும் அப்பால் பதினாயிரம்யோசனை உயரமும், பதினாயிரம்யோசனைப் பரப்பு முள்ளதாய்க் கோட்டைமதில்போலச் சூழ்ந்துள்ளதொரு பெருமலை; சக்ராகாரமாக [வட்டமாக]ப் பூமியைச் சூழ்ந்திருத்தல் பற்றி, அதற்குச் சக்ரவாளமலை யென்று பெயர். ஆடுகின்ற வேகத்தினால் சடைக்காடு சக்கரவாளமலையைச் சூழு மென்க. இச்செய்யுளினால், சர்வசங்கார காலத்தில் சிவபெருமானது நடனமூர்த்தத்தின் திருமேனிப்பருமை விளங்கும். ஒருதிருவடி அண்டகோளத்தின் மேன்முகட்டை யெட்டு மென்றதனால், இது, ஊர்த்துவதாண்டவத்தைச் சுட்டுமென்க; அன்றி, அண்டகோளம் என்பது உலகவுருண்டையின் கீழ்முகட்டைக் குறிக்கு மென்பாரு முளர்.

73. சுடர்கின்றமண்டலமென்னுமுக்கோணமுந்தொல்விசும்பும்
படர்கின்றசோதிக்கருவைப்பிரான்பொற்பதம்பணிந்தார்
குடருந்தசையுங்குருதியுமென்புங்குவிந்தவிந்த
வுடலென்றபாரஞ்சுமவார்கண்மீண்டிவ்வுலகில்வந்தே.

(இ - ள்.) சுடர்கின்ற - ஒளிவீசுகின்ற, மண்டலம் என்னும் - மண்டலங்களென்கிற, முக் கோணமும் - (சூரியன் சந்திரன் அக்கினி என்ற) மூன்று வட்டங்களிலும், தொல் விசும்பும் - பழமையான ஆகாசத்திலும், படர்கின்ற - சென்றுபரவுகிற, சோதி - ஒளிவடிவமான, கருவை பிரான் - திருக்கருவைச் சிவபெருமானது, பொன் பதம் - அழகிய திருவடிகளை, பணிந்தார் - வணங்கினவர்கள்,—மீண்டு - மறுபடியும், இ உலகில் வந்து - இவ்வுலகத்திற் பிறப்பெடுத்து, குடரும் - குடலும், தசையும் - சதையும், குருதியும் - இரத்தமும், என்பும் - எலும்பும், குவிந்த - சேர்ந்தசேர்க்கையினா லுண்டாகிய, இந்த உடல் என்ற பாரம் - இந்த உடம்பென்னுஞ் சுமையை, சுமவார்கள் - சுமக்கமாட்டார்கள்; (எ - று.)

திருக்கருவைச் சிவபெருமானது திருவடியிற் சரணமடைந்தவர்கள் மீண்டு பிறத்தலில்லாமல் முத்தியடைவ ரென்பதாம். முதலிரண்டடிகளால், சூரிய சந்திர அக்கினிய ரென்னும் மும்மண்டலங்களிலும் அவற்றிற்கு இடங்கொடுக்கின்ற ஆகாசத்திலும் விளங்குகின்ற சிவபெருமானது ஒளிவடிவமான திருமேனியின் தன்மையை விளக்கினார். மூன்றாமடி - மனிதருடம்பின் இழிவை விளக்கும்; இதனை "என்பினைநரம்பிற்பின்னி யுதிரந்தோய்த் திறைச்சிமெத்திப், புன்புறந்தோலைப்போர்த்து மயிர்புறம்பொலிய வேய்ந்திட், டொன்பது வாயிலாக்கி யூன்பயில்குரம்பை" என்ற சிந்தாமணியோடு ஒப்பிடுக. இவ்வாறு உடம்பினிடத்தில் அருவருப்புத்தோன்றக் கூறியது, இழிப்புச்சுவையின்பாற்படும். பஞ்சபூதங்களுள் ஆகாயம் முதலிற்

படைக்கப்பட்ட பூத மாதலால், 'தொல்விசும்பு' என்றார். குடர்=குடல்: லகரத்துக்கு ரகரம் போலியாய் வந்தது. தசை=சதை: இலக்கணைப்போலி. குவிந்து அவிந்த என்று பிரித்து - குடல்முதலியவை திரண்டு அழியுந்தன்மையதான உடல் என்று உரைப்பினுமாம். (எங)

74. உலகத்தி லுள்ளமனைவாழ்வுசுற்றமுறுபுதல்வ
ரலகற்றசெல்வந்தொலையாதநீணிதியாயவெல்லா
மிலகுற்றமின்னெனநில்லாதுபோய்விடுமென்பதெண்ணித்
திலகத்திருநுதலொப்பனைபாகனைச்சிந்தியுமே.

(இ - ள்.) (நிலவுலகத்தவர்களே! நீங்கள்),—'உலகத்தில் உள்ள - பூமியிற் பொருந்திய, மனை - வீடும், வாழ்வு - இல்லறவாழ்க்கையும், சுற்றம் - உறவினரும், உறு புதல்வர் - சிறந்த புதல்வரும், அலகு அற்ற செல்வம் - அளவில்லாத (தானியம் முதலிய) செல்வங்களும், தொலையாத நீள் நிதி - எடுக்கஎடுக்கக் குறையாத மிக்கபெருஞ்செல்வமும், ஆய - ஆகிய, எல்லாம் - எல்லாப்பொருள்களும், இலகு உற்ற மின் என - விளக்கமுள்ள மின்னல் போல, நில்லாது போய்விடும் - நிலைநில்லாமல் அழிந்துபோம்,' என்பது - என்றதன்மையை, எண்ணி - ஆலோசித்தறிந்து, (இனி அவற்றிற்காக நமது காலத்தை வீணேகழியாமல்), திலகம் திரு நுதல் ஒப்பனை பாகனை - திலகமணிந்த அழகிய நெற்றியையுடைய ஒப்பனையம்மையை இடப்பாகத்திற் கொண்ட சிவபிரானை, சிந்தியும் - தியானியுங்கள்; (எ - று.)

மனைமுதலிய பொருள்களின் நிலையில்லாமையை ஆராய்ந்தறிந்து தெளிந்து அவற்றினிடத்துப் பற்றை யொழித்து, நிலையுள்ள முத்திச்செல்வத்தைப் பெறுமாறு திருக்கருவைச்சிவபிரானைத் தியானியுங்களென உலகத்தார்க்கு உணர்த்தியவாறு. "பெருஞ்செல்வம்—எல்லிற், கருங்கொண்மூவாய்திறந்த மின்னுப்போல்தோன்றி, மருங்கறக்கெட்டுவிடும்" என்றார் நாலடியாரிலும். மனை - இடவாகுபெயராய், மனைவியையுங் குறிக்கும். ராஜாங்கம் மக்கள் சுற்றம் பொன் மணி நெல் வாகனம் அடிமை என்ற இவை - அஷ்டைசுவரியங்களாம். இவற்றுள், கூறியன போக மற்றவற்றை 'அலகற்ற செல்வம்' என்றதனாற் குறித்தார். நிதி - புதையல்; வடமொழி. (எச)

75. சிந்தித்துருகியுருகியெப்போதுநின்சேவடியை
வந்தித்திருப்பதோர்வாழ்வளித்தாய்மறைவேதனுக்குஞ்
சந்தித்திடற்கெளிதோவிந்தவாழ்வுதழைக்குஞ்செவ்வா
னந்திப்பிறைமுடியோய்கருவாபுரியாள்பவனே.

(இ - ள்.) தழைக்கும் - செழித்துள்ள, செம் வான் - செவ்வானத்தையுடைய, அந்தி - மாலைக்காலத்துத் தோன்றுகின்ற, பிறை - பிறைச்சந்திரனை, முடியோய் - சடைமுடியிலுடையவனே! கருவா புரி ஆள்பவனே - திருக்கருவைநகர்க்குத் தலைவனே!—எ போதும் - எக்காலத்திலும், நின் சே அடியை - உனது சிவந்த திருவடிகளை, சிந்தித்து - தியானித்து, உருகி உருகி - மனம்

நெகிழ்ந்துகரைந்து, வந்தித்து இருப்பது - வணங்கியிருப்பதாகிய, ஓர் வாழ்வு-ஒப்பற்ற வாழ்வை, அளித்தாய் - (அடியேனுக்கு நீ) கொடுத்தருளினாய்; இந்த வாழ்வு - இந்தப் பாக்கியமானது, மறை வேதனுக்கும் - (தனது நான்குமுகங்களினாலும் நான்கு) வேதங்களை எப்போதுங் கூறிக்கொண்டிருக்கிற பிரம தேவனுக்கும், சந்தித்திடற்கு-கிடைத்தற்கு, எளிதோ-சுலபமானதொன்றோ? [மிகவும் அருமையான தென்றபடி]; (எ - று.)

அடியேனிடத்துக் காரணமின்றி யெழுந்த நினது பெருங்கருணையினால் நினது திருவடியை இடையீடின்றி எப்போதுந் துதிக்கின்ற பெருவாழ்வை எனக்கு அளித்தருளினாய்; இப்பேறு பிரமனுக்குங் கிடைத்தற்கரியதாமென்றவாறு. சிவபெருமானது திருவடியைச் சிந்தித்து வணங்கி வாழ்பவரது பேற்றுக்குப் பிரமனதுவாழ்வும் நிகரன்றென்பது, தொனிக்கும். இவ்வாறு சிற்சிலரிடத்துமாத்திரம் சிவபெருமான் காரணமின்றி அருள்புரியக் காரணம் - நிரஹங்காரராயிருப்பதும், மற்றோரிடத்துப் புரியாததற்குக்காரணம் - அவ்வாறில்லாமையுமா மென்பர். உருகி உருகி என்ற அடுக்கு - தொடர்ச்சியாய் எழுகின்ற அன்பின்பெருக்கைப் புலப்படுத்தும். (எரு)

76. பவக்கடல்வீழ்ந்துதடுமாறிவேறொருபற்றுமின்றி
யவத்தினினீந்தித்தளர்கின்றதீயனுக்கம்பியெனத்
தவத்துறைவோர்தொழுந்தாள்காட்டிமுத்தித்தடங்கரைமேற்
றுவக்கறவேற்றுவையோகருவாபுரித்தூயவனே.

(இ - ள்) கருவாபுரி தூயவனே - திருக்கருவையிலெழுந்தருளிய பரிசுத்தமூர்த்தியே!—பவம் கடல் - பிறவியாகிய சமுத்திரத்தில், வீழ்ந்து - விழுந்து, தடுமாறி - அலைந்து, வேறு ஒரு பற்றும் இன்றி - வேறோராதாரமுமில்லாமல், அவத்தினில் நீந்தி - வீணாக நீந்தி [பயனில்லாமல் உழைத்து], தளர்கின்ற - சோர்வடைகின்ற, தீயனுக்கு - தீக்குணமுடைய எனக்கு, தவத்து உறைவோர் தொழும் தாள் - தவஞ்செய்கின்ற முனிவர்கள் வணங்குகின்ற (உனது) திருவடியை, அம்பி என - மரக்கலமாக, காட்டி - கொடுத்து, முத்தி தட கரை மேல் - மோக்ஷமாகிய பெரிய அக்கரையில், துவக்கு அற - (பிறவித்) தொடர்ச்சி யறும்படி, ஏற்றுவையோ - (என்னைக்) கரையேறச் செய்வாயோ? (எ - று.)

கடலில்வீழ்ந்தவர் மரக்கலத்தின்உதவியினாற் கரைசேர்தல்போலப் பிறவியில்வீழ்ந்த எனக்கு நினதுதிருவடியைத் துணையாகத் தந்து முத்தியிற் சேர்க்கவேண்டு மென்பதாம். "அறவாழியந்தணன்தாள் சேர்ந்தார்க்கல்லாற், பிறவாழிநீந்தலரிது," "பிறவிப்பெருங்கடல்நீந்துவர்நீந்தார், றிறைவனடிசேராதார்" என்ற திருக்குறளும், "பிடித்தேன்பிறவிக்கடனீந்தப் பெரியபுணையாவுனதடியை" என்ற பதிற்றுப்பத்தந்தாதியும் இங்கு நோக்கத்தக்கன. காரணகாரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலால் பிறவி 'கடல்' எனவும், கடவுளருளாற் பிறப்பற்று முத்திபெறவேண்டுதலால் அக்கடவுளது அடி

'அம்பி' எனவும் கூறப்பட்டன. தாளுக்கு 'தவத்துறைவோர் தொழும்' என்று அடைமொழி கொடுத்ததற்கு ஏற்ப, காற்றுமுதலியவற்றாற் கவிழ்ந்து தன்னை யடைந்தவர்களை அலையவிடத்தக்க மற்றைப்புணைகளினும் வேறுபாடு உடையதாக அம்பியைக் கருதுக. பிறவியைக் கடலாகவும், இறைவனது திருவடியை மரக்கலமாகவும், முத்தியை அக்கரையாகவும் கூறியது - முற்றுருவக வணி. இறைவனது திருவடிகளைத் தியானியாமல் இங்குச் செய்கின்ற மற்றைத்தொழில்கள்யாவும் பயன்படாமலிருத்தலோடு பின்னுந் தீமைக்கே காரணமா மென்பார், 'அவத்தினில்நீந்தித் தளர்கின்ற நீயன்' என்றார். (எசு)

77. தூயபங்கேருகன்செவ்வாயுனது துரகபந்தி
பாயொலிப்பாற்கடலம்புபெய்தூணிவன்பாதலங்கள்
சேயொளிமாமணிப்பொற்பணிப்பெட்டகந்தென்கருவை
நாயகநின்புகழாரேயறிந்துநவிலுவரே.

(இ - ள்.) தென் கருவை நாயக - தெற்குத்திசையின்கணுள்ள திருக்கருவாபுரிக்குத் தலைவனே! — தூய பங்கேருகன் - பரிசுத்தனாகிய தாமரை மலரில்தோன்றிய பிரமனது, செம் வாய் - செந்நிறமான வாயானது, உனது - உன்னுடைய, துரக பந்தி - குதிரைச்சாலையாகும்; பாய் ஒலி பாற்கடல் - அலைவீசுகின்ற ஓசையையுடைய திருப்பாற்கடலானது, அம்பு பெய் தூணி - அம்பை வைத்துள்ள கூடாகும் [அம்பறாத்தூணியாகும்]; வல் பாதலங்கள் - வலிய பாதாளலோகங்கள், சேய் ஒளி மா மணி பொன் பணி பெட்டகம் - சிவந்த ஒளியுள்ள சிறந்த மாணிக்கங்களிழைத்துப் பொன்னினாற்செய்த ஆபரணங்க ளிட்டுவைக்கின்ற பெட்டியாகும்; (இவ்வாறிருப்பதனால்), நின் புகழ் - உனது கீர்த்தியை, ஆரே - எவர்தாம், அறிந்து நவிலுவர் - உள்ளபடி அறிந்து சொல்பவர்? (எ - று.)

திரிபுரசங்காரகாலத்தில் சிவபெருமானுக்கு நான்குவேதங்களும் குதிரைகளாதலால் அவ்வேதங்கள் பயிலுமிடமான பிரமனது வாயைச் சிவபிரானது குதிரைச்சாலையென்றும், திருமால் அம்பாதலால் அப்பரமன் பள்ளிகொள்ளும் பாற்கடலை அம்பறாத்தூணி யென்றும், மாணிக்கங்களைத் தமதுஉச்சியிலுடைய நாகங்கள் ஆபரணங்களாதலால் அவை வாழ்கின்ற பாதாளலோகத்தை ஆபரணப்பெட்டியென்றுங் கூறினார். இச்செய்யுளில், 'வேதங்களே குதிரைகள்' என்பது முதலியனவாக இயல்பாகக்கூறவேண்டுவதை விட்டு வேறு வகையாகக் கூறியது, பிறிதினவிற்சியணியாம்; இதனை, வடநூலார் பர்யாயோக்தாலங்கார மென்பர். அநாதியான வேதங்களே குதிரைகளாகவும், திரிமூர்த்திகளுள் ஒருமூர்த்தியான திருமாலே அம்பாகவும், தம்மைத் தீண்டினாரை இறக்கச்செய்கின்ற கடுவிடமுடைய நாகங்களே ரத்நாபரணங்களாகவும் அமையப்பெற்றதனால், 'நின்புக ழாரே யறிந்து நவிலுவர்' என்றார்.

தூய என்பதைச் செவ்வாய்க்கும் அடைமொழியாக்கலாம். 'உனது' என்பதை, அம்புபெய்தூணி பொற்பணிப்பெட்டகம் என்றவற்றோடுங் கூட்டுக. பங்கேருஹம் - சேற்றில் முளைப்பது எனத் தாமரைக்குக் காரணவிடு

குறி: அதில் வாழ்பவன் - பங்கேருகன். தூணி - தூணீரம் என்ற வடசொல்லின் சிதைவு. செம்மை + ஒளி = சேயொளி. பெட்டகம் = பேடிகா: வடசொல். இடப்பன்மைபற்றி, 'பாதலங்கள்' எனப் பன்மையாக் கூறினர். ()

78. உவராழிவையத்திழிகுலத்தேவந்துதித்தவருஞ்
சிவசாதனம்பெறிற்றேவர்கண்டீர்தென்கருவைப்பிரான்
றுவர்வாய்மணிநகைபங்கன்பொற்றாளைத்தொழா திருப்போ
ரெவராயினுமற்றவரேகுலத்தினிழிந்தவரே.

(இ - ள்.) உவர் ஆழி வையத்து - உப்புக்கடல்சூழ்ந்த நிலவுலகத்தில், இழி குலத்து - தாழ்ந்த சாதியில், வந்து உதித்தவரும் - வந்துபிறந்தவரும், சிவசாதனம் பெறின் - (விபூதி ருத்திராக்ஷங்களாகிய) சிவசின்னங்களைப் பெற்றிருப்பாராஞல், (அவர்கள்,) தேவர் கண்டீர் - தேவர்களேயாவர்; துவர் வாய் மணி நகை பங்கன் - பவழம்போலச் சிவந்த வாயையும் முத்துப்போன்ற [வெண்ணிறமான] புன்சிரிப்பையுமுடைய உமாதேவியை (த் தனது இட)ப் பக்கத்திலுடையவனுகிய, தென் கருவை பிரான் - தென்கருவைச் சிவபிரானது, பொன் தாளை - அழகிய திருவடிகளை, தொழாது இருப்போர் - வணங்காமலிருப்பவர், எவர் ஆயினும் - எவ்வளவு உயர்குலத்திற் பிறந்தவராயினும், அவரே - அவர்தாம், குலத்தின் இழிந்தவர் - தாழ்ந்தகுலத்திற் பிறந்தோராவார்.

மிகவும் இழிகுலத்திற் பிறந்தவரும் சிவசாதனத்தைப் பெற்றமாத்திரத்தில் அதன் மகிமையால் தேவரைப்போல மேன்மைபெற்றவராவர்; எவ்வளவு உயர்குலத்திற் பிறந்தவராயினும் சிவபெருமானது திருவடியை வணங்காதவர் இழிகுலத்தவரேயாவ ரென்பதாம். இதனுல், உயர்வுதாழ்வுகட்கு ஏது - பிறவியன்று; கடவுளதுசம்பந்த மிருத்தலும் இல்லாமையுமேயா மென்பது, பெறப்படும். தேவர் என்பது - நான்கு சாதிகட்குள் உயர்ந்தவராய்ப் பூமியில் தேவர்கள்போல விளங்குதலால் பூதேவரெனப்படுகின்ற அந்தணரைக் குறிக்கு மென்றலும் பொருந்தும். "பாதியாயழுகியகால்கையரேனும் பழிதொழிலுமிழிகுலமும்படைத்தாரேனும், ஆதியாயரவணையாயென்பராகி லவரன்றே யாம்வணங்குமடிகளாவார், சாதியா லொழுக்கத்தான் மிக்கோரேனுஞ் சதுமறையால் வேள்வியால் தக்கோரேனும், போதில்நான்முகன் பணியப் பள்ளிகொள்வான் பொன்னரங்கம் போற்றுதார் புலையர்தாமே" என்ற வாய்பாடுபற்றி வந்தது, இச்செய்யுள்.

கண்டீர் - தேற்றம்; முன்னிலையசையுமாம். துவர்வாய் மணிநகை - அன்மொழித்தொகைப் பன்மொழித்தொடர். ஏகாரங்கள் - தேற்றப்பொருளன. உம்மைகள் இரண்டனுள், முதலது - இழிவுசிறப்பும், இரண்டாவது - உயர்வுசிறப்புமாம். (எஅ)

79. இழியும்பிறவிப்படுகுழிக்கேவிழுந்தெய்த்தவென்மேற்
பொழியுங்கருணைவிழித்திருப்பார்வைபுரிந்தனையேன்

மொழியுங்கவலைமனமாசறுத்தின்பமூழ்கிமுத்தி
வழியும்புகப்பெறுவேன்கருவாபுரிவாழ்பவனே.

(இ - ள்.) கருவா புரி வாழ்பவனே - திருக்கருவைநகரில் நித்தியவாசஞ் செய்பவனே!— இழியும் பிறவி படுகுழிக்கு - (பல்வகைக்குற்றங்கட்கு இடமாயிருத்தல்பற்றித்) தாழ்ச்சியடைதற்குக் காரணமான பிறப்பாகிய படுகுழியில், விழுந்து எய்த்த - விழுந்து [பலதரம்பிறந்ததனால்] இளைத்துப்போன, என் மேல்—, கருணை பொழியும் விழி திரு பார்வை - கருணைமழையைச்சொரிகின்ற உனது திருக்கண்களின் சிறந்தகடாக்ஷத்தை, புரிந்தனை ஏல் - வைப்பாயானால்,—மொழியும் - சொல்லப்படுகின்ற, கவலை - துன்பங்களையுடைய, மனம் மாசு - (எனது) மனத்திலுள்ள களங்கத்தை, அறுத்து - போக்கி, இன்பம் மூழ்கி - ஆனந்தக்கடலில் முழுகி, முத்தி வழியும் புக பெறுவேன் - மோக்ஷமார்க்கத்திலும் செல்லும் பாக்கியத்தை யுடையவனாவேன், (யான்); (எ - று.)

உனது திருவருள்நோக்கம் என்மீது பதியுமாயின், அதன்பயனால் பிறவித்துன்பங்களெல்லாம் அற்றுப் பேரானந்தப்பெருவாழ்வு பெறுவே னென்பதாம். படுகுழி - யானைமுதலிய விலங்குகளை அகப்படுத்துங் குழி. படுகுழிக்கு விழுந்து=படுகுழியில் விழுந்து: வேற்றுமைமயக்கம். ஏகாரம் - இசைநிறை. மூழ்கி என்னும் வினையினாற்றலால், இன்பம் கடல் எனப்பட்டது. 'புரிந்தனையே' என்றும் பாடம் உண்டு. (எகூ)

80. வாழ்விப்பர்தம்மைமறவாதவரைமறந்தவரை
வீழ்விப்பர்தீயநரகத்துளேயெனுமெய்ம்மையெண்ணிச்
சூழ்வித்தகொன்றைமுடிக்களவீசர் துணையடிக்கீழ்
தாழ்விக்குஞ்செஞ்சடையாரல்லரோமுத்திசார்பவரே.

(இ - ள்.) '(சிவபிரானார்),—தம்மை மறவாதவரை - தம்மை மறவாமல் எப்போதுந் தியானிப்பவரை, வாழ்விப்பர் - முத்திவாழ்வு பெறச்செய்வர்; மறந்தவரை - (தம்மைத் தியானியாமல்) மறந்து வாளாவிருப்பவரை, தீய நரகத்துளே - கொடியநரகத்தில், வீழ்விப்பர் - விழச்செய்வர்', எனும் - என்கின்ற, மெய்ம்மை - இவ்வுண்மையை, எண்ணி - ஆலோசித்து,—கொன்றை சூழ்வித்த - கொன்றைமலர்மாலையைச் சுற்றிலுமணிந்த, முடி - சடைமுடியையுடைய, களவு ஈசர் - திருக்களாவின்கீழெழுந்தருளிய திருக்கருவைச் சிவபிரானது, துணை அடிக்கீழ்-இரண்டுதிருவடிகளிலே, தாழ்விக்கும்-வணக்குகின்ற, செம் சடையார் அல்லரோ - செந்நிறச்சடைமுடியையுடைய தபோதனரல்லவோ, முத்தி சார்பவர் - மோக்ஷத்தையடைபவராவர்; (எ - று.)

சிவபெருமானை மறவாமல் தியானித்தவர்க்கு நற்கதியும், மறந்து தியானியாமல் வீண்பொழுதுபோக்குபவர்க்குத் தீக்கதியும் உண்டாகு மென்பது, நூல்களில் தேர்ந்த உண்மையானபொருள்; இவ்வுண்மையையுணர்ந்து சிவபெருமானது திருவடியை வணங்கினவர்க்கே முத்தி சித்திக்கு மென்பதாம். தீயநரகம - அக்கினியையுடைய தப்தகும்பம் கும்பீபாகம் முதலியன. செஞ்சடையார் என்றது - விரதாநுஷ்டானமுடையவ ரென்றமாத்திரமாய்நின்றது.

81. முத்திக்கொருவித்துமோகாடவிக்குமுழங்குசெந்தீ
சித்தக்கவலைப்பிணிக்கோர்மருந்துசிவதவஞ்சேர்
புத்திக்கொடிக்குப்படருங்கொழுகொம்புபோலுங்கண்டீர்
துத்திப்பணியணியுங்களவீசர்துணையடியே.

(இ - ள்.) துத்தி - படப்புள்ளிகளையுடைய, பணி - பாம்புகளை, அணியும் - ஆபரணமாக அணிந்துள்ள, களவீசர் - திருக்கருவைச் சிவபிரானது, துணை அடி - உபயபாதங்கள்,—முத்திக்கு - மோக்ஷமாகிய நற்பயனை விளைத்தற்கு, ஒரு வித்து (போலும்) - ஒப்பற்ற விதையாகும்; மோகம் அடவிக்கு - அவிச்சையாகிய காட்டை எரித்தழித்தற்கு, முழங்கு செந் தீ(போலும்) - ஒலித்துக்கொண்டெரிகின்ற சிவந்தகாட்டுத்தீயாகும்; சித்தம் கவலை பிணிக்கு - மனக்கவலையாகிய நோயைத் தீர்த்தற்கு, ஓர் மருந்து (போலும்) - ஒப்பற்ற மருந்தாகும்; சிவ தவம் சேர் புத்தி கொடிக்கு - சிவத்தியானம் அறாத அறிவாகிய கொடிக்கு, படரும் கொழுகொம்பு போலும் - படர்ந்து ஏறுதற்கு உரிய கொழுகொம்பாகும்; (எ - று.)—கண்டீர் - முன்னிலையசை; தேற்றமுமாம்; (இதனை) அறிவீரெனினுமாம்.

சிவபிரானது திருவடிகள் தம்மைத்தியானிக்கின்ற அடியார்கட்கு, சிவசாதனங்களை மேன்மேலும் வளர்த்து, மனக்கவலையை மாற்றி, அவிச்சையை அடியோடுதொலைத்து, முத்திப்பயனைக் கைகூட்டுவிக்குமென்பதாம். முத்திக்குக்காரணமாதலால் ‘முத்திக்குவித்து’ என்றும், அவிச்சைத்தொகுதியை அறத்தொலைத்தலால் ‘மோகாடவிக்குச்செந்தீ’ என்றும், பீடிக்கின்ற மனக்கவலையைமாற்றுதலால், ‘கவலைப்பிணிக்குமருந்து’ என்றும், சிவபக்தியை மேன்மேலும் தழைத்துவளரச்செய்தலால் ‘சிவதவஞ்சேர்புத்திக்கொடிக்குப் படருங்கொழுகொம்பு’ என்றுங் கூறினர்; உருவகவணியை அங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. “முத்திக்குவித் தனடியார்கள்சிந்தைமுளரிக்கருக்கன் மொழியெண், சித்திக்குமூலந் தவயோகிகட்குத்தெளிகன்னலூறுமயிர்தம், பத்திக்குநித்தமருள்வீசுகொண்டல் களவீசனெங்கள்பரம, னத்திக்குமுன்னம் வரமேயளித்தகருவேசனம்பொனடியே” என்றார், பதிற்றுப்பத்தந்தாதியிலும்.

‘பத்திக்கொடிக்கு’ என்றும் பாடம். மோஹாடவீ - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். சிவதவம் = சிவதபஸ். (அக)

82. துணைக்கோலவாசிகைவேணியிற்சாத்தித்துலங்குதிரு
மணக்கோலத்தோடிமவான்மகளோடுமெழுவிடைமே
லிணர்க்கோலச்சோலைக்கருவேசவென்முனெழுந்தருளக்
கணக்கோகணக்கல்லவோவறியேனுன்கருத்தினையே.

(இ - ள்.) இணர் கோலம் சோலை கருவாசச - பூங்கொத்துக்களால் அழகுபெற்ற சோலைகள் சூழ்ந்த திருக்கருவைச் சிவபிரானே!—துணை - (தனக்குத்தானே) ஒப்பான [வேறுஉவமைபெறாத], கோலம் - அழகிய, வாசிகை - மலர்மாலையை, வேணியில் சாத்தி - சடைமுடியில் தரித்து, இமவான்

மகளோடு - இமயமலையரசன் புத்திரியாகிய உமாதேவியோடுங்கூடி, துலங்கு- விளங்குகின்ற, திருமணக்கோலத்தோடு - திருமணக்கோலங்கொண்டு,—மழ விடைமேல் - இளமைபொருந்திய விருஷபவாகனத்தின்மீது (ஏறி), என் முன் எழுந்தருள - எனது கண்ணுக்கு எதிரில் எழுந்தருளிக் காட்சிகொடுக்க, கணக்கோ - (உனக்குத்) திருவுள்ளமுண்டோ? கணக்கு அல்லவோ - திருவுள்ளமில்லையோ? உன் கருத்தினை - உனது திருவுள்ளக்கருத்தை, அறியேன் - (யான்) இன்னதென்று அறியேன்; (எ - று.)

திருமணக்கோலத்தோடு விருஷபாரூடராய்ச் சேவைசாதிக்கவேண்டுமென்று சிவபெருமானை வேண்டியபடி. இமவான் = ஹிமவாந்: பனியையுடையது என்பதுபற்றிய பெயர்; இங்கு, இச்சொல் - அம்மலையரசனைக் குறிக்கும். எண்ணுதல் என்பது - தியானித்தல் கணக்கெண்ணுதல் என்னும் இருபொருளிலும் வருதல்போல, கணக்கு என்ற சொல்லும் அவ்விருபொருளிலும் வரும்: இது - 'கண்' என்னும் வடமொழிமுதனிலைபடியாப் பிறந்து 'கு' விகுதிபெற்ற தொழிற்பெயர்போலும். (அஉ)

83. உன்கருத்தேதென்றறியேன்கருவையினுத்தமனே
மின்கருக்குஞ்சடையும்பிறைக்கீற்றும்விழிமலரும்
பொன்கருக்குங்கொன்றைமாலிகைமார்புநின்பொற்கழலு
மென்கருத்தூடுவைத்தெப்போதும்வந்தித்திறைஞ்சுவனே.

(இ - ள்.) கருவையின் உத்தமனே - திருக்கருவையி லெழுந்தருளிய சிறந்தகடவுளே!—நின் - உனது, மின் கருக்கும் சடையும் - (மிக்கவொளியுள்ள) மின்னலையும் கருநிறமுடையதாகச்செய்கின்ற [மின்னலினும் மிகச்சிவந்த] சடைமுடியையும், பிறை கீற்றும் - (அதன்மீது அணிந்த) கீற்றுவடிவமான இளம்பிறைச்சந்திரனையும், விழி மலரும் - தாமரைமலர்போன்ற திருக்கண்களையும், பொன் கருக்கும் கொன்றை மாலிகை மார்பும் - பொன்னின் நிறத்தையும் கருநிறமுடையதாக்குகின்ற [பொன்னினும் மிக்குவிளங்குகின்ற] கொன்றைமலர்மாலையை யணிந்த திருமார்பையும், பொன் கழலும் - பொன்னாலாகிய வீரக்கழலை யணிந்த திருவடிகளையும், எப்போதும் என் கருத்தூடு வைத்து - எப்பொழுதும் எனது மனத்திற் கொண்டு, வந்தித்து இறைஞ்சுவன் - வணங்கி வழிபடுவேன், (யான்); உன் கருத்து ஏது என்று அறியேன் - உனது திருவுள்ளக்கருத்து (என்விஷயத்தில்) இன்னதென்று அறியேன்; (எ - று.)

நான் உனது திருவுருவத்தை எப்போதும் மனத்திற்கொண்டு தியானித்தலையே கடமையாகக்கொண்டுள்ளேன்; உனக்குக் கடமையாகிய நற்கதி யளிக்குந்திறத்தில் நீ யாதுசெய்வாயோ? என்பதாம். ஆதலால், நீ நற்கதியருளவேண்டு மென்பது கருத்து. கழல் - திருவடிக்கு, தானியாகுபெயர்.

84. இறையவனேயெனக்குன்னடிபோற்றவியல்பளித்த
மறையவனேயென்மனத்தவனேவடிவார்ந்தகண்டக்

கறையவனேதென்கருவேசனேசடைக்காடணிந்த
பிறையவனேயடியேன்பிறவாவண்ணம்பேறருளே.

(இ - ள்.) இறையவனே - (எப்பொருள்கட்குந்) தலைவனே! உன் அடி போற்ற எனக்கு இயல்பு அளித்த மறையவனே - உனது திருவடிகளை வணங்குமாறு (எனக்கு) நற்குணத்தை ஈந்தருளிய வேதஸ்வரூபியே! என் மனத்தவனே - எனது மனத்தி லெழுந்தருளியிருப்பவனே! வடிவு ஆர்ந்த கண்டம் கறையவனே - அழகுநிறைந்த திருக்கழுத்தில் (விஷமுண்டதனாற்) கறுத்த திருநிறமுடையவனே! சடை காடு அணிந்த பிறையவனே - சடைமுடியிற் பிறைச்சந்திரனை யணிந்தவனே! தென் கருவேசனே - தெற்கின்கண்உள்ள திருக்கருவைநகர்க்குத் தலைவனே!—அடியேன் பிறவாவண்ணம் - அடியேன் மீண்டும் பிறப்பெடுக்காதபடி, பேறு அருள் - முத்திப்பேற்றை அருள்வாயாக.

'வரிவார்ந்தகண்டக்கறையவனே' என்றபாடத்துக்கு— வரி - இரேகைகள், வார்ந்த - நீண்டமைந்த, கண்டக்கறையவனே! என்க. மறையவனே - அந்தணனே எனினுமாம். (அச)

85. அருவிப்புனலிற்குமிழியிற்றோன்றியழிந்தனன்யான்
கருவைப்பரமன்கவிஞனுக்காக்கமலாலயத்திற்
பரவைக்கிரவிற்றிருத்தூதுசென்றபதம்படவத்
தெருவிற்சிறுதுகளாய்க்கிடந்தேனில்லைதீவினையே.

(இ - ள்.) கருவை பரமன் - திருக்கருவையிலெழுந்தருளிய பரம்பொருளாகிய சிவபெருமான், கவிஞனுக்கு ஆ - பாடல்தொண்டுசெய்யுஞ் சுந்தரமூர்த்திநாயனார்க்காக, கமலாலயத்தில் - திருவாரூரில், பரவைக்கு - பரவையாரிடத்தில், இரவில - இராப்பொழுதில், திரு தூது சென்ற - தூதுசென்றருளிய, பதம் - திருவடிகள், பட - (என்மீது) படும்படி, அ தெருவில் - அத்திருவாரூர்த்தெருவில், சிறு துகள் ஆய் - சிறுபுழுதியாய், கிடந்தேன் இல்லை - கிடக்கப்பெற்றிலேன்; (ஆதலால்), அருவி புனலில் - ஆற்றுநீர்ப்பெருக்கில் தோன்றுகின்ற, குமிழியின் - மொக்குள்போல, யான்—, தோன்றி - பலபிறப்பெடுத்து, அழிந்தனன் - (இதுவரையிலும்) இறந்தொழிந்தேன்; (இவ்வாறு நேர்தற்குக் காரணம்), தீவினையே - (யான் முற்பிறப்பிற் செய்த) பெரும் பாவமேயாகும்; (எ - று.)

திருவாரூர்த்தெருவில் பரவையார்வீட்டிற்குச் சிவபிரான் சுந்தரமூர்த்தி நாயனாரது தூதராகச்சென்றபோது அவரதுதிருவடி தீண்டுமாறு புழுதியாகவாவது எனக்கு ஜன்மம்நேர்ந்திருக்குமாயின், அத்திருவடி தீண்டப்பெறுதலால் பிறப்பிற்குக் காரணமாகிய தீவினையெல்லாந் தீர்ந்து முத்திபெற்றிருப்பேன்; அவ்வாறு பெறாமையால், பிறந்துஇறந்துஉழலவேண்டுவதாயிற்று; இதுவும் எனது தீவினையே யென்பதாம். சிவபிரானது திருவடி தீண்டப்பெற்றார்க்கு மீண்டும் பிறவிநேராது முத்திகிடைத்தல் திண்ணமா மென்க. உலகத்தில் பெயர்வழங்குமாறுள்ள ஒவ்வொருபொருட்கும் உயிருண்டென்பது வேதாந்தி

களின்கொள்கையாதலால், 'சிறுதுகளாய்க் கிடந்தேனில்லை' என்றார். இச்செய்யுளில் தமக்குப் பிறப்புஇறப்புக்கள் தீர்ந்திடாதிருத்தல்பற்றி, சிவபெருமான் தூதுசென்றபோது அவரது திருவடி தீண்டப்பெற்றிலாமையை அறிவித்தலால், அநுமாநாலங்காரம். "புலையாம்பிறவிபிறந்தென்செய்தோம் பொன்னிபொன்கொழிக்கும், அலையார்திருவரங்கத்தெம்பிரா னமதன்னையொடுங், தொலையாதகானங்கடந்தவந்நாள் தடந்தோறும் புல்லாய்ச், சிலையாய்க் கிடந்திலமே நெஞ்சமே கழல்தீண்டுகைக்கே" என்ற வாய்பாட்டை ஒருசார் ஒற்றியது, இச்செய்யுள்.

கவிஞன் - கவிபாடுபவன்; ஞ் - பெயரிடைநிலை. பரமன் - யாவரினும் உயர்ந்தவன். பரவைக்கு=பரவையினிடத்தில்: உருபுமயக்கம். கமலாலயம் - திருவாரூர்க்கு வழங்கும் பெயர்களு ளொன்று: இது - அவ்வூர்த்தீர்த்தத்தின் பெயர் திருப்பதிக்கு ஆனதோர் இலக்கணை. இது - சோழநாட்டுச் சிவதலங்களுள் ஒன்று. திருமகள் சிவபிரானது திருவடிகளை வணங்கி எல்லாச்செல்வத்தையும் எக்காலத்தும் அழிவில்லாத மாங்கலியத்தையும் தான்பெறுமாறு சிறப்பாகத் தவஞ்செய்து வரம்பெற்ற தலம். மநுநீதிகண்டசோழமகாராசனைப் பசுவாகச்சென்று சோதித்த தலம்; தன்னிற்பிறந்தவர்க்கு முத்திகொடுக்குந் தலம். இதிலுள்ள சிவபெருமான் திருநாமம்-தியாகராசர், புற்றிடங்கொண்டார்: அம்பிகை - அல்லியங்கோதை. தீர்த்தம் - கமலாலயம் முதலிய பலதீர்த்தங்கள். விருக்ஷம் - பாதிரி.

கவிஞனுக்காத் தூதுசென்றகதை:—சுந்தரமூர்த்திநாயனார் திருவொற்றியூரிலே சங்கிலியாரை மணஞ்செய்துகொண்டு சிலநாள் வாழ்ந்திருந்து பின்பு திருவாரூர்க்குச் செல்லவிரும்பி அங்குச்சென்றபோது, சங்கிலியாரை மணஞ்செய்துகொண்ட சங்கதியைக் கேள்வியுற்று மிகவுங்கோபங்கொண்டிருந்த அவரதுமுதன்மனைவியராகியபரவையார், நாயனார்தம்மிடத்துவருதற்கு உடன்படாமல் 'வந்தால் ப்ராணத்யாகம் பண்ணுவேன்' என்று சொல்ல, அதனையறிந்த சுந்தரமூர்த்தி பரமசிவனைத் தியானித்து 'பரவையாரதுஊடலைத் தீர்க்கத் தூதுசென்றருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, சிவபெருமான் சிவார்ச்சனைசெய்கின்றஓர் ஆதிசைவரதுவடிவங்கொண்டும் தாமாந்தன்மையறிதற்கு ஏற்ற கோலத்தோடும் அர்த்தராத்திரியில் இருமுறை தூதுநடந்துசென்று பரவையார்க்குச் சமாதானஞ்சொல்லி அவள்கொண்டகோபத்தை ஆற்றுவிக்க, பின்பு நாயனார் பரவையாரது வீட்டிற்குச் செல்ல, பிறகு இருவரும் முன்போலவே அந்யோந்யமாக வாழ்ந்திருந்தன ரென்பதாம். இவ்வரலாற்றினால், கடவுள் அடியவர்க்கு எளியவ ரென்பதும், போக மோக்ஷங்களிரண்டையும் கொடுத்தருள்கின்றவ ரென்பதும் பெறப்படும். (அரு)

86. தீவினைசெய்துசிவதவங்கைவிட்டுச்சில்பகலிற்
சாவினைமேற்கொள்சழக்கினரேதண்டமிழ்க்கருவைக்
கோவினைநாவினிற்கொண்டேத்திச்செம்பொற்குழைகழலிற்
பூவினையிட்டிறைஞ்சீரென்கொலாமுங்கள்புல்லறிவே,

(இ - ள்.) தீ வினை செய்து - பாவச்செயல்களைச் செய்து, சிவ தவம் கைவிட்டு - சிவபிரானைக்குறித்துத் தியானஞ்செய்வதை அடியோடுவிட்டு, சில் பகலில் - இன்னுஞ் சிலநாள்கட்குள், சாவினை மேற்கொள் - இறந்தொழிதலை மேற்கொள்ளுகின்ற, சழக்கினரே - குற்றமுடையவரே!—தண் தமிழ் கருவை கோவினை - குளிர்ந்த [இனிய] தமிழ்ப்பாஷை வழங்குகின்ற திருக்கருவையி லெழுந்தருளிய சிவபிரானை, நாவினில் கொண்டு ஏத்தி - நாவிற் கொண்டு துதித்து, செம் பொன் குரை கழலில் - சிவந்த பொன்மயமாகிய வீரக்கழலையணிந்த (அவரது) திருவடிகளின்மீது, பூவினை இட்டு - மலர்களையிட்டுஅருச்சித்து, இறைஞ்சீர் - வணங்கமாட்டீர்; உங்கள் புல் அறிவு - உங்களது அற்பபுத்தி, என்ஆம் - (இருந்தவாறு) என்னே! (எ - று.)—கொல் - அசைநிலை.

பெறுதற்குஅரிய மனிதப்பிறவியை யெடுத்தும், திரிகரணங்களினாலும் சிவபெருமானை வழிபட்டு நற்கதிபெறாமல் மேன்மேலும் தீவினைகளையே செய்து மிகவிரைவில் அழிந்தொழிகின்ற தீக்குணமுடையோரது புல்லறிவாண்மையை இகழ்ந்துகூறியவாறு. இவ்வாறுகூறியது, இறப்புவருதற்கு முன்னே தீக்குணத்தைவிட்டு நற்கதிபெறும் உபாயத்தை நாடவேண்டுமென்று குறிப்பிதற்கு. (அசு)

87. புல்லியர்தீயபுணர்ப்பினராவுரிபோர்த்துவரும்
வல்லியமென்னத்தவமிழைப்போர்புரிவஞ்சகத்தா
லெல்லையிறுன்பக்கடலழுந்தாமலெடுத்தருள்வாய்
மெல்லியல்பாகதமிழ்க்கருவாபுரிவித்தகனே.

(இ - ள்.) மெல் இயல் பாக - மெல்லியதன்மையையுடைய உமாதேவியை இடப்பக்கத்திலுடையவனே! தமிழ் கருவா புரி வித்தகனே - செந்தமிழ்வழங்குகின்ற திருக்கருவைநகரி லெழுந்தருளிய ஞானஸ்வரூபியே!—ஆ உரி போர்த்து வரும் வல்லியம் என்ன - பசுவின்தோலைப் போர்த்துக்கொண்டுவருகிற புலியைப்போல, புல்லியர் - அற்பகுணமுடையவரும், தீய புணர்ப்பினர் - கொடிய நினைவுள்ளவரு மாகி, தவம் இழைப்போர் - தவவேஷத்தை மேற்கொண்டிருக்கும் வஞ்சகர்கள், புரி - செய்கின்ற, வஞ்சகத்தால் - வஞ்சனையினால், எல்லை இல் துன்பம் கடல் அழுந்தாமல் - அளவில்லாத துன்பக்கடலில் மூழ்கிவிடாதபடி, எடுத்து அருள்வாய் - (அடியேனை) மீட்டுக் காத்தருள்வாய்; (எ - று.)

தீக்குணமும் கெடுநினைவுமுடைய வெளிவேடம் பூண்டவரது வஞ்சனைக்கு வசப்பட்டுத் துன்பமடையாதபடி அடியேனைப் பாதுகாத்தருளவேண்டுமென்று வேண்டியவாறு. மனத்தைத் தம்வழிப்படுத்தும் வலிமை யில்லாதிருக்கையிலும் யாவரும் தம்மைநம்புமாறு மனத்தைத் தம்வழிப்படுத்தும் வலிமையையுடைய முனிவர்களின் வேஷத்தைப் பூண்டு தீயவழியில் நடக்கின்ற வஞ்சகர்க்கு, பிறபிராணிகள் தனது வல்லுருவத்தைக்கண்டு வெருண்டு ஓடிவிடாதிருத்தற்பொருட்டுப் பசுவின்தோலைப் போர்த்துக்கொண்டிருந்து

அருகே பிராணிகள்வரும்போது அவற்றின்மேற் பாய்கின்ற புலியை உவமை கூறினர்; உவமையணி. மேல்தோற்றத்தில் சாதுவாயிருந்து செயலில் கொடுமையையுடைய தன்மையில் உவமை: 'பார்வைக்குப் பசு, பாய்ந்தாற் புலி' என்பது, பழமொழி. "வலியில்நிலைமையான் வல்லுருவம் பெற்றம், புலியின்தோல் போர்த்து மேய்ந்தற்று" என்று இவ்வுவமையைத் திருவள்ளுவர் மாற்றிக்கூறியுள்ளார். 'ஆவுரிபோர்த்துவரும் வல்லியமென்னத் தவறிழைப் போர்' என்ற பாடத்துக்கு - தவவேடமுடையவராய் மறைந்தொழுகிக் கொடுஞ்செயலைச் செய்யுந் தீயவர் என்று பொருள் காண்க. மெல்லியல் - பண்புத்தொகையன்மொழி. (அஎ)

88. தகனம்படுத்திப்பகிரண்டகூடமுஞ்சாம்பர்செய்து
ககனம்பதத்தினின்றாடும்பிரானைக்கமலமன்ன
முகமைந்துடையகருவாபுரியின்முதல்வனையா
னகமைந்திராப்பகலேத்திடுவேனெஞ்சழுக்கறவே.

(இ - ள்.) (யாவும் அழியும் சர்வசங்காரகாலத்தில்), தகனம் படுத்தி - (உலகத்துப்பொருள்களையெல்லாம்) எரிந்தழியச்செய்து, பகிர் அண்ட கூடமும் சாம்பர் செய்து - அண்டகூடத்தினுடைய உள்ளிடத்தையும் வெளியிடத்தையும் சாம்பலாக்கி, ககனம் நின்று - ஆகாயத்தில் நின்றுகொண்டு, பதத்தில் ஆடும் - கால்களால் நர்த்தனஞ் செய்கின்ற, பிரானை - பிரபுவும்,—கமலம் அன்ன முகம் ஐந்து உடைய - செந்தாமரைமலர்போன்ற ஐந்துமுகங்களையுடைய, கருவாபுரியின் முதல்வனை - திருக்கருவைநகர்க்குத் தலைவனு மாகிய சிவபிரானை, யான் - நான், அகம் நைந்து - மனமுருகி, இரா பகல் - இரவிலும் பகலிலும், நெஞ்சு அழுக்கு அற - (எனது) மனத்திலுள்ள களங்கம் நீங்கும்படி, ஏத்திடுவேன் - துதிப்பேன்; (எ - று.)

சர்வசங்காரமூர்த்தியாய்த் திருநடனஞ்செய்கின்ற சிவபிரானை என் மனத்திலுள்ள அவிச்சை நீங்கும்படி அநவரதமும் நெஞ்சிற்கொண்டு துதிப்பேனென்பதாம். பகிரண்டமும் சாம்பர்செய்து என்ற இறந்ததுதழுவிய எச்சவும்மையால், அண்டகூடத்தின் வெளிப்புறத்தையேயன்றி உட்புறத்தையும் சாம்பர்செய்தமை பெறப்படும். ககனம் பதத்தில் நின்றாடும் பிரான் என்பதற்கு-ஆகாயமாகிய தானத்தில் நின்றுகொண்டு நடனஞ்செய்கின்ற சிவபிரான் என்று உரைப்பினுமாம். சிவபிரானது ஐந்துமுகங்கள் - ஸத்யோஜாதம் வாமதேவம் அகோரம் தத்புருஷம் ஈசாநம் என்பன. (அஅ)

89. அழுக்கற்றநெஞ்சிலும்பொன்னம்பலத்துமமர்ந்துநின்ற
முழுக்கற்றையஞ்சடிலக்களவீசனைமுன்னியன்பு
பழுக்கத்திருத்தொண்டுசெய்யார்கள்காலபடர்நாருக்
கிழுக்கக்கழுத்திற்கயிறிடும்போதுமற்றென்செய்வரே.

(இ - ள்.) அழுக்கு அற்ற நெஞ்சிலும் - களங்கமில்லாத (பெரியோர்களது) மனத்திலும், பொன் அம்பலத்தும் - (சிதம்பரத்துக்) கனகசபையிலும்,

அமர்ந்து நின்ற - மனம்பொருந்தி யெழுந்தருளியிருக்கிற, முழு கற்றை அம் சடிலம் களவீசனை - பெருந்தொகுதியாகிய அழகிய சடைமுடியையுடைய திருக்களாவின்கீ ழெழுந்தருளியுள்ள திருக்கருவைச் சிவபெருமானை, முன்னி - மனத்திற்கொண்டு தியானித்து, அன்பு பழுக்க - பக்திமுதிர, திருதொண்டு செய்யார்கள் - அடிமைசெய்யப்பெறாத வீணர்கள்,—கால படர் - யமகிங்கரர்கள், நரகுக்கு இழுக்க - நரகலோகத்துக்கு இழுத்துச்செல்லும் பொருட்டு, கழுத்தில் கயிறு இடும் போது - கழுத்திலே பாசக்கயிற்றை மாட்டும்போது, என் செய்வர் - யாதுசெய்யமாட்டுவார்கள் ? (எ - று.)

சிவபெருமானை வணங்கி வழிபட்டவர்க்குத்தான் அந்திமகாலத்தில் யம பாதையொழிந்து நற்கதிபெறலாமேயன்றி, மற்றை வீணர்க்கு யமபாதையி னின்றுந் தப்ப வழியில்லை யென்பதாம். மற்று - அசை. (அகூ)

90. என்செயலாவதியாதொன்றுமில்லைமற்றியான்புரித
னின்செயலாகநினைவளித்தாயுன்னினீக்கமற்றேன்
புன்செயலீதென்றுநன்செயலீதென்றும்புந்திசெய்யே
னுன்செயல்யாவுமென்றேகருவேசவுளந்தெளிந்தே.

(இ - ள்.) கருவேச—!—என் செயல் ஆவது - எனது தொழிலாயிருப்பது, யாது ஒன்றும் இல்லை - ஏதொன்றுமில்லை; யான் புரிதல் - யான் செய்யுந் தொழிலைப்பற்றி, நின் செயல் ஆக - உனது செய்கையாகவே, (இருக்கின்ற உண்மையை உணருமாறு), நினைவு அளித்தாய் - எண்ணத்தை (எனக்குத்) தந்தருளினாய்; (யான்), உன்னின் - உன்னினின்றும், நீக்கம் அற்றேன் - நீங்குதலொழிந்தேன்; யாவும் - எல்லாத்தொழில்களையும், உன் செயல் என்றே உளம் தெளிந்து - உனதுசெய்கை யென்றே மனத்தில் தெளிவுகொண்டிருத்தலால், ஈது புல் செயல் என்றும் - இது தீச்செய்கை யென்றும், ஈது நல் செயல் என்றும் - இது நற்செய்கை யென்றும், புந்தி செய்யேன் - (மனத்தினால்) கருதவும்மாட்டேன்; (எ - று.)

ஜீவாத்மா ஸ்வாதந்த்ரியமின்றிப் பரமாத்மாவுக்கே அடிமையாதலையும், உடம்பினுள் உயிர்போல அந்தஜீவாத்மாவினிடத்துப் பரமாத்மா அந்தராத்மாவாய் இயக்குதலையும் நோக்குமிடத்து, எனக்கென்றுசொல்ல ஒருசெயலுமில்லை; இப்பிரபஞ்சத்தில் எல்லாம் இறைவனான உனக்கே உரியன வென்று சொல்லத்தகும்; இவ்வாறான தத்துவவுணர்ச்சியை நீ எனக்குக் கருணை செய்ததனால், நானென்று சொல்லுமாறு உன்னினின்றும் வேறுபட்டுத் தோன்றுகின்ற அகங்காரம் நீங்கப்பெற்றேனாதலால், பிறர்க்கு நான் செய்வதுபோலத் தோன்றுகின்ற செயல்கள்யாவும் உன்னுடையனவே யாதல் பற்றி, அத்தொழிலில் தோன்றுகின்ற நன்மைதீமைகளில் இனி எனக்கு யாதொருதொடர்பு மில்லை யென்றவாறு. இதனால், கவி தாம்பெற்ற தத்துவ வுணர்ச்சியின் தன்மையை வெளியிட்டன ரென்க. "எனக்கெனச் செயல் வேறிலை யாவுமிங்கொருநின், தனக்கெனத்தகும்" என்றார் தாயுமானவரும். 'நின்னின் நீக்கமற்றேன்' என்றது - நீ என்னுள் அந்தராத்மாவாய் வசித்த

லால் நான் உன்னைப்பிரியுமாறு இல்லை என்றவாறு: "பிறியுந்தன்மையில்லா வகை கலக்கின்ற பெரியோய்" என்றது காண்க. எல்லாம் கடவுளின்செயலே யாதலால், அத்தத்துவவுணர்ச்சியையுடைய தாம் அத்தொழில்களில் குற்ற நற்றம்பேசுவது பெரியதோரபசாரமாகுமென்பார் 'புன்செயலீதென்றும் நன்செயலீதென்றும் புந்திசெய்யேன்' என்றார்.

மற்று - வினைமாற்று. செயலாவதியாது, மற்றியான் - குற்றியலிகரங்கள்; இவற்றுள் முந்தியது அலகுபெற்றும், பிந்தியது அலகுபெறாதும் வந்தன.

91. உளந்தெளியும்படியெப்படிவேதமுமுண்மைநிலை
யளந்தறியாதகருவைப்பிரானம்பவளமன்ன
வளந்தருவேணியுஞ்சங்கக்குழையுமதிமுகமுங்
களந்தருநீலமும்பாவித்திடாதகயவருக்கே.

(இ - ள்.) வேதமும் - எல்லாவேதங்களும், உண்மை நிலை அளந்து அறியாத - (தனது) ஸ்வரூபத்தின்தன்மையை ஆராய்ந்தறியப்பெறாத, கருவை பிரான் - திருக்கருவைச் சிவபெருமானது, அம் பவளம் அன்ன - அழகிய பவழம்போன்ற [சிவந்த], வளம் தரு வேணியும் - செழித்துள்ள சடைமுடியையும், சங்கம் குழையும் - சங்கத்தினாற்செய்யப்பட்ட காதணியையும், மதி முகமும் - பூர்ணசந்திரன்போன்ற திருமுகத்தையும், களம் தரு நீலமும் - திருக்கழுத்திற் பொருந்திய நீலநிறத்தையும், பாவித்திடாத - (மனத்தினால்) தியானிக்கப்பெறாத, கயவருக்கு - கீழ்மக்கட்கு, உளம் தெளியும் படி - மனந் தெளிவடையும் விதம், எப்படி - எவ்வாறு? (எ - று.)

சிவபிரானது அங்கங்களையெல்லாம் நன்றாகப்பாவித்து அனுபவிக்கும் மேன்மக்களுக்கே மனம் தத்துவவுணர்ச்சியைப்பெற்றுத் தெளிவடையுமேயன்றி, மற்றைக் கீழ்மக்கட்கு ஒருகாலும் மனந்தெளிவடையா தென்பதாம். 'வேதமும் உண்மைநிலை அளந்தறியாத கருவைப்பிரான்' என்றதனால், உலகத்துநூல்களுட் சிறந்த வேதத்தினாலும் உண்மையறியப்பெறாத சிவபெருமான் தனதுசடைமுடி முதலியவற்றை அன்போடுதியானிப்பவர்கட்கு, திருவருளினாலேயே தனது உண்மைநிலையை அறிவிப்ப னென்பது போதரும். 'அம்பவளமென்ன' என்றும் பாடம். (கக)

92. கயங்கொண்டநீரின்மதிநிழல்போலக்கலங்கிநின்று
மயங்குங்கவலைமடநெஞ்சமேமலைமங்கைகொங்கை
முயங்குங்கருவைப்பெருமானென்னுட்பகைமூன்றும்வென்று
சயங்கொண்டிருக்கினுனக்கொருகாலுந்தளர்வில்லையே.

(இ - ள்.) கயம் கொண்ட நீரில் - குளத்திற்பொருந்திய நீரிலே காணப்படுகின்ற, மதி நிழல் போல - சந்திரனதுபிரதிபிம்பம் (ஒருநிலைநில்லாது தளும்புதல்) போல, கலங்கி நின்று - கலக்கமடைந்து நின்று, மயங்கும் - மயங்குகின்ற, கவலை - துன்பத்தையுடைய, மட நெஞ்சமே - அறியாமையுள்ள (எனது) மனமே!—மலை மங்கை கொங்கை முயங்கும் - பார்வதீதேவி

யினது தனங்களைத் தழுவுகின்ற, கருவை பெருமான் - திருக்கருவைச் சிவ பெருமான், என் உள் பகை மூன்றும் - எனது உட்பகைவர்க்கமாகிய (காமம் வெகுளி மயக்கம் என்னும்) மூன்றையும், வென்று - (தனது அருளென்னுந் தண்டத்தா லடித்து வலியடக்கிச்) சயித்து, சயம் - தானே, கொண்டு - (தனக் குச் சுவாதீனமாகக்) கொண்டு, இருக்கின் - (உன்னிடத்தில்) வீற்றிருப்பா ராயின், உனக்கு—, ஒரு காலும் - எக்காலத்திலும், தளர்வு இல்லை - தளர்ச்சி யுண்டாகாது ; (எ - று.)

காமம் வெகுளி மயக்க மென்னும் முக்குற்றங்களும் தம்வசப்படுத்தியத னால் அவற்றின் கையிற் சிக்குண்டுதவிக்கின்ற தமதுமனத்தை நோக்கி, 'சிவ பெருமான் தனது அருளென்னுந் தண்டினால் முப்பகைகளையும் அடித்து ஓட்டி உன்னைத் தன்வசமாக்கிக்கொண்டு தனது வெற்றி தோன்ற உன்னி டத்து வீற்றிருக்கப்பெறுவாயாயின், பிறகு ஒருகாலும் உனக்குப் பிறவித்தடு மாற்றமுண்டாகாமல் நற்கதிபெறுவாய்' என்று உபதேசித்துத் தேற்றிய வாறு. காற்றுமுதலியவற்றாற் குளத்துநீர் ததும்புகின்ற இயல்பையுடையதாக அதனுள்தோன்றுஞ் சந்திரபிம்பமும் தளும்புதல்போல, இருவினையினால் ஆன்மா வருந்துவதாக அதனுள்ளிருக்கும் மனமும் தடுமாறுகின்றதென உவ மையால் விளக்கினார். காமம் க்ரோதம் லோபம் மோஹம் மதம் மாத்ஸர்யம் என்று வடநூலார் உட்பகையை ஆறுஎன்றுகூறவும், அவை காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றனுள் அடங்குதல்பற்றி, இங்கு 'உட்பகைமூன்று' என்றார். உட்பகையாவது - மனத்தில்தங்கி அதனை நல்வழியிற் செல்லவொட் டாது கெடுக்குந் தன்மையது; "காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன், நாமங் கெடக் கெடும் நோய்" என்றார் திருவள்ளுவனாரும். இனி, இச்செய்யுட்கு— சந்திரன் தனக்கு இயற்கையில் ஆட்டமொன்றும் இல்லாதிருந்தும் நீரினுள் தோன்றும்போது அங்கு அசைந்து தோன்றுதல்போல, சிவபெருமான் தனக்கு விகாரமொன்றும் இல்லாதிருந்தும் அவிச்சையால் தான் ஜீவாத்மா வாகத்தோன்றும்போது வருந்துவதாகத் தோன்றுவன்; அந்த ஜீவாத்மா ஸோஹம்பாவனையால் அவிச்சைநீங்கின் மனந்தெளிவடைவனெனச் சிவாத் வைதமாகப் பொருள்கூறுவாருமுளர்.

கயங்கொண்ட நீர் - ஆழங்கொண்ட நீர் என்று பொருளுரைப்பாருமுளர். கயம் - யானை யெனினுமாம். சயம் = ஸ்வயம். இனி, வென்று - வலியடக்கி, சயம் [ஜயம்] கொண்டு - வெற்றிகொண்டு என்று உரைப்பினுமாம். (கஉ)

93. தளர்வுவந்தெய்தின்விதியினைநோவர்தழைக்குஞ்செல்வக்
கிளர்வுவந்தெய்திற்றமைத்தாம்புகழ்வர்கிளைத்தபசுந
துளவுவந்தோனுமுளரிவந்தோனுந்துதித்துநிற்பக்
களவுவந்தோன்செய்தகற்பனையீதென்றுகாண்கிலரே.

(இ - ள்.) 'ஈது - (சுகதுக்கங்கட்குக்காரணமான) இந்த வூழ்வினை,— கிளைத்த - தழைத்த, பசுந் துளவு - பசுமையான துளசிமாலையை, உவந்தோ னும் - விரும்பியணிந்த திருமாலும், முளரி வந்தோனும் - (அத்திருமாலினது

உந்தித்)தாமரையில் தோன்றிய பிரமதேவனும், துதித்து நிற்ப - தோத்திரஞ் செய்துநிற்க, களவு உவந்தோன் - திருக்களாவின்நிழலில் விரும்பியெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான், செய்த—,கற்பனை - சங்கற்பமேயாகும்,' என்று—, காண்கிலர் - உண்மையறியாதவர்கள்,—தளர்வு வந்து எய்தின் - (தமக்கு) ஒருதளர்ச்சி வந்தால், விதியினை நோவர் - (அதற்குக்காரணமான) ஊழ்வினையை வெறுப்பார்கள் ; தழைக்கும் செல்வம் கிளர்வு வந்து எய்தின் - மேன்மேற்பெருகுகின்ற செல்வக்கிளர்ச்சி (தமக்கு) வந்தால், (அப்போது மாத்திரம்), தமை தாம் புகழ்வர் - (அதற்குக்காரணந் தாமேயென்று) தம்மைத் தாமே மேம்படுத்திப் பாராட்டிக்கொள்வார்கள் [ஊழ்வினைப்பயனென்று சிறிதுங்கருதார் என்றபடி]; (எ - று.)

கடவுளினது நிக்கிரகரூபமான சங்கல்பத்திற்குக்காரணமாகும் வினை பாபமென்றும், அநுக்கிரகரூபமான சங்கல்பத்திற்குக் காரணமாகும் வினை புண்யமென்றும் சொல்லப்படும் ; புண்ணியத்தின்பயனாகச் செல்வமும், பாவத்தின் பயனாக வறுமைமுதலிய துன்பங்களும் நேர்கின்றன ; உண்மை இவ்வாறிருக்க, இதனை அறியாத உலகத்துமனிதர், தமக்குத் தளர்வுநேர்ந்தால்மாத்திரம் அது விதியின்கொடுமையால் நேர்ந்ததென்று அவ்விதியை வெறுத்தலும், செல்வவாழ்க்கை நேர்ந்தபோது தமதுவிதியின்பயனாகவே அதுவும்நேர்ந்ததென்று கருதாமல் தமதுதிறமையால் நேர்ந்ததென்று தம்மை மதித்துச் செருக்கூதலும் செய்கின்றனர் என்று அவர்களது அறிவின்மையை எடுத்துக் காட்டியவாறு. "செல்வம்வந்துற்றகாலைத் தெய்வமுஞ்சிறிதுபேணார்,...... வல்வினைவிளைவுமோரார் மண்ணின்மேல் வாழுமாந்தர்" என்றதும், "நன்றாங்கால்நல்லவாக்காண்பவ ரன்றாங்கா, லல்லற்படுவ தெவன்" என்ற திருக்குறளின் விசேடவுரையில், 'தாமே முன்செய்துகொண்டமையானும் ஊட்டாது கழியாமையானும் இரண்டும் இயைந்து அனுபவிக்கற்பால ; அவற்றுள் ஒன்றற்கு இயைந்துஅனுபவித்து ஏனையதற்கு அதுசெய்யாது வருந்துதல் அறிவன்று என்பதாம்' என்றதும் இங்குக் காணத்தக்கன. "மெய்த்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும், ஒத்திருக்கு முள்ளத்துரவோன்" என்றவாறு எப்போதும் ஒருநிலையில்நிற்றலே உத்தமர்களின் தன்மை யென்க.

துளவு - துளஸீ: வடசொல். முளரி - முள்ளாகிய அரையையுடையதெனத் தாமரைக்குக் காரணவிடுகுறிப்பெயர். நிற்ப உவந்தோன் என இயையும். களவு வந்தோன் என்றும்பிரிப்பர். ஈது - செய்யுளில் சுட்டு நீண்டுவந்தது.

94. காணப்பெற்றேன்கருவைப்பெருமானைக்களாநிழற்கீழ்ப்
பூணப்பெற்றேன்செய்யபொன்னடித்தாமரைபூணுமன்பு
பேணப்பெற்றேனவன்போாயிரங்களும்பேசப்பெற்றே
ஞணப்பெற்றேன்கொடும்பாவமென்பால்வந்துநண்ணுதற்கே.

(இ - ள்.) (யான்), கருவை பெருமானை - திருக்கருவைச் சிவபெருமானை, களா நிழல் கீழ் - திருக்களாவின்நிழலிலே, காண பெற்றேன் - தரிசிக்கப்பெற்றேன் ; செய்ய - சிவந்த, பொன் அடி தாமரை - (அப்பிரானது)

அழகிய திருவடித்தாமரைகளை, பூண பெற்றேன் - (தலையின்மீது) தரிக்கப் பெற்றேன்; பூணும் அன்பு-(அப்பெருமானிடத்துக்) கொள்ளவேண்டிய அன்பை, பேண பெற்றேன் - (என்னிடம்) பொருந்தப்பெற்றேன்; அவன் பேர் ஆயிரங்களும் - அவனது ஆயிரந்திருநாமங்களையும், பேச பெற்றேன் - உச்சரிக்கப்பெற்றேன்; கொடும் பாவம் என்பால் வந்து நண்ணுதற்கு - கொடிய தீவினை என்னிடம் வந்துசேர்தற்கு, நாண பெற்றேன் - கூச்சமடைந்தேன்.

பின்னர்க்கூறிய செயல்கட்கெல்லாங் காரணம் சிவபெருமானது தரிசனமே யாதலால், அதனை முன்னர் எடுத்துக்கூறினர். (கூச)

95. நண்ணலர்முப்புரம்விற்காமன்றன்புரநன்னகைத்தீக்
கண்ணனலேவிச்சுடுகளவீசர்கடலினஞ்சம்
விண்ணவர்வாழவருந்தியகாலையுமெய்யில்வைக்கும்
பெண்ணவளங்குவிலகாதொழிந்ததென்பேதைமையே.

(இ - ள்.) நண்ணலர் முப்புரம் - பகைவர்களாகிய அசுரர்களது மூன்று பட்டணங்களையும், வில் காமன் தன் புரம் - கரும்புவில்லையுடைய மன்மதனது உடம்பையும்,— (முறையே), நல் நகை தீ - நல்லசிரிப்பாகிய நெருப்பையும், கண் அனல் - நெற்றிக்கண்ணின் நெருப்பையும், ஏவி - பிரயோகித்து, சுடு - சுட்ட, களவீசர்—, விண்ணவர் வாழ - (அஞ்சிய) தேவர்கள் உயிர்வாழுமாறு, கடலின் நஞ்சம் - பாற்கடலில்தோன்றிய (ஆலாகல) விஷத்தை, அருந்திய காலையும் - உட்கொண்டபோதும், மெய்யில் வைக்கும் பெண்ணவள் - (தமது) உடம்பின் இடப்பாதியிற் கொண்டுள்ள உமாதேவியானவள், அங்கு - அவ்விடத்தினின்றும், விலகாது ஒழிந்தது - விட்டுச்செல்லாமல் (அங்கேயே) தங்கியிருந்தது, என் பேதைமையே - என்ன மடமைக்குணமோ? (எ - று.)

ஒருவன் நஞ்சுண்டால் அதனால் ஆபத்துநேர்தல் கண்கூடாகவிருக்க, சிவபெருமான் நஞ்சுண்டகாலத்தில் அப்பிரானது திருமேனியிற் செம்பாதியாக இருக்கின்ற உமாதேவி 'தனக்கும் ஆபத்து நேரக்கூடும்' என்று அஞ்சி விலகாமல் அப்போதும் உடன்இருந்தது என்னபேதைமையோ! என்று வஞ்சப்புகழ்ச்சியணி வகையால், இறைவருடம்பினின்று உமாதேவி எப்போதும் பிரியாது உடனுறையும் உறுதித்தன்மையை விளக்கியவாறு: இறைவனைச் சார்ந்தார்க்கும் நஞ்சு முதலியவற்றால் நலிவுபிறவாமை இங்கு விளங்குதல் காண்க. முப்புரங்களை நகைத்தீயினாலும் காமனதுஉடம்பைக் கண்ணனலினாலும் சுட்ட களவீசர் என்று முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். புரம் - பட்டணமும், உடம்பும். காலையும், உம்மை - உயர்வுசிறப்பு. (கூரு)

96. பேதாதிபேதப்பிறவிகடோறும்பிறந்திளைத்தேன்
மாதாவும்பெற்றுவளர்த்திளைத்தாள்கொடுமாமறலி
தூதாளுங்கொன்றிளைத்தான்களவீசவித்துன்பத்துக்கோ
ராதாரநின்னிருபாதாரவிந்தத்தடைவதுவே.

(இ - ள்.) களவீச—! (நான்),—பேதம் அதிபேதம் பிறவிகள் தோறும் - பலவகையிலும் வேறுபாட்டையுடைய பிறப்புக்களிலெல்லாம், பிறந்து - பல தரம் பிறந்துபிறந்து, இளைத்தேன் - சலிப்படைந்தேன்; மாதாவும் - (அவ்வப்பிறவியில் எனக்குத்) தாயாயிருந்தவளும், பெற்று வளர்த்து இளைத்தாள் - பெற்றுப்பெற்று வளர்த்துவளர்த்து மெலிந்தாள்; மா கொடு மறலி தூது ஆளும் - மிக்ககொடிய யமனது தூதனாகிய கிங்கரனும், கொன்று இளைத்தான் - (பிறவிதோறும் எனது) உயிரை வாங்கிவாங்கிச் சலித்துப் போனான்; இ துன்பத்துக்கு - இவ்வாறு ஓயாதுவருகின்ற துன்பங்களை நீக்குதற்கு, ஓர் ஆதாரம் - ஒப்பற்ற துணையாவது, நின் இரு பாத அரவிந்தத்து அடைவது - உனது இரண்டு திருவடித்தாமரைகளிற் சேர்வதேயாம்; (எ - று.)

சிவபெருமானது திருவடிகளை யடைவதே பிறவித்துன்பங்கள் நீங்கி நற்கதிபெறுதற்கு உபாயமா மென்பது, கருத்து. யான் சிவபிரானது திருவடியைச் சேர்ந்ததனால், இனி எனக்கும் பிறக்கும்படி நேராது; தாயர்கட்கும் பெற்றுவளர்க்குஞ் சிரம மிராது; யமதூதர்க்கும் எனது உயிரைவாங்குகின்ற சிரமம் ஒழியு மென்பது, இங்குப் போதரும். பேதாதிபேதம் - பேத அதிபேதம் எனப் பிரிக்க: பேதமாவது - ஓரினத்திற்குள் நிகழும் வேறுபாடு; அதாவது - தேவசாதியாருள் வித்தியாதரர் யக்ஷர் கந்தர்வர் கின்னரர் என்றாற் போல்வது: இது, ஸஜாதீயபேத மெனப்படும். அதிபேதமாவது - வேறுபாடுடைய இனத்திற்குள் தோன்றும் வேறுபாடு: அதாவது - தேவர் மக்கள் விலங்கு புள் என்றாற் போல்வது: இது - விஜாதீயபேத மெனப்படும். துன்பத்துக்கு ஓராதாரம் - "துன்பத்திற்கு யாரே துணையாவார்" என்றாற் போல நின்றது. (கூசு)

97. அடையும்படிக்கோருறுதிகிட்டாமலகலிடத்தே
மிடையுஞ்சமயப்படுகுழிவீழ்ந்துமெலிந்துமன
மிடையும்பருவத்துமெய்ஞ்ஞானக்கண்டந்தெனைப்புரந்த
கடையும்படைவிழியொப்பனையாண்மனக்காதலனே.

(இ - ள்.) சமயம் படுகுழி வீழ்ந்து - புறச்சமயங்களாகிய படுகுழியிலே விழுந்து, மெலிந்து - தளர்வடைந்து, மனம் இடையும் பருவத்து - மனங் கலங்குஞ்சமயத்தில், அடையும் படிக்கு - (சிவபிரானாகிய தன்னைச்) சேர்ந்து உய்யுமாறு, ஓர் உறுதி கிட்டாமல் - ஒருபற்றுக்கோடுங் கிடைக்கப்பெறாமல், அகல் இடத்து - (நான்) விலகிப்போகக்கூடிய தருணம் நேரும்போது,— எனை புரந்த கடையும் படை விழி ஒப்பனையாள் மனம் காதலன் - என்னைப் பாதுகாத்தற்குஉரிய அராவியவேற்படைபோன்ற கண்களையுடைய ஒப்பனையம்மையின் மனவிருப்பத்திற்கு உரியவனாகிய சிவபெருமான், மெய் ஞானம் கண் தந்து - (எனக்கு) உண்மையறிவாகிய கண்ணைக் கொடுத்து, மிடையும் - (அருள்கொண்டு) நெருங்கினான்; (எ - று.)

யான் உண்மையான சற்சமயம் இதுவென்று உணராது தடுமாற்றங் கொண்டு பலவகைச்சமயங்களிலும் புகுந்து சிவபிரானாகிய பற்றுக்கோட்

டைக் கைவிட்டு உறுதிப்பொருள்கிடையாது தடுமாறி வருந்துங்காலத்தில், காரணமின்றி யெழுந்த தனது பெருங்கருணையினால், சிவபெருமான் எனக்கு மெய்ஞ்ஞானத்தையளித்து என்னிடத்துச்சேர்ந்தன னென்பதாம். தன்னில் அகப்பட்டார் ஈடேறுதல் அருமையாதல்பற்றி, பிறசமயத்தைப் படுகுழி யென்றார். உண்மையைக்காணுதற்கு ஞானமே கருவியாகநிற்றலால், அதனைக் கண் என்றல், மரபு. காதலன் மிடையும் - செய்யுமென்முற்று ஆண்பாலுக்கு வந்தது. 'மிடைந்தான்' என இறந்தகாலத்தாற் கூறவேண்டியவிடத்து நிகழ்கால எதிர்காலங்கட்குஉரிய செய்யுமென் வாய்பாட்டு முற்றாகிய 'மிடையும்' என்ற சொல்லாற் கூறியது - இயல்பினால்வந்த காலவழுவமைதியாம்.

98. காதல்விளைத்துத்துணைசெய்தவேளுடல்கட்டழித்த
கோதமனத்திற்குறித்துக்கொலோகுலவெற்புதவு
மாதுமையொப்பனைபால்வண்ணனேநின்வடிவிலொரு
பாதிதனக்குவடிவிருப்பாகப்பறித்ததுவே.

(இ - ள்.) பால் வண்ணனே - திருக்கருவைச்சிவபெருமானே !—குலம் வெற்பு உதவும் - அஷ்டகுலாசலங்களுளொன்றாகிய இமவான் பெற்ற, மாது உமை - உமாதேவியாகிய, ஒப்பனை - ஒப்பனையம்மை,—காதல் விளைத்து - (தன்னிடத்துச் சிவபிரானுக்கு) ஆசையையுண்டாக்கி, துணைசெய்த - (தனக்கு) உதவிசெய்த, வேள் - மன்மதனது, உடல் - உடம்பை, கட்டு அழித்த - (நெற்றிக்கண்ணினால்) உருக்குலைத்ததுபற்றித் (தனக்குத்) தோன்றிய, கோதம் - கோபத்தை, மனத்தில் குறித்து கொல் ஓ - தன்மனத்திற் கொண்டு தானோ, நின் வடிவில் - உனது திருமேனியில், ஒருபாதி - ஒருபாதிபாகத்தை, தனக்கு வடிவு இருப்பு ஆக - தனதுஉடம்பாக அமையுமாறு, பறித்தது - கவர்ந்துகொண்டது ? (எ - று.)

உமாதேவி பிருங்கிமுனிவரால் தனக்கு நேர்ந்த அவமானத்தைப் பொறுக்கமாட்டாமல் தவஞ்செய்து சிவபிரானது திருமேனியின் ஓர்பாகத்தில் இடைவிடாது தான் உடனுறைதலைக்குறித்து, தனைக்குத் துணையாக நின்று சிவபிரானுக்குக் காதலைவிளைத்த மன்மதனை அச்சிவபெருமான் எரித்து அழித்த கோபத்தால் அப்பிரானது திருமேனியிற் பாதிபாகத்தைக் கவர்ந்தனளென வேறொருகாரணங் கற்பித்துக்கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியின்பாற்படும். (இந்நூலாசிரியர் மற்றோரிடத்தில் சிவபிரானது திருமேனி பாதியாதற்குக் காரணத்தை "ஏறுபட்டுங் கல்லா லிருஞ்சிலையா லெற்றுண்டும், மாறுகட்டமாற்றாலடியுண்டும் - ஊறுபட்ட, வாதையாலோ கருவைவாணனே பொன்மேனி, பாதியாய்த்தேய்ந்தாய் பகர்" என்று வருணித்துக்கூறுவர்.) கோதம்=க்ரோதம் ; வடசொல். (கூஅ)

99. பறியாவினையைப்பறித்திலன்யாற்றிநின்பாதமன்றி
யறியாவறிவளித்தாண்டவனேயடியேனுக்குன்னைப்
பிறியாவரமன்றிவேண்டுவதில்லைபிரசமலர்
வெறியார்களாவினிழற்கீழ்நிலைபெற்றமெய்ப்பொருளே.

(இ - ள்.) பறியா வினையை - களையப்படாத [அநுபவித்தே தீரவேண்டிய] இருவினைகளையும், பறித்திலன் - தீர்த்தற்குஉரிய உபாயத்தை நாடாமல் வெறுமனே இருந்தேனாக[நான்ஒருமுயற்சியுஞ் செய்யாதிருக்கையில்],மாற்றி- (அவ்வினைகளை) ஒழித்து, நின் பாதம் அன்றி - உனது திருவடிகளையல்லாமல், அறியா - (வேறொன்றையும்) அறியாத, அறிவு - உண்மையறிவை, அளித்து- (எனக்குக்) கொடுத்து, ஆண்டவனே - (என்னை) அடிமைகொண்டவனே! பிரசம் மலர் - தேன்நிறைந்த மலர்களின், வெறி ஆர் - நறுமணம் நிறைந்த, களாவின் நிழல்கீழ் - திருக்களாமரத்தின் நிழலிலே, நிலை பெற்ற - நிலையாக எழுந்தருளியுள்ள, மெய் பொருளே - எப்போதும் அழியாத கடவுளே!— அடியேனுக்கு - (உனது) அடியவனாகிய எனக்கு, உன்னை பிறியா வரம் அன்றி - உன்னைவிட்டு நீங்காத வரமேயல்லாமல், (வேறொன்றும்), வேண்டுவது இல்லை - வேண்டாம்; (எ - று.)

உன்னைப்பிரியாது நிற்கும் வரமொன்றையே அடியேனுக்குத் தந்தருளவேண்டுமென்று சிவபிரானை வேண்டியவாறு. 'பறித்தலன்மாற்றி' என்று பாடங்கொண்டு, பறித்து - (எனதுவினைகளை) அழித்து, அ(ல்)லல் மாற்றி - (பிறவித்துன்பங்களை) ஒழித்து என்று பொருளுரைப்பாருமுளர். (கக)

100. பொருள்காட்டிமாசற்றபோதமுங்காட்டியப்போதநல்கு
மருள்காட்டிச்சந்ததமானந்தங்காட்டியடர்ந்தகங்கு
லிருள்காட்டும்பூங்குழலொப்பனைபாகவிருளறுத்துத்
தெருள்காட்டிப்பாதமலர்சூட்டவென்றலைசீர்பெற்றதே.

(இ - ள்.) அடர்ந்த - நெருங்கிய, கங்குல் இருள் காட்டும் - இரவின் இருளை யொத்து மிகக்கறுத்துத்தோன்றுகின்ற, பூ குழல் - பூவையணிந்த கூந்தலையுடைய, ஒப்பனை - ஒப்பனையம்மையை, பாக - (வாம)பாகத்தி லுடையவனே!—(எனக்கு), பொருள் காட்டி - உண்மைப்பொருளை (இன்னதென்று) தெரிவித்து, மாசு அற்ற போதமும் காட்டி - (அப்பொருளையறிதற்குஉரிய) குற்றமற்ற தத்துவஞானத்தையும் உண்டாக்கி, அ போதம் நல்கும் அருள் காட்டி - அந்த நல்லறிவினாலுண்டாகின்ற (உனது) விசேஷமான கருணையையும் (என்னிடத்துத்) தோற்றுவித்து, (பிறகு), சந்ததம் ஆனந்தம் காட்டி - எப்போதும் (உன்னையே சிந்தித்தலாலாகிய) பரமாநந்தத்தையும் உண்டாக்கி, இருள் அறுத்து - (அவிச்சையாகிய) இருளை அடியோடொழித்து, தெருள் காட்டி - (மனத்தில்) தெளிவை யுண்டாக்கி, பாதம் மலர் சூட்ட - (உனது) திருவடித்தாமரைமலரைச் சூட்டியதனால், என் தலை - எனது சிரசு, சீர் பெற்றது - சிறப்பை யடைந்தது; (எ - று.)

சிவபெருமான் காரணமின்றியெழுந்த தன்பெருங்கருணையால் உண்மைப்பரம்பொருளையறிவித்தல் முதலிய நல்லருட்காரியங்களை யுண்டாக்கி என்தலைமீது தனது திருவடிகளைப் பொறித்ததனால், எனது தலை தான் பெறுதற்குஉரிய நற்பயனைப் பெற்றுச் சிறப்படைந்த தென்பதாம். காட்டும் - உவமவுருபு. (க00)

திருக்கருவைக்கலித்துறையந்தாதி முற்றிற்று.

## திருக்கருவைக்கலித்துறையந்தாதி

# செய்யுள்முதற்குறிப்பகராதி.


| செய்யுள். | பக்கம். |
|---|---|
| அஞ்செழுத்தோதி | ...51 |
| அடியேனினைவுக் | ...29 |
| அடைக்கில | ...47 |
| அடையும்படிக் | ...87 |
| அருமறையோதி | ...26 |
| அருவிப்புனலிற் | ...78 |
| அல்லும்பகலு | ...17 |
| அழுக்கற்ற | ...81 |
| அளியுமளி | ...10 |
| ஆரியன் | ...65 |
| இடங்கொண்ட | ... 6 |
| இருக்கும்புராண | ...27 |
| இல்லாமைதுன்ப | ...24 |
| இழியும்பிறவிப் | ...74 |
| இறையவனே | ...77 |
| உணங்குந் | ...27 |
| உத்திப்புயங்கத் | ...40 |
| உருவாயுருவி | ...35 |
| உலகத்திலுள்ள | ..71 |
| உவராழி | ...74 |
| உளர்தெளியும் | .. 83 |
| உள்ளக்கமலத் | ...11 |
| உன்கருத்தே | ...77 |
| என்செயலாவதி | ...82 |
| எத்தியமூவர் | ...43 |
| கடல்விட | .. 66 |
| கண்கொண்டு | ...18 |
| கண்டேன் | ...23 |
| கயங்கொண்ட | ...83 |
| கருத்துறு | . 51 |
| கறைகொண்ட | ...68 |
| காணப்பெற்றேன் | ...85 |
| காதல்விளைத்துக் | ...88 |
| காரணனே | ...46 |
| கைவிட்டுக் | ...39 |
| கொடியாடும் | ...59 |
| கொடுங்கால | ...34 |
| கொண்டாளப் | ...38 |
| கொழுந்தும்பை | ...28 |
| கொற்றக்கவிகை | ...64 |
| கோலமெடுத்துப் | .. 49 |
| சங்கக்குழையனே | ...55 |
| சதுரான | ...16 |
| சிந்தித்துருகி | .. 71 |
| சிரணி | ... 5 |
| சுடர்கின்ற | ...70 |
| செய்யன்கரிய | .. 25 |
| செல்வச்செருக்கர் | ...41 |
| தகனம்படுத்தி | ...81 |
| தளர்வுவந் | ...84 |
| தாளாலுதை | ...19 |
| திருவுந் | ... 8 |
| தீட்டும் | ... 3 |
| தீவினைசெய்து | ...79 |
| துணைக்கோல | ...76 |
| தூயபங்கேருகன் | ...73 |
| தேசிகனுக் | ...54 |
| நண்ணலர் | ..86 |
| நல்காதொழியினு | ...53 |
| நாயினுந்தீய | ...57 |
| நாற்றடந்தோ | ...37 |
| நின்றுள்வழுத்த | ...39 |
| நீளமடுத்த | ...69 |
| படியிற்பிறந்து | ...52 |
| பரகதிக்கே | ...31 |
| பரஞ்சுடர் | ...62 |
| பவககடல் | ...72 |
| பறியாவினையை | ...88 |
| பாடுவதுன் | ...57 |
| பாதாரவிந்தமுஞ் | ...22 |
| பாரிடஞ்சூழ்வர | ...65 |
| பால்வண்ணனு | ...50 |
| புகுவதுமூப்பு | . 14 |
| புண்ணிய | ...30 |
| புரந்தரன் | ...44 |
| புல்லியர்தீய | ...80 |
| பூண்டவராவும் | ... 9 |
| பூதகணத்தொடு | ...42 |
| பெருங்காலெறிய | ...55 |
| பெற்றேனொருவர் | ...33 |
| பேதாதிபேதப் | ...86 |
| பொருள்காட்டி | ...89 |
| பொறியும்புலனுங் | ...48 |
| போற்றிப்பணியு | ...59 |
| மனப்பகை | ...67 |
| மன்றிடத்தே | ...60 |
| மாமலரன்றிக் | ...45 |
| மின்கொண்ட | ...63 |
| முகலிங்கன் | ...16 |
| முத்திக்கொரு | ...76 |
| மெலிவிக்கு | ...13 |
| வண்ணங்கரிய | ...61 |
| வழுத்துதல் | ...32 |
| வாழ்த்திட | ...12 |
| வாழ்விப்பர் | ...75 |
| வானவரிந்திர | ...42 |
| விடத்தக்க | ...36 |
| விண்ணிடு | ...21 |
| வேண்டிய | ...58 |
| வேதியனே | ...34 |
| வையந்தொறுங் | ... 7 |

ஸ்ரீ

# திருக்கருவைவெண்பாவந்தாதி.

'திரு' என்னும் பலபொருளொருசொல், வடமொழியிலே 'ஸ்ரீ' என்பது போல, தமிழிலே தேவர்கள், அடியார்கள், ஞானநூல்கள், மந்திரங்கள், புண்ணிய ஸ்தலங்கள் முதலிய மேன்மையையுடைய எப்பொருள்களுக்கும் விசேஷணபதமாகி, அவற்றிற்குமுன் மகிமைப்பொருளை உணர்த்திவரும்: ஸ்ரீஅனந்தேசுவரர், ஸ்ரீமாணிக்கவாசகர், ஸ்ரீவாதுளாகமம், ஸ்ரீபஞ்சாக்ஷரம், ஸ்ரீசாலிவாடிபுரம், ஸ்ரீபாதம் எனவும்; திருமுருகர், திருநாளைப்போவார், திருக்கோவையார், திருவைந்தெழுத்து, திருநெல்வேலி, திருவடி எனவும் வழங்குமாற்றால் அறிக; இதனை ஸ்ரீ என்பதன் சிதைவென்பாரு முளர். இங்கே, 'திரு' என்பது - கருவைக்கு அடைமொழி; வெண்பா வந்தாதிக்கு அடைமொழியாகவுமாம்.

கருவை - சிவஸ்தலங்களில் ஒன்று; இது, பாண்டியநாட்டைச் சேர்ந்த ஆரியநாட்டி லுள்ளது: கரிவலம்வந்தநல்லூர் எனப்படும். குலசேகரபாண்டியன் வேட்டையாடும்போது எதிர்ப்பட்ட ஒருயானையைத் துரத்த, அது வேகமாய்ப் போய்க் கடவுள்இருந்த புதரை வலமாகச்சென்று பிறகு சிவகணமாகப்பெற்றமையால், அத்தலம், இப்பெயர்பெற்றது. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபிரான் திருநாமம் - பால்வண்ணநாதர், முகலிங்கர், திருக்களாவீசர். அம்மை - ஒப்பனை தேவி. தலவிருக்ஷம் - திருக்களா.

வெண்பா வந்தாதி - வெண்பாக்களினால் அந்தாதித்தொடையால் நூறு பாடல் பாடுவது. 'கலித்துறையந்தாதி,' 'பதிற்றுப்பத்தந்தாதி என்னும் பிரபந்தங்களினும் வேறுபாடு விளங்குதற்கு, 'வெண்பாவந்தாதி' எனப்பட்டது. பதிற்றந்தாதி நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல் நூற்றந்தாதியாம். அதாவது - நூறுவெண்பாவினாலேனும், நூறுகட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுவது. இந்நூல் அந்தாதித்தொடையால் அமைந்த நூறுவெண்பாக்களை யுடையது. அந்தாதி - அந்தத்தை ஆதியாகவுடையது; வேற்றுமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை, வடமொழித்தொடர்: தீர்க்கசந்தி. அந்தாதியாவது - முன்நின்ற பாட்டின் இறுதியெழுத்தாயினும் அசையாயினுஞ் சீராயினும் அடியாயினும் பின்வரும் பாட்டின் முதலாக அமையும்படி பாடுவது. இங்ஙனம்பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையவைத்தல் மண்டலித்த லெனப்படும். இது - தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றும். சொற்றொடர்நிலைச்செய்யுள் பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்ற வகையில், இது - சொற்றொடர்நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும். எனவே, திருக்கருவையென்னுந் திருப்பதியைப் பற்றிப் பாடியதோர் நூலென்பது, பொருள்; அத்திருப்பதியில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானைப் பாடிய தென்பது, கருத்து.

ஆசிரியர் தொல்காப்பியனார், செய்யுளியலில் "விருந்தேதானும், புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்பதனால், 'விருந்துதானும் பழங்கதைமேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றாற் பலசெய்யுளுந் தொடர்ந்துவரத் தொடுக்கப்படும் தொடர்நிலைமேலது' என்று கூறினமையின், இவ்வந்தாதி அங்ஙனம் கூறிய விருந்தாமென்று உணர்க; இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திரரூபமானது. இதனை 'குட்டித்திருவாசகம்' என வழங்குவது முண்டு.

## அதிவீரராமபாண்டியர்.

இந்நூலாசிரியராகிய அதிவீரராமபாண்டியர் என்பவர், தென்னாட்டில் தென்காசியிற் செங்கோல்செலுத்திய சந்திரவம்சத்துச் சிற்றரசர்களில் ஒருவர். இவர்காலம் ஏறக்குறைய ஆயிரம்வருஷங்களுக்கு முன்பென்றும், இவருடைய ஜ்யேஷ்ட சகோதரரது பெயர் வரதுங்கராமபாண்டிய ரென்றும், அவர் திருக்கருவையில் அரசாண்டுகொண்டிருந்தன ரென்றுங் கூறுவர். இவர்செய்த வேறு நூல்கள் - நைடதம், கூர்மபுராணம், இலிங்கபுராணம், காசிகாண்டம், திருக்கருவைக்கலித்துறையந்தாதி, திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி, நறுந்தொகை எனப்படும் வெற்றிவேற்கை முதலியன. இவர் செய்துள்ள நூல்களால், இவர் இலக்கிய இலக்கணங்களிலும் பலவகைக் கலைஞான நூல்களிலும் மிகத் தேர்ச்சிபெற்ற மகாகவியென நன்றாகத்தெரிகின்றது. இந்நூல்களில் முதல் நான்கு நூல்களால், இவருக்கு வடமொழிப்பயிற்சி இருத்தல்வேண்டு மெனத் துணியப்படுகின்றது. திருக்கருவை விஷயமாக இவர் பாடிய மூன்று அந்தாதிகளாலும், இவருக்குப் பரமசிவனிடத்திலுள்ள மெய்யன்பு தெளிவாக வெளியாகின்றது. கொக்கோகம் எனப்படும் மதனநூலும் இவர்செய்ததென்பது, சிலர் கொள்கை.

இவர் இந்த அந்தாதிகள் இயற்றியதற்குக் காரணம்:—இவர்க்குக் காமவொழுக்கமிகுதியால் தொழுநோய் நேர்ந்ததுபற்றிக் கழிவிரக்கங்கொண்டு திருக்கருவைத்தலத்தில் வந்து சிவபிரான்மீது அந்தாதிகள் மூன்றையும் பாடித்துதித்த மாத்திரத்தில் அந்நோய் நீங்கப்பெற்று நற்கதிபடைந்தனர் என்று கூறுவர்.

இவர்க்குக் கல்விகற்பித்த ஆசிரியர்—சுவாமிநாததேவர், தீக்ஷாகுரு—அகோரசிவாசாரியர். இந்த இரண்டு ஆசிரியரையும் பற்றித் தாம் பாடிய சில நூல்களில் வணக்கங் கூறியுள்ளார்.

## காப்பு.

காப்பு - காத்தல்; அது - இங்கு, காக்கின்ற கடவுள் விஷயமான வணக்கத்துக்குத் தொழிலாகுபெயர்: ஆகவே, கவி தமக்குநேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமதுஎண்ணத்தை முடிக்கவல்லதோர் பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திரம் என்பது கருத்து. கடவுள்வணக்கம், இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்க மென்றும், ஏற்புடைக்கடவுள்வணக்க மென்றும். வழிபடுகடவுள் வணக்கமாவது - தாம்தாம் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கின்ற கடவுளை வணங்குதல். இதற்கு உதாரணம் - வைஷ்ணவசமயத்தார் விஷ்ணுவையும், சைவமதத்தவர் சிவனையும் வணங்குதல் போல்வன. ஏற்புடைக்கடவுள்

வணக்கமாவது - தாம்தாம் செய்ய எடுத்துக்கொண்ட காரியத்துக்குத் தகுதியை யுடைய கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - இராமாயணங் கூறுபவர் இராமனையும், கந்தபுராணமுரைப்பவர் சுப்பிரமணியமூர்த்தியையும் வணங்குதல் போல்வன. இக்காப்புச்செய்யுள், சிவபிரானது மூத்த்திருக்குமாரரான விநாயக ரைப் பற்றியது. சைவசமயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இக்காப் புச்செய்யுள் தம்மைச் சரணமடைந்தவர்கள் தொடங்குந் தொழில்கட்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும், தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம் பிக்கின்ற செய்கைகட்குப் பலஇடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேச் வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தியைக் குறித்ததாதலால், வழிபடுகடவுள்வணக்கமாம்.

நண்பான தென்கருவை நாதனார் தம்பேரில்
வெண்பாவந் தாதி விளம்பவே—பண்பாக
மைம்மலையு மெய்ம்மலையு மாற்று புகழ்படைத்த
கைம்மலையு மாமுகத்தோன் காப்பு.

(இ - ள்.) நண்பு ஆன - (அடியார்கள்பக்கல்) அருளுடையவராகிய, தென் கருவை நாதனார்தம் பேரில்-அழகிய திருக்கருவைப்பதியில் எழுந்தருளியிருக்கிற (யாவர்க்கும்)தலைவராகிய சிவபெருமான் விஷயமாக, வெண்பா அந்தாதி - வெண் பாக்களாற்செய்யும் அந்தாதியென்னும் பிரபந்தத்தை, விளம்ப - சொல்லும்பொரு ட்டு,—பண்பு ஆக - தகுதியாக, மை மலையும் - ஆணவமாகிய மலையையும், மெய் மலையும் - மாயையாகிய மலையையும், மாற்று - நீக்குகிற, புகழ் படைத்த -கீர்த்தி யைப்பெற்ற, கை மலையும் மா முகத்தோன் - கையையுடைய விலங்காகிய யானை யின் முகத்தையுடைய விநாயகக்கடவுள், காபபு - (எனக்குக்) காவலாவர்;(எ-று.)

தென் கருவை - தென்னாட்டிலுள்ள கருவையுமாம். மை - ஆணவம்; ஞானத் தைமறைப்பது. மெய்-மாயை; தனுகரணபுவனபோகங்களுக்குக் காரணமானது. மும்மலங்களுள் இவ்விரண்டுகூறவே, மற்றொன்றாகிய கன்மமும் அடங்கும். அளக்கலாகாத அளவுடைமையும் எளிதில் அசைக்கவொண்ணாத நிலையுடைமை யும் பற்றி, மலங்கள் மலை யெனப்பட்டன. மலைதல் - சூடுதல், உடைத்தாதல்.

---

நூல்.

க. சீரணிந்த தென்கருவைச் செல்வனே யொப்பனையாள்
வாரணிந்த கொங்கை மணந்தோனே—காரணிந்த
கண்டனே நின்பொற் கழலல்லாற் காதலித்த
தொண்டனேற் குண்டோ துணை.

(இ - ள்.) சீர் அணிந்த - சிறப்புப்பொருந்திய, தென் கருவை - அழகிய கரு வையில் எழுந்தருளிய, செல்வனே - எல்லா ஐசுவரியங்களையு முடையவனே! ஒப்பனையாள் - அழகையுடைய உமாதேவியின், வார் அணிந்த - கச்சைப்பூண்ட, கொங்கை - தனத்தை, மணந்தோனே - கூடினவனே! கார் அணிந்த - (நஞ்சுண் டதனால்) கருமையைப்பொருந்திய, கண்டனே - திருக்கழுத்துடையவனே!

நின் பொன் கழல் அல்லால் - உனது அழகிய திருவடிகளேயல்லாமல், கீர்த்தித்த தொண்டனேற்கு - (அதனையே எப்பொழுதும்) விரும்பிய அடியவனாகிய எனக்கு, துணை —, உண்டோ - வேறு உளதோ? (எ - று.) — இல்லையென்றபடி.

எல்லா நூல்களும் மங்கலமொழி முதல் வகுத்துக் கூறவேண்டுதலால், 'சீர்' என்று தொடங்கினர். "வழிபடு தெய்வவணக்கஞ்செய்து, மங்கலமொழி முதல் வகுத், தெடுத்துக்கொண்ட விலக்கண விலக்கியம், இடுக்கணின்றி யினிதுமுடியும்", "சீர் மணி பரிதி யானை திரு நில முலகு திங்கள், கார் மலை சொல் லெழுத்துக் கங்கை நீர் கடல் பூத் தேர் பொன், ஏருறு மிவை மூவாறும் இதன்பரியாயப் பேரும், ஆரு மங்கலச்சொல் செய்யுளாய்ந்து முன்வைக்க நன்றாம்" என்பன நோக்குக. ஒப்பனை - அலங்காரம்; உடையவளுக்குப் பண்பாகுபெயர். ஒப்பனையென்பது, திருக்கருவைப்பிரானது தேவியார் திருநாமமென்பர். திருப்பாற்கடல் கடைந்தகாலத்து அதனினின்று உண்டான ஆலாகலவிஷத்தைக் கண்டு அஞ்சியோடின தேவர்களின் வேண்டுகோளால் சிவபிரான் அதனை உண்டு கண்டத்தில் நிறுத்தியதனால், 'காரணிந்தகண்டன்' என்றார். 'காரணிந்தகண்டன்' என்றதனால் - செய்தற்கரிய செயல்களைச் செய்தாயினும் தன்னடியார்களின் ஆபத்தைத் தீர்த்தருளுந் தன்மை விளங்கப்பட்டது. பொற்கழல் - பொன்னாலாகிய கழலென்னும் அணியை அணிந்த அடி யென்றுமாம். (க)

உ. துணைவியொடு மால்விடைமேற் றோன்றிவினை நீக்கி
யிணைமலர்த்தா ளென்சிரத்தி லேற்றிப்—பணிவிடைக்கு
வேண்டாத வென்னை வலியவிலை கொண்டுதடுத்
தாண்டான் கருவை யரன்.

(இ - ள்.) கருவை - கருவையில் எழுந்தருளிய, அரன் - பரமசிவன், — துணைவியொடு - தன்மனைவியான உமாதேவியுடன், மால் விடைமேல் - பெரியவிருஷபத்தின்மேல், தோன்றி - எழுந்தருளி (எனக்குத்தரிசனந்தந்து), வினை நீக்கி - (எனது) கருமங்களைப் போக்கி, இணை மலர் தாள் - ஒன்றோடொன்றொத்த [வேறுஉவமைபெறாத] தாமரைமலர்போலுந் திருவடிகளை, என் சிரத்தில் ஏற்றி - எனது தலையின்மேல் வைத்து, பணிவிடைக்கு வேண்டாத - (அவ்வெம்பெருமானுக்குத் திருத்தொண்டுகள்செய்ய விரும்பாத, என்னை —, வலிய - பலாத்காரமாக [தானாகவே], விலை கொண்டு - விலைகொடுத்துவாங்கின அடிமையாகக்கொண்டு, தடுத்து - (யான் தீயவழியிற் செல்வதைத்) தடைசெய்து, ஆண்டான் - காத்தருளினான்; (எ - று.) — இது என்ன திருவருள்! என்று அதன் அருமைபெருமைகளை வியந்தபடி.

மால்விடை - திருமாலாகிய விருஷபமென்றுங் கூறுவர். இணைத்தாள் - உபயபாதமுமாம். அரன் - ஹரன்; (தன்னை அடைந்தவர்களின் துன்பங்களனைத்தையும்) அழிப்பவன். நல்வினையும் பிறப்பிற்கு ஏதுவாய் நின்று முத்திக்குத் தடையாதலால், பொதுப்பட, 'வினைநீக்கி' என்றார். "இருள்சேரிருவினையுஞ் சேரா" என்று திருவள்ளுவர் கூறுவதும் இதுபற்றியே. தேவஜந்மம் நல்வினைப் பயனாற் பெரிதும் இன்பம் நுகருமாறு நேர்வதாயினும் அத்தேவர்களும் அந்நல்வினை முடிந்தவளவிலே அவ்வுடம்புஒழிய மீளவும் இவ்வுலகத்திற் கருமவசத்

திற்கேற்ப வேறுபிறவி கொள்பவராதலும், உயிரைப் பந்தப்படுத்துவதிற் பொன் விலங்கும் இருப்புவிலங்கும்போலப் புண்ணியஜன்மமும் பாபஜன்மமும் சமமேயாதலும், இவ்விருவகைக் கருமங்களையும் முற்றும் ஒழித்தவர்களே சிற்றின்பத்துக்கும் பெருந்துன்பத்துக்குமே இடமான எழுவகைப்பிறப்புக்களிலும் புகுதாமற் பேரின்பத்துக்கே இடமான மீளாவுலகமாகிய முத்தியிற் சேர்ந்து மீளவும்பிறத்தலிலராவரென்பதும் உணர்க. (உ)

௩. அரவணிந்த தென்கருவை யாளுடையான் வேதம்
பரவுங் களவிற் பரமன்—றிருவடியை
நேர்ந்தார்க் கணித்தாகு நேரா துளமயக்கஞ்
சேர்ந்தார்க்கு முத்தியது சேண்.

(இ - ள்.) அரவு அணிந்த - நாகங்களை ஆபரணமாகத்தரித்த, தென் கருவை - தென்கருவையில் எழுந்தருளிய, ஆள்உடையான் - (யாவரையும்) அடிமையாகவுடையவனும், வேதம் பரவும் - வேதங்களெல்லாம் புகழப்பெற்ற, களவின்-களா மரத்தின்கீழ் எழுந்தருளிய, பரமன் - சிறந்தகடவுளுமாகிய சிவனது, திரு அடியை—, நேர்ந்தார்க்கு - சரணமாகஅடைந்த அடியார்களுக்கு, முத்தி அது - மோட்சம், அணித்து ஆகும் - சமீபத்திலுள்ளதாம்; நேராது - (அதனை) அடையாமல், உளம் மயக்கம் சேர்ந்தார்க்கு - மனம்மயங்குதல்பொருந்தினவர்க்கு, சேண் - (அது) தூரத்திலுள்ளதாம்; (எ - று.)

அரவணிந்த கதை:—ஒருகாலத்திற் பரமசிவன் தம்மைமதியாத தாருகவனத்திலுள்ள முனிவர்களது மனநிலைமையைப் பரீக்ஷிக்க எண்ணித் தாம் ஒரு விடசங்கமத்திருவுருவங்கொண்டு அவரில்லந்தோறுஞ்சென்று பிக்ஷாடனஞ்செய்து தம்மைநோக்கிக் காதல்கொண்ட அம்முனிபத்தினியர்களது கற்பு நிலைமையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறுமற்கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்று செய்து அவ்வோமத்தீயினின்றும் எழுந்த நாகங்கள், பூதங்கள், மான், புலி, முயலகன், வெண்டலை முதலியவற்றைச் சிவனைக்கொன்றுவரும்படி ஏவ, சிவபெருமான் தம்மேற்பொங்கிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தமது கணங்களாகவுங் கொண்டு, மானைக் கையிலேந்தி, புலியைத் தோலை உரித்துஉடுத்து, முயலகனை முதுகிற்காலால்ஊன்றி, வெண்டலையைக் கையிற்பற்றிச் சடைமேல் அணிந்து, அவற்றையெல்லாம் பயனிலவாகச்செய்து விட்டன ரென்பதாம்.

இங்கு மயக்கமாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனுங் கடவுளும் இல்லையெனவும் மற்றும் இத்தன்மையனவுஞ் சொல்லும் மயக்கநூல்வழக்குக்களை மெய்ந்நூல்வழக்கென்று துணிதல்; மயக்கம், மருள், விபரீதஞானம், அவித்யைஎன்பன ஒருபொருட்சொற்கள். முத்தியது என்னும் எழுவாய், முன்வாக்கியத்திலுங்கூட்டப்பட்டது; 'அது' - முதல்வேற்றுமைச் சொல்லுருபு, 'சேண்' என இடத்திலுள்ளதை இடமாக உபசரித்தார். இனி, முத்தி சேணது என்றுமாம். (௩)

௪. சேணிற் கொடிநுடங்குந் தென்கருவை யம்மானே
கோணைப் பிறையணியுங் கோமானே—பேணித்
தொடுக்குங் கவிதைத் தொழும்பனுக்கு வந்த
இடுக்கண் களையாத தென்.

(இ - ள்.) கொடி - துவசங்கள், சேணில் - ஆகாயத்தில், நுடங்கும் - அசையப்பெற்ற, தென் கருவை - தென்கருவையில் எழுந்தருளிய, அம்மானே - தலைவனே! கோணை - வளைந்தவடிவமாகிய, பிறை - ஒற்றைக்கலையிளஞ்சந்திரனை, அணியும் - (திருமுடியில்) தரித்த, கோமானே - கடவுளே! பேணி - விரும்பி [பத்திகொண்டு], கவிதை - பாடல்களை, தொடுக்கும் - (உன்விஷயமாகப்) பாடுகின்ற, தொழும்பனுக்கு - அடியவனாகிய எனக்கு, வந்த - நேர்ந்த, இடுக்கண் - பிறவித்துன்பங்களை, களையாதது - (நீ) நீக்காதது, என் - யாதுகாரணம்? (எ று.)

பத்தியுடைய அடியார்களது துன்பங்களையெல்லாந் தொடர்ச்சியறத் தொலைத்தல் அருளுடைய கடவுளுக்குக் கடமையன்றோ வென்றபடி. 'சேணிற் கொடிநுடங்கும்' என அந்நகரத்து மாடமாளிகை மதில் முதலியவற்றின் உயர்ச்சியைக் கூறினார். கோணை, ஐ - சாரியை. தன்திருவடிகளை அடைந்தார்க்குக் குறைதீர்த்து அருளுந் தன்மைய னென்பது தோன்ற 'கோணைப்பிறையணியுங் கோமான்' என்றார். இடுக்கணுவது - மலர்ந்தநோக்கமின்றி மையல்நோக்கம்படவருந் துன்பம்; இடுங்குகண் என்பதன் சம்பந்தத்தால் வந்த பெயர்.

பிறையணிந்த கதை:—சந்திரன் தக்ஷமுனிவரது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழுநக்ஷத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டு, அவர்களுள் உரோகிணியென்பவளிடத்து மிகவுங்காதல்கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங் கூடிவாழ்ந்திருக்க, மற்றை மகளிரது வருத்தம்நோக்கித் தன்னை 'க்ஷயமடைவாயாக' என்று சபித்த அம்முனிவர்சாபத்தாற் சந்திரன் பதினைந்துகலைகளுங் குறைந்து மற்றைக்கலையொன்றையும் இழப்பதற்குமுன்னஞ் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்கூர்ந்து அவ்வொற்றைக்கலையைத் தந்தலையில் அணிந்து மீண்டுங்கலைகள்வளர்ந்துவரும்படி அனுக்கிரகித்தா ரென்பதாம். (௪)

ரு. என்னெஞ்சில் வைத்தற் கினியதவம் யாதுசெய்தேன்
பொன்னஞ் சிலையாற் புரமெரித்த—முன்னவனே
யன்னம் பயில்கருவை யானே யரவுதொழப்
பொன்னம் பலத்தாடும் பூ.

(இ - ள்.) பொன் அம் சிலையால் - அழகிய பொன்மலையாகிய வில்லினால், புரம் - மூன்றுபட்டணங்களை, எரித்த - அழித்த, முன்னவனே - முதற்கடவுளே! அன்னம் பயில் கருவையானே-அன்னப்பறவைகள் சஞ்சரித்தற்கு இடமான கருவைக்கு நாதனே!—அரவு தொழ-ஆதிசேஷனது அம்சமாகிய பதஞ்சலி பகவான் வணங்கும்படி, பொன் அம்பலத்து - பொன்மயமான சபையில் [சிதம்பரத்தில்], ஆடும் - நர்த்தனஞ்செய்த, பூ - (உனது) தாமரைமலர்போலுந் திருவடிகளை, என் நெஞ்சில் வைத்தற்கு - எனது மனத்திலே (எப்பொழுதும்) வைத்துக்கொண்டு தியானிப்பதற்கு, இனிய தவம் யாது செய்தேன் - நல்ல எந்தத் தவத்தை (முற்பிறப்பிற்) செய்தேனோ? (எ - று.)

என்றது, இப்படிப்பட்டமகாபாக்கியம் முற்பிறப்பிற் பெருந்தவஞ்செய்தார்க்கன்றி எளிதிற் கூடா தாதலின்; அன்றிக்கே, யாதொருநல்வினையுஞ் செய்யாத யான் உன்திருவடியை எப்பொழுதுந் தியானிக்கப் பண்ணினது காரணமில்லாம

வியல்பாகவே யுண்டாகின்ற உனதுகருணையினாலேயன்றி வேறன்றென்பது கருத்தாகவுமாம். சிலையென்பதற்கு - இரட்டுறமொழிதலால், மலையென்றும் வில்லென்றும் பொருள்கொள்ளப்பட்டது.

அன்னம் - ஹம்ஸமென்னும் வடமொழியின் திரிபு. 'அன்னம்பயில்கருவை' என அன்னங்கள் வந்துதங்கி வாழ்தற்கு இடமான தாமரையின் செழிப்புக்குக் காரணமாகிய நீர்வளச்சிறப்புக் கூறினார். தேவர்களுக்காகத் திருக்கைலாசத்திலும், காளிக்காகத் திருவாலங்காட்டிலும், பதஞ்சலிபகவான் வியாக்கிரபாதமுனிவர்களுக்காகச் சிதம்பரத்திலும், தடாதகைப்பிராட்டியார் திருக்கலியாணத்துக்கு வந்த மேற்கூறிய முனிவர்க்காகத் தென்மதுரையிலுந் திருநடனஞ்செய்தருளினதென அறிக. பூ - உவமவாகுபெயர். வைத்தற்கு - (நீ) வைப்பதற்கு எனவுமாம்.

புரமெரித்த கதை:— தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மயனென்பவனாற் சுவர்க்கமத்தியபாதாளமென்னும் மூன்றிடத்திலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரண்வகுக்கப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய மூன்று பட்டணங்களைப் பெற்று மற்றும்பல அசுரர்களோடும் அந்நகரங்களுடனே தாம்நினைத்த விடங்களிற் பறந்துசென்று பலவிடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால், சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசந்நத்தராகிச் சென்று போர்செய்ய யத்தனிக்கையில், தேவர்கள் தத்தமது வல்லமையை நினைந்து அகங்கரித்ததனை உணர்ந்து சினந்து அவர்களுதவியைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாமல், தாமே புன்சிரிப்புச்செய்து அசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளினரென்பதாம். (௬)

௭. பூமருவு வேதன் புயல்வண்ணன் கண்டறியாத்
தாம மணிமுடியுந் தாளிணையும்—யாமறிய
வாழுங் கருவை வளநகரில் வந்துநின்றான்
றாழுஞ் சடைக்களவீ சன்.

(இ - ள்.) தாழும் சடை-தாழ்ந்துதொங்குகின்ற (கபர்த்தமென்னுஞ்) சடையையுடைய, களஈசன்-திருக்களாமரத்தின்கீழெழுந்தருளிய சிவபெருமான்,—பூ மருவு வேதன் - (திருமாலின் நாபீகமல)மலரில் தோன்றிய வேதம்வல்ல பிரமனும், புயல் வண்ணன் - மேகம்போன்ற திருநிறமுடைய திருமாலும், கண்டு அறியா - தரிசித்து அறியமாட்டாமற்போன, தாமம் அணி முடியும்-(கொன்றை) மாலையைச் சூடிய திருமுடியையும், தாள் இணையும் - உபயதிருவடியையும், யாம் அறிய - நாமெல்லாம் அறியும்படி, வாழும் கருவை வள நகரில் - எல்லாவாழ்க்கைகளுக்கும் இடமான வளங்களையுடைய திருக்கருவாபுரியில், வந்து நின்றான் - வந்து நிலையாக எழுந்தருளி நின்றான்; (எ - று.)—இது என்ன திருவருளின் சிறப்பு!

கடவுள் பக்தியையுடைய அடியார்களுக்கு மிகவும் எளியவரென்றும், பக்தரல்லாத பிறர்க்கு மிகவும்அரியவரென்றுங் கூறியபடியாம். திரிமூர்த்திகளுள் மற்றையிருமூர்த்திகளாலுங் காணப்பெறாத சிவபெருமான் எனது நல்வினைப்பயனால் எனக்குக் காட்சியளித்தன னென்பதாம். "பாதாரவிந்தமுஞ் செஞ்சடைக் காடும் பஞ்சாயுதனும், வேதாவு மின்னமுங் காண்பரியானை யென்மெய்த்தவத்தா, லோதாவென்றேத்திக் கருவைக்களாவினறுநிழற்கீழ்க், காதார்வரிவிழி யொப்பனையாளொடுங் கண்டனனே" என்றார் கலித்துறையந்தாதியிலும். வேதன் - வேதா என்னும் வடசொல்லின் திரிபாய், விதிக்குங்கடவுளாகிய பிரம னென்றுமாம். அடியார்களையெல்லாங்கூட்டி 'யாம்' என்றார்; உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. வளம் - ஜலவளம், நிலவளம் முதலிய பலவளங்கள். சடை - ஜடாஎன்பதன் திரிபு. களா - குறியதன்கீழ் ஆ குறுகிற்று.

முன் இரண்டடி - முறைநிரனிறைப்பொருள்கோள்; வேதன் காணாத முடியும், புயல்வண்ணன் காணாத தாளும் என முறையே இயைத்துப் பொருள்கொள்க. இவ்வாறுகூறியது - தாந்தாங் கடவுளென்னுங் கருத்துக்கொண்டு ஒருவர்க்கொருவர் பகைமைபூண்ட பிரமவிஷ்ணுக்களின் மாறுபாட்டை ஒழிக்கும்பொருட்டுப் பரமசிவன் அவ்விருவர்க்கும் நடுவில் ஒருபெரிய அனற்பிழம்பினுருவமாய்த் தோன்றி நின்று 'இப்பிழம்பின் அடியையும் முடியையுந் தேடுமின்' என்ன, அவ்வடிமுடிகளில்ஒன்றை முன்னங்கண்டவரே முதல்வரென்று சொல்லிப் பிரமன் அம்சரூபியாய் முடியினைக்காண விண்பறந்தும், விஷ்ணு வராகரூபியாய் அடியினைக்காண மண்ணிடந்துஞ் சென்று பலநாள்தேடியும் முடிவுகண்டிலராய்ப் போயினரென்பதோர் கந்தபுராணத்துக்கதையை உட்கொண்டு. (௬)

எ. ஈசனே யென்று மிமயமயி லொப்பனையா
ணேசனே யென்று நினைந்துருகிப்—பேசினே
னல்வினையைக் கண்டே னவையற்றேன் வாழ்வுற்றேன்
வல்வினையைக் கண்டிலேன் மற்று.

(இ - ள்.) ஈசனே என்றும் - தலைவனேயென்றும், இமயம் - இமவத்பர்வதராசன் மகளாகிய, மயில் - மயில்போலுஞ்சாயலையுடைய, ஒப்பனையாள் - அழகையுடைய உமாதேவியின், நேசனே என்றும் - அன்புள்ள கணவனே யென்றும், நினைந்து - தியானித்து, உருகி - (மனங்) கரைந்து, பேசினேன் - சொல்லித்துதித்தேன்; (அதனால்), நல்வினையை-(யான்முற்பிறப்பிற்செய்துள்ள) நல்ல புண்ணியத்தை, கண்டேன் காணப்பெற்றேன்; நவை அற்றேன் - (காமம் முதலிய) குற்றங்கள் நீங்கினேன்; வாழ்வு உற்றேன்-முத்தியுலகத்துப் பேரின்பவாழ்க்கையைப் பெற்றேன்; மற்று - பின்பு, வல் வினையை கண்டிலேன் - வலியதீவினையைக் கண்டேனில்லை; (எ - று.)

இங்ஙனமே யாவருந் தியானித்துத் துதித்து வினையற்று வாழ்வுபெறுவீராக என்றபடி. நேசம் - நேயமென்பதன் போலி. வாழ்வுஉற்றேன் என இறந்தகாலத்தாற்கூறினது, தெளிவும் விரைவும் பற்றி; இவ்வுலகத்திலிருக்கும்பொழுதே உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்கி நிரதிசயஇன்பம்பெற்று நிற்கும் சீவன்முத்தி நிலைமையைக் கருதியாகவுமாம். (எ)

அ. மற்றுமொரு தெய்வத்தை வாழ்த்தேன் முழுக்காதல்
பற்றி யுளத்துவைத்துப் பாவியேன்—சிற்றடியே
னும்பருமா லும்போற் றொருவன் கருவைநகர்
நம்பெருமா னல்லாது நான்.

(இ - ள்.) சிறு அடியேன் - சிறியதொண்டனாகிய, நான்—, உம்பரும் - (பிரமன்முதலிய) தேவர்களும், மாலும் - திருமாலும், போற்று - துதிக்கின்ற, ஒருவன் - ஒப்பற்றவனாகிய, கருவைநகர் நம்பெருமான் அல்லாது - திருக்கருவாபுரியில் எழுந்தருளிய நமக்கெல்லாந்தலைவனாகிய பரமசிவனையே யல்லாமல், மற்றும் ஒரு தெய்வத்தை - வேறொருகடவுளையும், வாழ்த்தேன் - துதிக்கமாட்டேன்; முழு காதல் பற்றி - பூர்ணமானபத்தியினால், உளத்து வைத்து - மனத்திலேவைத்து, பாவியேன் - தியானிக்கவும்மாட்டேன்; (எ - று.)

இங்ஙனம் மறந்தும் புறந்தொழாத தமதுமனவுறுதியை வெளியிட்டவாறு. இன்பற்றி, கண்ணாற்காணவும்மாட்டேனென்பதுங் கொள்க. மால் - இந்திரனுகவுமாம். அல்லாது - எதிர்மறைக்குறிப்புவினையெச்சம். (அ)

கூ. நானிலத்தோர் முன்னே நலனழிந்து நானிருந்தாற்
கான நறும்பூங் களவீச—வீனமுரைத்
தென்னைச் சிரிப்பாரென் றெண்ணாதே யெம்பெருமா
னுன்னைச் சிரிப்பாரு முண்டு.

(இ - ள்.) கானம் - காட்டில்தோன்றுகின்ற, நறு பூ - வாசனைவீசுகிற பூக்களையுடைய, கள ஈச - களாமரத்தின்கீழ்க்கடவுளே! எம்பெருமான் - எமது தலைவனே!—நான் - (உனதுஅடியவனாகிய) யான், நானிலத்தோர் முன்னே - இந்நிலவுலகத்துள்ள மனிதர்களுக்கு எதிரே, நலன் அழிந்து - ஒருநன்மையையும் பெறாமல், இருந்தால் - (இவ்வாறு) இருந்தால்,—(கண்டவர் கேட்டவர் எல்லோரும்), ஈனம் உரைத்து - இழிவானசொற்களைச்சொல்லி, என்னை சிரிப்பார் என்று - என்னையே பரிகசித்து நகைப்பார்களென்று, எண்ணாதே - நினையாதே; உன்னை சிரிப்பாரும் - உன்னை நகைப்பவர்களும், உண்டு—; (எ - று.)

தம்மையே கதியென்று நம்பிச் சரணமடைந்தவரைக் குற்றம்பாராது பாதுகாத்தல் உலகவியல்பு; ஆதலால், உன்னையே நம்பிச் சரணமடைந்த அடியவனாகிய என்னையும் குற்றம்பாராட்டாது பாதுகாக்கவேண்டியது நினது கடமை யென்பதாம். இச்செய்யுளில் அடியார்களது பிழைகளைப் பாராமற் பாதுகாத்தல் தலைவரதுஇயல்பு என்ற பொதுப்பொருளைக்கொண்டு எனதுகுற்றத்தைப் பாராது பாதுகாத்தல் நினதுகடன் என்ற சிறப்புப்பொருளைச் சமர்த்தித்தது, வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். சகலகல்யாணகுணபரிபூர்ண னெனப்படுகின்ற இறைவன் "அடியாரிழைத்தபிழைகோடிநெஞ்சினறியாத ஆதிமுதல்வன்" என்றுகூறப்படுமாறு அக்குணங்களெல்லாவற்றினும் தலைமைக்குணமாகிய கருணையைக் கைக்கொண்டிலனாவிடின் அவனதுகுணங்கட்கே ஒரிழிவாதலால், "களவீச. . . . உன்னைச்சிரிப்பாருமுண்டு' என்றார். வேறுகதியின்றிச் சரணமடைந்தவரைக் காவாது கைவிட்டால், விட்டவரையே யாவரும் இகழ்வ ரென்றபடி.

"கொண்டாளப் பெற்றவர் தம்மடியார்கள் குறைசெயினுந், தண்டா முனிவுற் றிகழ்தல்செய்யார் தமியேன்பிழைநூ, றுண்டாயினும் பொறுத் தாளுந் தகைமை யுனதுகடன், கண்டார் நகைப்பர் களவீச நீயென்னைக் கைவிடினே" என்றார் திருக்கருவைக்கலித்துறையந்தாதியிலும். நானிலம் - நான்காகிய நிலத்தையுடையது; பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை: நான்கு நிலங்களாவன - முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்பவைகளிற் பாலைநீங்க நன்மக்கள் குடியிருத்தற்கு உரிய மற்றை நான்கும். எண்ணுதே - ஏவலொருமை முற்று. பெருமான் - அண்மைவிளி. (௯)

௬௦. உண்டுபல குற்ற முனையடைந்தே னாதலினாற்
கண்டு பொறுத்தல் கடன்கண்டாய்—பண்டுதிரஞ்
சிந்த வடித்தவனைச் சீறாது பாசுபதந்
தந்தமுக லிங்கநா தா.

(இ - ள்.) பண்டு - முன்னே, உதிரம் சிந்த - இரத்தம் ஒழுகும்படி, அடித்தவனை - (வில்லினால்) புடைத்த அருச்சுனனை, சீறாது-கோபியாமல், (அவனுக்கு), பாசுபதம் - பாசுபதாஸ்திரத்தை, தந்த - கொடுத்தருளின, முகலிங்கநாதா - திருமுகம்மலர்ந்த லிங்கத்தின் வடிவமாகவுள்ள தலைவனே!—பல குற்றம் உண்டு - (என்னிடம்) பலகுற்றங்கள் உள்ளன; (அவற்றை), உனை அடைந்தேன் ஆதலினால் - (யான்) உன்னைச் சரணமடைந்தேனாகையால், கண்டு - கடாக்ஷித்து [அருளோடுநோக்கி], பொறுத்தல் - பொறுத்துவிடுதல், கடன் - (உனக்குக்) கடமையாகும்; கண்டாய் - அறிவாய்; (எ - று.)

உயிர்களுக்குத் தலைவனாதலாலும், விருஷபத்துக்குத் தலைவனாதலாலும், பசுபதியென்று சிவனுக்குப்பேர்;அவனது சம்பந்தமானது, பாசுபதம்:தத்திதாந்த நாமம். குற்றத்தைப்பொறுத்து அருள்செய்தற்குத் திருஷ்டாந்தமாக இவ்வரலாற்றை எடுத்துக்கூறினார். உதிரம் - ருதிரம்.

அருச்சுனன் வில்லால் அடித்த கதை :— பாசுபதம்பெறத் தவநிலைநின்ற அருச்சுனனைஅழிக்கத் துரியோதனனேவலாற் பன்றிவடிவாய்வந்த மூகாசுரன் மேல் வேடவடிவாய்வந்த சிவபெருமான் அம்பெய்ய,அதுபிளக்குமுன்னே அருச்சுனன்அம்பொன்றுஎய்து வராகத்தை விழுத்த, அதுகாரணமாக அவ்விருவர்க்கும் உண்டான போரிற் பரமசிவன் எதிரியது வில்நாணியை அறுக்க, பார்த்தன் அவ் விற்கழுந்தாற் கடவுளது முடியில் அடித்தான்; பின்பு சிவபிரான் தமது நிஜரூபத்தோடு காட்சிகொடுத்து அவன் வேண்டுகோளின்படி பாசுபதாஸ்திரத்தையும், வில் அம்பறாத்தூணி முதலியவற்றையும் அருளிப்போயினர் என்பதாம். (௬௦)

௬௧. நாதா தமிழ்க்கருவை நம்பா வெனக்கினிய
தாதா வெனவுன் சரணடைந்துங்—காதுசின
வெவ்விடையின் வீதி விடங்கனே நாடோறு
மிவ்விடரின் வாடுவதென் யான்.

(இ - ள்.) காது - (பகைவரை) அழிக்கும்படியான, சினம் - கோபத்தையுடைய, வெம் - (பகைவர்க்குப்) பயங்கரமான, விடையின் - விருஷபத்தை

வாகனமாகவுடைய, வீதி விடங்கனே - வீதிவிடங்கப்பெருமானே ! நாதா - தலைவனே ! தமிழ் கருவை நம்பா - செந்தமிழ் வழங்குந் திருக்கருவைச் சிவனே !— எனக்கு இனிய தாதா என - (நீ) எனக்கு நல்லகொடையாளியென்று எண்ணி, உன் சரண் அடைந்தும் - உனது திருவடியைச் சரணமாக அடைந்தபின்பும், யான்--, நாள்தோறும்—, இ இடரின் வாடுவது - இப்பிறவித் துன்பங்களில் வருந்துவது, என் - யாதுகாரணம்? (எ - று.)

வினைவிற் போக்கியருளவேண்டு மென்றபடி. தமிழ்க்கருவை - இனியகருவை யென்றுமாம். தமிழ்நம்பாஎன இயைத்து,தமிழுக்கு உரியகடவுளே யென்றுமாம். நம்பன் – யாவராலும் நம்பிச்சரணமடையபபடுபவன்; இனி,நமக்குஇன்றுணென்னும பொருள்பட வருவதோர் உயர்ச்சிச்சொல்லாகவுமாம். சரண் - இரட்டுறமொழிதலால், அடியும் அடைக்கலமும் எனப்பட்டது. காதுசினம் - வினைத்தொகை. வெவ்விடை - விரும்பப்படும் விருஷபமுமாம். விடங்கன்-டங்கத்திறுற் செய்யப்படாதவன்; டங்கம் - உளி: எனவே, சுயம்பு என்ற படி. வீதியில் எழுந்தருளுதலால், வீதிவிடங்கனென்று வழங்குவர்; இனி, வீதிக்கு அழகைச்செய்பவனென்றுங் கொள்ளலாம்: விடங்கம் - அழகு. 'வாடுவதென் னியான்' என்றும் பாடம். (கக)

கஉ. யாவ னமர ரிடர்தீர நஞ்சுண்டான்
யாவன் கருவை யினிதுறைந்தான்—யாவன்
றவநேர்மை கண்டு தனக்கடிமை கொள்வா
னவனே யெனையாண் டவன்.

(இ - ள்.) யாவன் - எக்கடவுள், அமரர் இடர் தீர - தேவர்கள் துன்பம் நீங்கும்படி, நஞ்சு உண்டான் – விஷத்தை உட்கொண்டானே? யாவன்—, கருவை- திருக்கருவையில், இனிது உறைந்தான் - இனிமையாக எழுந்தருளிநின்றானே? யாவன்—, தவம் நேர்மை கண்டு - (உயிர்களது) தவத்தின் அமைதியை நோக்கி, தனக்கு அடிமை கொள்வான் - (அவ்வுயிர்களைத்) தனக்கு அடிமையாக்கிக்கொள்வானே? அவனே - அம்முழுமுதற்கடவுளே, எனை ஆண்டவன் – என்னை அடிமைகொண்டவனவன்; (எ - று.)

இனிது-குறிப்புமுற்று வினையுரியாய் நின்றது; கிரியாவிசேஷண மென்பர்.

கங. ஆண்டவனே தென்கருவை யாதியே யாடரவம்
பூண்டவனே யென்று தினம் போற்றிடவு—நீண்டதுயர்
போகா திருக்குமோ பொங்கிருளு நிற்குமோ
மாகா தவன்றேர் வரின்.

(இ - ள்.) 'ஆண்டவனே - அடிமைகொணடவனே! தென் கருவை ஆதியே - தென்கருவையிலெழுந்தருளிய முதற்கடவுளே! ஆடு அரவம் பூண்டவனே- (படமெடுத்து) ஆடுகிற நாகங்களை ஆபரணமாக அணிந்தவனே!' என்று - என்று சொல்லி, தினம் - நாள்தோறும், போற்றிடவும் - துதிக்கவும், நீண்ட துயர் - மிகுந்த பிறவித்துன்பங்கள், போகாது இருக்குமோ - ஒழியாமல் நிலைநிற்குமோ? [நில்லாவாம்]; (அது எதுபோலவென்றால்),—மா கு - பெரிய ஆகாயத்தில், ஆதவன் தேர் - சூரியனது இரதம், வரின் - உதித்துவந்தால், பொங்கு இருளும் -

(அதற்குமுன்னே) மிகுந்துள்ள இருட்டுமுழுவதும், நிற்குமோ - ஒழியாமல் நிலை நிற்குமோ? [நில்லாது]; (எ - று.)

சிவபிரானைத் துதித்தமாத்திரத்தில் பிறவித்துன்பங்கள் இருந்தவிடந் தெரியாது ஒழிதலை உதாரணங்காட்டி விளக்கினர். எடுத்துக்காட்டுவமையணி. மாகு - மஹாகம் என்னும் வடமொழியின் திரிபு. தேர் - மண்டலம். (கங)

கச. வரந்தருமிப் பார்புரக்கும் வாழ்வுதரும் விண்ணோர்
தரந்தரும்பே ரின்பந் தருமால்—பரந்து
துளவீசன் றேடுந் துணைத்தாட் கருவைக்
களவீச னென்றுரைத்தக் கால்.

(இ - ள்.) துளவு ஈசன் - திருத்துழாய் மாலையையுடைய திருமால், பரந்து - விரைந்துசென்று, தேடும் தேடின, துணை தாள் - உபயபாதங்களையுடைய, கருவை கள ஈசன் - திருக்கருவைத் திருக்களாவின் கீழ்க்கடவுள், என்று உரைத்தக்கால் - என்று (ஒருதரஞ்) சொன்னால், (அச்சொலவு), வரம் தரும் - வேண்டிய வரங்களையெல்லாங் கொடுக்கும்; இ பார் புரக்கும் வாழ்வு - இந்நிலவுலகமுழுவதையும் (ஏகசக்ராதிபத்தியமாய்) அரசாளும் வாழ்க்கையை, தரும்—; விண்ணோர் தரம் - தேவர்களது பதவியை, தரும்—; பேர் இன்பம் - முத்தியுலகத்து நிரதிசய இன்பத்தையும், தரும்—; (எ-று.)

சிவபிரானது திருநாமசங்கீர்த்தனத்தால் உண்டாகும் பயன்களை விளக்கியவாறு. (கச)

கரு. காலத்தாற் கால படராற் கருமறலி
சூலத்தா லாவி தொலைவனோ—ஞாலத்துட்
டேன்பற்றும் பூங்களவிற் செல்வன் றிருவடியைத்
தான்பற்றும் பற்றுடையான் றான்.

(இ - ள்.) ஞாலத்துள் - பூமியில், தேன் பற்றும் பூ களவின் - தேன் பொருந்தின பூக்களையுடைய களாவின்கீழ் உள்ள, செல்வன் - எல்லாச்செல்வமுமுடைய கடவுளது, திரு அடியை - சீர்பாதங்களை, பற்றும் - சரணமாக அடைந்த, பற்று உடையான் - அன்பையுடைய அடியவன்,—காலத்தால் - யமனாலும், கால படரால் - யமதூதர்களாலும், கரு மறலி சூலத்தால் - கருநிறமுடைய யமனது சூலாயுதத்தாலும், ஆவி தொலைவனோ - உயிர்ஒழிவனோ? (எ - று.)—ஒழியான், முத்திபெறுவ னென்றபடி.

சிவபிரானுக்கு ஆட்பட்டவன் யமபாதையின்றி நற்கதிபெறுவ னென்பதாம். காலன் - உயிர்களின் ஆயுள்நாளைக் கணக்கிடுபவன். தேவர்களை உயர்திணையாகவும் அஃறிணையாகவுஞ் சொல்லலா மாதலால், 'காலத்தால்' என அஃறிணையாற் கூறினர். இனி, காலக்கடவு ளாகவுமாம். (கரு)

கசு. தானேவந் தென்னைத் தடுத்தடிமை கொண்டானை
யானே பிறக்கு மெழுபிறப்பும்—வானிற்
சிறந்திருக்குந் தென்கருவைச் செல்வனையெண் ணாமன்
மறந்திருக்கு மோவென் மனம்.

(இ - ள்.) தானே வந்து என்னை தடுத்து அடிமை கொண்டானை - (என் வேண்டுகோளில்லாமல்) தானாகவே வலியவந்து என்னைத் (தீயவழியிற்செல்வதைத்) தடைசெய்து[நல்லறிவுதந்து] அடிமையாக்கிக்கொண்டவனாகிய, வானின் சிறந்திருக்கும் தென்கருவை செல்வனை-பெருமையினாற்சிறப்புற்றிருக்குந் தென்கருவைக்கடவுளை, யானே பிறக்கும் எழு பிறப்பும் - நானாகவே (ஊழ்வினையாற்) பிறக்கும் எழுவகைப்பிறப்புக்களிலும், என் மனம் - எனது நெஞ்சம், எண்ணாமல் - தியானியாமல், மறந்திருக்குமோ - மறந்துவிடுமோ? [மறவாது] ; (எ - று.)

பேருதவிசெய்த பெருமானை யான் எப்பொழுதும் மறவே னென்றதாம். வானில்சிறந்திருக்கும்-முத்தியுலகத்திற் சிறந்துவீற்றிருக்கிற வென்றுமாம். 'எழு பிறப்பும்' என்பதற்கு - இனித் தொடர்ச்சியாக நேரும் எழுபிறப்பு வரையிலும் என்றபடி; அன்றி, வினைப்பயனால்நேரும் எழுவகைப்பிறப்புக்களில் என்றுமாம். எழுவகைப்பிறப்புக்களாவன-ஊர்வன, நீர்வாழ்வன, மானுடம், பறவை, விலங்கு, தேவர், தாவரம் என்பவை. (கசு)

கஎ. மனமொழிந்து காம மயக்கொழிந்து மாறாச்
சினமொழிந்து வாதனையுந் தேய்ந்தா—லினிய
குருக்களாய் வந்தடிமை கொண்டுவீ டுய்க்குந்
திருக்களா வாழுஞ் சிவம்.

(இ - ள்.) மனம் ஒழிந்து - (ஒருவன்) மனம் (பலவழியிலுஞ்சென்று) தடுமாறுவதை ஒழிந்து [ஒருவழிப்பட்டு], காம மயக்கு ஒழிந்து - காமமயக்கங்கள் நீங்கி, மாறா சினம் ஒழிந்து - நீங்குதற்குஅரிய கோபமும் நீங்கி, வாதனையும் தேய்ந்தால் - பழையபயிற்சிவசத்தால் (இவற்றிற்) செல்லும் நினைவும் நீங்கினால், (பின்பு),—திரு களா வாழும் சிவம்-அழகிய களாவின்கீழ் நித்தியவாசஞ்செய்யும் பரமசிவம், இனிய குருக்கள் ஆய் வந்து நல்ல ஆசாரியமூர்த்தியாய் வந்து(காட்சி தந்து), அடிமை கொண்டு - (அவனை) அடிமையாக்கிக்கொண்டு, வீடு உய்க்கும் - மோக்ஷத்திற் செலுத்தும்; (எ-று.)

காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றுகுற்றங்களுந் தீவினைக்குக் காரணமாய்ப் பிறவித்துன்பங்களைத் தருதலால், அவைஒழிதல் ஒருதலையாக வேண்டிற்று. அனாதியாகிய அவிச்சையும், அதுபற்றி யானெனமதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இதுவேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருளிற் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன்மறுதலையிற் செல்லுங்கோபமும் என வடநூலார் குற்றம் ஐந்தென்றார்; தமிழ்நூலார் அவற்றுள் அகங்காரம் அவிச்சையிலும், அவாவுதல் ஆசையிலும் அடங்குதலால், மூன்றென்பர். "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற, னாமங் கெடக் கெடுநோய்" என்றார் திருவள்ளுவனார். காம மயக்கு - உம்மைத்தொகை. மயக்கு - முதனிலைதிரிந்ததொழிற்பெயர். வாதனை - வாசனை. இனியகுருக்கள் - நல்லதத்துவஞானத்தைச் செவ்வையாக உபதேசிக்கும் ஆசிரியர். குருக்கள் - மரியாதைப்பன்மை. (கஎ)

கஅ. சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவநெறி சாரா—ரவனிதனிற்
கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழா
ரேன்பிறந்தார் மானிடரா யின்று.

(இ - ள்.) அவனிதனில் - பூமியில், (சிலர்),—சிவகருமம் செய்யார் - சிவனுக்குஉரிய அடிமைத்தொழில்களைச் செய்கின்றாரில்லை; திரு நீறு சாத்தார் - மேன்மையான விபூதியைத் தரிக்கின்றாரில்லை; தவம் நிலை ஆம் சைவம் நெறி சாரார் - உண்மையான நிலைமையாகிய சைவசமயமார்க்கத்தைச் சேருகின்றாரில்லை; கான் பரந்த - வாசனைவீசுகிற, பச்சை - பசுமையாகிய, களா - திருக்களாவின், நிழலை —, கை தொழார் - கைகூப்பித் தொழுகின்றாரில்லை; (இவர்கள்), இன்று - இப்பொழுது, மானிடர் ஆய் - மனிதர்களாய், என் பிறந்தார்?

மானிடப் பிறப்பெடுத்தற்குப் பயன் சிவகருமஞ்செய்தல் முதலியனவேயாதலால், அவற்றைச்செய்யாதவர் பிறப்புப் பயனற்றதென்பதாம். சைவம் - சிவனைத்தெய்வமாகவுடைய மதம். பசுமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய்த் தன்னொற்றிரட்டி ஐகாரம்பெற்றுப் பச்சையென நின்றது. கைதொழுதல்-அஞ்சலிசெய்து வணங்குதல். என் - எவனென்பதன் விகாரம். (கஅ)

கக. இன்று வருந்துயரந் தீர்ந்தோ மினிச்சிலநாள்
சென்று வருந்துயரந் தீர்ப்பாரா—ரென்று
வருந்தாதே நெஞ்சே மலர்க்களவி னீழ
லிருந்தா னொழிப்பா னிடர்.

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—இன்று வரும் துயரம்-இன்றைக்குவருகிற துன்பத்தை, தீர்ந்தோம் - (கடவுளருளால்) நீங்கினோம்; இனி சிலநாள் சென்று வரும் துயரம் - இன்னுஞ் சிலகாலங்கழித்து வரவிருக்குந் துன்பத்தை, தீர்ப்பார் ஆர் - (அப்பொழுது) எவர் நீக்குவர்? என்று - என்றெண்ணி, வருந்தாதே - வருத்தப்படாதே; மலர் களவின் நீழல் இருந்தான் - பூக்களையுடைய திருக்களாமரத்தின் நிழலில் எழுந்தருளியிருக்கின்ற கடவுள், இடர் - துன்பங்களை, ஒழிப்பான் - (எப்பொழுதும்) நீக்குவான்; (எ - று.)

'இன்றுவருந்துயர்' என்றது - சம்சாரக்கிலேசத்தை; 'சிலநாள்சென்று வருந்துயர்' என்றது - மரணவேதனையையும், மறுமைத்துன்பத்தையும். (கக)

உ0. இடர்க்கடலுக் கோட மிதயவிருட் கிரவி
யுடற்பகையை வேரறுக்கு மொள்வா—ளிடப்புறத்தைச்
சூல்வண்ண மேகச் சுரிகுழலுக் கீந்தருளும்
பால்வண்ண நாதன் பதம்.

(இ -ள்.) சூல் - கருக்கொண்ட [நீர்கொண்ட], வண்ணம் - கருநிறமுடைய, மேகம் - மேகம்போற் கரிய, சுரி குழலுக்கு-கடைகுழன்ற கூந்தலையுடைய உமாதேவிக்கு, இடம் புறத்தை - வாமபாகத்தை, ஈந்தருளும் - கொடுத்தருளிய, பால் வண்ண நாதன் - பால்போலும் வெண்மையான திருநிறமுடைய கடவுளது, பதம் - திருவடி,—இடர் கடலுக்கு - பிறவித்துன்பமாகிய கடலைக் கடத்தற்கு, ஓடம் - புணையாம்; இதய இருட்கு - மனத்திலுள்ள அறியாமையாகிய இருளை ஒழித்தற்கு, இரவி-சூரியனும்; உடல் பகையை - உடட் பாகிய விரோதியை, வேர் அறுக்கும் - அடியோடு அழிக்கிற, ஒள் வாள் - ஒளியையுடைய வாளாகும்;(எ-று.)

[illegible]

காரணகாரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றிவருதலால் 'இடர்க்கடல்' என்றார்; கீழ் கரு - ஆம் பாட்டில் 'நீண்டதுயர்' என்றதும் இதுபற்றியே: "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார், இறைவ னடி சேராதார்" என்றார் திருவள்ளுவரும். சூல்வண்ணமேகச்சுரிகுழல் - அன்மொழித்தொகை. திருக்கருவைச் சிவபிரானது திருமேனிநிறம் வெளுப்பு. ஒருபொருளிற் பலபொருளின் தன்மையை ஆரோபித்ததனால், பலபடப்புனேவணி; வடநூலார் உல்லேக மென்பர்.

இடப்புறந்தைச்சுரிகுழலுநந்தாந்தநு:—பிருங்கிஎன்னும் மகாமுனிவர் பரமசிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்யக்கண்ட பார்வதீதேவி தன்பதியைநோக்கி 'முனிவர் என்னைப் பிரதக்ஷிணஞ் செய்யாமைக்கு ஏது என்ன" என்று வினவ, உருத்திரமூர்த்தி 'இஷ்டசித்திபெற விரும்புபவர் உன்னையும், மோக்ஷம்பெற விரும்புபவர் என்னையும் வழிபடுவர்' என்ன, அதுகேட்ட தேவி பெருமானோடு பிரியாதிருக்குமாறு தவம்புரிந்து வாமபாகம் பெற்றா ரென்பதாம். (உ0)

உக. பதமறிந்து வாய்பார்த்துப் பற்றாத புல்ல
ரிதமறிந்தாங் கின்சொ லியம்பி—மதிகலங்கி
நன்னாள் கழித்துவிட்டே னாதமுக லிங்கவுனை
யெந்நா ணினைப்பே னினி.

(இ - ள்.) நாத—! முகலிங்க—! (நான்), மதி கலங்கி - அறிவுகெட்டு, பற்றாத புல்லர் - ஒன்றுக்கும்பற்றாத அற்பர்களது, பதம் அறிந்து - சமயத்தைத்தெரிந்துகொண்டு, வாய் பார்த்து - (அவர்கள்) வாயிலை நோக்கிச்சென்று, இதம் அறிந்து - (அவர்களுக்கு) இனியது (இன்னதென்று) அறிந்து, ஆங்கு - அதற்கு ஏற்ப, இன் சொல் இயம்பி - இனிமையானசொற்களைச் சொல்லி, நல் நாள் - (எனது) நல்ல ஆயுள்நாளையெல்லாம், கழித்துவிட்டேன் - வீணாகப்போக்கிவிட்டேன்; இனி—, உனை - உன்னை, எ நாள் - எப்பொழுது, நினைப்பேன் - தியானிப்பேன்? (எ - று.)

"செல்வச் செருக்கர் தலைவாயில் தோறுந் திரிந்துதிரிந்து, அல்லற் றுயர்கொண் டிளைத்துவிட்டே னடியே னினியப, புல்லர்க் கெளிமை புகலாமற் காத்தருள் பூந்தடமு, மல்லற் பழனமுஞ் சூழ் கருவாபுரி வானவனே" என்றார் கலித்துறையந்தாதியிலும். பற்றாத - சேரத்தகாத என்றுமாம். வாய் பார்த்து - அவர்கள்வாய்ச்சொல்லைப் பார்த்து என்றுங் கொள்ளலாம். நன்னாள் - பயன்படுதற்கு உரிய நாள். (உக)

உஉ. இனிய வமுதை யிருங்களா வின்கட்
கனியைவளர் முக்கட் கரும்பைப்—பனியிமயக்
கொம்பினொடுங் கண்டேன் கொடும்பாவ மோகவிடாய்
வெம்புதுயர் கண்டிலேன் மேல்.

(இ - ள்.) இனிய - இனிப்பான, அமுதை - அமிருதத்தை, இரு களாவின் கண் - பெரிய களாவின்கீழுள்ள, கனியை - பழத்தை - வளர்-(அங்குத்தோன்றி) வளர்ந்த, முக்கண் - மூன்றுகண்களையுடைய, கரும்பை—,பனி இமயம் கொம்பினொடும் - குளிர்ந்த இமயமலையின்மகளாகிய பூங்கொம்புபோன்ற உமாதேவியுட

னே, கண்டேன் - பார்த்தேன்; மேல் - பார்த்தபின்பு, கொடு பாவம் - கொடிய தீவினையாலாகிற, மோகம் விடாய் - மூர்ச்சையையுந் தாபத்தையுந் தருகிற, வெம்பு துயர் - கொடிய பிறவித்துன்பங்களை, கண்டிலேன் - கண்டேனில்லை; (எ - று.)

"உள்ள தில்லதென் றுரைத்திடும் பொருளை யுய்த்துணராக், கள்ளர்நாவினி லினித்திடாக் களாநறுங் கனியைத், தெள்ளு செந்தமிழ்க் கருவையிற் சினகரம் புகுந்து, மெள்ளநான்சென்று காண்டலுந் தீர்ந்தது விடாயே" என்றார் பதிற்றுப் பத்தந்தாதியிலும். அமுது, கனி, கரும்பு என்பன - சிவத்துக்கு உவமவாகுபெயர். உண்ண உண்ண நாக்குக்கு இனிப்பைத்தரும் அமுதம்முதலியனபோலக் கடவுள் தம்மைத் துதிக்கத்துதிக்க நாவுக்கு இனிப்பைத்தருதலினால், அவையாக உருவகப்படுத்தினார். கனி என்றது - அப்பொழுதே நுகரலாம்படி பக்குவபலமாயிருப்ப தென்றபடி. கரும்பு என்றதற்கு ஏற்பக் கண்கூறினார்; கண்என்று கணுவுக்கும் நேத்திரத்துக்கும் பெயர். (உஉ)

உங. மேலாம் பதத்தில் விடுவையோ வன்றியெனை
யேலா நரகத் திடுவையோ—சீலமிலா
வன்சித்த ருள்ள மருவாக் களவீச
வுன்சித்த மேதோ வுரை.

(இ - ள்.) சீலம் இலா - நல்லொழுக்கமில்லாத, வல் சித்தர் - வலிய மனத்தையுடைய அடியரல்லாதவராது, உள்ளம் - மனத்தில், மருவா - சென்றுசேராத, கள ஈச - களாவின்கீழ்க்கடவுளே ! (நீ)—எனை - (உன்அடியவனாகிய) என்னை, மேல் ஆம் பதத்தில் - (எல்லாவுலகங்களுக்கும்) மேம்பட்டதான முத்தியில், விடுவையோ - செலுத்துவாயோ? அன்றி - அல்லாமல், ஏலா நரகத்து இடுவையோ- தகாத [மிகக்கொடிய] நரகலோகத்திற் போகவிடுவையோ? உன் சித்தம் - உனது மனம், ஏதோ - எதுவோ? (அறியேன்); உரை - சொல்லு; (எ - று.)

தன்வசமின்றி உன்வசமாய் அடிமையான என்னை நற்கதியிற்செலுத்துவது உனது பாரமே யென்றதாம். வன்சித்தர் - சிவத்தைநினைந்து நெஞ்சுருகாதவர். "பரகதிக்கே வைப்பையோ வறியேன் பெரும்பாதகர்போ, நரகதிக்கே வைப்பையோ வறியே னெங்குநானுறினுஞ், சரகதிக்கேசெல்விடையாய் களாவுறைசங்கரனே, வரகதிக்கேற்ற நின்பாதாரவிந்தம் வழுத்துவனே" என்றார் கலித்துறையந்தாதியிலும். (உங)

உச. உரைகடந்த வேதத் துயர்வெற்பை யுள்ளங்
கரைகடந்த ஞானக் கடலை—விரிபூ
மருக்கோல வண்டுநுகர் வண்களா நீழற்
றிருக்கோயி லிற்கண்டேன் சென்று.

(இ - ள்.) உரை கடந்த - சொல்லளவை அதிக்கிரமித்த, வேதத்து - வேதங்களில், உயர் - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, வெற்பை - மலைபோன்றதும், உள்ளம் கரை கடந்த - மனத்தின் எல்லையைக் கடந்து மேற்சென்ற, ஞானம் - அறிவுக்கு, கடலை - கடல்போன்றதுமாகிய சிவத்தை, விரி பூ - மலர்ந்த பூக்களின்

மரு - நறுநாற்றத்தை, கோலம் வண்டு - அழகிய வண்டுகள், நுகர் - உட்கொள்ளு தற்கு இடமான, வள் களா - சிறந்த களாவின், நீழல் - நிழலில், திருகோயிலில்- மேன்மையான திருக்கருவையாலயத்தில், சென்று - போய், கண்டேன் - தரிசித் தேன்; (எ - று.)

வேதங்கள் அனந்தமாதலால், 'உரைகடந்தவேதம்' என்றார். சலியாமையும் பெருமையும் உயர்வும் பற்றி, 'வெற்பு' எனப்பட்டது. நீர்நிரம்பிய கடல்போல அறிவுநிரம்பிய தென்பது, ஞானக்கடல் என்றதன் கருத்து. கோ + இல் = கோ வில்: இது கோயில் என யகரம்பெற்றுவந்தது, இலக்கணப்போலி. (உச)

உரு. சென்றது காலஞ் சிதைந்த திளமைநல
நின்றதுசா வென்று நினைந்துருகி—மன்றி
னடிக்கின்ற பால்வண்ணர் நாமமெண்ணு மாந்தர்
படிக்கின்ற நூலெல்லாம் பாழ்.

(இ - ள்.) 'காலம் சென்றது-ஆயுள்நாள் கழிந்தது ; இளமைநலம் சிதைந்தது- இளம்பருவத்தின் நன்மை கெட்டது; சாவு நின்றது - (இனி) மரணம் வரற்பா லதாய் நின்றது,'என்று நினைந்து - என்றுஎண்ணி, உருகி - மனம்உருகி, மன்றில் நடிக்கின்ற பால்வண்ணர் நாமம் எண்ணு - நடனசபையில் திருநிருத்தஞ்செய் கிற பால்வண்ணப்பெருமானது திருநாமங்களைத் தியானியாத, மாந்தர் - மனிதர், படிக்கின்ற—, நூல் எல்லாம் - சாஸ்திரங்களெல்லாம், பாழ் - வீணும்; (எ-று.)

நூல்களைக் கற்றற்குப் பயன் கடவுளைத்தியானித்தலே யென்றதாம். "கற்ற தனாலாய பயனென்கொல் வாலறிவ, னற்றாடொழாஅரெனின்" என்றார் திருக் குறளிலும். நாமம் - பெயர். நூல் - சாஸ்திரத்துக்கு உவமவாகுபெயர்: பஞ்சினால் நூற்கப்படும் நூல்போலச் சொல்லாற் கோக்கப்படுதலாலும், நூல் மரம்முதலிய வற்றின் கோணலைத் தீர்ப்பதுபோல மனத்தின் கோணலைத் தீர்த்துச் செப்பஞ் செய்தலாலும் வந்த பெயர் என்று அறிக. (உரு)

உசு. பாழிற் சமயப் படுகுழியில் வீழாம
லூழி லெனைக்காத் துதவினாய்—காழி
வருமதலைச் சொற்கா மலர்ந்தமுக லிங்கா
பெரும தலையாய பேறு.

(இ - ள்.) காழி - சீர்காழியில், வரு - அவதரித்த, மதலை - இளம்பருவ முடைய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரது, சொற்கு ஆ - திருப்பதிகச்சொல் லுக்காக, மலர்ந்த - முகம்மலர்ந்த, முகலிங்கா - லிங்கத்தில் முகமமையப்பெற்ற வனே! பெரும - பெருந்தன்மையை யுடையவனே! பாழின்-பயனற்றனவாகிய, சமயம் - வெவ்வேறு மதங்களாகிய, படுகுழியில் - பெரும்பள்ளங்களில்,வீழாமல்- விழாதபடி, எனை - என்னை, ஊழில் - முறைப்படி, காத்து - இரட்சித்து, தலை ஆய பேறு - (எல்லாப்பதவிகளினுஞ்) சிறந்ததாகிய முத்தியுலகத்துப் பதவியை, உதவினாய் - (எனக்குக்) கொடுத்தாய்; (எ - று.)

சமயம் - பௌத்தம், ஜைனம், பைரவம், காளாமுகம், லோகாயதம், சூனிய வாதம் என்னும் ஆறென்றும்; லோகாயதம், பௌத்தம், சமணம், மீமாஞ்சை,

பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம் என்னும் ஆறென்றுங் கூறுவர். படுகுழி-யானை முதலியவற்றை உள்ளேவிழுந்து அகப்படச்செய்யும் பெருங்குழி. சமயங்கள் தம்மிடஞ்சேர்ந்தவரை மீளவொண்ணாதபடி அகப்படுத்துதலால், படுகுழியாகக் கூறப்பட்டன. பெரும - பெருமான் என்பதன் விளி; ஈறுகெட்டதும், ஈற்றயல் குறுகினதும் - உருபு. ஊழில் - ஊழ்வினையினின்றுங் காத்து என்றுமாம். (உசு)

உஎ. பேறுபெற்றேன் வாழ்ந்தேன் பிறருக் கினியஞ்சே
னாறுபெற்ற வேணியனுக் காட்பட்டே—னூறுவட்டஞ்
சிந்தித்தே னெஞ்சிற் றிருக்களவைக் கைகூப்பி
வந்தித்தேன் றீர்ந்தேன் மயல்.

(இ - ள்.) ஆறு பெற்ற வேணியனுக்கு - கங்காநதியையுடைய சடையை யுடைய சிவபிரானுக்கு, ஆள்பட்டேன் - அடியவனானேன்; நூறுவட்டம் - நூறு தரம், நெஞ்சில் - மனத்தில், சிந்தித்தேன் - (அவனைத்) தியானித்தேன்; திரு களவை - (அவன் எழுந்தருளியிருக்கிற)மேன்மையான களாமரத்தை, கைகூப்பி- அஞ்சலிசெய்து, வந்தித்தேன் - வணங்கினேன்; (இதனால்), மயல்தீர்ந்தேன் - மயக்கம் நீங்கினேன்; பேறு பெற்றேன் - (நல்ல) பாக்கியத்தை அடைந்தேன்; வாழ்ந்தேன் - பெருவாழ்வு பெற்றேன்; இனி—,பிறருக்கு - (யமன் பஞ்சேந்திரி யங்கள் முதலிய) அயலாருக்கு, அஞ்சேன் - (சிறிதும்)அஞ்சமாட்டேன்; (எ-று.)

நூறு - பலவென்னும் பொருள் உணர்த்திற்று. 'நூறுவட்டம்' என்பதனை 'வந்தித்தேன்' என்பதோடுஞ் சேர்க்கலாம். மயல் - அவிச்சை. (உஎ)

உஅ. மயக்கமொழி நெஞ்சே மதிமுகமு மூன்று
கயக்கமல மன்னதிருக் கண்ணும்—வியக்குநடை
யன்ன வயற்கருவை யாரியன்ற ளுந்தொழுதாற்
பின்னைநமக் குண்டோ பிறப்பு.

(இ - ள்.) நெஞ்சே - (எனது) மனமே! மயக்கம் ஒழி - கலக்கத்தை நீங்கு; வியக்கும் நடை - அதிசயப் படத்தக்க [மிக அழகிய] நடையையுடைய, அன்னம்- அன்னப்பறவைகளையுடைய, வயல் - கழனிகளையுடைய, கருவை - திருக்கரு வையிலுள்ள, ஆரியன் - சிறந்தகடவுளது, மதி முகமும்-பூர்ணசந்திரன்போன்ற திருமுகத்தையும், கயம் கமலம் அன்ன - நீர்நிலையிலுள்ள தாமரைமலர்களைப் போன்ற, மூன்று திரு கண்ணும் - மூன்று அழகிய கண்களையும், தாளும் - திரு வடிகளையும், தொழுதால் - வணங்கினால், பின்னை - பின்பு, நமக்கு—, பிறப்பு - மறுஜனனம், உண்டோ - உளதாகுமோ? (எ - று.)—ஆகாது, மீளாவுலகமாகிய முத்தியைப் பெறலாம்.

குளிர்ச்சியும் ஒளியுங் கண்டவர்கண்களைக் களிப்பித்தலும்பற்றி மதி-முகத் துக்கும், செம்மையுந் தண்மையும் மென்மையும் அழகும்பற்றிக் கமலம் - கண் ணுக்கும் உவமை. பறிக்கப்படாமல் நீரிலேயுள்ள அன்றுமலர்ந்த மலர் என்பது தோன்ற, 'கயக்கமலம்' என்றார். 'வியக்கவுடை' என்றும், 'தாடொழுதால்' என் றும் பாடம் உண்டு. (உஅ)

உகூ. பிறந்த பிறப்பிற் பெரும்பயனை யோரா
திறந்தவுட லெண்ணிறந்ததென்ப—தறிந்திருந்துங்
கானடரும் பச்சைக் களவீச வென்னுமன்
மானிடரா யேன்பிறந்தார் வந்து.

(இ - ள்.) (சிலர்), இறந்த உடல் எண் இறந்தது என்பது அறிந்திருந்தும் - (தாங்கள் பிறந்துபிறந்து ஒருபயனையும்பெருமல்) இறந்துபோன உடம்பு அளவில்லாததென்பதைத் தெரிந்திருந்தும், பிறந்த பிறப்பின் பெரு பயனை ஓராது - தாம் பிறந்தபிறப்பின் பெரியபயனை இன்னதென்று அறியாமல், கான் அடரும் பச்சை களா ஈச என்னுமல் - மணமிருந்த பசுமையாகிய களாவின்கீழ்க்கடவுளே என்று தியானியாமல், வந்து - (இவ்வுலகத்தில்) வந்து, மானிடர் ஆய் - மனிதர்களாய், ஏன் பிறந்தார்—? (எ - று.)

இதனைக் கீழ்ப் பதினெட்டாங்கவியோடு ஒப்பிடுக. (உகூ)

௩0. வந்து மனமறுக்க மாற்றுமல் வல்வினையேன்
வெந்துயரம் பார்த்திருக்க வேண்டினைகொல்—கொந்துமல
ரம்பினுன் மேனி யழித்தமுக லிங்கவுனை
நம்பினுர்க் கீதோ நலன்.

(இ - ள்.) கொந்து மலர் அம்பினுன் - கொத்துக்களில் உண்டாகிற பூக்களை அம்பாகவுடைய மன்மதனது, மேனி - உடம்பை, அழித்த—, முகலிங்க—! (நீ), வந்து - (எதிரே) வந்து (தரிசனந்தந்து), மனம் மறுக்கம் மாற்றுமல் - (எனது) மனத்தின் கலக்கங்களை ஒழிக்காமல், வல் வினையேன் - வலிய கருமத்தையுடைய எனது, வெம் துயரம் - கொடிய துன்பங்களையே, பார்த்திருக்க - கண்டுகொண்டிருக்க, வேண்டினை கொல் - விரும்பினுயோ? உனை நம்பினுர்க்கு - உன்னை நம்பிச் சரணமடைந்தவருக்கு, ஈதோ நலன் - இதுதானே (நீசெய்யும) நன்மை; (எ- று.)

மறுக்கம் – தொழிற்பெயர்; மறுகு - பகுதி. கொல் - வினு. கொந்து - பூங்கொத்து; மெலித்தல். மன்மதனை மேனியழித்த வரலாறு:—திருக்கயிலாயத்திற் பரமசிவன் சனகர்முதலிய நால்வருக்கு யோகநிலையை உணர்த்துதல்நிமித்தந் தாம் யோகஞ்செய்துகொண்டிருக்கையிற் பிரம னேவலால் மலரம்புகளை எய்து தவத்தைக் கெடுக்கலுற்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணை விழித்து அதன்நெருப்புக்கு இரையாய் உடம்பு எரிந்துபோம்படி செய்தன ரென்பதாம். (௩0)

௩க. நலனழிந்து மூப்படைந்து நாணழிந்து நோயாற்
புலனழிந்து கண்புதையும் போதி—லுலக
லிறைவியொடும் பால்வண்ணு வென்றென் றுனையே
மறுகியழைப் பேனேடி வா.

(இ - ள்.) நலன் அழிந்து - எல்லாநன்மைகளுங்கெட்டு, மூபபு அடைந்து - கிழத்தனம்அடைந்து, நாண் அழிந்து – நாணங்கெட்டு, நோயால் - வியாதியினுல், புலன் அழிந்து - ஐம்புலன்களும் தத்தம்நிலைகெட்டு, கண் புதையும் போதில் - (யான்) கண்ணைமூடிக்கொண்டு இறக்கும்போதில், மறுகி - மனங்கலங்கி, பால்

வண்ணா என்று என்று - பால்வண்ணனேயென்று பலதரஞ்சொல்லி, உனையே-உன்னையே, அழைப்பேன் - கூப்பிடுவேன்; (அப்பொழுது), உலகம் இறைவியொடும் - உலகங்களுக்கெல்லாந் தலைவியாகிய உமாதேவியுடனே, ஓடி வா -(நீ) விரைந்து வந்தருளுவாயாக; (எ - று.)

எப்போதும் உன்னைத்துதித்துப்பழகிய பயிற்சியின்மிகுதியால் எனது அந்திமகாலத்திலும் நான் மறவாது உன்னைத் துதிப்பேனென்றாலும் கரணங்கள் ஒடுங்கி அறிவுசோர்கின்ற காலமாதலால் அப்போது பூர்ணசக்தியில்லாது துதிக்கும் என்தோத்திரத்திற்கும் மனமிரங்கிக் காட்சிதந்து யமபாதையை விடுவித்து நற்கதியருளவேண்டுமென்று அப்போதைக்கு இப்போதே கூறுகின்றனரென்க; "குண்டகழுடுத்த கருவாபுரேச விறுதியிற் கூற்றுவன் கைப்படுநாள் வெருவா தழைத்திடுவேன் வரல்வேண்டும் விடுவிக்கவே" என்றார் கலித்துறையந்தாதியிலும். புலன்அழிதல் - கண்பஞ்சடைதல், காதுகேளாதாதல் முதலியன. (௯௧)

௯௨. ஓடுஞ் சகட்டி னுருளைபோல் வட்டமிட்டுக்
கூடும் பதத்திலெனைக் கூட்டாம—னாடியருள்
பூமலர்க்காச் சூழ்கருவைப் புண்ணியனே பூந்துளவன்
றாமரைக்கண் வைத்த சரண்.

(இ - ள்.) பூ மலர் கா சூழ் - அழகிய பூக்களையுடைய சோலைகள் சூழ்ந்த, கருவை - கருவையிலுள்ள, புண்ணியனே - நல்வினையின் வடிவமாகவுள்ளவனே! ஓடும் - விரைந்துசெல்லுகிற, சகட்டின் - வண்டியின், உருளைபோல் - சக்கரம்போல, வட்டமிட்டு கூடும் - சுழன்று சுழன்று மீண்டும்வருகிற, பதத்தில்-பிறப்புவழியிலேயே, எனை - என்னை, கூட்டாமல் - இனிச்சேர்க்காதபடி, பூ துளவன் - பூக்களையுடைய திருத்துழாய்மாலையையுடைய திருமால், தாமரை கண் வைத்த - செந்தாமரைமலர்போலுந் தமது திருக்கண்ணை இட்டு அருச்சித்த, சரண் - திருவடியை, நாடி அருள் - (எனக்கு) விரும்பி அருளுவாயாக; (எ - று.)

"ஊசல் வடம்போ லூர்ச கடம்போ லொழியாமே, நாச வுடம்போ டாவி சுழன்றே நலிவேனோ" என்றார் பிறரும். சகடு - பரகடம். 'பூந்துளவன் றாமரைக் கண்வைத்தசரண்' என்றவாலாறு:— சலந்தராசுரனைக்கொன்ற சக்கராயுதத்தை அரக்கர்முதலியோரைஅழித்தற்குப் பெறும்பொருட்டுத் திருமால் சிவபெருமானை நாள்தோறும் ஆயிரந்தாமரைமலர்களைக்கொண்டு அருச்சித்து வழிபட்டுவருகையில், ஒருநாள் பரமசிவன் அவ்விஷ்ணுவினது அன்புநிலைமையைப் பரிசோதிக்க எண்ணி ஒருமலரை மறைத்திட, திருமால் மனந்தளர்ந்து தமது செந்தாமரைமலர் போலுங் கண்களைப் பறித்து அருச்சித்தார் என்பது, கூர்மபுராணகதை. (௯௨)

௯௩. சரண கமலந் தலைமேல்வைத் தாண்டு
மரண பவமிரண்டு மாற்றிக்—கருணைசெய்து
பேறான தென்கருவைப் பெம்மா னொழித்தானே
மாறா விதயமன மால்.

(இ - ள்.) பேறு ஆன - (அடியார்களது) பாக்கியமாகிய, தென் கருவை பெம்மான் - தென்கருவைச் சிவபிரான், கருணைசெய்து - திருவருள்புரிந்து, சரண

கமலம் - தாமரைமலர்போலுந் தனது திருவடியை, தலைமேல்வைத்து - (எனது) சிரசின்மேல்வைத்து, ஆண்டு -(என்னை) அடிமைகொண்டு, மரணம் பவம் இரண்டும் மாற்றி - இறப்பு பிறப்பு என்னும் இரண்டையும் (எனக்கு) ஒழித்து, மாறு - நீங்காத, இதயம் மனம் மால்-(எனது) இதயமெனப்படும் மனத்தின்மயக்கத்தை, ஒழித்தான் - நீக்கினான்; (எ - று.)

பெம்மான் - பெருமான் என்பதன் மரூஉ. ஹ்ருதயம் என்னும் வடசொல் ஐந்துப புலன்களால் அபகரிக்கப்படுவதென்று பொருளாதலால், இதயமனமென்றார். இனி, மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்களுள் சித்தம் மனம் என்பவற்றை 'இதயம்', 'மனம்' என்றதாகவுங் கொள்ளலாம். 'அளித்தானே' என்னும் பாடத்துக்கு - என்மனத்தில் என்றும்நீங்காத பக்தியை உண்டாக்கியருளினானென்று பொருள். (ருரு)

ருச. மாலுண்டு நெஞ்சே வருந்துவதென் பால்வண்ணன்
காலுண் டலர்சொரியக் கையுண்டு—நூலுண்டு
வாழ்த்திடநா வுண்டு வரதன் களாவுண்டு
தாழ்த்திடவு முண்டே தலை.

(இ - ள்.) நெஞ்சே - மனமே! (நீ), மால் உண்டு - மயக்கமடைந்து, வருந்துவது - வருத்தப்படுவது, என் - எதற்காக? [வருந்தவேண்டாமென்றபடி]; பால்வண்ணன் - பால்வண்ணப்பெருமானது, கால் - திருவடி, உண்டு - (புகலிடமாக அடைதற்கு) உள்ளது; அலர் சொரிய - (அதிற்) பூக்களை அருச்சித்தற்கு, கை உண்டு - (நமக்குக்) கை உளது; நூல் உண்டு - (அவன்பெருமையை அறிவித்தற்குச்) சாஸ்திரங்கள் உள்ளன; வாழ்த்திட - (அவனைத்) துதித்தற்கு, நா-நாக்கு, உண்டு—; வரதன் - கேட்டவரங்களையெல்லாங்கொடுக்கிற அப்பெருமான் எழுந்தருளியிருக்கிற, களா - திருக்களாமரம், உண்டு - (திருக்கருவையில்) உள்ளது; தாழ்த்திட - (அதனை) வணங்குதற்கு, தலையும்—, உண்டே - (நமக்கு) உள்ளதே; (எ - று.)

கடவுள் தன்னை வழிபட்டு ஈடேறுமாறு நமக்குத் திரிகரணங்களையுந் தந்து, நமக்குத் தீக்கதிநேரவொட்டாது பாதுகாத்தற்கும் தான் சித்தனாக இருக்கையில் மெலிவதற்குக் காரணமொன்றுமில்லை யென்று தமது நெஞ்சிற்கு அறிவுறுத்தியவாறு. "வாழ்த்திடநாவுண்டு பாவிக்கநீயுண்டு மண்ணிலுறத், தாழ்த்திடச்சென்னியுமுண்டு கண்டாய் தண்களவின்மல, ரூழ்த்திடநீழலுறை வாரடியுண்டுனோநிரயம், வீழ்த்திடுவாருமுண்டோ நெஞ்சமேயென்மெலிவதுவே" என்றார் கலித்துறையந்தாதியிலும். வரதன் - சுட்டுப்பெயர்மாத்திரையாய் நின்றது. (ருச)

ருரு. தலையாய தென்கருவைத் தாணுவே மேருச
சிலையாற் புரமெரித்த தேவே—யலகி
லடியவராந் தேவ ரமுதுண்ண நீதான்
கொடியவிட முண்டதென்ன கூறு.

(இ - ள்.) தலை ஆய - (யாவர்க்குந்) தலைவனான, தென் கருவை தாணுவே - தென் கருவைச் சிவபெருமானே! மேரு சிலையால் - மேருமலையை வில்லாகக்

கொண்டு, புரம் எரித்த - திரிபுரத்தைச் சுட்டருளிய, தேவே - தேவனே! அலகு இல் - அளவில்லாத, அடியவர் ஆம் - (உன்) தொண்டர்களாகிய, தேவர்-தேவர்க ளெல்லாரும், அமுது உண்ண - அமிருதத்தை உண்ணுநிற்க, நீ - (அவர்களுக்குத் தலைவனாகிய) நீ, கொடிய விடம் உண்டது - கொடுந்தன்மையையுடைய விஷத் தைப் புசித்தது, என்ன - யாதுகாரணத்தால்? கூறு - சொல்லு; (எ - று.)

நீ வருந்தியாவது உன்னைச்சரணமடைந்த அடியார்க்கு அருள்செய்யுந்திறம் வியக்கற்பாலது என்றவாறு. தாணு - ஸ்தாணு; பிரளயகாலத்திலும் அழிவில் லாம லிருப்பவன். விடமுண்டது - தேவர்கள் வேண்டுகோளினாலுந் திருவருளி னாலு மென்க. (௬௫)

௬௬. கூறு படுமதியக் கோடீரம் விண்ணுடைக்க
நாறுமலர்த் தாளுரக நாடுடைக்கப்—பேறுபெற்ற
மாயவனார் போற்ற வளருந் தமிழ்க்கருவை
நாயகனா ராடு நடம்.

(இ - ள்.) தமிழ் கருவை - தமிழ்வழங்குந் திருக்கருவையி லெழுந்தருளிய, நாயகனார் - (யாவர்க்குந்) தலைவராகிய சிவபிரான், ஆடும் - நர்த்தனஞ்செய்கின்ற, நடம் - திருநடனமானது,—கூறு படு-(ஒற்றைக்) கலை பொருந்திய, மதியம் - சந் திரனை அணிந்த, கோடீரம் - திருமுடி, விண் உடைக்க - மேலுலகத்தைத் தாக்க வும், நாறு மலர் தாள் - மணம் வீசுகிற தாமரைமலர்போலுந் திருவடி, உரகம் நாடு உடைக்க - நாகங்கள் வாசஞ்செய்யுமிடமாகிய பாதாளலோகத்தைத் தாக்கவும், பேறு பெற்ற - நல்லபாக்கியத்தைப்பெற்ற, மாயவனார் - திருமால், போற்ற - புகழ்ந்து துதித்து வணங்கவும், வளரும் - சிறப்புற்றிருக்கும்; (எ - று.)

இங்ஙனம் ஆடுதல் சருவசங்காரகாலத்தி லென்க. "முடிகடந்தது ககன கோளகை நெடுமுகட்டினுக்கப்பாலு, மடிகடந்தது பாதலமேழினுக் கப்புறத்தன லோடுந்,துடிகிடந்த கைகடந்தன திகந்தமாறெல் புகழ்க்களாவீசன், பொடிகிடந்த பான்மேனியன் திருநடம்புகலுதற்கெளிதோ", "நாற்றடந்தோடிசையெட்டிலுந் தட்டநரகளிக்கும்,—கூற்றடுந்தாளெழுபாதலம்போய்ப்புகக் கொன்றைநறு, ஆற் றெழும்பொன்முடி யண்டகடாகமொரிக்கநின்று, பாற்றிருமேனிக்களாவீசனும் பவுரிகொண்டே" என்றார் மற்றைபந்தாதிகளிலும். பேறு - இவ்வாறு புகழ்தல் முதலியன செய்தற்கு ஏற்றது. 'மாயனார்', 'நாயனார்' என்றும் பாடமுண்டு. தமிழ் வளருங் கருவைநாயனார் நடமாடும் என்று கூட்டலுமாம். (௬௬)

௬௭. நடம்புரிதாள் போற்றிநின்ற நன்முனிய தென்றோ
விடங்கொ டமிழ்க்கருவை யீசா—வடுங்கூற்றை
வேலினாற் போர்மழுவால் வெல்லாமற் செங்கமலக்
காலினால் வென்ற கருத்து.

(இ - ள்.) இடம் கொள் - பரப்பைக்கொண்ட, தமிழ் கருவை - தமிழ்க் கரு வையிலுள்ள, ஈசா - தலைவனே! அடும் - (மார்க்கண்டேயரைக்) கொல்லவந்த, கூற்றை - யமனை, வேலினால் - வேலாயுதத்தினாலாவது, போர் மழுவால் - போ ருக்குஉரிய மழுவாயுதத்தினாலாவது, வெல்லாமல் - (பொருது) வெற்றிகொள்ளா

மல், செம் கமலம் காலினுல் - செந்தாமரை மலர்போலுந் திருவடியால் (உதைத்து), வென்ற - (நீ) வெற்றிகொண்ட, கருத்து - எண்ணம், நடம் புரி தாள் - நடனஞ் செய்கிற அத்திருவடி, போற்றிநின்ற நல்முனியது என்றோ - வணங்கிவழிபட்டு நின்ற நல்ல அம்முனிவருடைய தென்றுதானோ? (எ - று.)

திருவடியைப்போற்றும் முனிவனை வருத்தத்தொடங்கிய நமனை அத்திரு வடியைக்கொண்டே வெல்லவேண்டுமென்று எண்ணி அதனாலேயே உதைத்து வென்றாய்போலுமென்று கருத்து. ஊழ்வினையாற் பதினாறுபிராயம்பெற்ற மிரு கண்டுபுத்திரராகிய மார்க்கண்டேய ரென்பவர் கூற்றுவன் வந்து காலபாசத்தாற் கட்டியிழுக்குங்காலத்துப் பரமசிவனைச் சரணடைய, அப்பெருமான் யமனைக் காலால் உதைத்துத்தள்ளி முனிகுமாரருக்கு என்றும்பதினாறாகத் தீர்க்காயுசு கொடுத்தருளின ரென்பது, வரலாறு. இக்கதையால் அனுபவித்தேதீரவேண்டும் பெருவலியதாகிய ஊழ்வினையையுந் தம் அடியார்க்குக் கடக்கச்செய்கிற கடவுளது திருவருளுடைமை விளங்குகிறது. (கூஎ)

கூ௮. கருத்தழிந்து கன்மக் கலைமறந்து கண்டார்
விருத்தனிவ னென்று வெறுத்துச்—சிரிக்கமுது
காடுகுடி யேற்றுமுற் காத்துமுக லிங்காவுன்
னாடுகுடி யேற்றுவதே நன்று.

(இ - ள்.) முகலிங்கா - முகலிங்கப்பெருமானே! கருத்து அழிந்து - மனந் தடுமாறி, கன்மம் கலை மறந்து - செய்யுந்தொழிலின் வகைகளை மறந்து, கண்டார் விருத்தன் இவன் என்று வெறுத்து சிரிக்க - பார்த்தவர்யாவருங் கிழவன் இவன் என்றுசொல்லி இகழ்ந்து பரிகசித்துச் சிரிக்கும்படி (கிழத்தனம் அடைந்து இற ந்தபின்பு, என்னை), முதுகாடு குடி எற்றமுன் - தொன்றுதொட்டு வருகிற மயான வனத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பதன் முன்னமே, காத்து - ரக்ஷித்தருளி, உன் நாடு குடி எற்றுவதே - உனது உலகத்திற் சென்று சேரச்செய்வதுவே, நன்று - நல்லது; (எ - று.)

இப்பிறப்பில்தானே என்னைக் காத்துச் சிவலோகத்தை அடையச்செய்ய வேண்டு மென்பது, கருத்து. கருத்தழிதலுங் கன்மக்கலைமறத்தலும், முதுமை யின் முதிர்ச்சியாலாவன. 'காமக்கலைமறந்து' என்றும் பாடம். (கூ௮)

கூகூ. நன்கவிஞ் னாகவிய னாவளித்து நாடோறுந்
தன்கழலே பாடுந் தரமளித்தா—னன்கவைத்த
சூலத்தான் றென்பொதியத் தொல்லோன் றொழுதமணக்
கோலத்தான் றென்கருவைக் கோ.

(இ - ள்.) நல் கவைத்த - நல்ல (மூன்று) பகுப்பையுடைய, சூலத்தான் - சூலாயுதத்தை யுடையவனும், தென் பொதியம் தொல்லோன் தொழுத-தெற்கி லுள்ள பொதியமலையிலெழுந்தருளிய பழைய[பெரிய] அகத்தியமுனிவர் வணங் கின, மணம் கோலத்தான் - திருக்கலியாணக்காட்சியை யுடையவனுமாகிய, தென் கருவை கோ - தென்கருவைப்பிரான், நல் கவிஞன் ஆக - (யான்) நல்ல பாடல் களைச் செய்யவல்ல புலவனுமபடி, இயல் நா அளித்து-கல்வியோடுகூடிய நாக்கை

(எனக்கு)க் கொடுத்தருளி, நாள்தோறும் - எந்நாளும், தன் கழலே பாடும் தரம் - தனது திருவடியையே புகழ்ந்துபாடுந்தன்மையையும், அளித்தான் - உண்டாக்கியருளினன் ; (எ - று.)

இரும்பை ரஸமிட்டுப் பொன்னாக்குவதுபோல ஐம்பொறிகட்கு இலக்காகிக் கல்நெஞ்சனாய்த்திரிந்த என்னைத் திருவருள் நோக்கஞ்செய்து திருத்திப்பணிகொண்டு எப்பொழுதும் தனது திருப்புகழ்களையே கவிபாடித்துதிக்குங் கவனசக்தியையுங் கொடுத்தருளினன் இறைவனென்பதாம்; "அல்லும்பகலுமொழியாது தம்புகழாதரித்துச், சொல்லும்படிக்குக் கவிநாவளித் தெனைத் தொண்டு கொண்டார்" என்ற கலித்துறையந்தாதியும் கருதத்தக்கது. கவிக்கு நன்மை - சொல்லும் பொருளும் முதலியன இனியனவாதல். கவைத்த - கவைஎன்னும் பெயரடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். கவைஎன்றது - சூலத்தின் தலைகளை. பரமசிவனார் பார்வதீதேவியாரைத் திருமணஞ்செய்துகொள்ளும்பொழுது எல்லாவுலகங்களிலுமிருக்கிற தேவர் முனிவர் முதலிய யாவரும் வந்துசேர்ந்து இமயமலையினிடத்து ஒருங்குதிரண்டதனாற் பூமி வடதிசைதாழ்ந்து தென்திசைஉயர, அதுகண்டு அனைவரும் இதற்கு என்செய்வதென்று அலமர, சிவபெருமான் தமக்குச்சமமான அகத்தியமகாமுனிவரைநோக்கி 'நீர்தாந் தெற்குப்பக்கத்து இருத்தற்கு உரியவர்' என்றுசொல்லி விடைகொடுத்து அனுப்ப, அவரும் சிவாஜ்ஞையை மறுமாட்டாது பொதியமலைக்குப் போதுகின்றவர் உமாமகேசுவரர்களது திருமணக் கோலக்காட்சியைக் காணப்பெற்றிலேனேயென்று மிகவும் மனம்வருந்த, அப்பொழுது அவருக்கு உருத்திரமூர்த்தி தென்திசையிற் காட்சிகொடுப்போமென்று அருளிச்செய்து அங்ஙனமே பின்னர்த் தரிசனந்தந்தருளினாரென்பது இங்குக் குறித்தவரலாறு. (கக)

சுo. கோவா யமரர் குழாம்போற்ற வாழ்ந்தாலுந்
தீவாய் நரகிடைப்போய்ச் சேர்ந்தாலும்—பாவையிடத்
தாண்டகையே தென்கருவை யையா வடியேற்கு
வேண்டுவதுன் பேரே மிக.

(இ - ள்.) பாவை இடத்து - சித்திரப்பதுமைபோன்ற உமாதேவியை வாமபாகத்திலுடைய, ஆண் தகையே - ஆண்மைக்குணமுள்ளவனே! தென்கருவை ஐயா தென்கருவை நாதனே !—(யான்),—அமரர் குழாம் போற்ற-தேவர்கள்கூட்டம்துதிக்கும்படி, கோ ஆய் - (அவர்களுக்கெல்லாந்) தலைவனாகிய இந்திரனாய், வாழ்ந்தாலும் - வாழ்வுபெற்றாலும், தீ வாய் - நெருப்பின் தன்மை [வெப்பம்] பொருந்திய, நரகிடை - நரகத்தில், போய் சேர்ந்தாலும்—, அடியேற்கு - (உன்) தொண்டனாகிய எனக்கு, உன் பேரே - உனது திருநாமமே, மிக வேண்டுவது - (மனத்திலுஞ் சொல்லிலும்) மிகுந்திருக்கவேண்டியது; (எ - று.)

நான் எந்தநிலையையடைந்தாலும் உனது திருநாமசங்கீர்த்தனமொன்றையே வேண்டுவேனென்பதாம். இதனால், சிவபிரானது விஷயமான பக்தியின்பெருமையும், அப்பக்தியினிடத்துத் தமக்குள்ள வேண்டற்பாட்டின் அருமையும் தோன்றும். (சுo)

சக. மிகத்தேடு செம்பொன்னும் வேட்டமனை யாளு
மகப்பேறு மங்குதவ வாரா—பகைத்துறுக்கிக்
கையாற் கதையேந்திக் காலன் வரிற்கருவை
யையாவென் றோதா தவர்க்கு.

(இ - ள்.) கருவை ஐயா என்று ஓதாதவர்க்கு-திருக்கருவைநாதனேயென்று (ஒருதரமாயினுஞ்) சொல்லித்துதியாதவர்களுக்கு, காலன் - யமன், பகைத்து - விரோதங்கொண்டு, உறுக்கி - அதட்டிக்கொண்டு, கையால் கதைஏந்தி - கையினால் (தனது) தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு, வரின் - வந்தால், அங்கு - அப்பொழுது, மிக தேடு செம் பொன்னும் - அதிகமாத்தேடிவைத்த சிவந்தபொன்னும், வேட்ட மனையாளும் - விரும்பி மணஞ்செய்துகொண்ட மனைவியும், மக பேறும் - புத்திரபாக்கியமும், உதவ - (அவ்யமனைத் தடுத்து) உதவிசெய்தற்கு, வாரா - வரமாட்டாவாம்; (எ - று.)

வேட்ட, வேள் - பகுதி. பொன் பேறு என்னும் அஃறிணைகளும், மனையாள் என்னும் உயர்திணையும் - அடுக்கி, மிகுதியினால் 'வாரா' என்னும் அஃறிணை வினை கொண்டது. கருவை ஐயனேயென்று ஒருகாலாயினும் ஓதியவர்க்கு யமனால்நேரும் வருத்தம் ஒன்றும் உண்டாகாது என்பதாம். (சக)

சஉ. அவல விடக்கை யழியுமலக் கூட்டைக
கவலை நிறைத்த கடத்தைப்—புவனிதொறும
வாளாச சுமக்கும் வருத்தமொழி பால்வண்ணு
தாளா வயித்தியநா தா.

(இ - ள்.) பால்வண்ணு - பால்வண்ணனே! தாளா - திருவடியின் மகிமையையுடையவனே! வயித்தியநாதா - வைத்தியநாதனென்னுந் திருநாமமுடையவனே! அவலம் - வருத்தத்தைத்தருகிற, விடக்கை - மாம்சமயமானதும், அழியும - (நிலையில்லாமல்) அழியும்படியான, மலம் கூட்டை - (ஆணவம மாயை காமியம் என்னும் மூவகை) மலங்களையும் அடைத்துவைத்திருக்கிற கூண்டுபோன்றதும், கவலை நிறைத்த கடத்தை கிலேசங்களை நிரப்பிவைத்த பாத்திரம்போல இருப்பதுமான உடம்பை, புவனிதொறும் - உலகங்கள்தோறும், வாளா - வீணாக, சுமக்கும் - பரிப்பதனாலுண்டாகிற, வருத்தம் - வருத்தத்தை, ஒழி - (எனக்குப்) போக்கியருள்வாயாக; (எ - று.)

எனதுபிறப்பை ஒழித்து முத்தியளிக்கவேண்டு மென்றதாம். முத்திபெற விரும்புவார்க்குப் பலதுன்பங்களுக்கும் இடமான உடம்பு பாரமாகவும் அவ்வுடம்பை ஓம்புதற்குச் செய்யுந்தொழில்களெல்லாம் வீணாகவுந் தோன்றுமாதலால், இங்ஙனங்கூறினர். "வினையின்வந்தது வினைக்குவிளைவாயது, புனைவனநீங்கிற்புலால் புறத்திடுவது, மூத்துவிளிவுடையது தீபபிணியிருக்கை, பற்றின்பற்றிடங் குற்றக்கொள்கலம், புற்றடங்கரவிற் செற்றச்சேக்கை, அவலக்கவலை கையாறழுங்கல், தவலாவுள்ளந் தன்பாலுடையது, மக்கள்யாக்கையிது" என்றபடி மக்கள்யாக்கை தூயதல்லாததாகுந் தன்மையை முதலிரண்டடியில் விளக்கினர். புவனி - புவனமென்பதன் திரிபு. (சஉ)

சங. நாதனென வந்துன்னை நானடைந்தே னீயுமெனை
யாதரித்தெ னுள்ளுருக்கி யாட்கொண்டாய்—பேதித
திடைபோகத் தள்ளா தியற்கருவை நாதா
கடைபோகக் காத்தல் கடன்.

(இ - ள்.) இயல் கருவை நாதா - இலக்கணமமைந்த திருக்கருவைக்குத தலைவனே! நான்—, உன்னை—, நாதன் என - கடவுளென்று எண்ணி, வந்து அடைந்தேன் - வந்து சரணமடைந்தேன்; நீயும்—, எனை - என்னை, ஆதரித்து-அன்புவைத்து, என் உள் உருக்கி-எனதுமனத்தைக் கரையச்செய்து, ஆள் கொண்டாய் - அடிமைகொண்டாய்; இடை - இடையில், பேதித்து - (நீ) மனம் வேறுபட்டு, போக தள்ளாது-(என்னை)அழிந்துபோம்படி தள்ளிவிடாமல்,கடைபோக-முடிய, காத்தல் - பாதுகாப்பது, கடன் - (உனது) கடமையாம் ; (எ - று.)

'ஆதுலனென் றுள்ளுருகி' என்றும்,'போதித்து' என்றும் பாடமானபோது-கதியற்றவனென்று எண்ணி மனமிரங்கியென்றும், (தத்துவஞானத்தை) உபதேசித்து என்றும் பொருள்கொள்க (சங)

சச. கடலுலக மண்டரண்டங் காயழலி னீற்றி
யடலையுடன் முற்று மணிநது—சுடலைதனிற
ருழ்சடிலத் தென்கருவைத் தாணு தமியனா
யேழிசையாழ் வாசித திடும.

(இ - ள்.) தாழ் சடிலம - தாழ்ந்த சடையையுடைய, தென் கருவை தாணு-தென்கருவைச் சிவபிரான், கடல் உலகம் - கடலினாற் சூழபபட்ட நிலவுலகத்தையும், அண்டர் அண்டம் - தேவர்களது உலகங்களையும், காய் அழலின் - எரிகின்ற நெருபபினால், நீற்றி - சாம்பலாம்படி எரித்து,—அடலை - அச்சாம்பலை, உடல் முற்றும் - உடம்புமுழுதும், அணிந்து - பூசிக்கொண்டு,—சுடலைதனில் - மயானமாகிய அவ்விடத்தில், தமியன் ஆய் - வேறுதுணையில்லாதவராய், எழ் இசை யாழ் - சப்தசுரங்களையுடைய வீணையை, வாசித்திடும் - வாசிப்பர்; (எ - று.)

அடலை - அடப்பட்டது; அடுதல் - எரித்தல். சுடலை - சுட்டெரிக்குமிடம். ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன; இவற்றிற்கு எழுத்துக்கள் - ச ரி க ம ப த நி என்பன. (சச)

சரு. வாசித்தே னில்லை வரதன் சிவாகமத்தைப்
பூசித்தே னில்லையவன் பொன்னடியை—நேசித்தே
யொப்பனையாள் கேள்வனென வோதித் துதிக்கிலே
னெப்படியா னீடேறு வேன்.

(இ - ள்.) வரதன் - பரமசிவனால் அருளிச்செய்யப்பட்ட, சிவ ஆகமத்தை - சிவவிஷயமான (காமியம்முதலிய இருபத்தெட்டு) ஆகமங்களு ளொன்றையும், வாசித்தேன் இல்லை - படித்தேனில்லை; அவன் பொன் அடியை அவ்வெம் பெருமானது பொன்போலரிய திருவடியை, நேசித்து - அன்புவைத்து, பூசித்தேன் இல்லை - அருச்சித்து வழிபட்டே னில்லை; ஒப்பனையாள் கேள்வன் என-

ஒப்பனையம்மையது கணவனென்று, ஓதி - சொல்லி, துதிக்கிலேன் - துதித்தேனில்லை; யான் எப்படி ஈடேறுவேன் - நான் எப்படி கடைத்தேறுவேன்; (எ-று.) —ஈடேறுதல் - நற்கதிபெறுதல்.

'நேசித்து' என்பதை மத்திமதீபமாகப் பின்வாக்கியத்திலுங் கூட்டுக. (சரு)

சசு. ஏறுவது கொல்லே றெரிசுடலை யாடரங்கு
கூறைபுலித் தோன்மணிப்பூண் கோளரா—நாறு
கரந்தை யணிகருவைக் காபாலிக் கென்பால்
வரந்தரவே றுண்டோ வகை.

(இ ள்.) கருவை - திருக்கருவையி லெழுந்தருளிய, காபாலிக்கு - (கையிற்) கபாலத்தையுடைய பரமசிவனுக்கு, ஏறுவது - ஏறிநடத்தும்வாகனம், கொல் ஏறு - கொல்லுந்தன்மையையுடைய விருஷபமாம்; ஆடு அரங்கு - நர்த்தனஞ்செய்யுமிடம், எரி சுடலை - எரிக்குமிடமான மயானமாம்; கூறை - உடுக்கும்உடை, புலி தோல் - புலியின் தோலாம்; மணி பூண் - அழகிய இரத்தினாபரணம், கோள் அரா - உயிர் கொள்ளுந் தன்மையையுடைய நாகங்களாம்; அணி - அணியப்படும் மாலை, நாறு கரந்தை - வாசனைவீசுகிற கரந்தைச்செடியின்மலராம்; (ஆகையால்), என்பால் - எனக்கு, வரம் தர - வரமாக (நான் வேண்டியதை)க் கொடுக்க, வேறு வகை உண்டோ - (அவருக்கு)வேறே வழி உளதோ' (எ - று.)—இல்லை யென்றபடி.

வாகனம் முதலியவைகளில் ஒருவாற்றாலும் சிறப்புப்பெறாத சிவபெருமான் எனக்கு எவ்வாறு வரந்தருவனென வியந்தவாறு; என்றது - விருஷபம முதலியவற்றை எனக்குத் தந்து சாரூப்பிய பதவியை எளிதில் அருளுவார் என்றதாம். வஞ்சப்புகழ்ச்சியணி; வடநூலார் நிந்தாஸ்துதிஎன்பர். "எருமையு மரையும் பெற்றமு மன்ன" இதனால், ஏறென்றார். காபாலி - கபாலியென்பதன் நீட்டல்; கபாலம் - தலையோடு: ஒருகாலத்திற் பிரமன் தானே முதற்கடவுளென்று கூறிச் செருக்குற்றிருக்கையில், சிவபிரான் தாமேமுதல்வரென்ற தெரிவிக்குமாறு திவ்வியசொரூபத்தோடு எதிரில்தோன்ற, அவ்வயனது ஐந்தாமுகம் 'எனதுநெற்றியினின்றுந் தோன்றிய நீயோ முதல்வன்' என்றுகூறிச் சிவனைப் பழித்தவளவில், அப்பெருமான் தமது அம்சமாகிய வயிரவரை நோக்கியருள, அவர் தமது இடக்கைவிரலின் நகத்துநுனியால் அவ்வைந்தாந்தலையைக் கொய்துவிட, அக்கபாலம் அப்படியே அவர்கையில் ஒட்டிக்கொள்ளுதலும், உருத்திரமூர்த்தி தருமத்தை உலகத்தவர் அறிந்து அனுஷ்டிக்குமாறு தாம் அனுஷ்டித்துக்காட்டும்படி வயிரவரை நோக்கி 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்' என்றுஉரைக்க, அவர் அங்ஙனமே பலகாலம் பல தலங்களிலுஞ் சென்று கைக்கபாலத்தோடு பிக்ஷாடனஞ்செய்தன ரென்பது, வரலாறு. (சசு)

சஎ. வகிர்மதியக் கண்ணியான் வாணுதல்பா கத்தான்
புகர்முகக்கைம் மாவுரியைப் போர்த்தான்—முகரித்துத்
தென்னு தெனவென்று வண்டிரைக்குந் தென்கருவை
யென்னுதன் வானோர்க் கிறை.

(இ - ள்.) வகிர் மதியம் கண்ணியான் - பிளவுபட்ட சந்திரனைத் தலையிற் சூடும் மாலையாக உடையவனும், வாள் நுதல் பாகத்தான் - ஒளியையுடைய நெற்றியையுடைய உமாதேவியை இடப்பக்கத்திற் கொண்டவனும், புகர் முகம் கை மா - புள்ளிகளையுடைய முகத்தையுடைய துதிக்கையையுடைய யானையினது, உரிவை - தோலை, போர்த்தான் - மேலே போர்த்துக்கொண்டவனும், வண்டு - வண்டுகள், தென்னு தெனு என்று, முகரித்து இரைக்கும் - மிகவும் ஆரவாரிக்கிற தென்கருவை-தென்கருவையிலுள்ள, என் நாதன்-எனது தலைவனும் ஆகிய சிவபிரானே, வானோர்க்கு இறை - தேவர்களுக்கெல்லாந் தலைவனாவன்; (எ-று.)

வாணுதல்-அன்மொழித்தொகை. உரி-உரிக்கப்படுவது; செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்ட பெயர்: கெடாக்கால் உரிவை என நிற்கும். முகரித்து இரைத்தல் - ஒருபொருட் பன்மொழி.

கைம்மாவுரியைப்போர்த்தகதை:—அருந்தவமியற்றிப்பெருவரம்பெற்ற கஜாசுரனென்பவன் தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாது வருத்தித்துரத்த, அஞ்சியோடின அவர்களது பிரார்த்தனையாற் பரமசிவன் தம்மையெதிர்த்துப் போர் செய்யவந்த அவ்வசுரனைக் காலாலுதைத்துத் தள்ளிக் கொன்று தோலையுரித்துப் போர்த்தருளின தென்றாயினும்; தாருகவனமுனிவர் ஏவிய யானையினுட்சென்று உருத்திரமூர்த்தி உடல்பிளந்து அதனுரிவையைப் போர்த்துக்கொண்ட தென்றாயினுங் கொள்க. (சஎ)

சஅ. இறைப்பொழுது நீங்கா திருகண்ணு நெஞ்சுங்
கறைக்களமுஞ் செஞ்சடிலக் காடும்—பிறைக்கொழுந்தும்
புண்டரிக வாண்முகமும் பூங்களவி னீழலோ
னெண்டரளப் புன்முறு வலும்.

(இ - ள்.) பூ களவின் நீழலோன் - பூக்களையுடைய [அல்லது அழகிய] திருக்களாவின் நிழலிலுள்ள பரமசிவனது, கறை களமும் - விஷமுண்டுகறுத்த திருக்கழுத்தும், செம சடிலம் காடும் - காடுபோல அடர்ந்த சிவந்தசடையும், பிறை கொழுந்தும் - (அச்சடையில்அணிந்த) இளஞ்சந்திரனும், புண்டரிகம் வாள் முகமும் - தாமரைமலர்போல அழகிய ஒளியையுடைய திருமுகமும், ஒள் தரளம் புன்முறுவலும் ஒளியையுடைய முத்துப்போன்ற [வெள்ளிய] புன்சிரிப்பும்,—இரு கண்ணும் - (எனது) இரண்டுகண்ணையும், நெஞ்சும் - மனத்தையும், இறை பொழுதும் - கணப்பொழுதும், நீங்காது - (தனித்தனி) விட்டுநீங்காது; (எ - று.)

எப்பொழுதும் அக்கடவுளின் களம் முதலியவற்றையே தரிசித்துத் தியானிப்பே னென்றதாம். என்றது - உருவெளிப்பாடுகாணுதலை உட்கொண்டாகவுமாம். நீங்காது - ஒருமைபன்மை மயக்கம்; பால்வழுவமைதி. (சஅ)

சகூ. மூராலாற் றுளான் முளரித் திருக்கண்ணாற்
காருலாஞ் சோலைக் கருவேசர்—நேரலரூர்
சுட்டார்வெங் கூற்றை யுதைத்தார்தொல் வேளையெய்ய
வொட்டா தெரித்தா ருடல்.

(இ - ள்.) கார் உலாம் சோலை கருவா ஈசர் - மேகங்கள்வந்து தவழப்பெற்ற [மிகஉயர்ந்த] சோலைகளையுடைய திருக்கருவையிலுள்ள சிவபிரான்,—மூரலால் - (தமது புன்) சிரிப்பினாலும், தாளால் - திருவடியாலும், மூளரி திரு கண்ணால் - நெருப்புவடிவான அழகிய நெற்றிக்கண்ணினாலும், (முறையே), நேரலர் ஊர் சுட்டார் - (தேவர்க்குப்) பகைவர்களாகிய அசுரர்களது முப்புரங்களை எரித்தார்; வெம் கூற்றை உதைத்தார் - கொடிய யமனை உதைத்துத்தள்ளினார்; தொல் வேளை - தொன்றுதொட்டுவருகிற மன்மதனை, எய்ய ஒட்டாது - (மலரம்புகளைத் தம்மேல் மீண்டும்) தொடுக்கவொட்டாமல், உடல் எரித்தார் - உடம்மை எரித்தார்; (எ று.)

சிவபெருமான் செயற்கரிய தொழிலைச்செய்து தமதுஉறுப்புக்களாற் பகைவரை வலியொடுக்கும் பேராற்றல் படைத்தவ ரென்பதாம். மூரலால் ஊர்சுட்டார், தாளால் கூற்றை உதைத்தார், கண்ணால் வேளைஉடலெரித்தார் என முறையே இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். நேரலர் - சேராதவர். வேள் - விருப்பம்; ஆண்பெண்களுக்கு விருப்பத்தையுண்டாக்குங் கடவுளுக்கு ஆகுபெயர்; இனி, கண்டாரால்விரும்பப்படுங் கட்டழகுடையவ னெனினுமாம்: இச்சொல் முருகவேளுக்கும் பெயராக வழங்குதலுண்டு. இங்கு 'எரித்தாருடல்' என்றதனால், காமவேளை யுணர்த்திற் றென்க. (சக)

**ருo.** உடலி லுயிரா யுயிர்க்குயிரா னானைக்
கடலுலகெல் லாந்தேடிக் காணேன்—கொடியதொரு
புன்கருவை மாற்றிப் புரந்தவனைப் புண்ணியனை
நன்கருவை யிற்கண்டே னான்.

(இ - ள்.) உடலில் உயிர் ஆய் - எல்லாவுடம்புகளுள்ளுந் தங்குகிற ஜீவாத்மாவாய், உயிர்க்கு உயிர் ஆனானை-அவ்வான்மாக்களுள்ளும் மறைந்துதங்குகிற அந்தராத்துமாவுமாகிய பரமாத்மாவும், கொடியது ஒரு புல் கருவை - கொடுந்தன்மையையுடையதாகிய இழிவான பிறப்பை, மாற்றி - (தன் அடியார்களுக்குப்)போக்கி, புரந்தவனை - (அவர்களைக்) காத்தருளினவனும், புண்ணியனை - நல்வினையின்வடிவாக உள்ளவனுமாகிய சிவபிரானை,—நான்—, கடல் உலகு எல்லாம் - கடலாற் சூழப்பட்ட நிலவுலகமுழுவதிலும், தேடி - தேடிப்பார்த்தும், காணேன் - காணாதவனாய், (பின்பு), நல் கருவையில் - நல்ல திருக்கருவைத்தலத்தில், கண்டேன் - தரிசித்தேன்; (எ - று).

உடலுக்குள் உயிர்தங்கியிருத்தல் போலப் பரமாத்துமா ஜீவாத்மாவினுள் வீற்றிருத்தலால், 'உயிர்க்கு உயிரானான்' என்றார். (ருo)

**ருக.** நானே யறிந்தவனை நாடற் கெளிதாமோ
கானேர் பசிய களாவனத்தான்—றானேயென்
னுள்ளச் சிலையை யுலைவாய் மெழுகெனவே
மெள்ளக் கரைக்கா விடின்.

(இ - ள்.) கான் நேர் - வாசனைபொருந்திய, பசிய - பசுமையாகிய, களாவனத்தான் - திருக்களாவனத்தில் எழுந்தருளியிருக்குங் கடவுள், தானே - தானே

கவே [என்முயற்சியில்லாமலே,] என் உள்ளம் சிலையை - எனது மனமாகிய கல்லை, உலை வாய் மெழுகு எனவே - உலைக்களத்துத் தீயிடத்திற்பொருந்திய மெழுகு உருகுவதுபோல, மெள்ள - மெதுவாக, கரைக்காவிடின் - உருகச்செய்யாவிட்டால், அவனை - அப்பிரானை, நானே - நானாகவே, அறிந்து - தெரிந்து, நாடற்கு - விரும்பியடைதற்கு, எளிது ஆமோ - எளியதாகுமோ? (எ - று.)— ஆகா தென்றபடி.

மெள்ள - மெல்ல வென்னுங் குறிப்பு வினையெச்சத்தின் போலி. (௬௧)

௬௨. விட்டேன் பரசமய மேவாது வேர்களைந்து
சுட்டேன்பொய்க் காமத் தொடர்பெல்லாம்—பட்டநுதற்
கைம்மா வுரித்த களவீச னைக்கருவைப்
பெம்மானை யான்பணிந்த பின்.

(இ - ள்.) யான்—, பட்டம் - பட்டத்தையணிந்த, நுதல் - நெற்றியையுடைய, கை - துதிக்கையையுடைய, மா - யானையை, உரித்த-உரித்துத்தோலைப் போர்த்துக்கொண்ட, கள ஈசனை - களாமரத்தின் கீழ்க்கடவுளும், கருவை பெம்மானை - திருக்கருவைத்தலைவனுமாகிய சிவனை, பணிந்தபின் - வணங்கினபின்பு,—பர சமயம் - வேறுமதங்களை, மேவாது - விரும்பாமல், விட்டேன் - நீக்கி விட்டேன்; பொய் - வஞ்சனைக்கு இடமான, காமம் - காமத்தினது, தொடர்பு எல்லாம் - தொடர்ச்சி முழுவதையும், வேர் களைந்து - வேரோடுஅறுத்து, சுட்டேன் - எரித்தேன்; (எ - று.) (௬௨)

௬௩. பின்னை தழுவுங் கணையேன் பெரும்பாந்தண்
மன்னு நெடுநாண் மலைவில்லே—னென்னே
பகைத்தவர்த முப்புரமோ பால்வண்ண நீயே
நகைத்தெரிக்கப் போமே நமக்கு.

(இ - ள்.) பால்வண்ண - பால்வண்ணனே! பகைத்தவர் தம் முப்புரமோ - (தேவர்களை) விரோதித்த அசுரர்களது மூன்றுபட்டணமோ என்றால், நீயே நகைத்து எரிக்க-(வேறுதுணையில்லாமல்) நீமாத்திரமேபுன்சிரிப்புச்செய்துதகிக்க, போமே - அழிந்துபோய்விடுமே; (இப்படியிருக்க), நமக்கு - உனக்கு, பின்னை தழுவும் கணை - (கிருஷ்ணாவதாரத்தில்) நப்பின்னைப்பிராட்டியை ஆலிங்கனஞ் செய்த (திருமாலாகிய) அம்பு, என் - எதற்காக? பெரு பாந்தள் - பெரிய (ஆதி சேஷனென்னும்) பாம்பு, நெடு நாண் மன்னு - பெரிய நாணியாகப்பொருந்திய, மலை வில் - மேருமலையாகிய வில், என் - எதற்காக? என்னே - (இவற்றைத்துணையாகக்கொண்டது) என்ன காரணத்தால்? (எ - று.)

எல்லாம்வல்ல இறைவனை நீ திரிபுரசங்காரகாலத்தில் கணைமுதலியதுணையை விரும்பியது, உனதுமாயை யென்பதாம். பின்னை - ஓர் ஆயர்தலைவன்மகள்; இப்பெயர் கொண்ட அரசன்மகளொருத்தியும் உண்டு: அவளையுங் கண்ணன் மணஞ்செய்துகொண்டான். 'நமக்கு' என்பதில், நாம்என்னும் உளப்பாட்டுத் தன்மை உயர்வுதோன்ற முன்னிலையில் வந்தது; திருக்கோவையாரில் "காமனை வென்ற

கண்ணேன்" என்ற செய்யுளில் "நா மறையாமத்தென்னோ வந்து வைகி நயந்தது வே" என்றவிடத்திலும், கம்பராமாயணத்தில் ஆரணியகாண்டத்தில் சூர்ப்பணகைப்படலத்தில் "செங்கயல்போல் கருநெடுங்கண்" என்னுஞ் செய்யுளில் "தாமரையுறையும், நங்கையிவ ளென நெருநல் நடந்தவரோ நாமென்ன" என்றவிடத்திலும் போல: இடவழுவமைதி; இவ்வாறுகூறுதல் வழக்கத்திலுங்காண்க. நீயே என்றதற்கு ஏற்ப 'நினக்கு' எனச்சொல்லவேண்டும் ஒருமையிற் பன்மைவந்தது, ஒருமைப்பன்மைமயக்கம்; இதுவும், உயர்வுபற்றியதே. (௫௩)

௫௪. நமரங்கா டென்கருவை நாதனடு வெஞ்சூர்க்
குமரனுக்கா ளாய்ப்பணிந்த கோமான்—றமரக்
கருங்கடனஞ் சுண்ட களவீச னென்றான்
மருங்கடரு மோதுயரும் வந்து.

(இ - ள்.) நமரங்காள் - நம்மவர்களே!—தென்கருவை நாதன்—,வெம் சூர் அடு - கொடிய சூரபதுமாசுரனைச் சங்கரித்த, குமரனுக்கு - முருகக்கடவுளுக்கு, ஆள் ஆய் - அடிமையாய், பணிந்த - வணங்கின, கோமான் - தலைவன், தமரம் - ஆரவாரத்தையுடைய, கரு கடல் - பெரிய பாற்கடலில் தோன்றிய, நஞ்சு-விஷத்தை, உண்ட - புசித்த, கள ஈசன்—! என்றால் - என்றுசொன்னால், (பின்பும்),- துயரும் - பிறவித்துன்பங்களெல்லாம், மருங்கு வந்து அடருமோ - அச்சொன்னவரிடம் வந்துசேர்ந்து வருத்துமோ? [வருத்தாது என்றபடி]; (எ - று.)

'குமரனுக்காளாய்ப்பணிந்தகோமான்'என்றது, பரமசிவனுக்குச் சுப்பிரமணியக்கடவுள் பிரணவப்பொருளுரைத்ததை உட்கொண்டு. விஷத்தின்நிறத்தாற் பாற்கடலும் வெண்மைநீங்கிக் கருமையடைந்ததென்பார் 'கருங்கடல்நஞ்சு' என்றாரென்றுங் கொள்ளலாம்; கருமையை நஞ்சோடு கூட்டுதலுமாம். நமரங்காள்— நமர், நாம் - பகுதி, அம்-சாரியை: கள் - விகுதிமேல்விகுதி; ஈற்றயல்நீண்டது, விளியுருபு.

குமான் சூரபதுமனை யட்டகதை:—அசுரேசன்மகளாகிய மாயையென்னும் பெயர்பெற்ற சுரசையென்பவள் காசியபமகாமுனிவரைக் கூடிப்பெற்ற புத்திரர்களாகிய சூரபதுமன், சிங்கமுகன்,தாருகன் முதலான பல்லாயிரம் அசுரர்கள் பரமசிவனைக்குறித்து யாகமுந் தவமுஞ் செய்து அவரருளால் அளவிறந்தவரங்களைப் பெற்றுச் செருக்குற்றுத் தமது குருவாகிய சுக்கிரபகவானது தீயஉபதேசத்தால் இந்திரன்முதலிய தேவர்களையவரோடும் போர்செய்துவென்று பற்பலவகையாக வருத்தினவளவில்,அத்துன்பம்பொறுக்கலாற்றாது தேவர்கள் திருக்கைலாயமடைந்து பரமசிவனைத்தொழுது துதிசெய்து 'தேவரீரைப்போல ஒருபுத்திரனை உண்டாக்கி அசுரர்களை அழித்து எங்கள்துன்பத்தைப்போக்கிக் காத்தருளல்வேண்டும்' என்றுபிரார்த்திக்க, சிவபெருமான் அவ்வேண்டுகோளுக்கு இரங்கிக் குமாரக்கடவுளை உண்டாக்கி அனுப்பியருள, அவர், வீரவாகுதேவர் முதலான சிவபுத்திரர்களோடும், மற்றும்பலலட்சம்வீரர்களுடனும் போய் யுத்தஞ்செய்து, அவ்வசுரர்களனைவரையும் அழித்துத் தேவர்களைக்காத்தனர் என்பதாம். (௫௪)

௫௫. வந்தடர மாட்டாய் பிரிவை மனக்கொண்டு
நைந்து துயருழக்கு நல்குரவே—யைந்துதலை
நாக்கவைத்த பாம்பணியு நாதன்பால் வண்ணனமை
நீக்கவைத்தா லென்செய்வாய் நீ.

(இ - ள்.) வந்து அடர மாட்டாய் - (துணிவாய் எம்மை) வந்து சேர மாட்டாமல், பிரிவை மனம் கொண்டு - (எம்மை விட்டு) பிரிந்துபோவதை எண்ணி, நைந்து - தளர்ந்து, துயர் உழக்கும் - துன்பப்படுகின்ற, நல்குரவே - வறுமையே!—ஐந்து தலை - ஐந்துதலைகளையும், கவைத்த நா - பிளவுபட்ட [இரண்டு] நாக்குக்களையுமுடைய, பாம்பு - நாகங்களை, அணியும் - ஆபரணமாகஅணிந்த, நாதன் பால்வண்ணன் - பால்வண்ணநாதர், நமை - எம்மை, நீக்க வைத்தால் - (உன்னினின்றும்) நீங்கும்படி திருவருள்செய்தால், (அப்பொழுது), நீ—, என் செய்வாய் - யாதுசெய்வை? (எ - று.)

சிவபிரான் அருள்செய்வராயின், இருந்தவிடந்தெரியாது ஒழிவாய் என்பதாம். அடரமாட்டாய் - முற்றெச்சம். நல்குரவு - தொழிற்பெயர்; நல்கூர் - பகுதி: நல்குர் எனக் குறுகினது - விகாரம்; அ - சாரியை, வ் - சந்தி, உ - விகுதி. (௫௫)

௫௬. நீயேவந் துற்ற நெடுந்துயரந் தீர்த்திலையே
னாயேனை யார்புரந்து நாட்டுவார்—போயிருவ
ராங்களவா வண்ண மழலுருவாய் நீண்டுவளர்
பூங்களவி னாதா புகல்.

(இ - ள்.) இருவர் - பிரமவிஷ்ணுக்கள், போய் - சென்று, அளவாவண்ணம் - (அடிமுடிகளை) அளந்து காணவொண்ணாதபடி, ஆங்கு - அக்காலத்தில், அழல் உரு ஆய் - அனற்பிழம்பின்வடிவமாய், நீண்டு வளர் - நீட்சியாகிவளர்ந்த, பூ களவின் நாதா - பூக்களையுடைய களாவின்கீழ்க்கடவுளே! நீயே வந்து - நீயாகவே வந்து, உற்ற நெடு துயரம் - (யான்) அடைந்த பெரிய பிறவித்துன்பங்களை, தீர்த்திலையேல் - நீக்காமற்போனால், நாயேனை - நாய்போற்கடைப்பட்ட என்னை, யார் - வேறுயார், புரந்து - காத்து, நாட்டுவார் - (நற்கதியில்) நிறுத்துவார்? புகல் - சொல்லு; (எ - று.)

எவரும் இலர் என்றபடி. துயரம், அம் - சாரியை. உரு - ரூபம். ஏல் - என்னில்; மரூஉ. (௫௬)

௫௭. புகழ்ந்திடுவேன் யானோ புவியேழு மாய
னகழ்ந்திடவுங் காணா வடிக—ளுகந்தோறுந்
தோற்றுமுக நான்காற் சுருதிக் கவிவிரிஞ்சன்
சாற்றுமுக லிங்கநா தா.

(இ - ள்.) சுருதி கவி விரிஞ்சன் - வேதங்களைப்பாராயணஞ்செய்கிற பிரமன், தோற்றும் முகம் நான்கால் - தோன்றிய (தனது) நான்குமுகங்களாலும், உகம் தோறும் - எல்லாயுகங்களிலும், சாற்றும் - துதிக்கின்ற, முகலிங்கநாதா—!

—மாயன் - மாயையையுடைய திருமால், புவி எழும்-கீழேழுலகங்களையும், அகழ்ந்திடவும் - (பன்றிவடிவமாய்த்) தோண்டிச்சென்று தேடிப்பார்க்கவும், காணா - காணமாட்டாமற்போன, அடிகள் - (உனது) திருவடிகளை, யானோ - எளிய அடியேனோ, புகழ்ந்திடுவேன் - துதித்திடவல்லவன்? (எ - று.)

உகந்தோறுஞ் சாற்றுமென இடையும். கருவைப்பிரானைப் பிரமதேவர் வணங்கித் துதித்தலை "சதுரானனனுந் திருநெடுமாலுஞ் சதமகனுங், கதிராயிரம் விரிக்குஞ் சுடரோனுங் கலாதரனும், அதிரார்கலிக்கிறைபுந் தொழுதேத்த வருள்புரிந்தோன், முதிரா முகிழ்முலை யொபங்கனை கேள்வன் முகலிங்கனே" என்னுங் கலித்துறையந்தாதிச்செய்யுளாலும் அறிக. (௩எ)

௩௮. முகலிங்க நாதா முழுதுங்காத் தோம்பும்
புகலிங் கடியனுக்குன் போலச—சகதலத்தில்
காருண்ட சோலைக் கருவேச நீயன்றி
யாருண்டு சொல்வா யறிந்து.

(இ - ள்.) கார் உண்ட சோலை கருவை ஈச - மேகங்களை அளாவுகின்ற [மிக உயர்ந்த] சோலைகளையுடைய திருக்கருவைக்குத் தலைவனே!—முகலிங்க நாதா—! அடியனுக்கு - (உன்) தொண்டனாகிய எனக்கு, இங்கு - இவ்வுலகில், முழுதும் காத்து ஓம்பும் புகல் - முழுவதும் ரக்ஷித்தருளுகின்ற தஞ்சமான அடையப்படும் பொருள், நீ அன்றி - நீயேயல்லாமல், உன்போல—, சகதலத்தில் - இந்நிலவுலகத்தில், யார் உண்டு - வேறே யாவருளர்? அறிந்து சொல்வாய் - தெரிந்து சொல்வாயாக: (எ - று.)

காருண்ட சோலை - கருமைபொருந்திய சோலை யென்றுமாம். (௩அ)

௩௯. அறியேன்மற் றொன்று மருமபொருளே யென்றுங்
குறியே னெழுத்தைந்துங் கூறேன்—வறிதே
பிறந்தலுத்தேன் றென்கருவைப் பெம்மானே மீள
விறந்தலுத்தே னென்செய்தே னியான்.

(இ - ள்.) தென் கருவை பெம்மானே - தென்கருவைத்தலைவனே! மற்று ஒன்றும் அறியேன் - (இவ்வுலகத்து இன்பதுன்பங்களையேயன்றி) வேறொன்றையும் அறிகிறேனில்லை; அரு பொருளே என்றும் குறியேன் - அறிவதற்கரிய தத்துவப்பொருளையே எப்பொழுதும் ஆராய்கின்றேனில்லை, எழுத்து ஐந்தும் கூறேன் - ஸ்ரீபஞ்சாக்ஷரமந்திரத்தை உச்சரிக்கிறேனில்லை; வறிதே-ஒருபயனுமில்லாமல் வீணாக, பிறந்து - பலபிறப்பெடுத்து, அலுத்தேன் - சலித்துப்போனேன்; மீள - மீண்டும், இறந்து - (அப்பிறப்புக்கள்தோறும்) மரித்து, அலுத்தேன்—; யான்—, என் செய்தேன் - வேறென்ன நன்மையைச் செய்தேன்? (எ - று.)

ஒன்றையுஞ் செய்தேனல்லே னென்றபடி. உய்யும்வகை ஒன்றுமில்லாத என்னை அருளாற் காக்கவேண்டு மென்பதாம். (௩௯)

௯௦. என்செயலுன் றாளி லினியமலர் சாத்துவதே
யுன்செயலென் றுன்ப மொழிப்பதே—மின்புரையும்
வேணியாய் தென்கருவை வேந்தே யனலேந்தும்
பாணியாய் வேதாதி பா.

(இ - ள்.) மின் புரையும் வேணியாய் - மின்னலையொத்துச் செம்மையாய் விளங்குகிற சடையையுடையவனே! தென் கருவை வேந்தே-தென்கருவைக்குத் தலைவனே! அனல் ஏந்தும் பாணியாய் - நெருப்பையேந்தின இடத்திருக்கையையுடையவனே! வேத அதிபா - வேதங்களுக்குத் தலைவனே! என் செயல் - எனது தொழில், உன் தாளில் - உனது திருவடிகளில், இனிய மலர் சாத்துவதே - இனிப்பான பூக்களை இட்டு அருச்சிப்பதுவேயாம்; உன் செயல் - உன்தொழில், என் துன்பம் ஒழிப்பதே - எனது துன்பங்களைத் தீர்ப்பதுவேயாம்; (எ - று.)

"களவீச மெலிபவரும், ஏத மசற்றுவ துன்கடன் என்கட னேத்துவதே" என்றார் கலித்துறையந்தாதியிலும். (௯௦)

௯௧. பாகம் பழுத்த பவளக் குணக்குன்றே
மோகங் கடந்த முதல்வனே—யாகமநூ
லாய்கருவை யானே யமலா வடியேனைத்
தாய்கருவை யானே சரண்.

(இ - ள்.) பாகம் பழுத்த - இடப்பக்கங் கனிந்த [உமாதேவி வாசஞ்செய்யப்பெற்ற], பவளம் - பவழமயமான, குணம் - திருக்கலியாண குணங்கள் நிரம்பிய, குன்றே - மலைபோன்றவனே! மோகம் கடந்த - மாயையைக்கடந்துநின்ற, முதல்வனே - முதற்கடவுளே! ஆகமம் நூலாய் - ஆகமசாஸ்திரங்களை யுடையவனே! கருவையானே - திருக்கருவைக்கடவுளே, அமலா - குற்றமற்றவனே! அடியேனை - (உன்) அடியனாகிய என்னை, தாய் கரு வையானே - தாயின்கருப்பத்தில் (மீண்டும்) வைத்திடாதவனே! சரண் - (நீயே எனக்குத்) தஞ்சம்; (எ - று.)

சிவபெருமானது திருநிறஞ் செம்மையாதலால், 'பவளக்குன்று' என்றார்; "வலப்பாகஞ் செழும்பவளச் சோதியென்ன வாமநீலச் சோதியென்ன மற்றப் பாகங், கலப்பான திருமேனி" என்றார் பிறரும். எல்லாவற்றையும் பொறுத்தலும், சலியாமையும், அளவிடப்படாத பெருமையும், யாவராலும் அறியப்படும் உயர்ச்சியும், தன்னை யடைந்தவர்களுக்கெல்லாம் எப்பொழுதும் பயன்கொடுக்குந் தன்மையும், அழித்தற்கருமையும் முதலிய குணங்கள்பற்றி, 'குணக்குன்று' எனப்பட்டது. குன்றுபோன்றவனை 'குன்று' என்றது, உபசாரவழக்கு. 'தாய்கருவையான்' - பிறப்பில்லாமல் முத்திபெறுமாறு அருள்பவனென்று கருத்து. கரு - கர்ப்பமென்னும் வடமொழியின் திரிபு. (௯௧)

௯௨. சரணம் விதியின் றலையழித்தாக் கந்தீர்
பரம கதியருட்கண் பார்க்கிற்—றிருவடியார்
வன்பிறவித் துன்பமெல்லா மாற்றுமுக லிங்காவென்
புன்பிறவித் துன்பமெல்லாம் போம்.

(இ - ள்.) விதியின் - பிரமதேவனது, தலை - (ஐந்தாவது) சிரசை, அழித்து-கொய்து, ஆக்கம் தீர் - (அவனது) செருக்கைப் போக்கியருளின, பரம கதி - (யாவர்க்குஞ்) சிறந்த புகலிடமாகவுள்ளவனே! திரு அடியார் - மேன்மையான (உனது) தொண்டர்களின், வல் பிறவி துன்பம் எல்லாம் - வலிய பிறப்புத்துய ரங்களெல்லாவற்றையும், மாற்றும் - போக்குகிற, முகலிங்கா—!—சரணம் - (நீயே எனக்குத்) தஞ்சம்; அருள் கண் பார்க்கின் - (நீ என்னை உனது) அருளோடு கூடிய திருக்கண்ணாற் (சற்றே) பார்த்தருளினால், என் - எனது, புல் பிறவி துன்பமெல்லாம் - இழிவான பிறப்புத்துன்பங்களெல்லாம், போம்-போய்விடும்;(எ-று.)

அவ்வாறுபார்த்தருளவேண்டுமென வேண்டியபடி. 'விதியின்றலையழிவாக் கந்தீர்' என்ற பாடத்துக்குப் பொருள் நன்கு விளங்கவில்லை. (௩௨)

௩௩. போத மறியேன் புகன்றகவி விண்ணப்ப
மேதுந் திருச்செவியி லேறுமோ—சீதநிலாத்
திங்க ளணியுந் திருச்சடைமேற் புன்பூளை
தங்கவணி யுங்கருவே சா.

(இ - ள்.) சீதம் நிலா - குளிர்ந்த நிலாவையுடைய, திங்கள் - சந்திரனை, அணியும் - தரித்த, திரு சடைமேல் - அழகிய ஜடையின்மேல், புல் பூளை - இழிவான பூளைச்செடியின்மலரை, தங்க - தங்கும்படி, அணியும் - சூடின, கருவா ஈசா - திருக்கருவைத்தலைவனே! போதம் அறியேன் - தத்துவஞானத்தை அறியாதயான், புகன்ற - சொன்ன, கவி - பாடல்களாகிய, விண்ணப்பம் - வணக்கத்தோடு சொல்லுஞ் சொல், ஏதும் - சிறிதாயினும், திரு செவியில் - அழகிய (உனது) காதுகளில், ஏறுமோ - கேட்கப்படுமோ? (எ - று.)

திங்களை அணிந்த திருச்சடையிற் பூளைமலரையும் அணிதல்போலத் தத்துவ ஞானங்கனிந்த சம்பந்தர்முதலிய மெய்யடியார்கள் பத்தியோடு திருவாய்மலர்ந் தருளின திருப்பதிகங்களைக் கேட்டருளின திருச்செவிகளில் அறிவில்லாத எனதுபுன்சொல்லையுங் கேட்டருளல்வேண்டுமெனப் பிரார்த்தித்தபடி; "ஏத்திய மூவர் தமிழ்மாலை சாத்து மிணையடிக்கென், னாத்தரும் புன்சொற்றொடை புனைவாய் செம்பொன்னாட்டிலைந்து, காத்தரு நாண்மலர் சூடும் புரிசடைக்காட்டெருக் கம், பூத்தருமாலை புனைகளவீச புராந்தகனே" என்றார் கலித்துறையந்தாதியிலும். விஜ்ஞாபநம் என்னும் வடமொழி - பிராகிருதபாஷையில் 'விண்ணணம்' எனத் திரிந்து, தமிழில் 'விண்ணப்பம்' எனச் சிதைந்துவந்தது. (௩௩)

௩௪. சாதன் முடுகிற் றனைமறந்து நாவிறங்கு
மாதுயரிற் சற்றும் வழுத்தறியே—னாதலினா
லப்பொழுதைக் கிப்பொழுதே யன்பால் வழுத்துகின்றே
னொப்பனையாள் பாகா வுனை.

(இ - ள்.) ஒப்பனையாள் பாகா - அழகையுடைய உமாதேவியை இடப்பக்கத்திற்கொண்டவனே!—சாதல் முடுகின் - மரணம் நெருங்கினால், தனை மறந்து-தன்னைத் தானே மறந்து, நா இறங்கும் - நாக்குப் பேச எழாமல் மெலிந்துபோ

கின்ற, மா துயரில் - பெருந்துன்பம் நேரும் அக்காலத்தில், சற்றும் - சிறிதும், வழுத்த அறியேன் - (உன்னைத்) துதிக்க அறியமாட்டேன்; ஆதலினால்—, அப்பொழுதைக்கு - அக்காலத்து நற்கதியளித்துக் காக்கும்பொருட்டு, இப்பொழுதே—, அன்பால் - பக்தியினால், உனை - உன்னை, வழுத்துகின்றேன் - துதிக்கிறேன்; (எ - று.)

எனதுகரணங்கள்யாவும் வலியொடுங்கி உயிர்போகின்ற அந்திமகாலத்தில் நின்னைநினைப்பது அரியதொருகாரிய மாதலால், அக்காலத்து என்செயலைக் கருதாது மறுபிறப்பில்லாதபடி அஞ்சாதேயென்று அபயமளித்து நினதுதிருவடிகளைத் தந்தருளவேண்டுமென்று வேண்டியவாறு. "எய்ப்பென்னைவந்து நலியும்போ தங்கேது நானுன்னை நினைக்க மாட்டேன், அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத் தரவணைப் பள்ளியானே" என்றார் பிறபெரியாரும். தன்னை மறத்தல் - தன்வசந்தப்புதல். வழுத்தறியேன் - விகாரம். (௩௰)

௩௫. உனைத்துதித்த நாவா லுறுதியென்றோர் தெய்வந்
தனைத்துதியேன் சென்னியுறத் தாழேன்—றினைத்துணையுஞ்
சிந்தியேன் வாழ்த்தேன் றிருக்களவி னாயகனே
வந்தியேன் பற்றேன் மனம்.

(இ - ள்.) திரு களவின் நாயகனே - திருக்களாவின்கீழ்த் தலைவனே!— உறுதி என்று - (எனக்கு) நன்மையைத்தரும் பொருளென்று எண்ணி, உனை துதித்த நாவால் - உன்னைத் தோத்திரஞ்செய்த நாக்கினால், ஓர்தெய்வந்தனை - வேறொரு தெய்வத்தை, தினை துணையும் - தினையளவும், துதியேன் - தோத்திரஞ்செய்யமாட்டேன்; சென்னி உற தாழேன் - (என்) தலை அத்தெய்வத்தின் அடியிற் பொருந்த நமஸ்கரிக்கமாட்டேன்; சிந்தியேன் - தியானிக்கமாட்டேன்; வாழ்த்தேன் வாழ்த்தமாட்டேன்; வந்தியேன் - கைகூப்பித்தொழமாட்டேன்; மனம் பற்றேன் - மனம்பொருந்தி நினைக்கவும்மாட்டேன்; (எ - று.)

உறுதியைத் தருவதனை 'உறுதி' என்றது, காரியவாகுபெயர். தினை - ஒருவகைத்தானியம்; இது, சிறுமைக்குக் காட்டுவதொரு அளவை. (௩௫)

௩௬. பற்று தழற்சுடலை மன்றிற் பதமெடுத்துச்
சுற்று பவுரிகொளுந் தூயோனே—கொற்றவனே
மட்டொழுகும் பூங்களா வள்ளலே யென்றுரைக்கின்
விட்டொழிந்து போமே வினை.

(இ - ள்.) 'தழல் பற்று - நெருப்புப் பற்றி எரிகின்ற, சுடலை - மயானவனமாகிய, மன்றில் - நடனசபையில், பதம் எடுத்து - ஒருகாலைத் தூக்கிக்கொண்டு, சுற்று பவுரி கொளும் - தானே சுழன்று சுழன்று வருதலாகிய பவுரியென்னுந் திருக்கூத்தை ஆடுகின்ற, தூயோனே - பரிசுத்தகுணமுடையவனே!— 'கொற்றவனே - வெற்றியையுடையவனே! மட்டு ஒழுகும் - தேன்பெருகுகிற, பூ - பூக்களையுடைய, களா - களாவின்கீழுள்ள, வள்ளலே - வரையாதுகொடுக்குந்

தன்மையுடையவனே!' என்று உரைக்கின் - என்று (வாயாற்) சொன்னால், வினை - கருமங்களெல்லாம், விட்டு ஒழிந்து போம் - (சொல்பவரை) விட்டு நீங்கிப்போம் ; (எ - று.)

ஏ - தேற்றம். பவுரி - கூத்தின் விகற்பம். (௬௬)

௬௭. வினைவிலங்கை வெட்டுமருள் வீட்டின்பங் காட்டு
நினையுநினை வெல்லா நிரப்பும்—கனவிதழிப்
பூமாலை யெண்டோட் புனிதன் களாவனத்துக்
காமாரி பொன்னங் கழல்.

(இ - ள்.) கனம் - பருத்த, இதழி பூ - கொன்றைமலர்களினாலாகிய, மாலை - மாலையையுடைய, எண் தோள் - எட்டுத்தோள்களையுடைய, புனிதன் - பரிசுத்தகுணமுடையவனும், களா வனத்து - திருக்களாவனத்திலெழுந்தருளிய, காம அரி - மன்மதனை அழித்தவனுமாகிய சிவபிரானது; பொன் - பொன்போல் அரிய, அம் - அழகிய, கழல் - திருவடி,—வினை விலங்கை - (தன் அடியார்களின்) கருமமாகிய தளையை, வெட்டும் - துணிக்கும்; அருள் - திருவருளினாற் பெறப்படுகிற, வீடு இன்பம் மோக்ஷசுகத்தை, காட்டும் - (அடியார்கள் அடையக்) காண்பிக்கும்; நினையும் நினைவு எல்லாம் - (அவர்கள்) எண்ணும எண்ணங்களையெல்லாம், நிரப்பும் - பூர்த்தியாகச்செய்யும் ; (எ - று.)

எண்டோளை யுடையனாதல் - ஒரு காலவிசேஷத்தில் ; "மாறுப்போர்மணிமிடற் றெண்கையாய்" என்றார் கலித்தொகைக் கடவுள்வாழ்த்திலும். (௬௭)

௬௮. கழலாப் பிறவிக் கடற்சுழியிற் பட்டுச்
சுழலா வறிவு தொலைந்தே—னிழல்சுளித்துக்
குன்றதிர்க்கு மாவுரிவைக் கோமானே பால்வண்ணா
வென்றழைப்பேன் வேறறியே னே.

(இ - ள்.) கழலா - மீண்டுகரையேறவொண்ணாத, பிறவி-பிறப்பாகிய, கடல் சுழியில் - கடலின் நீர்ச்சுழியிலே, பட்டு - அகப்பட்டுக்கொண்டு, சுழலா - (பல காலமாகச்) சுழன்று, அறிவு தொலைந்தேன் - அறிவழிந்தவனாகிய யான்,—'நிழல் சுளித்து - (தன்) நிழலைக் (கண்டு வேறு யானை யென்று எண்ணிக்) கோபித்து, அதிர்க்கும் - கர்ச்சிக்கின்ற, குன்று - மலைபோன்ற, மா - யானையின், உரிவை - தோலைப்போர்வையாகவுடைய, கோமானே-தலைவனே! பால்வண்ணா—!' என்று அழைப்பேன் - என்று கூப்பிடுவேன் ; வேறு அறியேன் - வேறொன்றையும் அறிகிறேனில்லை ; (எ - று.)

"தன்னிழல் கண்டு சீறுங் கருத்தது" என்றார் மகாபாரதத்தும். (௬௮)

௬௯. ஏத மகற்றி யிருமை பெருமையெனும்
வாத மகற்றியெனை வாழ்வித்தான்—காதுபுலித்
தோலுடையான் பைங்களவின் றாறுடையான் கூற்றுதைத்த
காலுடையான் பஞ்சாக் கரன்.

(இ - ள்.) காது புலி தோல் உடையான் - கொல்லுந்தன்மையையுடைய புலியின் தோலை உடுக்கும் ஆடையாகவுடையவனும், பை களவின் றாறு

உடையான் - பசிய திருக்களாவின் அடியை இடமாகவுடையவனும், கூற்று உதைத்த கால் உடையான் - யமனை உதைத்த திருவடியை யுடையவனும், பஞ்ச அக்கரன் - திருவைந்தெழுத்தை யுடையவனுமாகிய சிவபிரான்,— ஏதம் அகற்றி - (எனது) துன்பங்களைப் போக்கி, இருமை பெருமை எனும் வாதம் அகற்றி - இம்மை மறுமைகளே பெருமையுடையன வென்னுந் தருக்கத்தை ஒழித்து, எனை - என்னை, வாழ்வித்தான் - முத்திவாழ்வுபெறச்செய்தான்; (எ-று.)

இருமை பெருமை எனும் வாதம் அகற்றி - பிறப்புஉயர்ந்ததோ முத்திஉயர்ந்ததோ என்னும் வாதத்தை ஒழித்து [முத்தியே உயர்ந்ததென்று சித்தாந்தஞ் செய்து] என்றுங் கொள்ளலாம். (சுக)

எ0. கரங்கொண் டலர்தூவார் கண்கொண்டு பாரார்
சிரங்கொண் டடியிறைஞ்சல் செய்யா—ருரங்கொண்ட
வேற்றில்வருந் தென்கருவை யீசனுக்காட் செய்யாமற்
கூற்றுவற்காட் செய்வார் குணம்.

(இ - ள்.) (சிலர்), கரம்கொண்டு - கையால், அலர் தூவார் - (பால்வண்ணநாதனைப்) புஷ்பங்களையிட்டு அருச்சியார்; கண்கொண்டு - கண்களால், பாரார் - தரிசியார்; சிரம்கொண்டு - தலையால், அடி - (அவன்) திருவடிகளை, இறைஞ்சல் செய்யார் - வணங்குதலைச்செய்யார்; (இவையெல்லாம்), உரம் கொண்ட - வலிமையைக் கொண்ட, ஏற்றில் - விருஷபத்தின்மேல்ஏறி, வரும் - வருகிற, தென் கருவை ஈசனுக்கு - தென்கருவைப்பிரானுக்கு, ஆள்செய்யாமல் - அடிமைசெய்யாமல், கூற்றுவற்கு ஆள் செய்வார் - யமனுக்கு அடிமைப்படுபவர்களது, குணம் - தீக்குணங்களாம்; (எ - று.)

உலகத்துமனிதர்கள் நல்லறிவுடனே தமதுவாணாளை வீணாளாக்காமல் பஞ்சேந்திரியங்களையடக்குதல் மும்மலங்களைப்போக்குதல் கைங்கரியஞ் செய்யத் துணிதல் முதலிய நற்றொழில்கள் புரிந்திடுவாராயின் இறுதியில் யமபாதைக்கு உள்ளாகாமல் நற்கதிபெறலாமென்பது கருத்து. இவ்வாறு நற்றொழில்புரியாதவர்க்கோ யமனுக்குக் குற்றேவல்செய்தல் நேரிடு மென்பதாம். "அடைக்கிலைரந்துபுலனையுநெஞ்சத்தழுக்ககலத்,துடைக்கிலர் தொண்டுபுரியத்துணிகிலர் தூயபத்தி, படைக்கிலர் நின்புகழ்பாடிலர் காலபடர்பிடித்துப்,புடைக்கிலென்செய்திடுவார்களவீசபொறியிலரே" என்றது, கலித்துறையந்தாதி. 'கரங்கொண்டு' எனவும், 'கண்கொண்டு' எனவும், 'சிரங்கொண்டு', எனவும் வேண்டாது கூறினர்; அக் கரம் முதலியவற்றைப் பெற்றதற்குப் பயன் அலர்தூவுதல்முதலியன செய்தலே யன்றி வேறன் றென்பதை அறிவித்தற்கு. 'உரங்கொண்ட ஏற்றில் வரும்' என்பதைக் கூற்றுவற்குங் கூட்டி, வலிமைகொண்ட எருமைக்கடாவில் ஏறிவருகிற என்றுமாம். (எ0)

எக. குணக்குன்றே தென்கருவைக் கோவே நறும்பூ
மணக்குங் களாவனத்து வாழ்வே—கணப்பொழுது
மன்னை மறந்த வருங்குழவி யுய்ந்தாலு
முன்னைமறந் துய்யா துயிர்.

(இ - ள்.) குணம் குன்றே - திருக்கலியாணகுணங்களுக்கு மலைபோன்றவனே! தென் கருவை கோவே - தென்கருவைத்தலைவனே! நறு பூ மணக்கும் - நல்ல பூக்கள் வாசனை வீசுகின்ற, களா வனத்து - களாவனத்தி லெழுந்தருளிய, வாழ்வே - எல்லாவாழ்க்கைகளையுந்தருபவனே!—அன்னை மறந்த-தாயை மறந்துவிட்ட, அரு குழவி - அருமையான குழந்தை, உய்ந்தாலும் - பிழைத்தாலும், உன்னை மறந்து—, உயிர் - (எனது) உயிர், கணம்பொழுதும் - க்ஷணப்பொழுதாயினும், உய்யாது - பிழையாது; (எ - று.)

என்றது, எனக்குத் தாயினும் இன்றியமையாதவன் நீ என்றபடி. குழவி - இளமையையுடையது; குழ - இளமை, உரிச்சொல். "மழவுங் குழவு மிளமைப் பொருள;" இ-பெயர்விகுதி. உய்ந்தாலும் என்ற உம்மை, அது உய்தலின் அருமையை விளக்கிற்று. (எக)

எஉ. உயிரிறந்த பொய்க்கூட்டை யுற்றா ரெடுத்து
வயிரவிற கிற்றீ மடுத்துப்—பெயரழியச்
சுட்டுநீ றாக்குமுன்னஞ் சொல்லீர் கருவைமன்றி
னட்டமிடுங் காலி னலம்.

(இ - ள்.) உயிர் இறந்த - உயிர் நீங்கின, பொய் கூட்டை - (நிலையில்லாமையாற்) பொய்யாகிய உடம்பை, உற்றார் - உறவினர், எடுத்து - எடுத்துக்கொண்டுபோய், வயிரம் விறகின் - வயிரம் பொருந்திய விறகுகளால், தீ மடுத்து - நெருப்புப்பற்றவைத்து, பெயர் அழிய - பேரும் அழியும்படி, சுட்டு - எரித்து, நீறு ஆக்கு முன்னம் - சாம்பலாக்குமுன்னமே [பிழைத்திருக்கும்பொழுதே], கருவை - திருக்கருவையில், மன்றில் - நடனசபையில், நட்டமிடும் - திருநடனஞ்செய்கின்ற, காலின் - (சிவபிரான்) திருவடியின், நலம் - நன்மையை, சொல்லீர்-சொல்லித்துதியுங்கள்; (எ - று.)—நற்கதிபெறலா மென்றபடி. நட்டம் - ந்ருத்தமென்னும் வடமொழியின் திரிபு.

பறவைக்குக் கூடுபோல உயிருக்கு உடல் சிலகாலந் தங்குதற்கு இடமாயிருத்தலால், 'கூடு' எனப்பட்டது; "கூடுவிட்டிங், காவிதான் போயினபின்பு" என்றார் ஔவையாரும். "காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே, பாலுண் கடைவாய் படுமுன்னே-மேல்விழுந்தே, யுற்றா ரழுமுன்னே யூரார்சுடுமுன்னே, குற்றாலத்தானையே கூறு" என்பதனோடு இச்செய்யுளை ஒப்பிடுக. (எஉ)

எ௩. நலனழிந்து நல்வினைபோய் நாணழிந்து நல்ல
குலனழிந்து நல்குரவு கூர்ந்து—பலரிகழ
நிற்ப ரனைத்துயிராய் நின்றானைத் தென்கருவைத்
தற்பரனைத் தாந்துதியா தார்.

(இ - ள்.) அனைத்து உயிர் ஆய் நின்றானை - எல்லாவுயிர்களின் வடிவமாய் நின்றவனும், தென்கருவை-தென்கருவையிலுள்ள, தற்பரனை - கடவுளுமாகிய சிவபிரானை, துதியாதார் - தோத்திரஞ் செய்யாதவர்,—நலன் அழிந்து - எல்லா நன்மைகளுங்கெட்டு, நல் வினை போய்-நல்லபுண்ணியமெல்லாம் அழிந்து, நாண்

அழிந்து - இலச்சை கெட்டு, நல்ல குலன் அழிந்து - உயர்ந்த குலத்தின் பெருமை கெட்டு, நல்குரவு கூர்ந்து - வறுமை மிகுந்து, பலர் இகழ நிற்பர் - எல்லோரும் இகழும்படி நிற்பார்கள் ; (எ - று.)

சிவபிரானைத் துதியாதவர்க்கு நேரக்கூடிய தீமைகளை எடுத்துக் காட்டினர். தற்பரன் = தத்பரன்; தானே பரதேவதை. (எ௩)

எ௪. தாரமனை மட்டுந் தனையறிந்தோ ரூர்மட்டுஞ்
சேருமுற வவ்வூர்த் தெருமட்டுஞ்—சார்வதன்றி
நங்கருவை யானென்ற நல்வினைபோற் செல்கதியி
னெங்குமுத வாரே யிவர்.

(இ - ள்.) தாரம் - மனைவி, மனை மட்டும் - (இறந்தவனது) வீட்டு வாயில் வரையிலும், தனை அறிந்தோர் - அவனைஅறிந்த நண்பர்கள், ஊர் மட்டும் - அவ்வூரெல்லைவரையிலும், சேரும் உறவு - பொருந்திய பந்துக்கள், அ ஊர் தெருமட்டும் - அந்தஊரின் தெருவரையிலும், சார்வது அன்றி - உடன் சென்று மீளுவதேயல்லாமல்,—நம் கருவையான் என்ற-'நமது கருவைப்பிரான்' என்று சொன்னதாலுண்டான, நல் வினைபோல - புண்ணியம்போல, இவர் - இம்மனைவி முதலியவர், செல் கதியின் எங்கும் - மறுமையிற் செல்லுங் கதிகளி னெல்லாம், உதவாரே - சென்று உதவமாட்டார்கள்; (எ - று.)

"மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாசல்மட்டே, யினமான சுற்ற மயானமட்டே வழிக் கேது துணை, தினையா மளவெள்ளளவாகினு முன்பு செய்த தவந், தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே" என்றார் பட்டினத்துப்பிள்ளையாரும். உறவு - உறுதல்; சுப அசுப காலங்களில் வந்து நெருங்குதல்; இத்தொழிற்பெயர் - உறவினர்க்கு ஆகுபெயர். (எ௪)

எ௫. இவருறவ ரென்ப ரிவர்பகைஞ ரென்ப
ரவரவராற் செய்வதொன்றங் காமோ—வெவரேனுந்
தேனொழுகும் பூங்களவார் செய்விப்ப தன்றியிந்த
மானிடரா லுண்டோ வசம்.

(இ - ள்.) இவர் உறவர் என்பர் - 'இவர் (எமக்கு) உறவினர்' என்று சொல்வர்கள் ; இவர் பகைஞர் என்பர்-'இவர் (எமக்குப்) பகைவர்' என்றுசொல்வர்கள்; அவர் அவரால் - அவ்வம்மனிதர்களால், செய்வது ஒன்று - (தம் இஷ்டப்படி) செய்யப்படுவதொரு நன்மைதீமை, ஆமோ - உண்டாகுமோ? எவரேனும் - எவராயினும் (அவர்களைக்கொண்டு), தேன் ஒழுகும் பூ களவார் - தேன்பெருகுகிற பூக்களையுடைய திருக்களாவின் கீழ்க்கடவுள், செய்விப்பது அன்றி - நன்மை தீமைகளைச் செய்விப்பதல்லாமல், இந்த மானிடரால் - இவ்வுலகத்து மனிதர்களால், (ஒரு நன்மையையாயினுந் தீமையையாயினுஞ் செய்ய), வசம் உண்டோ - சுவாதீனம் உண்டோ? (இல்லை யென்றபடி); (எ - று.)

ஒருவன் மறைந்துநின்று பிரதிமைகளைக் கூத்தாட்டுதல்போலக் கடவுள் மறைந்துநின்று பிராணிகளைக்கொண்டு எல்லாத்தொழிலையுஞ் செய்விப்பரென்பது கருத்து. அங்கு - அசை. (எ௫)

எசு. வசமழிந்து துன்பம் வருத்தமெலிந் தாலு
மசையுறுநோய் கொண்டாலு மையா—விசையளிசேர்
தாமமறு வேணித் தமிழ்க்கருவை நாதாவுன்
னாமமற வாதடியே னா.

(இ - ள்.) ஐயா - தலைவனே! இசை அளி - இசைபாடுதலையுடைய வண்டு கள், சேர் - மொய்க்கின்ற, தாமம் - பூமாலைகள், அறு - நீங்காத, வேணி - சடை யையுடைய, தமிழ் கருவை நாதா - தமிழ்வழங்குங் கருவைக்கடவுளே!—துன்பம் வருத்த - துன்பங்கள் வருந்தச்செய்தலினால், வசம் மழிந்து - என்வசந்தப்பி [பர வசமாகி], மெலிந்தாலும் - சோர்ந்தாலும், அசை உறு நோய் - கலக்கந்தருதற்குக் காரணமான வியாதிகள், கொண்டாலும் - அடைந்தாலும், அடியேன் நா -(உன்) அடியவனாகிய எனது நாக்கு, உன் நாமம் - உனது திருநாமங்களை, மறவாது - (எப்பொழுதும்) மறக்கமாட்டாது; (எ - று.)

சிவபிரானது திருநாமங்களை மறத்தற்குரிய துன்பகாலம் நேர்ந்தாலும் நாக்கு அவற்றைஉச்சரித்தலை மறவாது எனத் தமது நாவின் சிவநாமோச்சாரணப பயிற்சிமிகுதியை விளக்கியவாறு. அசை - கலக்கம்; முதனிலைத்தொழிற்பெயர். இயல்பாகத் தேவர்கள் மாலையில் வண்டுகள் மொய்க்கா என்பது நூற்றுணிபாயி னும், இங்கே மொய்ப்பது கடவுளின் திருவருளின் சிறப்பினா லென்க. (எசு)

எஎ. நாவுக் கழகுனது நாம நயந்துரைக்கும்
பாவுக் கழகுனையே பாடுவது—தாவில்
கலைக்கழகுன் ஞானங் கருவையா னேயென்
றலைக்கழகு நின்கமலத் தாள்.

(இ - ள்.) கருவையானே—!—என் - எனது, நாவுக்கு - நாவிற்கு, அழகு - அழகைத்தருவது, உனது—, நாமம் - திருநாமங்களை உச்சரித்தலாம்; நயந்து உரைக்கும் - விரும்பிப்பாடுகின்ற, பாவுக்கு - பாடல்களுக்கு, அழகு—, உனையே பாடுவது - உன்னையே புகழ்ந்துபாடுவதாம்; தா இல் - குற்றமில்லாத, கலைக்கு - கல்விகளைக் கற்றற்கு, அழகு—, உன் ஞானம் - உன்விஷயமான அறிவைப பெறுதலாம்; தலைக்கு—, அழகு—, நின் கமலம் தாள் - உனது திருவடித்தாமரை யைச் சூடுவதாம்; (எ - று.)

தா - உரிச்சொல். 'உன்ஞானம்' என்றது, சிவஞானத்தை. (எஎ)

எஅ. தாளா லெனது தலையெழுத்தை யுஞ்சிதைத்து
மீளா வடிமை விலையெழுதி—யாளா
யுளவருத்தந் தீர வுவந்தெனைவந் தாண்டான்
களவனத்தி லொப்பனைபா கன்.

(இ - ள்.) களவனத்தில் - களாவனத்தில் எழுந்தருளிய, ஒப்பனைபாகன் - ஒப்பனையம்மையை இடப்பக்கத்திலுடைய சிவன்,—தாளால்-(தன்) திருவடியை வைத்தலால், எனது தலை எழுத்தையும் சிதைத்து - என்தலையில் விதித்த எழு

தின எழுத்துக்களையெல்லாம் அழித்து, மீளா அடிமை விலை எழுதி - (என்றும்) மீண்டுபோக வொண்ணாத அடிமையாக விலைப்பட்டவனாக எழுதி, ஆள் ஆய் - (அவனுக்கு) அடிமையாய், உளம் வருத்தம் தீர - (என்) மனவருத்தம் எல்லாந் தீரும்படி, எனை - என்னை, வந்து—, உவந்து - மகிழ்ந்து, ஆண்டான் - அடிமை கொண்டான்; (எ - று.) (எஅ)

எகூ. கன்னற் சிலைவளையக் கால்வளைய நேர்புருவ
வன்னமனை யார்கலவிக் காளாகி—முன்னித்
திரிந்ததெல்லாம் போதுமப்பா தென்கருவை வேந்தே
பரிந்தடிமை கொள்வாயிப் பால்.

(இ - ள்.) அப்பா - சுவாமியே! தென் கருவை வேந்தே - தென்கருவைத் தலைவனே!—கன்னல் சிலை வளைய - (மன்மதனது) கருப்புவில் (போருக்கு) வளையும்படி, கால் வளைய நேர் - அடிவளைதற்கு நேர்கிற, புருவம் - புருவத்தை யுடைய, அன்னம் அனையார் - (நடையால்) அன்னத்தைப்போன்ற மகளிரது, கலவிக்கு - புணர்ச்சியால்வரும் இன்பத்திற்கு, ஆள் ஆகி - அடிமைப்பட்டவனாய், முன்னி - (அதனையே எப்பொழுதுஞ்) சிந்தித்து, திரிந்தது எல்லாம் - (அதன்பொருட்டு) அலைந்ததெல்லாம், போதும்—; இப்பால் - இப்பொழுதாயினும், பரிந்து - அருள்வைத்து, அடிமை கொள்வாய்; (என்னை) ஆட்கொள்வாயாக; (எ - று.)

மங்கையர்புருவஞ் சிறிதுவளைந்த மாத்திரத்தில் மைந்தரெல்லாங் காமநோயுறுவரென்பது, முதலடிக்குக் கருத்து. இனி, காமனது கருப்புவில்லுந் தோற்கும்படி கால்வளைகிற புருவ மென்றுமாம். 'கால்வளையுமின்புருவத்து' என்றும் பாடம். கலவி - கலத்தல்; தொழிற்பெயர்: வி - விகுதி. திரிந்தது எல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். (எகூ)

அ0. பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை யீந்தருளு
நீல மணிமிடற்ற னீயன்றோ—சோலைதொறுந்
தேனிரங்குந் தென்கருவைச் செல்வா கொடுந்துயரால்
யானிரங்க நீயிரங்கா யென்.

(இ - ள்.) சோலை தொறும் - எல்லாச்சோலைகளிலும், தேன் இரங்கும் - வண்டுகள் ஒலிக்கின்ற, தென்கருவை செல்வா - தென்கருவையிலெழுந்தருளிய செல்வனே! பாலன் பசிக்கு இரங்கி - வியாக்கிரபாதமுனிவரது குமாரராகிய உபமந்யுமகாமுனிவரது பசிநோயைக் கண்டு இரக்கங்கொண்டு, பால் கடலை ஈந்தருளும் - பாற்கடலை (ப்பருகும்படி அவருக்கு) அளித்தருளிய, நீல மணி மிடற்றன் - நீலஇரத்தினம்போலும் கரிய ஸ்ரீகண்டத்தை யுடையவன், நீ அன்றோ—? நீ-அப்படிப்பட்ட அருளுடைய நீ, கொடு துயரால் யான் இரங்க - கொடியதுன்பங்களால் நான் வருந்த, இரங்காய் - (என்பக்கல்) இரக்கங்கொள்ளுகிறாயில்லை; என் - (இதற்கு) யாதுகாரணம்? (எ - று.)

முதலடியிற் குறித்த கதை:—வியாக்கிரபாதமுனிவர் தமது தந்தையின் கட்டளைப்படி வசிட்டமாமுனிவரது உடன்பிறந்தவளை மணஞ்செய்துகொண்டு உபமந்யுவென்னும் குமாரரைப் பெற, அக்குழந்தையை மாமனுகிய வசிட்டரும் அவர்மனைவியான அருந்ததியும் எடுத்துக்கொண்டுபோய்த் தமது பர்ணசாலையிற் காமதேனுவின் பாலை ஊட்டி வளர்த்துவருகையில், ஒருநாள் தந்தைதாயரான வியாக்கிரபாதரும் அவர்மனைவியாரும் அங்கிருந்து சென்று அக்குழந்தையைத் தமதுபர்ணசாலைக்கு எடுத்துக்கொண்டுவந்து தமக்குப் பால் கிடையாமையால் மாவை நீரிலேகரைத்து ஊட்ட, அதனை அக்குழந்தை உட்கொள்ளாது உமிழ்ந்துவிட்டுக் காமதேனுவின்பாலைக் கருதி விரும்பி யழ, நல்லவாறூட்டிச் சமாதானப்படுத்த வழியில்லாமல் அக்குழந்தையைத் தந்தை சிவசன்னிதானத்திற் கொண்டுவிட, அங்கு அக்குழந்தை பசியாற்ருது அழுது சிவபிரானருளாற் பாற்கடலைப் பெற்று உண்டு வளர்ந்தது என்பதாம். (அ0)

அக. இரங்கா யெனினு மிரங்கினும்யான் வேண்டும்
பரங்காண் கருவைப் பரனே—நிரந்தரமு
மிற்கணவ னீத்தாலு நீங்கா திருக்குமொரு
பொற்புடைய கற்புடையாள் போல்.

(இ - ள்) கருவை - திருக்கருவையி லெழுந்தருளிய, பரனே - மேம்பட்டவனே! இல் - இல்வாழ்க்கைக்குரிய, கணவன் - புருஷன், நீத்தாலும் - விட்டிட்டாலும், நிரந்தரமும் - எப்பொழுதும், நீங்காதிருக்கும் - (அவனைவிட்டு) நீங்காமலிருக்கிற, ஒரு—, பொற்பு உடைய - நற்குண நற்செய்கைகளை யுடைய, கற்பு உடையாள் போல் - கற்பு நிலைமையையுடைய மனைவிக்குப்போல, (நீ), இரங்காய் எனினும் - (என்பக்கல்) இரக்கங்கொள்ளாமற்போனுலும், இரங்கினும் இரக்கங்கொண்டாலும், யான் வேண்டும் பரம் - நான் விரும்பி அடையுங்கடவுள், (எனக்கு நீயே யாவை); (எ - று.)—காண் - தேற்றம்.

அணைத்தாலும் அடித்தாலும் கற்புடைய மனைவிக்குக் கணவனை யன்றி வேறொரு கதி யில்லாதவாறுபோல, இரங்கினுலும் இரங்காவிட்டாலும் எனக்கு உன்னையன்றி வேறுகதி இல்லை என்றதாம்; “கண்டா ரிசழ்வனவே காதலன்றான் செய்திடினுங், கொண்டானை யல்லா லறியாக் குலமகள்போல்,விண்டோய் மதில்புடைசூழ் வித்துவக்கோட் டம்மா னீ, கொண்டாளா யாகிலு முன் குரைகழலே கூறுவனே” என்றார் பிறபெரியாரும். (அக)

அஉ. கற்பங் கடந்து கடவுளராய் வாழ்வரோ
பொற்பங் கயன்முதலாம் புத்தேளி—ரற்புதமே
தெவ்வடக்கு சூலத்தார் தென்கருவை நாதனார்
வெவ்விடத்தை யுண்ணு விடின்.

(இ - ள்.) தெவ் அடக்கு - பகைவர்களை அடங்கச் செய்கின்ற, சூலத்தார் - சூலாயுதத்தை யுடையவராகிய,தென் கருவை நாதனார்—,வெம் விடத்தை - கொடிய (பாற்கடலில் தோன்றிய) விஷத்தை, உண்ணுவிடின் - புசித்தருளாவிட்

டால், பொன் பங்கயன் முதல் ஆம் - அழகிய தாமரையில் தோன்றிய பிரமன் முதலாகிய, புத்தேளிர் - தேவர்கள், கற்பம் கடந்து.- அநேக கல்பகாலங்களைக் கழித்து அப்பாலும், கடவுளர் ஆய் - தேவர்களாய், வாழ்வரோ - வாழ்வார்களோ? [வாழார்]; அற்புதமே - (இது) ஒரு ஆச்சரியமோ? (எ - று.)

கற்பம் - காலத்தின் ஒரு பெரும் பங்கு. பகைமை யுணர்த்துந் தெவ் என்னும் உரிச்சொல், பகைவர்க்கு ஆகுபெயர். "வானவர் இந்திரன் இந்திரை கேள்வன் மறைவிரிஞ்சன், தானவரென்று புகல்வதுண்டோ சமரிற் சிலையார், கானவ னெற்றுங் களவீச ரன்று கடல்விடத்தைப், போனகமாக வமுதுசெய்யா விடிற் பூதலத்தே" என்றது காண்க. (அஉ)

அங. விடக்குடலிற் புக்கு விரிநதவிருண் மாயைத்
தொடக்கறுத்த ஞானச் சுடரை—நடத்திற்
றலைமைபெற்ற தென்கருவைத தாணுவைக்கண் டுள்ள
நிலைமைபெற்றே னீடேறி னேன்.

(இ - ள்.) விடக்கு உடலில் - (எனது) மாம்சமயமான [இழிவாகிய] உடம்பினுள்ளே, புக்கு - வந்து எழுந்தருளி, விரிந்த - அங்குப் பரவியுள்ள, மாயை-அவிச்சையாகிய, இருள் - இருளின், தொடக்கு - சம்பந்தத்தை, அறுத்த - போக்கியருளிய, ஞானம் சுடரை - அறிவுமயமான விளக்காக வுள்ளவனுகிய, நடத்தில் தலைமை பெற்ற தென் கருவைத் தாணுவை - திரு நடனத்தில் மேன்மையைப்பெற்ற தென்கருவைச் சிவபிரானை, கண்டு - தரிசித்து, உள்ளம் நிலைமை பெற்றேன் - (யான்) மனம் (பல வழிகளிலுஞ் செல்லாமல்) ஒரு வழிப்படப்பெற்றேன்; (அதனால்), ஈடேறினேன் - கடைத்தேறினேன்;(எ-று.)

நடம் - வடசொல். 'நிலைமைபெற்றே னீடேறி னேன்' என்றதில், வரிவடிவை நோக்காது ஒலிவடிவினால் நகரத்துக்கு னகரம் மோனையாயிற்று. (அங)

அச. ஏறுபட்டுங் கல்லா லிருசிலையா லெற்றுண்டு
மாறுகட்ட மாற்று லடியுண்டு—மூறுபட்ட
வாதையா லோகருவை வாணனே பொன்மேனி
பாதியாய்த் தேய்ந்தாய் பகர்.

(இ - ள்.) கருவை வாணனே - கருவையில் வாழ்பவனே! நீ—, கல்லால்-(சாக்கியநாயனாரால் எறியப்பட்ட) கல்லினால், ஏறுபட்டும் - அடிக்கப்பட்டும், இரு சிலையால் - (அருச்சுனனது) பெரிய வில்லினால், எற்றுண்டும் - அடிக்கப்பட்டும், மாறு கட்ட மாற்றால் - பகைவரை அழித்த (அரிமர்த்தன பாண்டியனது) பிரம்பினால், அடியுண்டும் - அடிபட்டும், ஊறு பட்ட - புண்பட்டதனாலாகிய, வாதையாலோ - வருத்தத்தினாலோ, பொன் மேனி பாதி ஆய் தேய்ந்தாய் - அழகிய திருமேனி பாதியாகித் தேய்ந்துவிட்டாய்; பகர் - சொல்லு ? (எ-று.)

உமாதேவி பிருங்கிமுனிவரால் தனக்கு ஏற்பட்ட அவமானத்தைப் பொறுக்கமாட்டாமல் தவஞ்செய்து சிவபிரானது திருமேனியின் ஓர்பாகத்தில் இடைவிடாது தான் உடனுறைதலைக்குறித்து, கல்லாலெறிபடுதல் முதலிய வாதைக

னால் திருமேனி பாதியாகத்தேய்ந்ததென வேறொருகாரணங்கற்பித்துக்கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணியின்பாற்படும். அரிமர்த்தன னென்னும் பெயருக்குப் பகைவரை அழிப்பவனென்று பொருளாதலால், அவனது தன்மையைப் பிரம் பின்மேலேற்றி, 'மாறுகட்டமாறு' என்றார்; இனி, உவமைநீங்கிய என்றும் பொருள்கொள்ளலாம். கட்ட - களைந்த ; இறந்தகாலபெயரெச்சம்: கள் - பகுதி, ட் - இடைநிலை, அ - விகுதி. 'மாறுபட்ட'' என்றும் பாடம். வாதை - பாதா என்னும் வடமொழியின் திரிபு. வாணன் - வாழ்நன் என்பதன் மரூஉ. (௮௪)

கல்லாலேறியுண்ட கதை:—திருச்சங்கமங்கையில் வேளாளர் குலத்தில் உதித்த ஒருவர் பௌத்த சமயத்திற் பிரவேசித்து அது சற்சமயமன்றென்று தெளிந்து பரமசிவனே பதியென்று அறிந்து அச்சாக்கியசமய வேஷத்தைத் துறவாமலே தினந்தோறுஞ் சிவலிங்கத்தைத் தரிசனஞ் செய்தபின்பே போச னஞ் செய்யவேண்டு மென்று விரும்பிச் சமீபத்தி லிருக்கிற ஒரு லிங்கத்தை நாடோறுந் தவறாமல் தரிசித்து அருகிற் கிடக்குங் கல்லை யெடுத்து அன்பினோடு அதன்மேல் எறிந்து அருச்சித்துவர, ஒருநாள் பரமசிவன் உமாதேவியாரோடும் இடபாரூடராய் ஆகாயத்திலே தோன்றிக் காட்சிதந்து, அவரைத் தமது திருவடி யிற் சேர்த்தருளினர் என்பதாம்.

சிலையாலேற்றுண்ட கதை:— பாசுபதாஸ்திரம் பெறும்பொருட்டுச் சிவ பிரானைநோக்கித் தவஞ்செய்த அருச்சுனனை அழிக்கத் துரியோதனனேவலாற் பன்றிவடிவாய்வந்த மூகாசுரன்மேல் வேடவடிவாய்வந்த சிவபெருமான் அம் பெய்ய, அது பிளக்குமுன்னே அருச்சுனன் அம்பொன்றுஎய்து வராகத்தைவிழு த்த, அதுகாரணமாக அவ்விருவர்க்கும் உண்டான போரிற் பரமசிவன் எதிரியின் வில்நாணியை அறுக்க, பார்த்தன் விற்கழுந்தால் கடவுளது முடியில் அடித்தவள விலே, சிவபிரான் தமது நிஜரூபத்தோடு காட்சிகொடுத்து அவன் வேண்டுகோ ளின்படி அம்புமுதலியவற்றை அருளிப் போயினர் என்பதாம்.

மாற்றலடியுண்ட கதை:—வாதவூரடிகளை வருத்தியதன்பொருட்டு அரிமர்த் தனபாண்டியன்மீது உண்டான கோபத்தாற் சிவபெருமான் வையையாற்றை அவன்நகர்மேல் ஏவ, அந்நதி மதுரையை அழிக்குமாறு பெருகிவர, அந்நகரத்தார் யாவரும் அரசன்கட்டளைப்படி கூலியாட்கள் வைத்துக் கரைகோலுகையில், சோமசுந்தரக்கடவுள் பிட்டுவிற்றுண்ணும் வந்தியென்னும் மலட்டுக்கிழவிக்குத் தன்கருணையினால் வேலையாளாக வந்து அமர்ந்து அவள்சமைத்த பிட்டென்னும் உணவையே கூலியாகக்கொண்டு அதனைத் தின்றுகொண்டே முடியின்மேற் கூடையில் மண்ணைச் சுமந்து கொண்டுபோய்க் கொட்டி அவளது பாகத்துக்கு உரிய கரையைக் கட்டாது திருவிளையாடல்செய்ய, அதுகண்ட பாண்டியன் தனதுகைப்பிரம்பினால் அடித்த மாத்திரத்தில் சிவபிரான் மறைந்தருள, கரை கட்டப்பட்டது என்பதாம்.

௮௫. பகர வருமெழுத்திற் பால்வண்ணா நின்னை
யகரமுத லைம்பத்தொன் றாக்கிப்—புகலாதே
யஞ்செழுத்தா னென்பதென் னாதி மறைமுதனா
னெஞ்சமுழுத்தி வாழு நிலம்.

(இ - ள்.) பால்வண்ணனே! ஆதி - பழமையாகிய, மறை முதல் - வேதங்கள் முதலிய, நூல் - சாஸ்திரங்களை, நெஞ்சு அழுத்தி - மனத்திற் பதியவைத்து, வாழும் - வாழ்கிற, நிலம் - நிலவுலகத்துள்ள பெரியோர், நின்னை - உன்னை, பகர வரும் எழுத்தில் - சொல்லப்பட்டுவருகிற எழுத்துக்களில், அகரம் முதல் ஐம்பத்தொன்று ஆக்கி புகலாதே - அகாரம்முதலிய ஐம்பத்தொரு அக்ஷரங்களையுமுடையவனென்று சொல்லாமல், அஞ்சு எழுத்தான் என்பது - ஐந்து அக்ஷரங்களையுடையனென்று சொல்வது, என் - யாதுகாரணம்; (எ - று.)

நீ பஞ்சாக்ஷரத்துக்கு மாத்திரமே யன்றிச் சகலாக்ஷரத்துக்கு முரியவனென்றபடி. என்றது, கடவுள் எல்லா வெழுத்துக்களின் வடிவமாக வுள்ளவனென்றும், எல்லா வெழுத்துக்களிலும் ஐந்தெழுத்துச் சிறந்ததென்றுங் கூறியதாம். வடமொழியில் உயிரெழுத்துப் பதினாறும், மெய்யெழுத்து முப்பத்தைந்தும் ஆக எழுத்து ஐம்பத்தொன் றென அறிக. உலகமென்பதுபோல, நிலம் என்பது - இங்கே உயர்ந்தோரை உணர்த்திற்று. (அரு)

அசு. நிலத்திற் பிறந்துடனே நீர்தோய் பசுமட்
கலத்திற் சிதையுமிந்தக் காய—நலத்திற்
கடியேறு பூங்களவிற் கண்ணுதலே மீள
வடியேன் சுமவா தருள்.

(இ - ள்.) நலத்தின் - எல்லாநன்மைகளையுந்தரவல்ல, கடி ஏறு பூ களவில் - வாசனைமிகுந்த பூக்களையுடைய திருக்களாவின்கீழுள்ள, கண் நுதலே - நெற்றியில் திருக்கண்ணையுடைய கடவுளே! நிலத்தில் - பூமியில், பிறந்து - தோன்றி, உடனே - விரைவிலே, நீர் தோய் பசு மண் கலத்தின் - நீரை நெடுங்காலம்பெய்து வைத்த பசிய மண்பாத்திரம்போல, சிதையும் - அழிந்துபோந்தன்மையதாகிய, இந்த காயம் - இந்த உடம்பை, மீள - மீண்டும், அடியேன்—, சுமவாது - எடுக்காமல் [பிறப்பற்று முத்திபெறும்படி], அருள் - அருள்செய்வாயாக; (எ - று.)

"பசுமட், கலத்து ணீர் பெய்திரீஇ யற்று" என்றார் திருவள்ளுவரும். இவ்வுவமை, சிறிதேனும் நிலைத்திராமல் உடனே சிதைதலை விளக்கும். பசுமை - சாரத்தின்மேலது. கண்ணுதல் - அன்மொழித்தொகை. (அசு)

அஎ. அருளுதவுந் துன்ப மகற்றியறி வாக்குந்
தெருளுதவும் வீட்டின்பஞ் சேர்க்கு—மருவார்
புனக்களவைக் கோயில்கொண்ட புண்ணியனென் றோத
மனக்களவைத் தீர்க்கு மருந்து.

(இ - ள்.) மரு ஆர் - வாசனை மிகுந்த, புனம்- வனத்தில்தோன்றிய, களவை- திருக்களாவை, கோயில் கொண்ட - இருப்பிடமாகக் கொண்டருளிய, புண்ணியன் - பரிசுத்தமூர்த்தி, என்று ஓத - என்று (ஒருகால்) சொல்ல,—மனம் களவை தீர்க்கும் மருந்து-மனத்திலுள்ள மயக்கமாகியநோயைஒழிக்கிற மருந்தாகிய சிவம், அருள் உதவும் - கருணையைச் செய்யும்; துன்பம் அகற்றி - பிறவித்துன்பங்களை ஒழித்து, அறிவு ஆக்கும் - தத்துவஞானத்தை உண்டாக்கும்; தெருள் உதவும் -

வேறு.

பங்கயன்முகலோ ரிந்திரனிமையோர் பாரோரேனோர்பார், பண்புட்னுனேயே சிந்தையினினைவார் பானீமால்கூறுய், வெங்கடகரிசூழெண்டிசையுறைவார் விணுள்காணுதே, மின்பரிபுரதாள் பொன்புனைமுடிமேல் வேய்யாவீராலே, செங்கனிமணிவாய் தங்கியநகைதாவேவாசிறுதே, திண்டிறன்முருகா தண்டமிழ்வீரகா சேரார் போரேறே, சங்கரிமருகாசங்கரிசிறுவா தாலோதாலேலோ, சந்ததமியல்தேர் செந்திலேயுடையாய் தாலோதாலேலோ. (ம)

தாலப்பருவம்-முற்றிற்று.



## சப்பாணிப்பருவம்.

பரவரியகவாணி யழுத்துகலனுக்கழகு பாலித்துவீறுபெற்ற, பன்னிருபுயங்குலுங்காமனீள் குழைதொறு பருவயிரகுண்டலங்க, ளிரவியொளிமட்கவின் றநகையாமலமுகொழுகு மிந்துமுகமண்டலத்திலெழுகரிய திருநுதற்புண்டரங்குறுவெயர் விறைக்கச்சிந்தைந்திடாமற், கரகமலமலர்விரல் சிவப்புறுமற்கடக கங்கணமொலித்திடாமற், கழிவண்டலம்புங் கருங்குவளேயோடைசூழ் கழிதொறுக்கானேறுறுந் தாளமுழுமணிநிலவுதருசெந்திவ்வேலவா சப்பாணிகொட்டியருளே, சமரமுகரணவீர பரசமையதிமிராரி சப்பாணிகொட்டியருளே. (மக)

அண்டர்தந்துயரொழித்தனமென்று கொண்டாடியாவலங்கொட்டமன்னு, மயிராணிகலவியமுதுண்டனமெனத்தேவ ராசிருகரங்கள்கொட்டத், துண்டவெண்பிறைபுனை யெயிற்றுவெஞ்சூருளந்துண்ணெனப்பறைகொட்டநீள், சுருதியந்தணரிடந் தொறுமங்கலப்பெருந்தூரியங்கொட்டமுட்டப், பண்டருபெருங்கவிட்புலமைக்குநீசொன்னபடிதிண்டிமங்கொட்டவெம், பகைநிசாசரர் வளம்பதிமுழுதுநெய்தலம்பறைகொட்டவெள்வளைதருந், தண்டரளமலேமொணடு கொட்டுநகராதிபா சப்பாணிகொட்டியருளே, சமரமுகரணவீர பரசமைதிமிராரி சப்பாணிகொட்டியருளே. (உ)

பௌவமெறிகடலாடை யுலகிலொருவேடுவன் பறவைக்குநிறைபுகுந்த பாத்திபன்பாவையுமிபற்குலச்சிறையும்பணித் தருளமதுரைபுக்கித், தெவ்வரிடுதிருமடத்தெரிசெழிய னுடலுறச் சென்றுபற்றலுமெவர்க்கும், தீராதவடவைபனல் வெப்புமுதுகூனுந் திருத்தியொருவாதுவென்று, வெவ்வழலிலெழுதியிடு மேடும்பெருக்காற்றுவிட்டதமிழேடுமொக்க, வேகாமலெதிரேகுடக்கேறவெஞ்சமூவில்வெய்பச மண்முகரேறச், சைவநெறி யீடேறவருகவுணியக்குழவி சப்பாணிகொட்டியருளே, சமரமுகரணவீர பரசமையதிமிராரி சப்பாணிகொட்டியருளே. (ங)

பைங்காடமைச்சிறைக் கானவாரணமருவு மஞ்சரிமுல்லை வேலி
பாயுமுட்டைமருப் பேறுகழுவியு முடைப்பாலுருமேனிமடவார், கொ
ந்தார்குரும்பை யிளவனமுலை முகக்கோடு முத்தக்குருந்தொசித்துங், கு
றுங்கழைத்துண்டந்தனிம் சிறுதுளைக்கருவிதன் றுருவிநின்பழைக்குஞ்,
செந்தாமரைக்கை விரல்கொண் புதைத்தருஞ்சுருதி சொரியவிரல்முறைமுயி
ல்விட்டுந், தேனுவின்பிறகே திரிந்துங்கவுட்குழலி திறந்துமதமாரிசிந்துந்,
தந்தாவளந்தனக் குதவு திருமான்மருக சப்பாணிகொட்டியருளே, தாள
மெறிகணையில்வளைதமிழ்செந்தில்வேலவா சப்பாணிகொட்டியருளே. (ச)

கார்கொண்டபேரண்ட கூடமோமோழுகீசப்பிச்சுழத்திரசாலை, க
ற்பதாருவின்புயத் திலுக்கணிமலை சுட்டமலர்க்கணமனைஞ், சிரகொண்
டபுருகூதனுந்தேவர் குழுவுநின் றிருநாமமறவாதபேர், சிகாரகனகாசல
முழுமனதுதிருவாபரண சேர்வைசேர் பேழைகடனீர், போர்கொண்ட
வேலினை புயால்கழுவுநீராழு பொழிலுமத்தனைதீவுமோர், பொலிவிலு
டனேநின் கலாபமயில்வையாளி போய்மீளும்வீதியெனவே, கார்கொண்
டமணிமார்ப செந்திலம்பதிவேலனே சப்பாணி, கொட்டியருளே, தாள
மெறி கணையில்வளை தமிழ்செந்தில் வேலவா சப்பாணிகொட்டியருளே.

கவளமகவெற்புநிலை யுலகுபரவப்ரணைகொள் கைத்தாமரைக்கட
கபூண், கதிரொளிவிரிக்கவளர் சிகையிலிடு சுட்டிமிசை கட்டாணிமுத்
தொளிரவே, பவளயிகழ்புத்தமுகமொழுகுமகலை சகுதலைபற்பாதிசொற்
றெரியவே, பரிபுரமொலிக்கவரு குறுநகையெழுப்பியிடு பைச்சேடனு
ச்சிகுழிபா, யுவளகமனைத்துமின வரிவளைமுழக்கவெடியுற்றேபெருக்த
கயல்போ, யொருபுடைகுதிரகவரி யலவனைணயிற்புகுகவுப்பூறுகெட்ட
சழிதோய், தவளமணிமுத்தையலையெறியுநகருச்சதிபசப்பாணிகொட்டி
யருளே, சருவியபுறச்சமைய விரதியர்குலக்கலக சப்பாணிகொட்டி
யருளே. (சு)

வேறு.

கருதியதாளியமணியணைவடமிடுகட்டுவடத்தோடுங்
கழலிடுபரிபுரமொலியெழமணியுமிழ் கைக்கடகப்பூணு
மிருசுடரொளிபெறமருவியதிரள்சடையிட்டுமதிப்பாக
வெழுமதிபுரைதிருமுகமலர்குறுவெயரிட்டுவரத்தாமஞ்
சொருகியநறுமலர்முகையவிழ்சிகையிடு சுட்டிநுதற்றூழத்
தொழுதுணைவழிபடுமடியவரிளையவர்சொற்படிதப்பாமற்
குருமணியலையெறிதிருநகரதிபதிகொட்டுகசப்பாணி
குருபரசரவணபவசிவமழவிடை கொட்டுகசப்பாணி. (எ)

வரைபுரைபுயமிசையிடுதொடியணிகலன்மற்றுளமுத்தார
மணிமுடிகுழையிடுமிருசிகையழகெழ மைக்குவளைப்போதின்
விரைசெறிகுழலியர்செவிலியரவரவர்மிக்கவிருப்பானார்
விபுதருமுனிவருமுனதடிபரவியுன்வெற்றியுரைப்பார்சீ
ரரைமணியுடைமணிகணகணகணவென வத்திமுகத்தோனு
மரிபிரமனுமுமைகணவனுமனமகிழ்தற்புவிளைத்தார்பார்
குரைகடலலையெறிதிருநகரதிபதிகொட்டுகசப்பாணி
குருபரசரவணபவசிவமழவிடைகொட்டுகசப்பாணி. (அ)

வேறு.

கந்தக்குகட்டினர விந்தத்தனிக்கடவுள் கற்பாவெனஞ்சுருதிநூல், கண்டித்துரைத்திடவு மிந்தக்காத்திலுளா கற்பாலுரைத்தியெனவே, யந்தப்பொருட்பகுதி யங்கத்தினைப்பகரு மப்போதுவெறுத்துமுனிவா, யஞ்சத்திருக்குமய னஞ்சச்சிறைக்குளிடு மப்பாசிறந்தகுமரலா, பந்தப்பிறப்பிறப்பொழியவந்தித்திருக்குமவர்பற்றாகநிற்குமுதல்வா பண்டைக்குடத்திலுறமுண்டச்சிறுத்தமுனிபற்றுசையுற்றுமிகவாழ், சந்தப்பொருப்பிறைவ செந்திற்பதிக்குமர சப்பாணிகொட்டியருளே, சங்கத்தமிழ்ப்புலவ துங்கக்கொடைக்குமர சப்பாணிகொட்டியருளே. (கூ)

வேறு.

முதுமொழிவினைவு தெரிந்தநாவலர் முட்டாதுனைப்புகழவே, முளரியின்மருவி யிருந்தநான்முகன் முக்காலுமிச்சைசொலவே, புதுமலர்சிதறி மகிழ்ந்துவானவர் பொற்றுளினைப்பரவவே, புகலருமிசைதெரிதும்புராதியர்புக்காதரித்துவரவே, மதுகரமிடறிய தொங்கன்மாலிகை மற்பூதரத்தசையவே, மணியொளிவயிரமலம்புகோள்வளைமட்டாய்நெருக்கமுறவே, சதுமறைமுனிவர்கடங்கணுபக சப்பாணிகொட்டியருளே, சரவணபவகுக செந்தில்வேலவ சப்பாணிகொட்டியருளே. (ய)

சப்பாணிப்பருவம் - முற்றிற்று.

## முத்தப்பருவம்.

கத்துந்தரங்கநெடுஞ்செறியக் கடுஞ்சூலுளைந்து வலம்புரிகள், கரையிற்றவழ்ந்துலாவுகத்திற் கான்றமணிக்குவிலையுண்டு, தத்துங்கரடவிகடதட தந்திப்பிறைக்கூன்மருப்பில்விளை, தரளந்தனக்கு விலையுண்டு தழைத்தகழுத்துவளைந்தமணிக், கொத்துஞ்சுமந்தபசுஞ்சாலிக் குளிர்முத்தினுக்குவிலையுண்டு, கொண்டறருவித்திலந்தனக்குக் கூறுந்தரமுண்டுன்கனிவாய், முத்தந்தனக்குவிலையில்லை முருகாமுத்தந்தருகவே, முத்தஞ்சொரியுங்கடலலைவாய்முதல்வாமுதல்வாமுத்தந்தருகவே. (க)

வளைக்குந்தமரக்கருங்கடலின் வளைவாயுகுத்தமணிமுத்தம், வடி
வேற்கறைபட்டுடல்கறுத்து மாசுபடைத்தமணிமுத்தம், தளைக்குங்க
ழையிற்பருமுத்தந் தளபத்தொடைமா லிகழ்ப்பருகிர, றாற்றுந்திவலை
தெரித்தமுத்தஞ் சுரக்கும்புயலிற்சொரிமுத்தந், திளைக்குங் கலாமயிற்
சிறையிற் சிறுதூட்பொதிந்தகுறுமுத்தஞ், செந்நென்முத்தங்கடைசியர்
காறேய்த்தமுத்தஞ்செழுந்தரளமேடேன், முளைக்குங் குமுதக்கனிவாயா
ன் முருகாமுத்தந்தருகவே, முத்தஞ்சொரியுங் கடலலைவாய் முதல்வா
முத்தந்தருகவே. (௨)

கலைப்பால்குறைத்தபிறைமுடிக்குங்கடவுளுடலில் விளைமோகங்க
ணலிகரத்திலளிக்கவந்தக்கனலிபொறுக்க மாட்டாமன், மலைப்பால்விளங்
குஞ்சரவணத்தில் வந்துபுகுதவோராறு மடவார்வயிறுசூலுளைந்து மை
ந்தராறுவர்ப்பயந்தெடுப்பக், கொலைப்பால்விளங்கும்பரசுதரன்குன்றிலவ
ளைக்கொடுசெல்லக், கூட்டியணைத்துச் சேரவொரு கோலமாக்கிக்கவுரி
திரு, முலைப்பால்குடித்தகனிவாயால் முருகாமுத்தந் தருகவே முத்தஞ்
சொரியுங் கடலலைவாய் முதல்வாமுத்தந்தருகவே. (௩)

கத்துங்கடலினெடும்படவிற் சுழியிற் சுழியிற் கழுநீரிற், கானற்க
ளையிற்களைதிகழுங்கைதைப்பொதும்பிற் சுரும்பினங்க, டத்துங்கமலப்
பசும்பொகுட்டிற்சாலிக்குலையிற்சாலடியிற், றழைக்குங்கவிபடிமடலிற்
றழைமுளைத்துழுதமுதுகுரம்பைக், குத்துந்தரங்கப்புனற்கரிற்குவளைத்
தடத்தின்மடைவாயிற், குடக்கூன்சிறுமுட்பணிலமொரு கோடிகோடி
யீற்றுளைந்து, முத்தஞ்சொரியுங்கடலலைவாய் முதல்வாமுத்தந்தருகவே
மொழியுஞ்சமையமனைத்தினுக்கு முதல்வாமுத்தந்தருகவே. (௪)

வயலுஞ்செறிந்த கதலிவன மாடுஞ்செறிந்த கதலிவனம், மலர்க்கா
வெங்குந்தேனினிரை மலைதோறுந்தேனினிரை, புயலுஞ்செறிந்தகன
கவெயிற் புடையேபரந்தகனகவெயில், பொதும்பர்தோறுமோதிமமென்
புளினந்தோறுமோதிமஞ்செங், கயலுஞ்செறிந்தகட்கடையார்கலவிதரு
ம்போர்கட்கடையார், கருணைபுரியுமடியாருன் காதல்புரியுமடியார்சீர், மு
யலும்படிவாழ்திருச்செந்தூர் முருகாமுத்தந்தருகவே. (௫)

தொழுதுந்துதித்துந்துயரகற்றிச் சுரருக்கிறையுஞ்சுரருமுடன், சூ
ழ்ந்தகடம்பாடவியிலுறை சொக்கக்கடவுளையன்று, பொழுதும்பரவி
வெழுத்துச்சொற் போலப்பொருளுநர்புகறியெனப், புகலுமாறஞ்சிரட்டி
யிணைப் பொருட்சூத்திரத்தின்பொருண்மயங்கா, தெழுதும்பனுவற்பா
ணன்முதலேழ்பெருமக்களிப்புலவ, ரினைதயங்களிக்கவிருப்பமுட
னிறையான்பொருட்குப பொருள்விரித்த, முழுதும்பகர்ந்தகனிவா
யான் முருகாமுத்தந்தருகவே, மொழியுஞ்சமையமனைத்தினுக்கு முத
ல்வாமுத்தந்தருகவே. (௬)

வேறு,

கடுங்கடைச்சிந்துரமருப்பின் கதிர்கொண்முத்தஞ்சரவைநீள் கடலளிக்கும்பணிலமுத்துங் கழையின்முத்துங் கருமேவா, னுடுமுகட்டப்புயல்காலுக்கொண்டிடுமுத்துங் கருகமே, யெழுகுவெற்பங்கய மடற்றந்தொளிருமுத்தங்கிருகல்காண், பெருமரைக்குடைகழிநத்தினைபரியமுத்தங்கெதரியலே பரவைமெய்யுறாந்தினைகொழிக்கும்படியின்முத்தந்தெறுமகார்கொடுபெரபயும்படிபுரக்குங் குமரமுத்தந்தருகவேகுறுமுனிக்குந்தமிழுரைக்குங் குழவிமுத்தந்தருகவே. (எ)

பருவமுற்றுக்குடைவிற்றென்ன பணிலமொய்க்குந்துறையெலாம் பருமுமாட்செங்கயல்குதிக்கும் பவளபடக்கென்படுரைபகீர், பொருநைக்குத்துந்திடரனைத்துப்புறவுமொய்க்கும புறவுசேர், புளினமெற்பெங்கணுநிரைக்கும் புளினமொய்க்குங்குவளைவா, யருமடற்கணடினமெனச்சென்றளிகணமொய்க்கும்புதியகுவலமொய்க்குங்குழிவழிச்சென்றலைகொழிக்குங் கரையெலாங், குருகுமொய்க்கும் பதிபுரக்குங்குமரமுத்தந்தருகவே, குறுமுனிக்குந் தமிழுரைக்குங்குழவிமுத்தந்தருகவே. (அ)

வேறு.

பைபரவிஞச்சிகுழியப்பொருங்குண்டகட்பகெடம்பணிலமுத்தம், பார்வையாலும்சிறிது பாரோமினன்றிப்பசுங்கழைவெடித்தமுத்தஞ், செய்பசிங்கையினுமிது வேணுமென் றொருபொழுது சிந்தியோமுத்திவட்டத், திரைமுழங்கக்கொழுந்திங்கள் வட்டக்குடைச்செழுநிழச்சம்புராசியெய்யுமலர்வாளியை யெடுத்துத்தெரிந்து நாணிறகப்பிணித்தவளவில் வீன்றகுளிர் முத்தத்தை முத்தமென் றனுகோமிதழ்க்கமலமுகையுடைக்குந், தய்யமணி முத்தந் தனைத்தொடேமுனதுடைய துகிரில்விளைமுத்தமருளே, தோனகமேகவாகன செந்திலாயுனது துகிரில்விளை முத்தமருளே. (கூ)

இறகல்கருகுதல்முரிவிலட்சுமி புடாய்முள்ளேறல்புகையேறல்செம்ம, ணேறல்வெச்சந்திருகனமத்தகக்குழிவன்றி யிரவியொளியிற்காத்தன், மறுவறுதகட்டிலோரத்தி லுயர்தூக்கத்தின் மன்னுமாதளைகவிர்ப்பூமாந்தளிர்முயற்குருதிசெவ்வரத்தங்கோபமருவு மணிவகையளிப்பேர் முறுகல்வளியேறல்கல்லேறல்சிப்பிப்பத்துமுரிதழிருகுதல்சிவப்பு, முருந்திற்குருத்துச் செருக்குருவியிடையாடி மூரிகுதைவடிவொதுங்க, மறுமுகங்கக்கலொளிமட்கல் காடென்றைத துகிரில்விளைமுத்தமருளே, தோகைமேகாரவாகனசெந்திலாயுனது துகிரில்விளைமுத்தமருளே. (ய)

கோதிவருவண்டுமெது வுண்டுகுடிகொள்ளுமெல் குழலுக்குடைந்துவிண்ணிற், குடிகொண்ட கொண்டற் குழாந்துளிபி னித்திலக்

யொருகால்விரும்பேன், காதிலுறும்வள்ளைமகரக்குழைகடக்கு மெங்க
ண்ணுக்குடைந்துதொலைக், கயத்திற்குளித்தசெல்வெண்டாளமென்
னிலொருகாயிழுங்கருதியேயம, போதிலுறுபசுமடற்பாளைமெனப்பூக
மபொருந்துமெங்கர்தாதைப், பொருவுறுவெள்வலம் புரியாமினைபு
றேப்பொற்றோடைக்குடைந்த, சோதிவயமுத்தங்கனைக்கொடேபின்
னுடைய துகிரிலவிளைமுத்தமருளே, கோகைமேகாவாகனசெந்திலாயு
னதுகிரில் விளைமுத்தமருளே. ௰௩

முத்தப்பருவம்-முற்றிற்று.



## வாரானைப்பருவம்.

மூரிப்பகட்டெருமைவாளைமுழங்கெக்குதிக்கக்காய்சாய்ந்து
முதிரவிளைந்தசடையின்னிமுடங்குபசுங்காய்க்குலைச்செந்நெல்
சேரிக்கருங்கைமள்ளர்குயத்திட்டரிந்தநொக்கிலுக்கூத்
தெண்முத்தளம்பசிறுகுடிலிற்சேர்க்கநெடுபோயவர்க்குவிப்ப
வேரிக்குவளைக்குழியிலவரிவெண்சங்கினங்களீற்றுளைந்து
மேட்டிலுதத்தபரிமுத்தைவெள்ளோதிமந்தன்முட்டையென
வாரிக்குவிக்குந்திருச்செந்தூர்வடிவேல்முருகாவருகவே
வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௧

புள்ளமரிந்தகதிர்ச்செந்நெற் போரிற்பகடுதனைநெருங்கப்
பூட்டியடித்துவைகலோத்து போதக்குவிந்தபொலிக்குவையை
வள்ளவரியகுடகாற்றுவீசப்பாதடிதனைநீக்கி
வெள்ளிக்கிரிபோற்கனகவட மேருகிரிபோன்மிகத்தூற்றிக்
கள்ளமெறியுங்கருங்கடைக்கட் கடைசியிறித்தமணிமுத்தைக்
களத்திலெறியம்முத்தைக் கண்டுகுடித்தகட்குவிலை
மள்ளரளக்குந்திருச்செந்தூர் வடிவேன்முருகாவருகவே
வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௨

தேடவரியமணிபணைஞாண் சேர்க்கவருகவிரற்காழி
செறிக்கவருகதிலகநுதல் தீட்டவருகமறுகிலவிளை
யாடவருகமடியிலெடுத் தணைக்கவருகபுறப்பனிநீ
ராட்டவருகநெறித்தமுலை யமுதம்பருகவருகமுத்தஞ்
சூடவருகவுடற்புழுதி துடைக்கவருகவொருமாற்றஞ்
சொல்லவருகதள்ளிடை தோன்றவருகசசோதிமணி
மாடநெருங்குந்திருச்செந்தூர் வடிவேன்முருகாவருகவே
வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௩

இறுகுமணைஞாணினிப்பூட்டே னிலங்குமகரகுண்டலத்தை
யெடுத்துக்குழையின்மீதணியே னினியுன்முகத்துக்கேற்கவொரு
சிறுகுந்திலதந்தனைச்சிட்டேன் றிருக்கண்மலர்க்குமையெழுதேன்
செம்பொற்கமலச்சீறடிக்குச் சிலம்புதிருத்தேனெறித்துவிம்மி
முறுகுமுலைப்பாலினியூட்டேன் முகம்பார்த்திருந்துமொழிபகரேன்
முருகாவருகசிவசமைய முதல்வாவருகதிரைகொழித்து
மறுகுமலைவாய்க்கரைசேர்ந்த மழலைச்சிறுவாவருகவே
வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௪

எள்ளத்தனைவந்துறுபசிக்கு மிரங்கிப்பார்த்துசிறுபண்டி
யெக்கிக்குழைந்துமணித்துவர்வா யிசைமுக்குவித்துவிரித்தழுது
துள்ளித்துடிக்கப்புடைபெயர்த்து தொட்டிலுதைந்துபெருவிரலைச்
சுவைத்துக்கடைவாய்நீரொழுகத் தோளின்மகரக்குழைதவழ
மெள்ளக்கவிழ்ந்துகுறமூரல் விளைத்துமடியினிமிர்ந்து
விம்மிப்பொருமிமுகம்பார்த்து வேண்டுமுமையாள்களபமுலை
வள்ளத்தமுதுண்டகமகிழ்ந்த மழலைச்சிறுவாவருகவே
வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௫

வெண்மைச்சிறப்புள்ளோதிமங்கள் விரைக்கேதகையின்மடலெடுத்து
விரும்புங்குழவியெனமடியின் மீதிருத்திக்கோதாட்டித்
திண்மைச்சுரிசங்கினிற்குவளைத் தேறன்முகந்துபாலூட்டிச்
செழுந்தாமரைநெட்டிதழ்விரித்துச் சேர்த்துத்துயிற்றித்தாலாட்டப்
பெண்மைக்குருகுக்கொருசேவற் பெரியகுருகுதன்வாயிற்
பெய்யுமிரையைக்கூலகுபிளந்துபேட்டுக்கினிதளிக்கும்
வண்மைப்புதுவைத்திருச்செந்தூர் வடிவேன்முருகாவருகவே
வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௬

ஓடைக்குளிர்தண்டுளிப்பனியா லுடைந்துதிரையிற்றவழ்ந்தேறி
யொளிரும்புளினத்திடையொதுங்கி யுறங்குங்கமடந்தனைக்கடந்து
கோடைக்குளிர்காற்றடிக்கவுடல் கொடுககடுங்கிநூண்கழிந்த
குடக்கூன்பணிலத்துட்புகுந்து குஞ்சுக்கிரங்கியிரைகொடுத்துப்
பேடைக்குருகுக்கொருசேவற் பெரியகுருகின்சிறைப்புறத்துப்
பிள்ளைக்குருகுதனையணைத்துப் பிரசமடற்கேதகைப்பொதும்பின்
வாடைக்கொதுங்குந்திருச்செந்தூர் வடிவேன்முருகாவருகவே
வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௭

விண்டுமாவின்கனிதடத்தின் மீதேவீழக்குருகினங்கள் - வெருவி யிரியக்கயலவெருண்டு வெடிபோய்மீளமண்டேங்- கண்டுபாயவரிவாளை கழிக்கேபாயக்கழிக்கானற்- சம்புள்வெருண்டு துண்ணெனக்கட் கடை தான்விழித்துத்தன்பார்ப்பைக் - கொண்டுபோயக்கருவளைக் குலைக்கே பாயக்குடக்கனியின்- குறுங்காற்பலவுவேர்சாய்ந்தகுழிக்கேகோடிகோடிவரி- வண்டுபாயுந்திருச்செந்தூர் வடிவேன்முருகாவருகவே வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௮

போர்கரிக்குமடியவர்தம்பிறப்பைவெயாழித்துப்பெருவாழ்வும்-பெருங்கொடுக்கவருபிள்ளைப்பெருமானென்னும்பேராளா - சோழிருகர்குலகலகா சேயற்கொடியாய்திருச்செந்தூர்த்- தேவாதேவர்சிறைமீட்டசெலவாவென்றுன்றிருமுகத்தைப்- பாராமகிழ்ந்துமுலைத்தாயர்பரவிப்புகழ்ந்துவிருப்புடனைப் - பாவாவாவென்றழைப்போற்றப் பரிந்துமகிழ்ந்து வரவழைத்தால்- வாராதிருக்கவழக்குண்டோ வடிவேன்முருகாவருகவே- வளருங்களபக்குரும்பைமுலை வள்ளிகணவாவருகவே. ௯

வேறு.

கலைதெரிபுகலி வளமுறமருவு கவுணியவருகவருகவே
கருணைபெருகிமை யடியவர்கொடிய கலிகெடவருகவருகவே
இலைபொருவுருவ வனிதையாறுவர் திருவுளமகிழவருகவே
சிறுதுளிவெயர்வுகுதிகொளவுனது திருமுகமலரவருகவே
கொலைபுரிவிகடமணிமுடிநிருதர் குலமறவருகவருகவே
குருமணியயிலயிருசிறைக்கொடிய குசமுறுபொரவருகவருகவே
மலைமகள்கவுரி திருமுலைபருகு மழவிடைவருகவருகவே
வளையுமிழ்தரள மலைமெறிகரில் வரபதிவருகவருகவே. ௰

அணிநெடுமெவுலி வெறிசிறைபுழுதி யழகுடனெழுகவருகவே
அடியிலுளவிலைமணிமுரலு மாவொலிபெருகவருகவே
பணிவிடைபுரிய வருமடமகளிர் பாவினர்புகழவருகவே
பலபலமுனிவரனைவருமுனது பதமலர்பரவவருகவே
பிணிமுகமுதுகி லரிபணைமுழுகு பெறுமருமுருகவருகவே
பிறைபொருசடிலர் தமதிடமருவு பிடிபெறுகளிறுவருகவே
மணியிதழ்முழுது மமுதுகுகலை மழவிடைவருகவருகவே
வளையுமிழ்தரள மலைமெறிகரில வரபதிவருகவருகவே. ௰௧

வாரானைப்பருவம் - முற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

கலையாணிரம்பாத கலையுண்டுனக்குநிறை கலையுண்டிவன்றனக்குக்- களங்கமருதமா னுனக்குண்டுகுறமான் கருத்துண்டிவன்றனக்குத்- தொலையாதகணமுண்டுனக்குமங்கலகணத்தொகையுண்டிவன்றனக்குத்- துளியமுதமுண்டுனக்கிவனுக்குமாறு சொல்லமுதமுண்டுனக்குக்- கொலையாடராவழிப்பகையுண்டுகேவிடங் கொப்புளிக்குங்கட்செவிக் - கோளரவைக்கொத்திவெரியுமெகாரமிக் குமரனுக்குண்டுகண்டாய் - மலையாழிசூழ்திருச்செந்தில்வடிவேலனுடனம்புலீயாடவாவே- மாவின்முடிநெளியமயின்முதுகில் வருகுமரனுடனம்புலீயாடவாவே ௧

பாமோகமண்டலமகற்றியறிவென்னு முழுமண்டலத்தைத்தொடு
த்து- வடவைமுகமண்டலத்தழலானுருக்கினன் மண்டலத்தூடுபுக்குச்-
சோமோனையக்கிரண மண்டலகதமுகத் துளித்திவலை பருகியுடலைச்-
சோதிமண்டலமென விளக்குமவரியனுடைய துய்யமுகமண்டலத்தை-
யேமோகருத்த றவிருத்திப்பெரும்பாத்தெதகலைமண்டலமெய்தலா-மெ
ன்றுகொண்டிவண்மண்டலச்சக்கிலையாறெழுதகிலீடேறுவருணச் - சா
மோபெருக்கமென்செந்திலவடிவேலனுடனம்புலியாடவாவே- யாவின்
முடிகொளியமயின்முதுகில்வருகுமானுடனம்புலியாடவாவே. ௨

முதிருமிசைவரிவண்டலம்புகமலமலைய முகிழ்க்குமிருகாவிசூழ்க்கு
ண்- முக்கோணகடுவிலொருவட்டச்சுழிக்குண்பலர்முகமண்டலத்துவெ
யிலா- லெதிருமிருளக்கசாசப்படலைதள்ளிவந் தெழுமிரவிமண்டலத்தி-
னின்புற்றுநீள்கொளிக்குமிடமாதவா னிரவிமண்டலமுதிக்க - ளுதிரு
மடுசெருவிலிலங்கிவைவேலறுபட்டவா ருகததபெருவெளியாகையா - லொ
ள்ளமுதகுதசதபதினொறு தலைகொள் ளுமுனை னுடவினுங்குறைபடாதோ
வதிருமகராழிசூழ்செந்திலவடிவேலனுடனம்புலியாடவாவே - யாவின்
முடிகொளியமயின முதுகிலவருகுமரனுடனம்புலியாடவாவே. ௩

வெறியாரிலைத்தொடைத் தக்கனழல்வேள்வியை வெகுண்டுபகல்
பல்லுகுத்து - வெள்ளிவிழியைக்கொடுத் தயிராவதப்பாகன் வேறருக்
கொடுபறக்கச்- செறியாடகத்தகட்டிதழ்முள்ரிகான்முகன் சென்னியை
த்திருகிவாணி- செய்யதுண்டந்துண்ட மாக்கியத்தக்கன் சிரத்தையொ
ருவழிபடுத்திப்-பொறியாரழற்கடவுள் கைத்தலமறுத்துவிட்டுபுலவர்முப்
பத்துமூவர்- போனவழியொருவர் போகாமலனைவரையும புழுதியிற்
றேய்த்ததெதலை - மறியாததனைநீ செந்திலவடிவேலனுடனம்புலியா
டவாவே, யாவின்முடிகொளியமயின முதுகில்வருகுமானுடனம்புலியா
டவாவே. ௪

விடமொழுகுதுளைநன்னெயிற்றுவண்கட்செவிவிரிக்கும்பணாடவி
யா, மென்பொறியுடற்பெருப்பகுவாயாவடவைவெம்பசியெடுத்து
வெம்பிச், குடதிசைக்கோடையைப் பருகிக்குணகடகெழுங் கொண்டலை
யருந்திவாடைச், கொழுந்தையுகதென்றலையு மள்ளிக்குடித்துக்கொழு
ங்ககிரையுண்டதினியுன, னிடமொழியவேறு நிலக்கிலலைகீயதற் கெ
திர்நிற்கவல்லைபகலை, யிலனுடன்கூடிவிளையாடிநீயிங்கே- யிருக்கலாமிங்
குவந்தா, லடல்புனையுமயிலுண்டனைக்குதவிபாகையா லம்புலியாடவாவே,
யாவின்முடி கொளியமயின் முதுகில்வருகுமானுடனம்புலியாடவாவே.

பண்டுபோலின்னமுக மின்னக்கடைந்திடப் பழையமந்தரமில்லை
யோ- படர்கடற்குண்டகழியளறுகலற்றியிப்பாரினிற்றிடானதோ- வி
ண்டலத்தமரர்களு மமரேசனுஞ்சோர விடிகேடக்ககா - யேவியெழுபி
ச்சண்டகூடம்லளியானதோவிடமொழுகுகெட்டெயிற்று-மண்டுவாசுகி

துண்டமானதோவின்னமொரு வசிக்குவாவிதலையோ- மதியிலாமதிய மேயிவணினைந்தாலெந்தவகைசெலாகாகையாணீ - யண்டர்நாயகனெங்கள் செந்திலவடிவேலனுடனம்புலீயாடவாவே-பருவரைகள்கிடுகிடென மயில்கடவுமுருகனுட னம்புலீயாடவாவே, (௫)

வட்டமாகத்தான்வெளி வடிவுகொளலாலென்று மானைத்தரித்திரு கையான், மங்காகினித்தாங்கு குவளமெய்தலான்மன்னுங்கணஞ்சூழ்த லா, விட்டமொடுபேரிகில் வீறுபெறலானுங்கி லெங்கருந்துதிகதிடுத லா, விரவிகண்ணுறுதல் விடபத்தினிலுலா லேமமாலவனையெய்தலா ன், முட்டமறைவேள்விக்குரித்தாகையால்வெய்ய மூரியாவுக்குடைத லான், முக்கணுமைபங்கனொக்குநீயென்றுதிருமுகமலர்ந்துனையழை த்தா, லட்டபோகம்பெறுவை செந்திலவடிவேலனுட னம்புலீயாடவா வே, பருவரைகள்கிடுகிடென மயில்கடவு முருகனுட னம்புலீயாட வாவே. (௬)

காதலாலெறிதிரைக்கடன்மகளிர்சிறுமகார்களாயிற்குவித்தமுத்து ம், கழிவாய்வலம்புரி யுமிழ்க்கட்டணிமுத்துமுட் கண்டன்மடல் விண்டக ண்ணத், தாதலாவிளவாடை கொடுவருங்கானல்வெண் சங்குகொந்திற் றுளைக்க, தனியேயுருக்கபாகமுகமுங்கனிலல சதகோடியிலவெறி க்கு, மீகலாலொருசிறுகுமிராவில்லையெவருக்கு மிரவிலலை நீயுமிங்கே, பேதைநனதுடற்கறைதுடைக்கிடுதலாமெமையகற் கையமில்லை, யாத லானிதிபுனை செந்திலவடிவேலனுட னம்புலீயாடவாவே, பருவரைகள் கிடுகிடென மயிலகடவு முருகனுட னம்புலீயாடவாவே. (௭)

கடியவளிவெறியுந் தழைச்சிறைக்கருநிறக் கருடவாகனனு மிகல் கூர், கட்டைமுள்ளாகாள கெட்டிசமூடுக்கபொற் கமலயோனியுமெ மூக்கு, கொடியவெவ்வெங்கொலைபுரி வாகமெனவொருவனெழு குவலைய மிடந்துதேடக், குறித்தொருவனெனைவா யண்டபகிரண்டமுங்கொழு திகருடைந்துதேட, முடியவிதுகாறுமாறிவுறுவகைகின்ற புழுமுகற் கடவுளடியு, முடியுநீகண்டனை யெவைக்காந்திடினுமுதிரு முகமலாந்துனை யழைத்தா, லடியவனை வாழ்வித்த செந்திலவடிவேலனுட னமபுலீயாட வாவே, பருவரைகள்கிடுகிடென மயில்கடவுமுருகனுட னம்புலீயாட வாவே. (௮)

பெரியமாகத்தனீ வருவையிவன்வஞ்சகம் பேசுமாகத்துள்வாரா ன், பெருகநீவேலையிற்புகுவாயிவன்பார் பிளக்கவோர்வேலைவிட்டா, னு ரியமாகுணவனாயி னுறவையீயிவனெம்புறசகுணவனாயுறாறு, னுட்டி னிலேமூலுமறுவுனக்குண்டிவனறனக் கொருமறுவு மிலலைமிளக, கரிய மாமுகிலினிலை மறைவைநீயிவனெடுங் கரியமாமுகிலனமறையான், கரு திநீயிவையெலாமுணரிவனபெருமையைக் கண்டுநீ யஞ்சிடாதே, யரிய மாதவனெங்கள் செந்தில்வடிவேலனுட னம்புலீயாடவாவே, பருவரை கள்கிடுகிடென மயில்கடவுமுருகனுட னம்புலீயாடவாவே. (௯)

பரியநிழற்றனைச் சுளிந்துசெயிலெடுபொருது பாதசங்கிலியை
யறிப், பாரிசாதத் தருவையிடருளகெ நக்கவுட்பகுவாய்புகக்குதட்டிக
தரிபலர்கைப்புறத்தெயிலிடிபாடங் கனைத்தூள்படுத்தி யவர்பொற், ற
குணமணிமுடியிடறி முறைமுறைமுழக்குந் தமழச்செவிப்பிறைமரு
ப்புச், சொரிமதநீராக் குறுங்கட்பெருங்கோலத் துடியடிப்புகரொ
டுத்த, துங்கவேளிறுடைய முனைநிற்புறத்திற் றளைக்கா நிமிர்ந்தருகி
றகு, மரியகருங்கழமன வெருவல்லீகலியானுடனைபுலியாடவாவே, ய
ருவனைகன்றிடுகிடேன மயிலைாடவுமுருகனுடனைபுலியாடவாவே. (கக)

அம்புலிப்பருவம் - முற்றிற்று.



## சிறுபறைப்பருவம்.

பொன்னாரக்குறிமரவகதெங்கடிகருகுலப் பூபாலரேறுமந்தப், பூ
பாலனுக்கிளைய துணைவர் நூற்றுவருமபொருமபதினெட்டக்குரோணி
யென், றொருவாய்மைசொற்றபடை வீரருஞ்செருவினி லுருகதெழ
லுதிமையவு, முடனுதகின்றபற்குனன்மணித்தேரினுக்குள்ளசாரதியா
கியும், மருவார்கடானையிற்பட்டபார்த்தனைாமருட வர்த்தனை டங்கலும்
போய், மயங்கவொருநாள்விசைய னுக்குவிசையமபெருக மண்மேனுமு
முண்டுமிழ்ந்த, திருவாய்வலம்புரி முழக்குந்திருமான்மருக சிறுபறைமு
முக்கியருளே, செருவிலெதிர்பொருமசுரர்குலகலகனே சிறுபறை
முழக்கியருளே. (க)

முருந்தாருமணிபுரவெனத்தநிலமகளிரிளமுகிழ்முலைதனக்கடை
ந்து, முளரிமுகைநீரிற்குளிதருக்கிவெருநதாளின முற்றிய தவம்புரிய
வெங், கருந்தாரைகெட்டிலைப் புகர்வேலெனபொருங் கட்கடைக்குள்
ளுடைந்து, காவிமலர்பங்கப்படக்கருங்குழல்கண்டுகரியமுகிலுடல்வெ
ளுத்துப், பொருந்தாமரேலாடியர்காசரியாவொரு பொருப்பேற வள
மையேறும், புகழேறவாழுந் திருச்செந்திலாயுனது பொற்றுள்வணக்
கமுற்றுத, திருந்தார்தனெஞ்சபெரும்பறைமுழக்கநீ சிறுபறை முழ
க்கியருளே, செருவிலெதிர்பொருதபார் நிருதர்குலகலகனே சிறுபறை
முழக்கியருளே. (உ)

கங்கைபணியுஞ்சடையில் வைத்தகுழவிப்பிறைக்கடவுளா லயம
னைத்துங், கங்குற்கருங்கடலகழிநதைைகறையிற்கவித்தவால்வளைமுழ
க்கும், பங்கயமலாப்பொகுட்டிதழ்வாய்துளிக்கும் பசுந்தேற லுண்டு
மெள்ளப், பல்கோடிசஞ்சரீகப்படலைபெடையொடியடிந்துபலகான்மு
ழக்கும், வெங்கயமுடகரும் புழைக்காமிமிர்த்துவெளி மேகநீரைக்குடி
த்து, வீதிவாய்நின்றுபிளிறிதினைமுழக்கும்வெறி வேண்டிரைக்குண்ட
கழியிற், செங்கயன்முழக்குந் திருச்செந்தில்வேலனே சிறுபறைமுழக்
கியருளே, செருவிலெதிர்பொருதயர நிருதர்குலகலகனே சிறுபறைமு
ழக்கியருளே. (ங)

காவானபாரிசாதக்கருக்குலமிழற்கடவு டெருவீதிதோறுங், கடிம
ணப்புதுமங்கலத்தொனி முழக்கமுழைக் கட்டவிழ்த்திசைமுழுடைக்கும், பூ
வாரிலைதொடைய லளகாபுரேசன புரக்தொறுங்குளிறுமுரசம் பெ
ம்மெனமுழக்க மன்மதனுடையபல்லியப்பொங் தமிகண்டிமைமுழக்கப்
பாவாணர்மங்கலக்கவிவாழிபாடிப் பரிந்துதிண்டிமமுழக்கப, பாவரிய
திருவிழாவென்றுபலபல்லியம் பட்டினஞ்சேரமுழக்கச, சேவதிசே
வருயர் சதுமறைமுழக்கமீ சிறுபறைமுழக்கியருளே, செருவிலெதிர்
பொருதபா நிருதர்குலகலகனே சிறுபறைமுழக்கியருளே. (௪)

வளைவாய்முழக்குங்கடயானையெங்கூன் மருப்பில்விளைமுத்துமி
ளவேய், மணிமுத்துமடுபாலைவனகுத்திற்கருவாசத்தின் முத்துமண்
ட, ருளைவாய்முழக்கும்பெருமபுறவிலுந்திரந்துமிழும்மணிமுத்துமள
வ, சொலியறுமருகவேலிச்செந்நெல்கன்னறரு மௌளிமுத்துமொங்கு
செய்தற், களைவாய்முழக்குமுட்கூனல்வெண்டனிலங் கடுஞ்சூலுளைங்
தகான்ற, சதிர்முத்துமொக்கக் கொழித்து வருபொருனைபாய் கழி
தொறுங்கயல்குதிக்கச், திளைவாய்முழக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுபறைமுழக்கியருளே, செருவிலெதிர்பொருதபா நிருதர்குல் கலக
னே சிறுபறைமுழக்கியருளே. (௫)

முளைவாளைவடிவேலைவடுவைவெங்கடுவைவிசழ்முளரியைப்பிணை
யைமகவேள், மோகவாளியையடுசகோரத்தைவென்றுகுழை முட்டிமீ
ளுங்கண்மடவார், நினைவாளைவாண்முறுவலாடி யிளமுலைதாளை சேர்சேர்
திறுத்திசெய்த, னீடுமளகாடவிலனைத்திற் பிணிதருவெண ணித்திலவ
டந்தெரிந்து, புனைவாளைநாண்முடிவிளம்பி நடுவாளைமென் பேசிலுறை
வாளையொப்புப் - பொசிவாளைநின்றுகளை களைவாளைநாடிவிளை போங்க
ழிகடந்துமெள்ளச்-சினைவாளைபாயுந்திருச்செந்தில்வேலனேசிறுபறை
முழக்கியருளே - செருவிலெதிர்பொருதபா நிருதர்குலகலகனே சிறுப
றைமுழக்கியருளே. (௬)

அறந்தருபுரந்தாதியருலகிலாமகளிராடு மணியூசல்சிற்றி - லம்ம
னைகழங்குபலசெறியுந்தடஞ்சார லருவிபாய்பரங்கிரியுமுட் - புரந்தருபு
னிற்றுவெள்வளைகடற்றிரைதொறும் பொருதசீரலைவாயுமென்- போது
கமழ்திருவாவினன்குடியு மரியமறை புகலுமேரகமுமினிமைக்-குறந்த
ருகொடிச்சியர் பெருங்குரவைமுறைகுலவு குன்றுதோ றாடலுந்தண்-
கொண்முமுழங்குவது கண்டினமெனக்காட குஞ்சரம்பிளிறுமாவஞ்-சி
றந்தபழமுதிர்சோலை மலையும்புரந்தநீ சிறுபறைமுழக்கியருளே- செரு
விலெதிர்பொருதபா நிருதர்குலகலகனே சிறுபறைமுழக்கியருளே. ()

எழுமிரவிமட்கவொளி தருமணியமுத்துமுடி யிமையவர் மகிழ்ச்
சிபெறவே-யிருகுழைபிடித்தவிழி யாமகளிர்சுற்றிட மிகுவெனடித்
துவாவே-வழுவறுதமிழ்ப்பனுவல் முறைமுறையுரைத்துவெகுவாகவி

ரூநட்குழையவே - மகபதியுமிக்கமுனிவர்களுமிச்சையுடன்வழிய டிமைசெய்யிடவேபொழுதுதோறுமோக்கவிதிமுறையுனையருச்சனை செய்புனிதசிவவிப்ரருடனே-புகலரியபத்தசனமாகாவெனக்குலவு புர வலர்விருப்புறவே செழுமறைமுழக்கவரு முருககுமரக்கடவுள்சிறு பறைமுழக்கியருளே- திரளுமணிமுத்தலையெறியுந்திருச்செந்திபசிறு பறைமுழக்கியருளே. (அ)

தவனனிரதப்புரவி யலமறையில்வட்டமிடுசெருணவடவெற்பசைய வே-தமாதிமிரததமி ரெரியுமகாப்பெரியசலதியொலியற்றவியவே, புயனைமுழுநாககமணி முடியிசையிறுகதுபல பொறியுரகனச்சமுற வே-புணரியிடைவற்றமொகு மொகுமொகுவெனப்பருகு புயலுமுழு வெட்கியிடவே-பவனனுமிருத்தகடை யுகமுடிவெனப்பெருமை பாவி யடியிற்பணியவே-படகவிடதழனி யகாவெருவிக்கரிய பரியவரை யிற்புகுதவே [illegible] முருககுமரக்கடவுள்சிறுபறைமுழ க்கியருளே-திரளுமணிமுத்தலையெறியுந்திருச்செந்திப சிறுபறைமுழ க்கியருளே. (௯)

சகாமகாச்சலதிபுகைகுதணிலிபொழுது சருவிய புறச்சமயநூ- றலையழியமுசதிகரு சிவசமயமுதலாபெற தவநெறிதழைத்துலாவே- யகாவுகாரதிலனை பொருளுடைவுபத்தியுறு படியவர் தமக்கருளவே- யமாருலகதயரு மெயநமநவிபபாவி யடியிணையைப்பணியவே-பக ரவுதிணைகிடவுமரிதுனது சொறபெருமை பாததியளிக்குமனையே-ப லபலமுனிதலைவானவருமுனைவிணியபணிவிடைதனைபுரியவே-சிக ரபாலெறபிலவரு முருககுமரக்கடவுள சிறுபறைமுழக்கியருளே-திர ளுமணிமுத்தலையெறியுந்திருச்செந்திப சிறுபறைமுழக்கியருளே. (௰)

சிறுபறைப்பருவம் - முற்றிற்று.

---

## சிற்றிற்பருவம்.

பொன்னிறமணக்கும்புதுப்புனைவிற்புடைசூழ்பணிலமுத்தெடுத் துப்-புறக்கோட்டகமுடைசாதகிவலம்புரிகளைசதுரகைக் கலமமைத்துக்- கன்னிமணக்குங்கழனியிற்செங்கமலப்பொகுட்டுமுகையுடைத்துக்-கக் குஞ்செழுதேனுலையறிதகைமுகித்திலவசிலையப்புகட்டிப்-பன்னி மணக்குபுதுப்பொழிலிற பலபூபறித்துக்கறிதிருத்திய-பரிந்துசிறு சோறடுமருமை பாராயபிராபதபபாகன - பென்னிமணக்குஞ் சேவடி யாற் சிறியேஞ்சிற்றிலசிதையேலே - திரைமுத்தெறியுந் திருச்செந் தூரச் செல்வாசிற்றிலசிதையேலே. (க)

கையன்மடவாரிழைத்தவண்டறன்னையழிக்குமதுக்கல்லத்- தாள முறுககியுனதுபொற்பூக் கண்டைத்திருக்காட்டியாதோ-துய்யதவளப் பிறைமுடிக்குஞ்சோதியெடுத்து முகமணைத்துந் - தோளிலிருத்தும் பொழுதுமணித தோளிற்புழுதிதோயாதோ - வையமனைத்துமீன்றெ டுத்தும வயதுமுதிரா மடப்பாவை - மடியிலிருத்தி முலையூட்டி வத

னத்தணைக்கிலுன்கழற்காற், செய்பசிறதூள்செறியாதோ சிறியேஞ்சிற் றில்சிதையேலே. திரை ரத்தெறியுந் திருச்செந்தூர்ச் செல்வாசிற்றில்சி தையேலே. (உ)

கௌவுங்கரடமடையுடைக்குந் தந்திப்பகடுபிடிபட்டுத் - தருவும முதுமிருகிதியுந் தனியேகொள்ளைபோகாம - லெவ்வமுறவிட்புலத்தமர ரேக்கமுறுமலயிராணி - யிடுமங்கலநாணழியாமலிமையோரிறைஞ்சுமா மகளிர், பௌவமெறியுந்துயராழிப பழுவத்தமுந்திமுழுகாமற் - பரக் குஞ்சுருதித்துறைவேள்வி பழுதாகாமற்பரவரிய - தெவ்வர்புரத்தையடு ஞ்சிறுவா சிறியேஞ்சிற்றில்சிதையேலே - திரைமுத்தெறியுந்திருச்செந் தூர்ச் செல்வாசிற்றில்சிதையேலே (ங)

ஆடுங்கொடித்தேரொழுபுரவி யருணடத்துமகவிடத்தை
யடைவேபடைத்தும்படைத்தபடி யளித்துந்துடைத்தமுத்தொழிலுங்
கூடும்பெருமையுனக்குளது கூடார்புரத்தைக்குழாம்பறிக்கக்
கொள்ளுங்கருத்துநினகருத்துக் கொங்கைசுமந்துகொடிமருங்குல்
வாடுங்கலகவிழிமடவார் மலர்க்கைசிவப்பமணற்கொழித்து
வண்டலிழைத்தமணியழிற்கை வனபோசராநமகவானுந்
தேடுங்கமலத்திருத்தாளாற் சிறியேஞ்சிற்றில்சிதையேலே
திரைமுத்தெறியுந்திருச்செந்தூர்ச் செல்வாசிற்றில்சிதையேலே. (ச)

புற்றிலரவந்தனைப்புனைந்த புனிதருடனேவீற்றிருக்கப்
பொலியுந்திகிரிவாளகிரிப் பொருப்பையளர்த்துச்சுவராக்கிச்
சுற்றில்வளர்ந்தவரையனைத்துஞ் சுவர்க்காலாக்கிச்சுடரிரவி
தோன்றுமறையுஞ்சுருப்பைவெளி தொறுந்தோரணக்காலெனநாட்டி
மற்றிலுவமையெனுங்கனக வரையைத்துளைத்துழையாக்கி
மாகமுகிலைவிதானமென வகுத்துமடவாருடன்கூடிச்
சிற்றிலிழைத்தபெருமாட்டி சிறுவாசிற்றில்சிதையேலே
திரைமுத்தெறியுந்திருச்செந்தூர்ச் செல்வாசிற்றில்சிதையேலே. (ரு)

மிஞ்சுங்கனகமணித்தொட்டின் மீதேயிருத்தித்தாலுரைத்து
வேண்டும்படிசப்பாணிகொட்டி விருப்பாய்முத்தந்தனைக்கேட்டு
நெஞ்சுமகிழவரவழைத்துநிலவைவருவாயெனப்புகன்று
நித்தலுனதுபணிவிடையி னிலைமைகுலையேயறிவாய்
பிஞ்சுமதியினொருமருப்புப் பிறங்குமிருதாட்கவுட்சுவடு
பிழியுங்கரடமும்மதத்துப் பெருத்தகால்வாய்த்திருத்தமிகு
மஞ்சுகரக்குஞ்சரத்துணையே யடியேஞ்சிற்றிலழியேலே
யலைமுத்தெறியுந்திருச்செந்தூ ரரசேசிற்றிலழியேலே. (சு)

துன்றுதிரைக்குண்டகழ்மடுவிற் சூரனொளிக்கப்பகைநிருதர்
தொல்லைப்பதியுமவரிருந்து துய்த்தவளமுந்தூளாக்கி
வென்றுசெருவிற்பொருதமிழ்த்தாய் வேதாவிதித்தவிதிப்படியை
விலக்கிவெகுண்டுமீண்டளித்தாய் வேண்டுமடியார்வினையொழித்தாய்
கன்றுமமணர்கழுவேறக் காழிப்பதியில்வந்துதித்துக்

கள்ளப்பரசமயக்குரும்பர் கலகமொழித்துக்கட்டழித்தா
யன்றுகொடுத்துன்வழியடிமை யடியேஞ்சிற்றிலழியேலே
யலைமுத்தெறியுந்திருச்செந்தூ ரரசேசிற்றிலழியேலே. (எ)

களிப்பாருனைக்கண்டவரவரே கண்ணுமனமும்வேறாகிக்
கள்ளனிவனைநம்முடைய காதல்வலையாற்கட்டுமென
விளிப்பார்விரகமங்குரித்த வேடப்புலிப்பைப்பாரென்று
மெள்ளநகைப்பாரிவருடனே விளையாடாமல்வேறாகித்
துளிப்பார்திரைக்குண்டகழுடுத்த தொல்லைப்பதியும்பரண்டத்
தொகையுந்தொகையில்பல்லுயிருங் கோற்றமொடுக்கந்துணையாய்நின்
றளிப்பாயழிக்கைகடனலக்கா ணடியேஞ்சிற்றிலழியேலே
யலைமுத்தெறியுந்திருச்செந்தூ ரரசேசிற்றிலழியேலே. (அ)

கூவிப்பரிந்துமுலைத்தாயர் கூட்டியெடுத்துமுலையூட்டிக்
குடுமிதிருத்திமலர்சொருகிக் கோலம்புனைந்துகொண்டாடிப்
பூவிற்பொலிந்ததிருமேனிப் புனிதாவண்டம்புறத்தெயிலிற்
புகுந்தாலினியுன்னுடலேறப் புழுதியிறைத்துப்போகாமற்
காவிக்குறுங்கோட்டிதழ்நெருக்குங் கண்ணிதனைக்கொண்டோச்சிவனைக்
கானற்றரளத்தொடையாலுன் கைத்தாமரையைக்கட்டிவிடோ
மாவித்துணையேவழியடிமை யடியேஞ்சிற்றிலழியேலே
யலைமுத்தெறியுந்திருச்செந்தூ ரரசேசிற்றிலழியேலே.

பொய்யாவளமைதரும் பெருமைப்பொருநைத்துறையினீராட்டிப்
பூட்டுங்கலன்கள்வகைவகையே பூட்டியெடுத்துமுலையூட்டி
மெய்யாலணைத்துமறுகுதனில் விட்டாரவரைவெறுமலுன்னை
வெறுக்கவேறுகடனுமுண்டோ விரும்பிப்பாலைக்கொழித்தெடுத்துக்
கையாவிழைத்தசிற்றிலைநின் காலாலழிக்கைக்கடனலக்காண்
காப்பானழிக்கத்தொடங்கிலெங்கள் கவலையெவரோடினியுரைப்போ
மையாவுனதுவழியடிமை யடியேஞ்சிற்றிலழியேலே
யலைமுத்தெறியுந்திருச்செந்தூ ரரசேசிற்றிலழியேலே (ய)

சிற்றிற்பருவம் - முற்றிற்று.

---

## சிறுதேர்ப்பருவம்.

தண்டெனுடைந்தொழுகுமருமாலைநீண்முடிகரிக்குஞ்சதக்கிருதுமெச்சுந்
தருணமணியாசனத்தேறமாதலிசெழுந்தமணியத்தேருருட்டப்
பண்டேபழம்பரை நிசாசரர்களூட்டப் பரப்புநிலைகெட்டதென்று
பரவுங்குபேரன்வட பூகரம்பொருபுட்பகத்தேருருட்டவீறு
கொண்டேயுதித்தசெங்கதிராயிரக்கடவுளகுண்டலந்திருவில்வீசக்
கோலப்ரபாமண்டலச்சுடர்தடக்கமுட் கோலெடுத்தருணவருணன்
றிண்டேருருட்டவளர் செந்தில்வாழ்கந்தனே சிறுதேருருட்டியருளே
சேவற்பதாகைக்குமாரகெம்பிரனே சிறுதேருருட்டியருளே. (க)

வாராருமிளமுலைமுடைத்துகிற்பொதுவியர் மனைக்குட்புகுந்துமெ
ள்ள, வைத்தவெண்டயிருண்டுகுடமுருட்டிப்பெருக வாரிவெண்ணெயை
யுருட்டிப், பாராமலுண்டுசெங்கனிவாய்துடைத்துப் பருஞ்சகடுதனை
யன்று பரிபுரத்தாளாலுருட்டிவிளையாடுமொரு பச்சைமான்மருகபதி,
யாராமைகூருமடியவர்பழவினைக்குமுமை பறவையுருட்டிமேலை, யண்டப
கிரண்டமுமனைத்துலகமுஞ்செலலு மாணையாழியையுருட்டிச், சோரி
சாசரர்சிரக்குடமுருட்டநீ சிறுதேருருட்டியருளே, சேவற்பதாகைக்கு
மாரவெம்பிரானே சிறுதேருருட்டியருளே. (௨)

கொங்கவிழ்கடஞ்சாரன் மலையமால்வரைநெடுங் குடுமியில்வளர்ந்த
தெய்வக், கொழுங்கொனறலங்கன்று மாடகப்பசுநிறங் கொண்டுவிளையும்
பருவரைச், சந்தனநெடுந்தருமலர்ப்பொதும்பருமியற் றணைபொருளைமா
நதியுமத், தணைபொருந நபாயவிளை சாலிநெற்குலையுமச்சாலிநெற்குலை
படர்ந்து, மூங்குவிளையுமடரு முளிக்கரும்புமபரு முளிக்கரும்படைக்கற்ற
து. முலைநெறிக்கும்புனிற் றெருமையையுஞ்சிறுவா மொழியும்பரந்தவ
ழியுஞ், செந்தமிழ்மணக்குந் திருச்செந்திலம்பதியனே சிறுதேருருட்டிய
ருளே, சேவற்பதாகைக்குமாரவெம்பிரானே சிறுதேருருட்டியருளே. (௩)

பெருமையுடனீடலத்திருவர் பரசமையமும்பேதம்பிதற்றிவிட்ட,
பிறைமருப்புக்கரும்பகடுமுந்நீரிற் பிழைத்துநீள்கடலாயிலேறப், பொருவ
ருஞ்சன்னிதியிலெய்துமதுபோன்மணிபுடைக்குமிளநீரிரண்டு புணரியி
னைமிகந்து சன்னிதியேறவிங்ஙனட்பொருந்தவிளையாடிமுன்று, ளிருதிரை
யினிற்சந்தனக்கொடுமரத்தினை யிழுத்துவருமெருமையேற்றை, யெப்
பொழுதுமுதியகம்பகடாகவுகைத்தி வியாவருங்காணவென்று, திருவுள
மகிழ்ந்துதிருவிளையாடல்செய்தநீ சிறுதேருருட்டியருள்ள, சேவற்பதா
கைக்குமாரவெம்பிரானே சிறுதேருருட்டியருளே. (௪)

ஆதிநான்மறைபாகியதனுமும்பொருளாகியல்லவையனைத்துமாகி
யளவினுக்களவாகியணுவினுக்கணுவாகியனைத்துயிருமாகியதனின்
சாதியின்பிறிவாகிவெவ்வேறுசமயங்களாகுநாளுகிமெய்ச்
சாலோகசாமீபசாரூபசாயுச்யதன்னொளியிலிலையாகி
யோதியதனைத்தினுமடங்காமல்வேறாகியுள்ளுமபுறம்புமாகி
யொளியிலொளியாகிமற்றிரவுபகலற்றவிடமொப்புவித்தெனையிருத்தித்
தீதினையகற்றிநின்றிருவருள்புரிந்தவாசிறுதேருருட்டியருளே
சேவற்பதாகைக்குமாரவெம்பிரானேசிறுதேருருட்டியருளே. (௫)

வேறு.

புலமைமவித்தகமயூரவாகனவள்ளிபோகபூஷணசூரன், சலமொழி
த்தவிசாசூர்குலாந்தகசடாட்சரகாங்கேய,குலவுகொற்றவகுமாரகண்டீ
ரவகுருபரபுருகூக, ஞலகளித்தவர்செந்திலவாழ்கந்தனேயுருட்டுகசிறு
தேரோ, யாகராயகன்மைந்தலைபொடிபடவுருட்டுகசிறுதேரோ. (௬)

வீதிமங்கலவிழாவணிவிருப்பியவிண்ணவரரமாதர்
சோதிமங்கலகலசகுங்குமமுலைகோய்ந்தாங்களிகூறச்
சாதிமங்கலவலம்புரியினமெனத்தழைச்சிறையொடுபுல்லி
யோதிமந்துயில்செந்தில்வாழ்கந்தனேயுருட்டுகசிறுதேரே
யுரகநாயகன்பஃறலைபொடிபடவுருட்டுகசிறுதேரே. (எ)

விரைத்தடம்பொழில்வளைமணியாசனத்திருந்துவிண்ணவர்போற்ற
வரைத்தடம்புனைமழவிடைபெம்பிரான்மனமகிழ்ந்திடவாக்கா
விரைத்தபல்கலைப்பரபலாங்கிரட்டிமற்றிதுபொருளெனமேனு
ளுரைத்ததேசிகசெந்தில்வாழ்கந்தனேயுருட்டுகசிறுதேரே
யுரகநாயகன்பஃறலைபொடிபடவுருட்டுகசிறுதேரே. (அ)

மாதுநாயகமெனவடிவுடையசீர்வள்ளிநாயகமண்ணி
லீதுநாயகமெனவுனையன்றிவேறெண்ணநாயகமுண்டோ
போதுநாயகனபுணரியினுயகன்பொருப்புநாயகன்போற்றி
யோதுநாயகசெந்தில்வாழ்கந்தனேயுருட்டுகசிறுதேரே
யுரகநாயகன்பஃறலைபொடிபடவுருட்டுகசிறுதேரே. (கூ)

தக்கபூசனைச்சிவமறையோர்பெருந்தானநாயகர்தம்போர்
திக்கனைத்திலுமெனமுதலிமையவர்தேவர்தந்திருமேனி
மிக்கமாவிகைதருபவராடியவர்மின்னனார்சமையத்தோ
ராக்கவாழ்கெனச் செந்தில்வாழ்கந்தனேயுருட்டுகசிறுதேரே
யுரகநாயகன்பஃறலைபொடிபடவுருட்டுகசிறுதேரே. (௰)

சிறுதேர்ப்பருவம்-முற்றும்.

திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமிழ் முற்றிற்று.



ஆகபருவம் பத்துக்கு கவி-௱௯.



## பலஸ்துதி.

மருநாண்மலர்ப்பொழிலுடுத்தகூடமெங்குமலைவாய்கொழித்தெறியு முத்தை, வணடலிடுமெக்கல்புடைசூழ்திருச்செந்தில்வரு மயில்வாகனக் கடவுளெங், குருநாதனொருசெய்வயானைதனபாகன் குறக்கொடிக்குந்த ழைச்சிறைக், கோழிக்கொடிக்குங்குமாரகெம்பிரான் குறும்பிறைமுடிக் குபபிரா, னிருநாழிநெற்கொணடுமுப்பத்திரண்டறமு மெங்குமுட்டா தளக்கு, மிறைவிதிருமுலையமுத முண்டுஞானம்பெருகுமெம்பிரானினி யபிள்ளைத், திருநாமமெழுதுவார்கம்பார்படிப்பார் செகம்பொதுவறைப்பு ரந்து, தேவாதிதேவரும்பரவுசாயுச்சியச்சிவபதத்தெய்துவாரே.

உ

சிவமயம்.

அதிவீரராமபாண்டியர்

அருளிச்செய்த

# சின்ன திருவாசகம் எனவழங்கும்



## திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதிமூலம்,

சென்னைக் கவர்னர்மெண்டு நார்மல்பாடசாலைத்

தமிழ்ப் புலவராயிருந்த

தி-க-சுப்பராயசெட்டியாரால்

தாம இயற்றிய உரையோடு,



சென்னை சூளை

[illegible]. பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.



கா-ஙரு ஆனி-மீ.

விலை அணா-ரு.

பரமபதி துணை.

# திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி.



பொலிவையுடைய திருக்கருவையி லெழுந்தருளிய விறைவன்மேல் நூறு செய்யுளால் அந்தாதித் தொடையா யமைந்த நூலென ஐந்து சொல் நான்கு சந்தியாய் விரவித்தொக்க அன்மொழித்தொகை நிலைத்தொடராய்ப் பதிற்றந்தாதி என்னும் பிரபந்தத்திற்குக் காரணக்குறியாய் வந்தது. திருபொலிவு, கருவை ஓர் திருப்பதி அது இடவாகுபெயராய் இறைவன் மேனின்றது. பதிற்றுப்பத்து பப்பத்துச் செய்யுள் ஒவ்வோர் சந்தமாக வரும் நூறு செய்யுளின் மேல் பண்பாகுபெயராய் நின்றது. அந்தாதி அந்தம் ஆதி எனப் பிரித்து ஒரு செய்யுளினிறுதி மற்றொரு செய்யுளின் முதலில்வர அந்தாதித்துத் தொடுக்கப் படும் நூலென ஒருசொல்லாய்ப் பிரபந்தத்தின் மேனின்றன. திருக்கருவை உருபும் பயனுந்தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். கருவைப் பதிற்றுப் பத்து உருபும் பயனுந் தொக்க ஏழாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். பதிற்றுப்பத்து பதிற்றாகிய பத்தென நிற்றலால் பண்புத்தொகை நிலைத்தொடர். பதிற்றுப் பத்தந்தாதி உருபும் பயனுந் தொக்க மூன்றும் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். பதிற்றுப்பத்து பத்தாகிய பத்தென விரிந்து நூறு என்னும் இலக்கத்தின்மேல் நின்றது. திரு என்பதை கருவைக்கு இயற்கையடையாக்கிக் கருவையி லெழுந்தருளிய இறைவன்மேல் நூறு செய்யுளால் அந்தாதித் தொடையா யமைந்த நூலென நான்கு சொல் மூன்று சந்தியாய் நூன்மேனின்ற தெனினு மமையும்.

இது பொருட்டொடர் நிலைச்செய்யுளாற் றொடுத்த காப்பியம் ஆகாது சொற்றொடர் நிலைச்செய்யுளாற் றொடுத்த நூல்மேனின்றது. பதிற்றந்தாதி பத்துவெண்பா, பத்துக் கலித்துறை பொருட்டன்மை தோன்ற அந்தாதித்துப் பாடுவது. பப்பத்தாகப் பலசந்த விருத்தங்கள் முதலிய செய்யுளின் பொருட்டன்மைதோன்ற நூறுசெய்யுளால் இடையிற் பாடும் புலவன் காரணப்பெயராகப் பெயர்தந்தமையால் பதிற்றுப் பத்தந்தாதியெனக் காரணவாக்கப் பெயராய் வழங்கி வருகின்றது.

## காப்பு.

### அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

ஆனகருவைப்பதிற்றுப்பத்தந்தாதிச்சொல்லலங்கன்முற்று
ஞானவுருவாங்களவீசனளினசரணமிசைச்சாத்தத்
தானவருவிபொழிதடக்கைத்தறுகட்சிறுகட்புகர்முகத்துக்
கூனலிளவெண்பிறைங்கோட்டுக்குணகுஞ்சரத்தினடிதொழுவாம்.

(இ-ள்.) ஆன—என்றுமுள்ள, கருவைப்பதிற்றுப் பத்தந்தாதி—திருக் கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி யெனப் பெயர் வாய்ந்த, சொல் அலங்கல்—சொல்லாகிய மலராற்றொடுத்த மாலையை, முற்றும்—திருமேனிமுற்றும், ஞான உருவு ஆம்—ஞானவடிவாகிய, களாசன்—திருக்களா மரத்தின் கீழ் எழுந்தரு ளிய சிவபெருமானது, நளினம் சரணமிசை சாத்த—தாமரை மலர்போன்ற திருவடியின்மேல் சாத்த, தானம்—மதத்தை, அருவி—மலையாறுபோல, பொழி-சொரியும், தடகை—நீண்ட திதிக்கையையும், தறுகண் சிறுகண் — அஞ்சா மையையுடைய சிறிய திருக்கண்களையும், புகர்முகத்து—புள்ளிவாய்ந்த திரு முகத்தையும், சுனல்—வளைந்த, இளவெண்பிறை — இளமைவாய்ந்த வெள் ளிய பிறையை யொந்த, கோடு—கொம்பையுமுடைய, குணகுஞ்சரத்தின்—குணவிநாயகரது, அடிதொழுவாம்—திருவடியை வணங்குவாம்.

சிவபெருமானுக்குச் சாங்கம் உபாங்கமும் திருவருள் வடிவாதலால் முற் றும் ஞானவடிவாங்களா வீசன் எனவும், எஞ்சாணுடம்புக்குத் தலையே பிரதான மாதலால் அத்தலத்தில் எழுந்தருளிய குணவிநாயகரைக் குணகுஞ்சரமெனவுங் கூறினர். நளினசரணம் இரண்டும் வடசொல்லாதலால் "இயல்பினும் விதி யினும் நின்ற வுயிர்முன்" என்ற சூ—ஆல் வருமொழி முதல் வல்லெழுத்து மிகாது "இடையுரிவடசொலின்" என்ற சூ—ஆல் இயல்பாயிற்று. குணகுஞ்சர மென்பது மது. பிறைத்தொழிலாகு பெயராய்ச் சந்திரன்மேனி ன்றது. பிற பகுதி, அகரவீறு கெடுதல் சந்தி, ஐ புடைபெயர்ச்சி விகுதி.

## நூல்.

சீரார்கமலச்சேவடியென்சிந்தையிருத்திபுனதுதிருப்
பேராயிரமுமெடுத்தோதிப்பெம்மான்கருவையெம்மானெனன்
றாராவமுதமுண்டவர்போலனந்தானந்தத்தகநெகிழ
வாராவின்பமறிவித்தாயறியேனிதற்கோர்வரலாறே.

(இ-ள்.) சீர் ஆர்—பொலிவமைந்த, கமலம் சே அடி—தாமரைமலரை யொத்த வுனது திருவடியின்கீழ், என் சிந்தை இருத்தி—எனது மனம் நிலை பெறச்செய்து—உனது திருபேர் ஆயிரம் உம்—உனது ஆயிரந் திருநாமங்களை யும், எடுத்து ஓதி—எடுத்துக் கூறி, பெம்மான்—பெருமானே, கருவை எம் மான் — திருக்கருவையில் எழுந்தருளிய எமதிறைவனே, என்று — என்று துதித்து, ஆரா அமுதம்—தெவிட்டாத வமுதத்தை, உண்டவர்போல்—பரு கினவரைப்போல, அனந்த ஆனந்தத்து—அளவில்லாத பேரானந்தத்தால், அகம் நெகிழ—மனம் நெக்குவிட்டுருக, வாரா இன்பம்—பிறர்க்கமையாத அப்பே ரின்பத்தை, அறிவித்தாய்—அடியேனுக்குத்தந்தருளினாய், இதற்கு—அவ்வருளின மைதிக்கு, ஓர் வரலாறு—அடியேனிடத்து நிகழும் நற்செய்கையை, அறியேன் கனவிலுமறியேன், (இஃதோர் பெருவியப் பென்றபடி.)

அடியேனிடத்து அன்பு ஓர் தினையளவு மில்லாதிருக்கத் தேவரீர் இவ் வாறு செய்தது ஒரு பெருவியப் பென்பார் அறியேனிதற்கோர் வரலாறென் றார். ஆரா ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். ஆர் பகுதி, ஆ எதிர் மறை

விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, து சாரியை, உகரக்கேடு சந்தி, அ எச்ச விகுதி. (க)

ஆறுக்காமக்கொடியகனலைவர்மூட்டவவலமன
நீறாய்வெந்துகிடப்பேனைநின்றாள்வழுத்தநினைவுதந்து
மாறாநேயத்திரவுபகன்மறவாதிருக்கவரமளித்தாய்
சீறாடரவமுடித்தசடைக்கருவைவாழுஞ்செழுஞ்சுடரே.

(இ-ள்.) ஆறாத—என்று மவியாத, காமம்கொடிய கனல்—காமமாகிய கொடிய கனலை, ஐவர் மூட்ட—மெய்வாய் கண் மூக்குச் செவியென்னும் ஞானேந்திரியங்களைந்து மூட்ட, அவலம் மனம்— (அதனால்) வலிமையிழந்த எனது மனம், நீறு ஆய் வெந்துகிடப்பேனை—சாம்பலாய் வெந்து கிடக்கும் எனக்கு, நின் தாள் வழுத்த—உனது திருவடியைத் துதிக்க, நினைவுதந்து—எண்ணமருளி, மாறாத நேயத்து—மாறாத நேயமாகிய வுன்னை, இரவுபகல் மறவாது இருக்க—இரவிலும் பகலிலும் மறவாமலிருக்க, சீறு ஆடு அரவம்—சீறி ஆடும் பாம்பினை, முடித்த சடை—தரித்த சடையை யுடைய, கருவை வாழும் — திருக்கருவை யென்னும் திருப்பதியி லெழுந்தருளிய, செழும் சுடரே—நிறைந்த வொளிப்பிழம்பா யுள்ளவனே, வரம் அளித்தாய்—வரந் தந்தருளினாய்.

அவிக்க அவியும் நெருப்பைப்போலாது உடலுள்ளளவும் இருத்தலால் ஆறா கொடிய கனல் எனவும், போகம் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென ஐந்து வகைப் படுதலால் ஐவர்மூட்ட எனவும், மனம் அவர்கள் வசப்பட்டொழுகுத லால் அவலமெனவும், அம்மனத்திற்கோர் செயலின்மையால் நீறாய் வெந்து கிடப்பேனை எனவும், உன் திருவருளுணர்த்த வந்தமையால் நின்றாள் வழுத்த நினைவுதந்தெனவும், அத்திருவருள் மேலீட்டில் சிவஞானமேலிடுதலால் மாறா நேயத்தெனவுங் கூறினார். ஐவரென்னுஞ்சொல் காமமென்னுங் குறிப்பால் இந் திரியங்களை யுணர்த்தி நிற்றலால் தொகைக் குறிப்புச்சொல். ஆய் செயவெ னெச்சத்திரிபு. வழுத்த நிகழ்கால வினையெச்சம். வழுத்து பகுதி, உகரக்கேடு சந்தி, அ எச்ச விகுதி. ஐ உருபு மயக்கம். (உ)

சுடரேவலியத்தடுத்தாண்டதுணையேபிறவித்தொடுகுழிவீ
ழிடரேயகலக்களாநீழலிருந்தகோவேயெம்பெருமா
னுடலேயோம்பித்திரியுமென்னையுன்னைநினைக்கப்பணித்தவருட்
கடலேயுனையன்றொருதெய்வங்காணவழுத்தக்கடவேனே.

(இ-ள்.) சுடரே—ஒளிப்பிழம்பாயுள்ளவனே, வலிய தடுத்து ஆண்ட—வலிய என்னைத் தடுத்து அடிமை கொண்ட, துணையே—எனக்கோருயிர்த் துணையே, பிறவிதொடுகுழி வீழ் —பிறவியென்னும் தோண்டப்பட்ட கடலில் வீழ்ந்து வருந்தும், இடரே அகல — துன்பத்தை யகன்றுய்ய, களாநீழல் இருந்த—களாமரத்தினிழற் கீழ் எழுந்தருளியிருந்த, கோவே—இறைவனே, எம்பெருமான்—எமது பெருமானே, உடலே ஓம் பித்திரியும் என்னை—உடம் பினையே ஒருபொருளாகப் பேணித்திரியு மறிவீனனாகிய என்னை, உன்னை நினைக்க—உன்னைச் சதாகாலமுங் கருத, பணித்த அருள் கடலே—ஏவிய கரு

ணைக் கடலே, உனை அன்று—உன்னையன்றி, ஒரு தெய்வம்—மற்றொருதெய்வத்தை, காண வழுத்த—காணவும் துதிக்கவும், யான் கடவேனோ—யான் செய்யக் கடவேனோ,

சோமசூரியாக்கினிகளுக்கு ஒளிதரும் பேரொளியாதலால் சுடரொன்றூர்களா வென்பது ஈறு குறுகிக்களவென வரும். "குறிய தன்கீழாக்குறுகலுமத ேனாடு கரமேற்றலும்" என்ற சூ-ஆல். பணித்த இறந்தகாலப் பெயரொச்சம் பணி பகுதி, வழுத்த நிகழ்கால வினையெச்சம். வழுத்து பகுதி, யான் கடவேனல்லன் என்னும் பொருண்மேனிற்றலால் ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. காணக் கடவேன் வழுத்தக் கடவேன் என நிற்றலால் வியங்கோள் வினைமுற்று. அன்றி என்னும் வினையெச்சம் அன்று எனத் திரிந்தது "அன்றியின்றியென் வினையெஞ்சிகரம்" என்னும் சூ-ஆல். (ரு)

வேனிற்சிலைவேடொடுகணைக்கும்விளங்குமகளிருளங்கவற்றும்
பானற்கொடியவிழிவலைக்கும்பற்றாய்வருந்தியனுதினமு
மீனத்துயரக்கடலழுந்துமெனையும்பொருளாவடிமைகொண்ட
ஞானத்துருவேதமிழ்க்கருவைநம்பாபொதுவினடித்தோனே.

(இ-ள்.) வேனில் சிலைவேள்—வேனிற் காலத்திற்குரிய கரும்பு வில்லையேந்திய மன்மதன், தொடுகணைக்கும்—எய்யும் அம்புக்கும், விளங்கும் மகளிர்—ஆபரணங்களால் விளங்கும் பெண்கள், உளம்கவற்றும்—மனத்தைக்கவலைப்படுத்தும், பானல்—நீலோற்பல மலரையொத்த, கொடிய விழிவலைக்கும்—கொடிய கண்களாகிய வலைக்கும், பற்று ஆய் வருந்தி—ஒருசார்பாய் வருந்தி, அனுதினமும்—எந்நாளும், ஈனம்—இழிவாகிய, துயரம் கடல்—துன்பமாகிய கடலில், அழுந்தும்என்னை உம்—அழுந்துகின்ற என்னையும், பொருளாக—ஒரு பொருளாகக் கருதி, அடிமைகொண்ட—ஆட்கொண்ட, ஞானத்து உருவே ஞானவடிவாயுள்ளவனே, தமிழ் கருவை நம்பா—தமிழ் வழங்கும் திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே, பொதுவில் நடித்தோனே—சிற்சபையில் ஆனந்தக் கூத்துப் புரிபவனே, (நீயாட்கொண்டதற்கு ஓர் கைம்மாறு அறிந்திலன்.)

கவற்றும் நிகழ்கால வினைப்பெயரெச்சம். கவற்று பிறவினைப் பகுதி, உகரக்கேடு சந்தி, உம் எச்ச விகுதி. ஆக என்னும் வினையெச்சத்தின் ஈறு கெடுதல் "சாவ வென் மொழியீற்றுயிர் மெய் சாதலும் விதி" என்ற சூத்திரத்தின் உபலக்கணத்தால். (சு)

நடித்தேன்பொய்க்கூடெடுத்தவமேநன்னாள்கழியவிந்நாளிற்
படித்தேனுனதுதிருநாமம்பண்டைவினையின்பற்றறுத்தேன்
பிடித்தேன்பிறவிக்கடனீந்தப்பெரியபுணையாவுனதடியை
முடித்தேனுள்ளத்தெண்ணமெல்லாங்கருவைவாழுமுன்னோனே.

(இ-ள்.) கருவைவாழும் முன்னோனே—திருக்கருவையி லெழுந்தருளிய முன்னவனே, பொய்க்கூடு எடுத்து—பொய்யாகிய இச்சரீரத்தையெடுத்து, நல் நாள் கழிய—நல்ல நாள்கள் வீணாள்பட, அவமே—பயனில்லாதாக, நடித்தேன்—நடித்துத் திரிந்தேன், இந்நாளில் உனது திருநாமம்படித்

தேன்—இளமை கழிந்த இக்காலத்தில் உனது திருநாமங்களை யோதினேன், பண்டைவினை யின்பற்று அறுத்தேன் — (அதனால்) தொன்று தொட்டுள்ள சஞ்சித வினையின் சார்பினை யொழித்தேன், பிறவிக்கடல் நீந்த—பிறவியென்னும் கடலை நீந்திக் கடத்தற்கு, உனது அடியை—உனது திருவடியை, பெரிய புணையாபிடித்தேன் — பெரிய தெப்பமாகக் கைக்கொண்டனன், உள்ளத்து எண்ணம் எல்லாம் முடித்தேன்—என்மனக்கருத்தை எல்லாம் முடித்தனன்.

இளமைப் பருவமென்பார் நன்னாள் எனவும், அந்நாள் வீணாய்க் கழித்தனனென்பார் கழிய அவமே நடித்தேனெனவும், அந்நாள் கழிந்தமைக்கு வருந்துகின்றேனென்பார் இந்நாளெனவுங் கூறினார். திருநாமத்தை ஓதுதலால் சஞ்சித வினை கழிதலும், சஞ்சித வினை கழிதலால் பிறப்பொழிதலும், ஒழிதலால் முத்தியடைதலும் உடைமையால காரணமாலையணி. நடித்தேன் இறந்தகாலத் தன்மை யொருமை வினைமுற்று. நடி பகுதி. பிரமன் முதலியோர்க்கு முன்னோனாய் நிற்றலால் முன்னோனே எனவுங் கூறினார். (ரு)

முன்னைப்பிறவித்தவப்பயனோமுழுதுமறியாமூடனிவ
னென்னக்கருத்திலெண்ணியோயாதோவறியேனிரவுபகல்
கன்னற்பாகிற்கோற்றேனிற்கனியிற்கனிந்தகவிபாட
வன்னத்தொகுதிவயற்கருவையாண்டானென்னையாண்டதுவே.

(இ-ள்.) இரவுபகல் கன்னல்பாகுஇல்—இரவினும் பகலினும் கருப்பம் பாகைப்போலவும், கோல் தேனில்—கொம்புத் தேனைப்போலவும், கனியில்—முக்கனியைப்போலவும், கனிந்த கவிபாட—சுவைகனிந்த பாடலைப்பாட, அன்னம் தொகுதி — அன்னக்கூட்டங்கள் வசிக்கும், வயல்—வயல்சூழ்ந்த, கருவை ஆண்டான்—கருவாபுரியாளி, என்னை ஆண்டது—என்னையடிமைகொண்டது, முன்னை பிறவிதவப்பயனோ—முற்பிறவியிற்செய்த தவப்பயனோ, முழுதும் அறியாதமூடன்—சிறிதும் அறியாதமூடன், இவன் என்ன—இவனென்று, கருத்தில் எண்ணியோ—திருவுளத்திற் கருதியோ, யாதோ அறியேன்—யாது காரணமோ அறியேன்.

ஓகாரம் ஐயப்பொருளன. இன் உருபு ஒப்புப்பொருட்டு. கனி வினை முதற் பொருளில் வந்த இகர விகுதி தொக்கு நின்ற தொழிற்பெயர். கனி பகுதி, யகரமெய் சந்தி, இ வினைமுதற் பொருளில்வந்த புடைபெயர்ச்சிவிகுதி, உணர்த்த உணரும் அறிவில்லானுக்கு உணர்த்தவல்லோன் இறைவனே ஆதலால் முழுதுமறியாமூடனிவனென்னக் கருத்திலெண்ணியோ என்றார். (சு)

ஆண்டகுரவனுவானையல்லற்பிறவியறுப்பானை
வேண்டும்பதவிதருவானைவெளிவீட்டின்பமளிப்பானைத் [னைக்
தூண்டல்செய்யாமணிவிளக்கைத்தொழில்மூன்றியற்றுந்தொல்லோ
காண்டற்கரியபேரொளியைக்களாவினிழற்கீழ்க்கண்டேனே.

(இ-ள்.) ஆண்ட குரவனுவானை — அருட்கண்ணாலடிமை கொண்ட ஞானாசாரியனாயுள்ளவனை, அல்லல் பிறவி அறுப்பானை—துன்பந்தரும் பிறப்பினை வேரோடறுக்கின்றவனை, வேண்டும் பதவி தருவானை—அடியார் வேண்டும் பதவிகளைத் தருகின்றவனை, வெளிவீடு இன்பம் அளிப்பானை—மோட்ச

வின்பத்தைத் தருகின்றவனை, தூண்டல்செய்யா மணிவிளக்கை—தூண்டார்த மாணிக்க தீபத்தை, தொழில் மூன்று இயற்றுந்தொல்லோனை—சிருஷ்டிமுத லிய முத்தொழிலையுஞ் செய்யும் பழையோனை, காண்டற்கு அரிய பேரொளியை—காணுதற்கரிய பெரிய ஒளிப்பிழம்பாயுள்ளவனை, களாவின் நிழற் கீழ் கண்டேன்—களாவினிழலின் கீழ்த் தரிசித்தேன். (எனக்குயாதுகுறையுளது.)

மானைக்காட்டி மான்பிடித்தல்போல மானிடத்திருவுருக் கொண்டருளிப் பக்குவவான்மாக்களுக் கருளுதலால் ஆண்ட குரவனுவானை எனவும், ஆட் கொள்ளுதலாற் பிறப்பொழிதலில் அல்லற்பிறவி யறுப்பானை எனவும், பிறவி யொழிதலால் சாலோக முதலிய பதங்களைத் தருதலில் வேண்டும் பதவி தரு வானை எனவும், அது முடிந்தபின் முத்தியின்பந் தருதலால் வெளிவீட்டின்ப மளிப்பானை யெனவும், ஆன்மகோடிகளின் இச்சாஞானக் கிரியைகளின் மறைப்பைப் போக்கவல்ல வொளியாயென்று நிற்றலால் தூண்டல் செய்யா மணிவிளக்கை எனவும், பிரமன் முதலியோர் போலாது முத்தொழிலும் ஒருங் கேயுடைமையால் தொழின்மூன்றியற்றுந் தொல்லோனை எனவும், சோம சூரியாக்கினிகளுக்கு ஒளியைத்தரும் பேரொளியாதலால் காண்டற்கரிய பேரொளியை எனவுங் கூறினர். தூண்டல் செய்யா ஒருசொன்னீர்மையன. ஆண்ட குரவனுவானை என்பது முதல் வெளிவீட்டின்ப மளிப்பானை என்பது காறும் ஒன்றற் கொன்று காரணமாய் நிற்றலால் காரண மாலையணி. யாது குறையுளது என எழுவாயும் பயனிலையும் அவாய் நிலையான் வந்தன. (எ)

கண்டகண்கள்புனல்பாயக்களிப்பாயுள்ளங்கரையழிய
விண்டமொழியினுக்குழறவிம்மிமேனிமயிர்பொடிப்பப்
பண்டைவசம்போய்ப்பரவசமாய்ப்பரமானந்தத்தெளிநறவ
முண்டுதெவிட்டாவருள்புரிந்தான்கருவைவாழுமுரவோனே.

(இ-ள்.) கருவை வாழும் உரவோன்—திருக்கருவைப் பதியோன், கண்டகண்கள் புனல்பாய—தெரிசித்த கண்கள் ஆனந்த பாஷ்பஞ் சிந்தவும், களிப்பு ஆய் உள்ளம் கரை அழிய—ஆனந்தக் களிப்பிலழுந்தி மனம்வரம்பிகந் தோடவும், விண்டமொழியின்—துதிக்கு மொழியோடு, நாகுழற—நாதடுமாற வும், மேனி விம்மி மயிர்பொடிப்ப — மேனி பூரித்துப் புளகரும்பவும், பண் டைவசம்போய்—முன்னுள்ளதன் வசம்போய், பரவசம் ஆய்—பரவசப்பட்டு, பரமானந்தம்—சிவானந்தமாகிய, தெளிநறவம்உண்டு—தெளிந்த நறவினைவாய் மடுத்து, தெவிட்டாது — தெவிட்டாதிருக்க, அருள்புரிந்தான்—திருவருள் செய்தான்.

பரமானந்த மதுவைப்பருகுதலால் மீதூர்ந்தகளிப்பை, களிப்பெனவும், கள் ளுண்டு களித்தவன் அக்களிப்பிலழுந்துதலால் ஆய் எனவும், கள்ளுண்டு களித் தவன் மனம்வரம்புகடந்துநடத்தலால் உள்ளங்கரையழிய எனவும், கள்ளுண்டு களித்தவன் பேசும்போது நாக்குழறுதல்போலக் குழறுதலால் நாக்குழற என வும், மதுப்பருகினேன் தன்வசமற்று அதன்வசப்படுதல்போலச் சிவானந்தத் தேன் பருகினோர் தம்வசம்வந்து பரத்தின் வசப்பட்டு நிற்றலால் பண்டை வசம்

போய்ப் பரவசமாய் எனவும், கள்ளுண்போன் தேக்கெறிய அது உண்டபோது தெவிட்டல்போலாது சிவானந்தமது பருகினோர் தேக்கெறிய வுண்ணினும் தெவிட்டாமையால் தெவிட்டா அருள்புரிந்தா னெனவுங் கூறினர். விண்ட இறந்தகாலப் பெயரெச்சம், விள் பகுதி, ளகரம் ணகரமாகத் திரிதல் சந்தி, டகரமெய் இடைநிலை, அ பெயரெச்ச விகுதி.

உரகாபரணத்திருமார்பு முமையொப்பனையா ளிடப்புறமுஞ்
சிரமாலிகைபும்புரிசடையும்செய்யவாயுங்கறைமிடறும்
வரதாபயமு மழுமானும்வயங்குகரமுமலரடியுங்
கருவாபுரியான்வெளிப்படுத்திக்காட்சிகொடுத்துநின்றனே.

(இ-ள்.) உரகம் ஆபரணம்திருமார்பு உம்—சர்ப்பாபரணத்தை யணிந்த திருமார்பும், உமை ஒப்பனையாள் — உமையம்மையாகிய ஒப்பனையம்பிகையின், இடப்புறம் உம்—இடப்பாகமும், சிரமாலிகையும்—அயன்முதலிய தேவர்கள் தலையாற் றொடுத்த மாலையும், புரிசடை உம்—புரியையொத்த சடையும், செய்யவாய் உம்—செவந்த வாயும், கறைமிடறு உம்— ஸ்ரீ கண்டமும், வரத அபயம் உம்—வரதாஸ்தமும் அபயாஸ்தமும், மழுமான் உம் வயங்கு கரம் உம்—மழுவும் மானும் விளங்குந் திருக்கரங்களும், மலர் அடி உம்—தாமரை மலர்போன்ற திருவடியும் ஆகிய இவற்றை, கருவாபுரியான்—திருக்கருவையில் எழுந்தருளிய இறைவன், காட்சி கொடுத்து நின்றான்—காட்சி கொடுத்துநின்றருளினன்.

வரதம் கீழமைத்த திருக்கரம், அது அடியார்க்கு வேணடியாங் கீளுவது. அபயம் மேலெடுத்த திருக்கரம், அது சரணடைந்தவரை யஞ்சலென்றருளுவது. மழுவேந்திய திருக்கரம் வலக்கரம். மானேந்திய திருக்கரம் இடக்கரம். கருவாபுரி இரண்டும் வட சொல்லாதலால் "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூ—ஆல் வருமொழிமுதல் வல்லெழுத்து மிகாது "இடையுரிவடசொலின் என்னும் புறனடைச் சூத்திரத்தால் இயல்பாயிற்று. உரக ஆபரணம் உரகாபரணம், வரதாபயம் வடமொழியில் வந்த தீர்க்கசந்தி. புரிசடைபொன்னாற் புரித்த புரிபோலுதலால் புரிசடை என்றார். செய்யபண்படியாகப்பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம். செம்மை பகுதி, ஈறு கெடுதலும், மகரமெய் யகரமெய் யாகத் திரிதலும் சந்தி, அ எச்ச விகுதி, யகத்தோற்றம் சந்தி,

நின்றநிலையுஞ்செய்தொழிலும் நினைத்தகுறியும்வழிபாடு
மொன்றுபதமும்பதங்கடந்தவுண்மைப்பொருளுமறியேனை
யின்றுன்னடியாருடன்கூட வெண்ணம்புரிந்தவினியவரு
ணன்றுநன்றுதமிழ்க்கருவைநம்பாவும்பர்நாயகனே.

(இ-ள்.) தமிழ்க்கருவை நம்பா—முத்தமிழ் விளங்கும் திருக்கருவையி லெழுந்தருளிய இறைவனே, உம்பர் நாயகனே—தேவர்களுக்குத் தலைவனே, நின்ற நிலையும்—யான் நிற்கின்ற ஆச்சிரமம் இன்னதென்பதையும், செய்தொழில் உம்—அவ்வவ்வாச்சிரமங்களில் செய்தற்குரிய செயல்களையும், நினைத்தகுறி உம்—அவ்வச்செயல்களில் நின்று கருதும் மூர்த்திகளும், வழிபாடும்—அம்மூர்த்திகளுக்கு வழிபட்டொழுகும் வழியாடும், ஒன்று பதமும் — அவ்வழி

பாட்டாற் கைகூடும் பதவிகளையும், பதம் கடந்த உவ்மை பொருள் உம்—அப்பதவிகளைக் கடந்து நின்றமூர்த்தியும், அறியேனை—சிறிது மறியாத என்னை, இன்று உன் அடியார் உடன்கூட—இப்போது உன்னடியாரோடு கூடிவாழ, எண்ணம் புரிந்த இனிய அருள்—தேவரீர் திருவுளத் தமைத்தருளிய திருவருள், நன்று நன்று—நன்றாயிருந்தது நன்றாயிருந்தது.

நின்ற, நிலைத்த என்றபெயரெச்சத்தின் நின்ற றகர தகர விடைநிலைகள் நிகழ்காலத்தின்மேலும் எதிர்காலத்தின்மேலும் நிற்றல் "றவ்வொடு கர வும்மை என்னுஞ் சூ-இல் ஈங்கே என்ற மிகையால்" உன் நின் என்பதன் மரூஉ. எண்ணம் புரிந்த ஒருசொன்னீர்மைய. நன்று நன்று வியப்புப் பொருளில் வந்த அடுக்குத்தொடர். உம்பர் உவ்விடம் இது இடவாகுபெயராய்த் தேவர்கள் மேனின்றது. (கo)

## எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

நாயகன்முகுந்தன்சததளப்பொருட்டினான்முகனென்னவீற்றிருக்குந்
தூயவன்கருவைக்களாநிழலமர்ந்தோன்றுணையடிப்புகழினைவழுத்தி
மாயிருஞாலமெடுத்தெடுத்தேத்தவரம்பெறுமதுரநாவலர்கள்
சேயிருவிசும்பிற்கற்பகநீழற்செல்வமும்வேண்டுவதிலையே.

(இ-ள்.) நாயகன்—இறைவனாகிய உருத்திரனும், முகுந்தன்—திருமாலும், சததளம் பொருட்டின் நான்முகன்—நூறுதளங்களையுடைய தாமரைப் பொருட்டில் வசிக்கும் பிரமனும் என்று கூற, வீற்றிருக்கும் தூயவன்—சிகரின் றியிருக்குஞ் விசுத்ததேகமுடையவனாகிய, களாநிழல் அமர்ந்தோன்—திருக்களா நிழலின்கண் எழுந்தருளியிருக்கின்ற இறைவனது, துணையடி புகழினை—இரண்டு திருவடிப்புகழ்ச்சியை, வழுத்தி—அடுத்துத் துதித்து, மா இரு ஞாலம்—பெரிய நிலவுலகிலுள்ளோர், எடுத்து எடுத்து ஏத்த—எடுத்துப்போற்ற, வரம் பெறும்—வரம் பெற்ற, மதுரநாவலர்கள்—இனியகவிதொடுக்கும் நாவல்லோர், சேய் இருவிசும்பில்—மிகவும் உயர்ந்த விண்ணுலகில், கற்பகநீழல் செல்வம் உம்—கற்பக நிழலில் வசிக்கும் இந்திரசெல்வத்தையும், வேண்டுவது இலை—வேண்டார்.

சிருஷ்டி திதி சங்காரமென்னு முத்தொழில்களையும் ஆன்மாக்களுய்தற் பொருட்டு நடத்தத் திரிமூர்த்திகளாய்த் தனது கிரியாதிபின் தன்மைதோன்ற நின்றானென்பது தோன்றத் தனது எண் குணங்களில் ஒன்றாகிய தூயவன் எனவும், அவனது புகழ்ச்சியைத் துதித்து வரம் பெற்று அவனது திருவடிக்கலப் பினை விரும்புவோர் திருமால் முதலிய பதங்களை வேண்டாரென்பது தோன்ற இறந்தது தழீஇய எச்சவும்மை தந்து கற்பகநீழல் செல்வமும் வேண்டுவதிலையே எனவுங் கூறினர். ஏத்த என்னும் வினையெச்சம் வரம்பெறும் என்னும்பெயரெச்சத்தைக் கொண்டு முடிதலால் அது இடைப்பிறவரல். எடுத்தெடுத்து வியப்புப் பொருளில் வந்த அடுக்குத்தொடர். ஏத்த நிகழ்கால வினையெச்சம். ஏந்து பகுதி, மாயிரு, என்னும் உரிச்சொற்றொடர் வகரவுடம்படுமெய் பெறாது யகரந்தோற்றம் பெறுதல் "இடைபுரிவடசொலின்" என்ற சூ-ஆல். (கக)

வேண்டுவதொன்றுதமியனெப்பிறப்பும்வெந்தழனரகிடைவிழினுங்
காண்டகுசிறப்பினரம்பையர்சூழக்கற்பகநீழல்வைகிடினுந்
தூண்டகுசுடரோகளாநிழலமர்ந்தசோதியேகருவைநாயகனே
யாண்டகாய்நினதுதிருவடிக்கமலத்தன்பெனுமழிவிலாப்பொருளே.

**(இ-ள்.)** தமியன் எ பிறப்பு உம் — ஓர் பற்றுக்கோடில்லாத அடியேன் எந்தச் சனனமெடுக்கினும், வேண்டுவது ஒன்று — வேண்டுவதொன்றுளது, (அது யாதென்னில்) வெம் தழல் நரகு இடை விழின் உம் — கொடிய தீயமைந்த நரகத்தில் விழுந்தாலும், காண் தகு சிறப்பின் — கண்டு மகிழுஞ் சிறப்பு வாய்ந்த, அரம்பையர் சூழ — தெய்வப் பெண்கள் சூழ்ந்து நிற்க, கற்பக நீழல் வைகிடின் உம் — கற்பகநிழற் கீழிருந்து அரசுசெய்யினும், தூண்டு அகு சுடரோ — தூண்டுந் தீபம்போலு மலவிருளையோட்டும் ஒளியே, களாநிழல் அமர்ந்த சோதியே — களாமரத்தின் கீழெழுந்தருளிய சந்திர சூரியரொளி வாய்ந்தவனே, கருவை நாயகனே — திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே, ஆண்தகாய் — அயன்முதலிய தேவர்களுக்குள் ஆண்தன்மையையுடையவனே, நினது திருவடி கமலத்து — உனது திருவடித்தாமரையின்கீழ், அன்பு என்னும் அழிவு இல்லாதபொருள் — வைக்கும் அன்பென்று சொல்லப்பட்ட அழிவில்லாத பொருளையே.

அவரவர் பக்குவத்திற்கு ஏற்ப அவரவருள்ளத்தில் தீபம்போலும் சந்திரன் போலும் விளங்குதலால் தூண்டகுசுடரோ, களாநிழலமர்ந்த சோதியே எனவும், அன்பேசிவமாதலால் அழிவிலாப்பொருளே எனவும், நரகிடை விழினும், கற்பகநீழல் வைகிடினும் அவ்வன்பே எப்பிறப்பும் வேண்டுவதொன் றென்றமையால் சாக்கிராதீதநிலையெனவும் புலப்படுதல்காண்க. தமியன்தன்மை ஒருமைப்பெயர்ச்சொல். தமி பகுதி, யகரமெய்சந்தி, அன் தன்மை ஒருமை விகுதி. ஆண்டகை ஆண்டகாய் விளிவேற்றுமை. (கஉ)

அழிவிலாப்பொருளேபழமறைக்கொழுந்தேயலையெறியமுதவாரிதியே
யொழிவிலாதருளுங்கற்பகக்கனியேயொப்பனைமைப்பரந்தெறிக்கும்
விழியினாலுருகவொருபுறமளித்தவிமலனேகருவையம்பரனே
யிழிவிலாப்புணையாம்பிறவியங்கடனின்றேறநான்பெற்றதுன்பதமே.

**(இ-ள்.)** அழிவு இல்லாத பொருளே — எக்காலத்தும் அழிதலில்லாத பொருளாயுள்ளவனே, பழமறைகொழுந்தே — தொன்றுதொட்டுள்ள வேதமென்னும் வித்தினின்றெழுந்த கொழுந்தே, அலை எறி அமுதவாரிதியே — அடியாருளத்தில் அலைவீசிப் பரந்த பேரானந்தமென்னும் அமுதசாகரமே, ஒழிவு இலாது அருளும் கற்பகம் கனியே — என்றும் நீங்காது சரணடைந்தோர்க்கு வேண்டியவற்றைத் தந்தருளும் கற்பகக்கனிபோல்பவனே, ஒப்பனை — ஒப்பனையென்னும் உமையம்மையாரது, மை பரந்து எறிக்கும் விழியின் ஆல் — மைபரவி விளங்கும் கடைக்கட் பார்வையால், உருக ஒருபுறம் அளித்த விமலனே — திருவுளமுருக வாமபாகத்தை யளித்தருளிய விமலனே, கருவை அம்பரனே — திருக்கருவையி லெழுந்தருளிய இறைவனே, இழிவு இல்லாமல் — மீளவும் ஆழுதலில்லாமல், பிறவிக்கடல் நின்று ஏற — பிறவியாகிய கடலினின்றும் நான்

கரையேற, புணையாக பெற்றது — அடியேன் தெப்பமாகப் பெற்றது, உன் பதமே—உனது திருவடியையே (யான் என்ன குறையுளேனென்றபடி.)

ஆக என்னும் உடன்பாட்டினெச்சத்தினீறும், இல்லாமல் என்னும் எதிர்மறை வினையெச்சத்தினீறும் தொக்கன. பழமறைக்கொழுந்தே, அலையெறிய முதவாரிதியே, ஒழிவிலாதருளுங் கற்பகக் கனியே சிறப்புருவகவணி. மக்கள் நோய்தீர்தற் பொருட்டுத் தாய்பத்தியமிருத்தல்போல ஆன்மாக்கள் மலநோய் தீரப்போகநுகர்தற் பொருட்டுத் திருவுளங்கொண்டன னென்பார் விழியிரு வுருகவொரு புறமளித்த எனவும், தனக்கெனவோர் பற்றிலனென்பார் விமலனெனவுங் கூறினார். (ஏக)

உன்பதமேத்தித்துன்பவேரறுக்கவுலகினிற்றிருவுடன்வாழு
மன்பதைக்கெல்லாமெய்திடுந்தரமோவலியவந்தெனைத்தடுத்தாண்டுள்
ளன்புவந்தொருவரறிந்திடாவறிவுவறிவுறுத்தருளினையதற்கு
முன்பெதுபுரிந்தேன்கருவையம்பதிவாழ்முதல்வனேமுக்கண்வானவனே.

(இ-ள்.) கருவை அம்பதிவாழ் முதல்வனே—திருக்கருவை யென்னும் திருப்பதியில் வாழும் முதல்வனே, முக்கண் வானவனே—மூன்று கண்களை யுடைய தேவனே, உன்பதம் ஏத்தி—உனது திருவடியைத் துதித்து, துன்ப வேர் அறுக்க—பிறவித் துன்பத்தை வேரோடறுக்க, உலகினில் திருவுடன் வாழும்—உலகத்தில் செல்வத்தோடு வாழும், மன்பதைக்கு எல்லாம் எய்திடும் தரமோ—மக்கட்பரப்புக்கெல்லாம் வாய்க்குந் தரமோ, என்னை—அவ்வுயிர்களுள் ஒருவனாகிய என்னை, வலியவந்து தடுத்து ஆண்டு—தானே வலிய வந்து தடுத்தடிமைகொண்டு, உள் அன்புவந்து—என்னுள்ளத்தில் அன்பு மூளக்க, ஒருவர் அறிந்திடாத அறிவு உம்—ஒருவரைப் பகைவர் அயலினர் நட்பினரொன்று பகுத்தறியாத மெய் யுணர்ச்சியையும், அறிவுறுத்தருளினை—அறிவுறுத் தருளினாய், அதற்கு—அச்செயலுக்கு, முன்பு எதுபுரிந்தேன்—முன்புயாது வழிபாடுசெய்தேன். (நானறியேனென்றபடி.)

திரு என்றது மணி பொன் நெல்முதலிய வற்றை. மக்களுள்யானொருவனுயிருக்க என்னை வலியவந்து தடுத்தாட் கொண்டது என்றரமல்லவென்பது தோன்ற எய்திடுந்தரமோ என்றும், அதன்மேல் உள்ளன்பும், இவர் உறவினர், இவர் பகைஞர், இவர் நட்பினர் எனப் பகுத்தறியாத சமத்துவமும் வருகை ஆட்கொண்டதனுல் என்பது தோன்ற அறிவுறுத்தினை என்றும், அவ்வருளுதற்குத்தான் செய்தவழிபாடு இன்னதென்பது புலப்படாமைதோன்ற அதற்குமுன் பெது புரிந்தேன் என்றும் கூறினார். வழிபாட்டால் உள்ளன்பும், சமத்துவமுந் தோன்றுதலும், இவற்றால் சிவபெருமான்வந்து ஆட்கொள்ளுதலுங் காரியமாதலால் காரணமாலையணி. வந்துசெயவெனெச் சத்திரிபு. (கஉ)

வானெரியறல்கான்மண்ணெனப்பகுத்துவரும்பெரும்பூதமோரைந்து
மானமுக்குணமுங்கரணமோர்நான்குமனைத்துமாயாதியீறின்றி
யூனுறையுடலுக்குயிருமாயுயிருக்குணர்வுமாயொன்றினுந்தோயா
ஞானநாயகனேகருவையம்பரனேநரனதிர்தாைக்குமாறெவனோ.

(இ-ள்.) வான் எரி அறல்கால் மண் என்ன பகுத்து— ஆகாயமெனவும் தீ எனவும் நீரெனவும் காற்றெனவும் மண்ணெனவும் பகுக்கப்பட்டு, வரும் பெரும்பூதம் ஐந்தும்—வாராநின்ற பெரிய பூதங்களைந்தும், ஆன முக்குணமும்—அமைந்த முக்குணங்களும், கரணம் ஓர் நான்கும்—அந்தக் கரணங்கள் நான்கும், அனைத்தும் ஆய்—இவைமுதலிய யாவுமாய், ஆதி ஈறு இன்றி—தனக்கோர் முதலும் ஈறுமில்லாமல், ஊன் உறை உடலுக்கு உயிரும் ஆய்—தசையால் நிலைபெற்ற வுடம்புக்கோருயிருமாய், உயிருக்கு உணர்வும் ஆய்—அவ்வுயிருக்கோருணர்ச்சியுமாய், ஒன்றின் உம் தோயாத—உடனாய்நின்ற அப்பொருள்களொன்றினுந் தோய்வின்றி நின்ற, ஞானநாயகனே—ஞானவடிவாகிய இறைவனே, கருவையம்பரனே—திருக்கருவையிலெழுந்தருளிய பெருமானே, நான் அறிந்து உரைக்கும் ஆறு எவன்—நான் உன்னை உணர்ந்து துதிக்கும் வகை எவ்வாறு. (அறியேனென்றபடி.)

ஒன்றினுந் தோயாது சுயம்பிரகாசமாய் நிற்குஞ் சிவமென்பது தோன்ற ஒன்றினுந்தோயாத ஞானநாயகனே எனவும், உயிர்களின்வழி நிற்குஞ் சத்தி என்பது தோன்ற அனைத்துமாய் உயிருமாய் உணர்வுமாய் எனவும், இவ்வாறு இருவகைப் பட்டுநிற்றலால் உன்னை எவ்வாறு உணர்ந்து துதிப்பனென்பது தோன்ற நானறிந் துரைக்குமாறெவனெனவுங் கூறினார். (கரு)

எவனுயிர்க்குயிராயெள்ளுமெண்ணெயும்போலெங்கணுமிடையறாநின்றா
னெவனனைத்துலகுமீன்றுகாத்தழிக்கவிறைமைசால்மூவுருவெடுத்தோ
னெவன்முதலிடையீறின்றியெஞ்ஞான்றுமீறிலாமறைமுடியிருப்பா
னவனெனைப்புரக்கத்திருக்களாநீழலமர்ந்தருள்புரிந்தகாரணனே.

(இ-ள்.) உயிர்க்கு உயிராய்—உயிர்களுக்கோருயிராய், எள் உம் எண்ணெய் உம் போல்—எள்ளும், அவ் வெள்ளில் விரவிய எண்ணெயும்போல, எங்கண் உம் இடையறாமல் நின்றான் எவன்—எவ்விடத்தும் இடையறாமல் நின்றவன் எவன், அனைத்து உலகு உம்—எல்லா வுலகத்தையும், ஈன்று காத்து அழிக்க—தந்து பாதுகாத்துப் போக்க, இறைமை சால்—தலைமையமைந்த, மூ உரு எடுத்தோன் எவன்—பிரமன் முதலிய மூன்று திருவுருவங்களையுங் கொண்டருளினவன் எவன், முதல் இடை ஈறு இன்றி—தனக்கோர்முதலும் இடையும் இறுதியுமில்லாமல், எ ஞான்றும்—எந்நாளும், ஈறு இல்லாத மறைமுடி இருப்பான் எவன்—இறுதியில்லாத வேதசிரசில் இருப்பவன் எவன், அவன்—அவனே, என்னை புரக்க—என்னைப்பாதுகாக்க, திருக்களாநீழல் அமர்ந்தருள் புரிந்த—அழகிய களாநீழலில் அமர்ந்தருளிய, காரணன்—காரணனுவான்.

அவன் எழுவாய். காரணன் பயனிலை. தைலம் எள்ளின் உள்ளும் புறம்பும் இருத்தல்போல எப்பொருளினுள்ளும் புறம்புமிடையறாது நிற்றலால் எள்ளுமெண்ணெயும்போல் எங்கணுமிடையறா நின்றான் என்றார். இடையறாமல் என்னும் எதிர்மறை வினைஎச்சம் இடையறா என ஈறு தொக்குநின்றது.

காரணமேதென்றறிகிலேன்றமியேன்கற்றலமனத்தினைக்கரைத்து
வாரணிமுலையாளொப்பனையோடுமெழவிடைமேலெழுந்தருளி

நாரணனறியாத்திருவுருக்காட்டிநல்லருள்சுரந்துவாழ்வித்தான்
பூரணன்கருவைக்களாநிழலமர்ந்தபுண்ணியன்விண்ணவர்க்கிறையே.

(இ-ள்.) பூரணன் — எங்கும் நிறைந்தவனும், கருவை களா நிழல் அமர்ந்த—திருக்கருவையில் களாமரத்தினிழலில் எழுந்தருளிய, புண்ணியன்-புண்ணியனும், விண்ணவர்க்கு இறை—அயன் முதலிய தேவர்களுக்கு இறைவனுமாகிய பெருமான், தமியேன் — தனியேனது, கல்தலம் மனத்தினை—கற்பாறையையொத்த கடினமாகிய என் மனத்தை, கரைத்து — மெழுகுபோல் இளகச் செய்து, வார் அணி முலையாள் ஒப்பனை ஓடும்—கச்சணிந்த தனத்தையுடைய உமையம்மையோடு, மழ விடை மேல் எழுந்தருளி—இளமை தங்கிய இடப வூர்திமே லெழுந்தருளி, நாரணன் அறியாத திருவுருகாட்டி—திருமாலா லறியப்படாத திருவுருவத்தைக் காட்டி, நல் அருள் சுரந்து வாழ்வித்தான்—நல்ல திருவருள் செய்து வாழ்வித்தனன், (அதற்கு) காரணம் ஏது என்று அறிகிலேன்—என்னிடத்திலுள்ள காரணம் யாதென்று சிறிது மறியேன்.

கரைத்து இறந்தகாலப் பிறவினை வினையெச்சம். கரை பகுதி, தன்வினையில் மெல் லொற்றுமிகுந்து கரைந்து எனவரும். நாரணன் நீரில் வசிப்போனென்னும் பொருண்மே னிற்றலால் காரணப் பெயர். (கஎ)

விண்ணவர் மகுடகோடி வீழ்ந்திறைஞ்சும் விரைமலர்ச் சேவடிமிசையே
யுண்ணிறைகாதலன் புநின் றுருகவுலையிடுமெழுகெனவுருகிக்
கண்ணினீர்வாரக்கருவையம்பரனேகடவுளேயென்றெடுத்தேத்தப்
புண்ணியம்புரிந்தேனிப்பெரும்பேறுபூதலத்தெவர்பெறுவாரே.

(இ-ள்.) மகுடகோடி விண்ணவர் — கிரீடங்களை யணிந்த அளவிறந்த தேவர்கள், வீழ்ந்து இறைஞ்சு உம்—தண்டாகாரமாகவீழ்ந்து வணங்கும், விரை மலர் சேவடி மிசை — வாசமிக்க தாமரைமலரையொத்த செவந்த திருவடியின் மேல், உள்—எனதுள்ளமானது, நிறை காதல்அன்பு — நிறைந்த ஆசையோடும் அன்போடும், நின்று உருக — நிலைபெற்றுஇளக, உலை இடுமெழுகு என்ன உருகி—கொல்லுலையிற் காய்ச்சிய மெழுகைப்போல உருகுதலால், கண்ணில் நீர் வார—கண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ்சிந்தவும், கருவை பரனே—திருக்கருவையி லெழுந்தருளிய பெருமானே, கடவுளே என்று எடுத்து ஏத்த— எல்லாப் பொருளையுங் கடந்து நின்றவனேஎன்று எனது நாத்துதிக்கவும், புண்ணியம் புரிந்தேன்—புண்ணியஞ்செய்தேன், இ பெரும்பேறு—இந்தப் பெரிய பயனை, பூதலத்து — நிலவுலகத்தில், பெறுவார் எவர்—அடைவார் எவர், (யானறியேனென்றபடி.)

கருவையம்பரனே அம் சாரியை. உருகி காரணப் பொருளில்வந்த இறந்தகாலவினை எச்சம். உருகு பகுதி. மன முருகுதலால் கண்ணீர் வாரலும் நாத்துதித்தலும் நிகழ்தலால் இது காரண மாலையணி. கடவுள் தொழிலாகுபெயராய் இறைவன்மேனின்றது. கட பகுதி, வகரமெய் சந்தி, உள் புடைபெயர்ச்சி விகுதி. (கஅ)

பெறுவதுநினதுதிருவடிக்கமலம்பேசுவதுன்றிருநாம
முறுவதுநினதுதிருவுருவெளியாமுணர்வதுன்னருளலாதுண்டோ

மறுவறுசிறப்பின்மாசிலாமணியேவரதனேசிவபெருமானே
குறுமுனிபரவக்களாநிழலமர்ந்தகொடிமதிற்கருவையாதிபனே.

(இ-ள்.) மறுவு அறு சிறப்பின்—குற்றமற்ற சிறப்பினையுடைய, மாசு இல்லாத மணியே—கழுவிய மாணிக்கமே, வரதனே—அடியார்களுக்கு வேண்டியாங்குக்கொடுப்பவனே, சிவபெருமானே—சிவபிரானே, குறுமுனி பரவ—அகத்யன் வணங்க, களாநிழல் அமர்ந்த — திருக்களா நிழலிற்கி ழெழுந்தருளிய, கொடி மதில் — கொடி கட்டிய மதில் சூழ்ந்த, கருவை ஆதிபனே — திருக்கருவைப்பதியில் வாழும் இறைவனே, பெறுவது — அடியேன் பெறக்கடவது, நினது திருவடிக் கமலம்—உனது திருவடியாகிய தாமரையையே, பேசுவது—நான் பேசக்கடவது—உன் திருநாமம்—உனது திருநாமத்தையே, உறுவது—நான் அடையக்கடவது, நினது திருவுருவெளி ஆம்—உனது திருவுருவாகிய சிதாகாசத்தையே, உணர்வது — யானறியக்கடவது, உன் அருள் — உனது திருவருளையே, அல்லாது உண்டோ — இவை யல்லாது வேறுண்டா, (இல்லை என்றபடி.)

அம் அசை நிலை இடைச்சொல். ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு. பெறுவது வியங்கோள் வினைமுற்று. பெறு பகுதி, வகரமெய் சந்தி, அ சாரியை, து வியங்கோள் விகுதி. பேசுவது, உறுவது, உணர்வது என்பவையும் அது. துவ்விகுதி வியங்கோட் பொருளில் வருதல். "ஆறுவதுசினம்" என்பதனு லுணர்க.

ஆதவன்மதிபாரனல்வெளிபுனல்காலருமறையெச்சனென்றெட்டுப்
பேதமாமுருவாயருவமாய்நிறைந்தபெற்றியாலுற்றுநானுன்னை
யேதினுலுணர்வேனுணருமாறருளாயிளநிலாப் பசுங்கொழுந்தணிந்த
சோதியேகருவையொப்பனைகளபத்துணைமுலைதழுவுகாதலனே.

(இ-ள்.) இள நிலா பசும் கொழுந்து அணிந்த — இளஞ்சந்திரனை யணிந்த, சோதியே—பிரகாச வடிவாயுள்ளவனே, கருவை ஒப்பனை—திருக்கருவைப் பதியி லெழுந்தருளிய உமையம்மையின், களபம் துணை முலை தழுவு காதலனே—கூட்டுவர்க்கத்தை யணிந்த இரண்டு தனங்களையும் தழுவும் இறைவனே, ஆதவன் மதி—சூரியனுஞ் சந்திரனும், பார் அனல் வெளி புனல் கால்—பிருதிவியும் தீயும் ஆகாயமும் அப்புவும் வாயுவும், அருமறை எச்சன் என்ற—அரிய வேதங்கள் கூறும் ஆன்மாவென்று சொல்லப்பட்ட எட்டுவகைப்பட்ட திருவுருவமாகியும், அருவமாய் நிறைந்த பெற்றி ஆல்—அருவமாகியும் நீநிறைந்துள்ள தன்மையால், நான் உற்று உன்னை—நானடைந்துன்னை, ஏதினுல் உணர்வேன்—யாது காரணங்கொண்டு உன்னையறிந்து வணங்குவேன், உணரும் ஆறு அருளாய்—நான் அறியும் வண்ணம் அருள்செய்வாய்.

இந்திரிய முதலிய தத்துவங்களுக்கு ஆன்மா சேஷித்து நிற்றலால் ஆன்மாவை எச்சனென்றார். கண்களுக்குப் புலப்படும் எண்வகைப் பட்ட திருவுருவமும், கண்களுக்குப் புலப்படாத அருவமும் இறைவனுடைமையால் இறைவனை எவ்வாறுணர்ந்து வணங்குவே னென்பார் உன்னை ஏதினுலுணர்வேன்

எனவும், ஆன்மாக்களுக்குப் பாகம் வருவித்தற்பொருட்டுத் திருவருளோடு கலந்தவனென்பார். ஒப்பனைகள பத்துணைமுலை தழுவுகாதலனெனவுங் கூறினர்.

### அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

காதலுற்றிடமனநிலைபெற்றிடக்கனிந்திடக்களிகூரப்
போதமுற்றிடயானெனதென்றிடும்புலைச்செருக்கறமாற
நாதன்முத்தமிழ்க்கருவையம்பரனெனநாத்தழும்புறவோதி
யோதிமற்றுநான்பெற்றதையிற்றெனவுரைத்திடமுடியாதே.

(இ-ள்.) காதல் உற்றிட—அன்பு மீதூரவும், மனம் நிலை பெற்றிட—(அதனால்) எனது மனம் திருவருள் நிலையினிற்கவும், கனிந்திட —(அதனால்) அம்மனங் கனியவும், களிகூர — (அக்கனிவால்) ஆனந்தக் களிப்புக்கைமிகவும், போதம் உற்றிட—அக்களிப்பால் சிவஞானங் கைகூடவும், யான் எனது என்றிடும்—(அச்சிவஞானத்தால்) யானெனதென்றகங்கரிக்கும், புலை செருக்கு அறமாற— கீழ்மையான ஆணவ மலச் செருக்கு மிகவுந்தேயவும், நாதன்—இறைவனே, முத்தமிழ் கருவையம் பரன் என்ன — இயலிசை நாடகமென்னு முத்தமிழ் வழங்குந் திருக்கருவையி லெழுந்தருளிய பரனே என்று, நாதழும்பு உற ஓதி ஓதி—நாதழும்பேறத் துதித்துத்துதித்து, நான் பெற்றது ஐ—நான் பெற்றப் பயனை, இற்று என்ன உரைத்திட முடியாது, இத்தன்மைத்தென்று நானெடுத்துக் கூற, முடியாது—வரையறைப்படாது.

நான் பெற்ற பலன் பெரிதென்பார் பெற்றது இற்றென உரைத்திட முடியாது என்றார். யான் எனது என்றது அகப்பற்று புறப்பற்று என்னு மிரண்டனையும். ஓதி ஓதி உவகைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். இற்றுபண்பு குறித்து வந்த இடைச்சொல் லடியாகப் பிறந்த ஒன்றன்பால் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. இ சுட்டிடைச்சொற் பகுதி. றகரமெய் சந்தி, று ஒன்றன்பால் விகுதி. காதலுற்றிட என்பது முதல் செருக்கறமாற என்பதுகாறும் ஒன்றற்கொன்று காரணமாய் நிற்றலால் காரணமாலை யணி. (உக)

முடிகடந்ததுககனகோளகைநெடுமுகட்டினுக்கப்பாலு
மடிகடந்ததுபாதலமேழினுக்கப்புறத்தனலோடுந்
துடிகடந்தகைகடந்தனதிகந்தமாறொல்புகழ்க்களாவீசன்
பொடிகடந்தபான்மேனியன்றிருநடம்புகலுதற்கெளிதாமோ.

(இ-ள்.) ககனகோளகை நெடுமுகட்டினுக்கு அப்பாலும்—அண்ட வட்டத்தினெடிய சிகரத்திற்கு அப்புறத்தும், முடி கடந்தது—திருமுடிகடந்தது, பாதலம் ஏழினுக்கு அ புறத்து—பாதலவுலகம் ஏழினுக்கப்பால், அடி கடந்தது—திருவடி சென்றது, திகந்தம்—திக்கந்தத்தில், அனல் ஓடு உம் துடிகள் தந்த கை கடந்தன—யாகாக்னியோடும் உடுக்கையணிந்த திருக்கரம் சென்றன, (ஆதலால்) தொல்புகழ் களா ஈசன்—தொன்றுதொட்டுள்ள புகழ்வாய்ந்த திருக்களாநீழலில் எழுந்தருளிய வீசனும், பொடிகடந்தபால் மேனியன்—விபூதியையணிதலால் வெள்ளிய திருமேனியையுடையனுமாகிய இறைவனது, திருநடம்புகலுதற்கு எளிது ஆம் ஓ-அவனது திருநடனத்தின் பெருமையை யெடுத்துக் கூறுதற்கு நம்மா லெளிதாகுமா. (அரிதாமென்றபடி.)

தேவதாருவனமுனிவரேவிய யாகாக்கினியையும் தமருகத்தையும் அவற்றின் வலியடக்கிக்கொண்டமையினால் அனலோடுந் துடிகடந்த கை என்றார். சிவபெருமான் திருநடனம் புரிதற்குக் கொண்ட திருவுருவின் ஓக்கத்தை "வேதண்டமேபுயங்கள் விண்ணே திருமேனி, மூதண்டகூடமே மோலியாம், கோதண்டம்-ஒற்றைமாமேரு உமாபதியார் நின்றாடப் - பற்றுமோசிற்றம்பலம்" என வருஞ்செய்யுளாலுணர்க. ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. (உஉ)

எளியன்புன்றொழிற்பாதகன்மாதரா ரிளமுலைவளம் வேட்ட
களியன்றீக்குணவஞ்சகனெஞ்செனுங்கருங்கலைக்கனைவித்து
வெளியில்வந்துநின்பொன்னடிசென்னியின் மிலைந்தெனையாட்கொண்ட
வளிகனிந்தநின்னருட்குணமுரைப்பதாரருங்களாவமர்ந்தோனே.

(இ-ள்.) புன்றொழில் எளியன்—புல்லிய தொழில்செய்தற்கு எளியனும், பாதகன்—மாபாதகனும், (ஆதலால்) மாதரார் இளமை முலை வளம் வேட்ட களியன்—பெண்களது இளமைவாய்ந்த தனபோகத்தை விரும்பிய மயக்கத்தையுடையவனுமாகிய எனது, தீ குணம்வஞ்சகம் நெஞ்சு என்னும் கரும் கல்லை—கொடுங்குணமும் வஞ்சகமும் நிறைந்த மனமென்னுங் கரிய கல்லை, கனைவித்து-கனையச்செய்து, வெளியில் வந்து—நிலவுலகின்மேல் திருவுருக்கொண்டு வந்து, நின் பொன் அடி—நினது பொன்போலும் அரிய திருவடியை, சென்னியின் மிலைந்து—எனது தலையிற்சூட்டி, என்னை ஆட்கொண்ட—என்னை யடிமைகொண்ட, அளிகனிந்த நின் அருள்குணம் — உயிர்கள்மேலன்புகனிந்த உனது திருவருட்குணத்தை, உரைப்பது ஆர்— எடுத்துச் சொல்வதற்குயாருளர், அரும் களா அமர்ந்தோனே— அரிய களாமரத்தினிழலில் எழுந்தருளிய இறைவனே.

கருமை இழிவுமேனின்றது. கள் உண்டபின் மயக்கந் தரும், இதுபெண்கள் போகம் விரும்பியபோதே மயக்கந்தருதலால் இளமுலைவளம்வேட்டகளியனெனவும், தீக்குணமும் வஞ்சகமுமே நெஞ்சுருக்கொண்டதென்பார் தீக்குணவஞ்சக நெஞ்செனுங் கல்லை எனவும், அதைக் கனைவித்தல் நின்னருளாலன்றி ஏனையவற்றால் முடியாதென்பார். வெளியில் வந்தெனவும், அத்திருவருளை என்னிடத்திற் பதித்தனை என்பார் நின் பொன்னடி சென்னியின் மிலைந்தெனவும் மானைக்காட்டி மானைப் பிடித்தல்போல மானிடத்திருவுருக்கொண்டு என்னை ஆட்படுத்தினையென்பார். வெளியில்வந்தாட்கொண்டெனவும், இவை நினது திருவருட்செயலென்பார் அளி கனிந்த நின்னருட்குணம் எனவுங் கூறினர். வேட்ட இறந்தகாலப் பெயரெச்சம். வேள் பகுதி, டகரமெய் இடைநிலை, ளகரம் டகரமாகத்திரிதல் சந்தி, அ பெயரெச்சவிகுதி. (உங)

அமரர்மாதவர்முனிவரர்திரண்டுநின்றனுதினந்தொழுதேத்துந்
தமரநூபுரப்பொற்சரணேத்திடத்தமியனுக்கருள்செய்தான்
குமரனாலருஞ்சூர்ப்பகைதடிந்தவன்கொள்ளைவண்டினமார்க்கும்
கமலவாவியும்பொங்கருஞ்சூழ்திருக்கருவையெம்பெருமானே.

(இ-ள்.) குமரன் ஆல் அரும் சூர்ப்பகை தடிந்தவன்—முருகக் கடவுளால் அயன்முதலிய தேவர்களால் வெல்லுதற்கரிய சூரபத்மாவாகிய பகை

வனை வேரோடறுத்தவனும், வண்டினம்கொள்ளை ஆர்க்கும்—வண்டின் சாதிகள் தேனைக் கொள்ளைகொண்டிசைக்கும், கமலம்வாவி உம் பொங்கர் உம்—தாமரை களையுடைய தடாகங்களும் சோலையும், சூழ்திருகருவை எம் பெருமான்-சூழ்ந்த திருக்கருவைப்பதியி லெழுந்தருளிய எமது பெருமானுமாகிய இறைவன், அமரர்—தேவர்களும், மாதவர்—பெரிய தவத்தையுடையவரும், முனிவரர்—முனிசிரேஷ்டர்களும், திரண்டு நின்று — கூடிநின்று, தொழுது ஏத்தும்—எல்லாரும் துதித்து வணங்கும், தமரம் நூபுரம்—ஒலிவாய்ந்த வேதச்சிலம்பினை யணிந்த, பொன் சரண் ஏத்திட—பொன்போலும் அரிய திருவடியைத் துதிக்க, தமியனேற்கு அருள் செய்தான்—நாயிற் கடைப்பட்ட தமியேனாகிய எனக்கும் அருள் செய்தான்.

அமரர் இறப்பில்லாதவர். மாதவர் நிலவுலகில் மக்களாய்ப் பிறந்து தவத்தில் மேம்பட்டோர். முனிவரர் தேவரைப் படைத்தற்கு முன் பிரமனால் சிருட்டிக்கப்பட்டவர். இவர்களால் வணங்கும் திருவடியினருமைதோன்ற பொற்சரணெனவும், நானும் வணங்க அருளிய திருவருளின் அருமைதோன்ற ஏத்திடத் தமியனேற் கருளினனெனவுங் கூறினர். ஏத்திட நிகழ்காலவினையெச்சம். ஏத்து பகுதி, இடு பகுதிப்பொருள் விகுதி உகரக்கேடு சந்தி, அனைத்தும் ஓர் பகுதி. அ எச்சவிகுதி. (உச)

> கருவையம்பரனம்பரமேனியன்கடவுளர்காணாத
> வுருவையம்பிகைபெறப்பகுந்தளித்தவனொன்னலர்புரநீற்றுப்
> பெருவையம்பெனக்கண்ணனையுடையனென்பிழைபொறுத்தழியாத
> திருவையம்புவிச்சிறப்பொடுமளித்தவன்திருக்களாவுடையோனே.

(இ ள்.) கருவை அம்பரன் — திருக்கருவையி லெழுந்தருளிய அழகிய பரமனும், அம்பரமேனியன் — சிதாகாசமே திருமேனியாகவுடையவனும், கடவுளர் காணாத உருவை—அயன் முதலிய தேவர்கள் கனவிலுங் காணாத தனது திருமேனியை, அம்பிகை பெற—உமையம்மை பெற, பகுந்து அளித்தவன்—பாகஞ்செய்து கொடுத்தவனும், ஒன்னலார் புரம் நீற்று—பகைவர் திரிபுரங்கள் நீறுபட, பெருவை அம்பு என்—பெருமைவாய்ந்த கூரிய அம்பாக, கண்ணனை உடையன்—திருமாலை அம்பாக வுடையவனும், என் பிழை பொறுத்து—தன் திருவடிக்குப் பிழைத்த எனது பிழையைப் பொறுத்து, அழியாத திருவை—அழியாத சிவஞானச் செல்வத்தை, அம்புவி—நிலவுலகில், சிறப்பொடும் அளித்தவன்—கருணையால் தந்தருளினன், (அவனே) திருக்களா உடையவன்—இத் திருக்களா நிழலை யுடைய இறைவன்.

பகுந்து பகு இறந்தகாலத்தின் வினையெச்சம். பகு பகுதி, நகரமெய்சந்தி தகரமெய் இடைநிலை, உ எச்ச விகுதி. இது தன்னொ டொற்றுமையுடைய பொருள்மேல் வரும். பகுத்து என வருதல் தன்வினை. அது தன்னோடு வேற்றுமைப் பொருண்மேல் வரும். (உரு)

> உடையனொன்றுதம்மக்களைமனைவியையொக்கலைப்பெருவாழ்வை
> யடையகல்குசீர்ச்செழும்பொருண்முதலியவனைத்தையுநினைப்பாரோ

விடையின்மேல்வருதிருக்களாநாயகன்விரைமலர்ச்செழுங்கொன்றைத்
தொடையல்வேணியானடியவர்க்கன்பொடுதொண்டுசெய்மனத்தாரே.

(இ-ள்.) விடையின்மேல் வரு — அடியவர்க்குக் காட்சி தந்தருள இடப ஊர்தியின்மேல் எழுந்தருளும், திருக்களாநாயகன்—திருக்களாநிழலில் எழுந்தருளிய இறைவனும், விரை—வாசனை வாய்ந்த, செழும் கொன்றைமலர் தொடையல்—தளிர்த்தகொன்றைமலராற்றொடுத்த மாலையை யணிந்த, வேணியான்—சடாமுடியையுடையவனுமாகியசிவபெருமானது, அடியவர்க்கு — அடியார்களுக்கு, அன்பு ஒடுதொண்டு செய்மனத்தார்—அன்போடு வழிபாடு செய்யும் மனத்தையுடையவர், தம்மக்களை—தமதுமக்களையும், மனைவியை—மனையாட்டியையும், ஒக்கலை—சுற்றத்தாரையும், உடையர் என்று—தமக்கோர் பற்றுக் கோடாயுள்ளாரென்று கருதி, பெருவாழ்வை—பெரியவாழ்க்கையை, அடைய நல்கும்—ஒருசேரத்தரும், சீர்—சிறப்புவாய்ந்த, செழும் பொருள் அனைத்தை உம்—செழித்த செல்வப்பொருள் முழுமையும், நினைப்பர் ஓ—ஒருபொருளென்றுகருதுவாரோ. (கருதாரென்றபடி.)

ஒடு உருபு கலப்புறு பொருளில்வந்த உடனிகழ்ச்சிப் பொருட்டு. மக்கள் காரணப்பெயர் மக (பிள்ளை) பகுதி, ஈறு கெடுதல் சந்தி, கள் பலர்பால் விகுதி. ஒக்கல் தொழிலாகுபெயராய் உறவினர்மேனின்றது. ஓ உவம வுருபிடைச்சொற் பகுதி, கு சாரியை, அல் புடைபெயர்ச்சி, ககரத்தோற்றமும் உகரக் கேடு சந்தி. (உசு)

மனத்தையான்றினம்வணங்குவன்மின்னெனவைகலுநிலையற்ற
தனத்தைவாழ்வினைநிலையெனமதித்துழலாசையிற்றளராதே
புனத்துழாய்முகில்போற்றிடுங்கருவைவாழ்புண்ணியன்பாலற்காச்
சினத்தகாலனையுதைத்தவன்பங்கயச்சேவடிவணங்கென்றே.

(இ-ள்.) மின் என்ன—தோன்றிமறையும் மின்னலைப்போல, வைகல் உம் நிலை அற்று—என்றும் நிலையற்ற, தனத்தை—பொருளினையும், வாழ்வினை—வாழ்க்கையையும், நிலை என்னமதித்து—நிலையாகக்கருதி, உழல் ஆசையின்—சுழன்று திரியும் விருப்பத்தால், தளராது ஏ — தளர்ச்சியடையாது, புனம்—முல்லை நிலத்திலுள்ள, துழாய் முகில் போற்றிடும் — துளபமாலை யணிந்ததிருமால் வணங்கும், கருவைவாழ் புண்ணியன்—திருக்கருவைப்பதியில் வாழும்புண்ணிய வடிவாயுள்ளவனுகிய, பாலற்கு ஆக—மார்க்கண்டேய முனிவருக்காக, சினத்தகாலனை உதைத்தவன்—கோபித்த இயமனை உதைத்த இறைவனது, பங்கயம்சேவடி வணங்கு என்று—தாமரை மலரையொத்த திருவடியை வணங்காயென்று, மனத்தை—எனது மனத்தை, யான் தினம் வணங்குவன்—யான் நாடோறும் வணங்கிக் குறையிரப்பேன்.

மிருககண்டேயமுனிவரது புத்திரராகிய மார்க்கண்டேயர் தந்தைதாயரது கவலையொழித்தற்குச் சிவபெருமானைப் பூசித்துநீடித்த ஆயுள்பெறும் வண்ணம் அனுஞைபெற்றுக்காசித்திருப்பதியிற் பூசிக்குங்காலையில் உருத்து வந்தகாலனை மதியாமையை, அவனுக்கிப்பாசம்வீசிய காலையில் சிவபெருமான் திருவடியை

நீட்டியருளினன் என்பது புராணவரலாறு. அமரர் இறப்பில்லாதவர். சினத்த பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம். சினம் பகுதி, அத்துச் சாரியை, நிலைமொழியீற்று மகரம் "மவ்வீறொற்றழிந்து" என்னுஞ் சூ-ஆல் நிலைமொழியீறு கெட்டு "அத்தினகர மகரமுனையில்லை" என்ற சூ-ஆல். வருமொழிமுதல் உயிர் கெடுதலும் சாரியை யினீற்றுயிர் கெடுதலுஞ் சந்தி, அ எச்ச விகுதி. திருவடி வணங்கென்றே தினம் மனத்தை வேண்டுவன் என இறுதியினின்ற மொழியும் முதலினின்ற மொழியும் தம்முள் பொருளேக் குடைமையால் பூட்டுவிற் பொருள்கோள். "எழுவாயிறுதி" என்னுஞ் சூ-ஆல் அறிக. (உஎ)

வணங்கெனத்தலையளித்தனைநின்புகழ்வாழ்த்தெனநாத்தந்தா
யிணங்கெனத்திருக்கூட்டமுங்காட்டினையினிப்பெறும்பேறுண்டோ
துணங்கையிட்டுவெம்பேய்க்கணங்குதித்திடச்சுடலையாடரங்காகக்
கணங்கள்போற்றநின்றாடியகுழகனேகருவையெம்பெருமானே.

(இ-ள்.) வெம்பேய் கணம் — கொடியபேய்க் கூட்டங்கள், துணங்கை இட்டு—தம்முள் கைகோத்து, குதித்திட—குதிக்க, சுடலை—சர்வசங்கால வெளியாகிய மயானம், ஆடு அரங்கு ஆக—ஆடும் நாடகசாலையாக, கணங்கள் போற்றி நின்று—சிவகணங்கள் துதிக்க நின்று, ஆடிய குழகனே—ஆடிய பேரழகுடையவனே, கருவைஎம்பெருமானே—திருக்கருவையிலெழுந்தருளிய வெமதுபரமனே, வணங்குஎன தலை வைத்தனை-உன்னை வணங்கதலைதந்தாய், என்புகழ் வாழ்த்து என்ன—எனது புகழை வாழ்த்தா யென்று, நாதந்தாய்—நாவைத்தந்தாய், இணங்கு என்ன—இவர்களோடு கூடாயென்று, திருக்கூட்டம் உம் காட்டினை—அடியவர் திருக்கூட்டத்தையுங் காட்டியருளினுய், இனி பெறும்பேறு—இவையன்றி இனியான் பெறும்பயன், வேறு உண்டு ஓ—வேறுளதோ. (இல்லையென்றபடி.) (உஅ)

பெருமைசான்றநின்றிருவெழுத்தைந்துமேபெரும்புணையெனப்பற்றி
யருமைசான்றவிப்பவக்கடல்கடக்குமாறுசையிற்றுணிகின்றேன்
இருமையின்பமுமடியவர்க்கூட்டிடுமிறைவனேயெம்மானே
தருமமூர்த்தியேயொப்பனைவநமுலைதழுவுதிண்புயத்தானே.

(இ-ள்.) இருமை இன்பம் உம்—இம்மை இன்பத்தையும் மறுமையின் பத்தையும், அடியவர்க்கு ஊட்டிடும்—தன்னையடைந்த அடியார்க்கு ஊட்டும், இறைவனே—இறையவனே, எம்மானே—எமது பெருமானே, தருமமூர்த்தியே—தருமத்தையே திருவடிவமாகக் கொண்டவனே, ஒப்பனைவநமுலை—ஒப்பனை யென்னுந் திருநாமம் வாய்ந்த உமையம்மையினது சந்தனக்கோலம் அமைந்த தனத்தை, தழுவுதிண் புயத்தானே—தழுவிய திண்ணிய புயத்தை யுடையவனே. (உக)

தானையெண்டிசைமுக்கணுமுச்சுடர்தழைசடைகதிர்க்கற்றை
மேனிவெங்கனலாடிடமுலகெலாம்வெந்தொழிபுறங்காடு
சேனைவெங்கொலைப்பேய்க்கணமென்னினத்திருக்களாவமர்ந்தோனை
வானநாடரும்பூதலத்தடியரும்வணங்குவதெவ்வாறே.

(இ-ள்.) தானை எண்திசை—திருவரையிலுடுக்கும் ஆடை எட்டுத்திக்குகள், முக்கண்ணும் முச்சுடர் — திரிநேத்திரங்களும் சோமசூரியாக்கினிகள், தழை சடை—தழைந்த சடை, கதிர்க்கற்றை—சூரியனுடைய கிரணநெருக்கங்கள், மேனி வெங்கனல்—திருமேனி கொடிய நெருப்பு, ஆடு இடம்—ஆடியருளும் திருவரங்கம், உலகு எல்லாம் வெந்து ஒழிபுறங்காடு—பிரமனுலக முதலிய வுலகங்களை யெல்லாம் தமது திருவருளால் வெந்தொழியும் மயானம், சேனை — சூழ்ந்த சேனைகள், வெம்கொலை பேய்கணம்—கொடிய கொலைத் தொழிலையுடைய பேய்க்கூட்டங்கள். என்னில்—ஆயின், அதிருக்களா அமர்ந்தோனை—அத்திருக்களாநிழலில் எழுந்தருளினவனை, வானநாடர் உம்—விண்ணுலகத்தவரும், பூதலத்து அடியர் உம் — நிலவுலகிலுள்ள அடியவரும், வணங்குவது எவவாறு—வணங்குவது எவ்வகை. (௯0)

### கலிவிருத்தம்.

எவ்வமுற்றதிரிமலமிற்றது
செவ்விஞானத்திருக்கண்டிறந்தது
கொவ்வைவாயுமைகொண்கன்கருவையான்
பௌவநஞ்சமுண்டான்கழல்பாடவே.

(இ-ள்.) கொவ்வைவாய்—கொவவைக் கனிபோன்ற வாயையுடைய, உமைகொண் கன்-உமையம்மைக்குத்தலைவனும், கருவையான்-திருக்கருவைப் பதியிலுள்ளவனும், பௌவ நஞ்சம் உண்டான்—கடலிற்றோன்றிய நஞ்சினை அமுதாகக்கொண்டருளினவனும் ஆகிய இறைவனது, கழல்பாட-திருவடியைப் புகழ்ந்துபாட, எவ்வம் உற்ற—துன்பமிகுந்த, திரிமலம்—ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மங்களும், இற்றது—ஒழிந்தது, செவ்விஞானம் திருகண் திறந்தது—அழகிய ஞானக்கண் திறந்தது,

பாடஇற்றதுஎனவும், இற்றதால் ஞானக்கண்திறந்ததெனவும், வருதலால் காரணமாலையணி. கொண்கன், கருவையான், நஞ்சமுண்டான் ஒருபொருள் மேல்வந்தபலபெயர். திருமாலாணையால்தேவாசுரர்கள் அமுதம்பெறவேண்டித் திருப்பாற் கடலைக்கடந்தகாலையில் நஞ்சந்தோன்றி எவ்வுலகையும் எரிக்க அதற்குஅஞ்சிய தேவாசுரர்கள் சிவபெருமானைச் சரணடைய அந்நஞ்சினை உண்டருளினனென்பது புராணவரலாறு. (௯க)

பாடினேன்புகழ்ப்பங்கயச்சேவடி
சூடினேன்கருவாபுரிச்சோதியை
நாடினேனவனனெனும்வேறறக்
கூடினேனடியார்திருக்கூட்டமே.

(இ-ள்.) புகழ்பாடினேன்—இறைவனது புகழை எடுத்துப் பாடினேன், பங்கயம் சேஅடி சூடினேன்—தாமரைமலரை யொத்த செவந்த திருவடியைத் தலையிற்சூடினேன், கருவாபுரி சோதியை நாடினேன் — திருக்கருவாபுரியி லெழுந்தருளிய சிவபெருமானைத் தேடினேன், அவன் நான் என்னும் வேறு அற—அவன் நான் என்று கருதும் பேதமற, அடியார் திருக்கூட்டம் கூடினேன்—அடியவர் திருக் கூட்டத்தோடு கலந்திருந்தேன்.

பாடினேன் புகழென்றதனால் வாக்கின் வழிபாடும், பங்கயச் சேவடி சூடினேன் என்றதனால்-காயத்தின் வழிபாடும், கருவாபுரிச் சோதியை நாடினேன் என்றதனால் மனத்தின் வழிபாடும் கூறி, அவற்றால் விளைந்த பயன் அடியவர் திருக்கூட்டக் கலப்பென்பார் கூடினேனடியார் திருக்கூட்டமெனவும், அதனால் பசுத்துவங் கழன்று சிவத்துவம் வந்ததென்பார் அவனெனெனும் வேறற எனவுங் கூறினர். இதுகாரண மாலையணி. பங்கயம் சேற்றில் முளைப்பதென்னும் பொருண்மேனிற்றலால் காரணப்பெயர். (கஉ)

கூட்டமிட்டகருவிகுலைந்திடச்
சேட்டையற்றுள்ளறிவுசிதையுமு
னூட்டமூன்றுடைநாதன்முகலிங்கன்
றாட்டுணைக்கமலந்தலைக்கொண்மினே.

(இ-ள்.) கூட்டம் இட்ட கருவி—கூடிய சத்தமுதலிய தத்துவங்கள், குலைந்திட—தத்தம் நிலையினின்று தடுமாற, சேட்டை அற்று—அத்தத்துவச் சேட்டையொழிந்து, உள் அறிவு சிதையுமுன்—உள்ளிருக்குமறிவு கெடுதற்குமுன்னமே, மூன்று நாட்டம் உடைய—சோமசூரியாக்கினி என்னுமூன்றுகண்களையுடைய, நாதன் — தலைவனும், முகலிங்கன்—திருமுகம் வாய்ந்த சிவலிங்கப் பெருமானுமாகிய இறைவனது, தாள் துணை கமலம்—இரண்டு திருவடிகளாகிய தாமரைகளை, தலைகொண்மின்—தலையிற் சூடுங்கள். (யமவாதனையொழிவோமென்றபடி.)

குலைந்திட நிகழ்கால வினையெச்சம், குலை பகுதி, நகரமெய் சந்தி, து சாரியை, உகரக்கேடு சந்தி, இடு பகுதிப்பொருள் விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, உகரக்கேடு சந்தி, அ எச்ச விகுதி. அத்தலத்திலுள்ள சிவபெருமானுக்குமுகலிங்கனென்பது ஓர் திருநாமம். (கங)

தலைக்கொள்வெண்டலைமாலையன்றண்ணிலா
மிலைக்குந்தென்கருவாபுரிவேதியன்
புலைக்குரம்பையுடம்பிற்குடிபுகுந்
தலைக்குநெஞ்சமொழித்தெனையாள்வனே.

(இ-ள்.) தலைகொள் வெண்தலை மாலையன்—முதன்மை வாய்ந்த பிரமன் முதலியோரது உக்கிய தலையை மாலையாக வுடையவன், தண் நிலா—குளிர்ந்த இளஞ்சந்திரனை, மிலைக்கும் வேணியன்—சூடிய சடாமுடியையுடையவன், தென்கருவாபுரி வேதியன்—தென்திசையிலுள்ள திருமால் முதலிய தேவர்களுக்கு அந்தணனுயுள்ளவன், புலை குரம்பை உடம்பில்—கீழ்மையாகிய குடிலாயுள்ள என்னுடம்பில், குடிபுகுந்து—தான்குடியேறி, அலைக்கும் நெஞ்சம்—எனனை வருத்தும் மனத்தை, ஒழித்து என்னை ஆள்வன்—ஒழித்து என்னையடிமைகொள்வான்.

சடையிற் சந்திரன் றரித்ததுபோல வெண்டலை மாலையைத் தரித்தலால் சத்ததாதுக்கள் நிறைந்த என்னுடம்பில் அருவருப்படையாது குடியேறினன் என விசேடணத்தை வாக்கிய ரூபமாகக் கூறுதலால் கருத்துடையடையணி.

மிலேக்கும் நிகழ்காலப் பெயரெச்சம். மிலே பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, உம் எச்ச விகுதி. (ருச)

என்னையாள்பவனென்னுளிருப்பவன்
தன்னையான்றொழத்தண்ணளிதந்தவன்
பொன்னையாளும்புயன்றொழநின்றவன்
கன்னிபாகன்கருவைக்கிறைவனே.

(இ-ள்.) பொன்னை ஆளும் புயன் — திருமகளைத்தழுவும் புயத்தையுடைய திருமால், தொழ நின்றவன்—வணங்க நின்றவனும், கன்னிபாகன்—உமையம்மையை இடப்பாகத்திலுடையவனும், கருவைக்கு இறைவன் — கருவாபுரிக்குத் தலைவனுமாகிய சிவபெருமான், என்னை ஆள்பவன்—என்னையடிமைகொள்வோனும், என் உள் இருப்பவன்—என் இதயதாமரையில் வசிப்பவனுமான உரிமையையுடையோனுமாதலால், தன்னை யான் தொழ—தன்னை நான் வணங்க, தண் அளிதந்தவன்—தண்ணிய கருணைசெய்தான்.

என்னையாண்டாநுக அடிமைகொண்டவதனுல் தன்னையான்றொழத்தண்ணளிதந்தவனெனவும், எல்லா அண்டங்களையும் ஈன்றும் ஈனுதவளாயிருத்தலால் கன்னி எனவும் கூறினூர். நின்றவன், இறைவன், கன்னிபாகன் ஒருபொருள்மேல் வந்த பலபெயர். (ருரு)

இறைவனெங்கணுமியாவையுமானவன்
பிறையணிந்தசடிலன்பெருந்தகை
கறையிலங்குமிடற்றன்கருவையான்
மறையநின்றெனையாண்டதெம்மாயமே.

(இ-ள்.) இறைவன்—அயன் முதலியோர்க்கு இறைவனுயுள்ளவன், எங்கண் உம் யாவையும் ஆனவன்—எவ்விடத்தும் எப்பொருளும் ஆனவன், பிறை அணிந்த சடிலன்—மூன்றும் பிறையணிந்த சடாமுடியையுடையவன் பெருந் தகை—திருமால் முதலியோரினும் நன்குமதிக்குந் தன்மையையுடையான், கறை இலங்குமிடற்றன் — அவர்களுய்யும் பொருட்டு விடம்விளங்கிய ஸ்ரீ கண்டத்தையுடையவன், கருவையான்—திருக்கருவைப் பதியிலுள்ளவன், மறைய நின்று—இவ்வாறுள்ளவன்தான் மறைய நின்று, என்னை ஆண்டது—என்னையடிமைகொண்டது, எ மாயம் — என்ன இந்திரசாலம். (இஃதோர் பெருவியப்பென்றபடி.)

மேம்பட்டோர்க்கு மேம்பாடாயுள்ள ஒருவன் எல்லாவற்றினும் இழிந்த கீழோனையாளுதல் ஒரு நடிப்பாதலால் ஆண்ட தெம்மாயம் என்றூர். (ருசு)

மாயவல்லிருணீங்கமனத்திடைத்
தூயஞானச்சுடர்விளக்கேற்றிய
நாயகன்களவீசனைமாமயிர்
பாயமால்விடையான்பரமேட்டியே.

(இ-ள்.) மாயவல் இருள் நீங்க—மாயமாகிய கெடாத விருள் நீங்க, மனத்து இடை—என்மனத்தினிடத்து, தூயஞானம்—பரிசுத்த ஞானமாகிய, சுடர்விளக்கு—விளங்கும் விளக்கினை, ஏற்றிய—ஏற்றியருளிய, நாயகன்—

இறைவனுவான், களவீசன்—திருக்களா நீழலில் எழுந்தருளிய ஈசனும், நரை மயிர் பாய—வெள்ளிய மயிர் பரவிய, மால்விடையான்—திருமாலை இடபமாக வுடையவனும், பரமேட்டி—பரமேட்டியுமாயுள்ளான்.

பாயதொழிலடியாகப் பிறந்த குறிப்பு வினைப் பெயரெச்சம். (௬௭)

பரமெனக்குனையன்றியோர்பற்றிலேன்
சரமமுற்றியபோதிற்றருவையோ
கருவைநிற்குங்களாமுதலேமறைச்
சிரமிருக்குந்திருவடிச்செல்வமே.

(இ-ள்.) கருவை நிற்கும்—திருக்கருவையிலுள்ள, களாமுதலே—திருக் களா நிழலில் எழுந்தருளி யிருக்கின்ற முதல்வனே, எனக்கு உனை அன்றி ஓர் பற்றிலேன்—எனக்கு உன்னையன்றி ஓர் பற்றுக்கோடில்லேன், (ஆதலால்) சரமம் முற்றியபோதில்—சரமதிசை நேர்ந்த காலத்தில், மறைசிரம் இருக்கும்—வேதசிரசிலிருக்கும், திருவடி செல்வம்—உனது திருவடியாகிய அருட்செல் வத்தை, தருவையோ—தந்தருள்வாயோ, (அன்று தந்தருளுதல்) பரம்—உனது பாரம்.

உன்னையன்றி யான் யாதொரு பற்றுக்கோடுங் கருதாத எனக்கு இன்று உன் திருவடியைத் தந்திலை ஆதலால் சரமதசையில் திருவடியை யருளுவது திருவுள்ளமோ என்பார் தருவையோ எனவும், அச்செல்வத்தைத்தந்தருளுதல் உன் பாரம் என்பார் பரமெனவுங் கூறினர். ஓகாரம் ஐயப்பொருட்டு. இச் செய்யுளின் இறுதியும் முதலும் தம்முள் பொருளுக்க முடைமையால் இது பூட்டுவிற் பொருள்கோள். "எழுவாயிறு தி நிலைமொழி" என்னுஞ் சூ-ஆல். உணர்க. பூட்டு விற்பொருள் கோளணியென்னு மொக்கும். (௬௮)

செல்வமீயுஞ்சிறப்புமளித்துளத்
தல்லறீர்க்குமறிவையுதவிடுங்
கல்விநல்குங்கதிதரும்பொற்கிரி
வல்விலான்களவீசனைவாழ்த்தவே.

(இ-ள்.) பொன்கிரி—பொன்மேருவை, வல்விலான்—வலியவில்லாக வுடையவனாகிய, களாசனை—களாநிழலில் எழுந்தருளிய இறைவனை, வாழ்த்த—ஒருவன் வாழ்த்த, செல்வம் ஈயும்—இம்மையில் நுகர்தற்குரிய செல்வத்தை அவ்வாழ்த்துதல் தரும், சிறப்பும் அளித்து—அரசர் உபசரிக்கும் நன்கு மதிப்பையுந் தந்து, உள்ளத்து அல்லல் தீர்க்கும்—மனத்திலுள்ள கவலையை யுந் தீர்க்கும், அறிவை உதவிடும்—உணர்ச்சியையுந் தரும், கல்வி நல்கும்—அவ்வுணர்ச்சிக்குக் காரணமாகிய கல்வியையுந் தரும். கதிதரும்—மறுமையில் மோக்ஷத்தையுந் தரும்.

நுகர்ச்சி, மக்கள் இவையின்மையே செல்வர்க்குந் துன்பமாகலால் அவற்றை யல்லலென்றார். வாழ்த்த என்னும் வினையெச்சத்தினின்று பிரிந்த தொழிற்பெயர் ஈயுமென்பது முதலிய வினைகட்கு முதலாய் நிற்றலால் அவ் வாழ்த்துத லெனப் பிரித்தாம். (௬௯)

வாழ்வைநம்பிமதிகெட்டுக்கும்பியில்
வீழ்புன்மாந்தார்க்குறுதிவிளம்புவேன்
றாழ்சடைக்களவீசன்றனாலயஞ்
சூழ்தல்சூழிற்றுறக்கங்கிடைக்குமே.

(இ-ள்.) வாழ்வைநம்பி—இவ்வுலகவாழ்க்கையை ஓர்பொருளாக நம்பி, மதிகெட்டு—சிவபெருமானை யுணரும் உணர்ச்சி கெட்டு, கும்பி இல்வீழ்—நரகத்தில் வீழும், புல்மாந்தர்க்கு-புல்லறிவினையுடையமனிதர்க்கு, உறுதிவிளம்புவேன்—ஓர் உறுதியை எடுத்துக் கூறுகிறேன், தாழ்சடைகள ஈசன் தன்—தாழ்ந்த சடையையுடைய களாநிழலில் எழுந்தருளிய இறைவனது, ஆலயஞ் சூழ்தல்—திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ் செய்தலை, சூழில்—கருதினால், துறக்கம் கிடைக்கும்—முத்திகை கூடும். (இதுதான் உறுதிமொழி என்றபடி.) ()

### கோச்சகக்கலிப்பா.

கிடைத்தபொருள்கரத்திருக்கக்கிடைத்திலவென்றயர்வார்போல்
படைத்தநினதருள்பெற்றும்பெற்றிலர்போற்பரிவுற்றேன்
முடைத்தலையிற்பலிகொள்ளுமுகலிங்காமுகிழ்த்தநிலாச்
சடைத்தலையாய்நின்மாயம்யானுணருந்தரத்ததோ.

(இ-ள்.) கிடைத்தபொருள் கரத்துஇருக்க—தான்முயன்று தேடியபொருள் கைகூடியிருக்க, கிடைத்தில என்று—கைகூடவில்லையேயென்று, அயர்வார்போல்—சோர்வாரைப்போல, படைத்தநினது அருள்—அடைந்த உனது திருவருளை, பெற்றும்—அடைந்திருந்தும், பெற்றுஇலர்போல் பரிவுற்றேன் அடையாதவரைப்போல அடையத்துன்ப முற்றிராநின்றேன், முடைதலை இல்—துர்நாற்றம் வாய்ந்தபிரம கபாலத்தில், பலிகொள்ளும்—பலிவாங்கிய, முகலிங்கா—முகலிங்கனே, முகிழ்த்தநிலா — அரும்பிய இளஞ் சந்திரனை யணிந்த, சடைதலையாய்—சடைவாய்ந்த திருமுடியையுடையவனே, நின் மாயம்—அது உனது மாயையின்வன்மை - யான் உணர் உம்தரத்தது ஓ—அதுயானறியுந் தகுதியையுடையதோ, (அன்றென்றபடி.)

வயிரவக்கடவுள் திருமால் உதிரத்தைப் பலியேற்றினமையால் முடைத்தலையிற் பலிகொள்ளுமென்றார். முகிழ்த்த இறந்தகாலப்பெயரெச்சம். முகிழ் பகுதி, தகரமெய் சந்தி, தகரமெய் இடைநிலை, அ பெயரெச்ச விகுதி. நிலா என்னும் ஆகார வீற்றுப் பெயர்ச்சொல் ஈறுகுறுகி நில எனவும், உகரச் சாரியை ஏற்று நிலவு எனவும்வரும். "குறியதன்கீழாக்குறுகலும்" என்னுஞ் சூ-ஆல். இது எடுத்துக்காட்டுவமையணி. (சுசு)

உணராதநின்னிலையைநீயுணர்த்தவுணர்ந்ததற்பின்
புணராததாடலையிற்புணர்ந்ததெனப்புளகோங்கத்
தணவாமலெலனயுனக்குத்தந்துருகியிரண்டற்றேன்
பணராசச்சிலம்புணிந்தபழமறையெம்பெருமானே.

(இ-ள்.) பணராசன்—படத்தையுடைய சர்ப்பங்களுக்கு அரசனாகிய ஆதிசேடனை, சிலம்பு அணிந்த—சிலம்பாக அணிந்தருளிய, பழமறை எம்

பெருமான்-தொன்றுதொட்டுள்ள வேதங்களுக்குத்தலைவனாகிய இறைவனே, உணராத நின் நிலையை — திருமால் முதலியோர் உணர்தற்கரிய நினது உண்மை நிலையை, நீ உணர்த்த—நீ எளிவந்தருளித்தெரிவிக்க, உணர்ந்ததன் பின்—அறிந்ததன்பின், புணராததாள்—யாருடைய தலையினுஞ் சூட்டாத திருவடியை, தலையில் புணர்ந்தது என்ன—யான்தலையிற் சூடியதுபோல, புளகு ஓங்க—புளகரும்ப, தணவாமல்—நீங்காமல், என்னை உனக்குதந்து உருகி — உடல்பொருளாவி மூன்றையும் உனக்குக்கொடுத்து மனமிளகி, இரண்டு அற்றேன்—யானெனதென்னு மிரண்டையுமொழிந்தேன்.

இன்னதன்மையனென்றுணராத நிலை என்பார் உணராதநின்னிலையை எனவும், தன்னிலையை இறைவனே உணர்த்த வேண்டுமென்பார் நீயுணர்த்த எனவும், அவ்விறைவ னுணர்த்த உணர்ந்ததற்பின் சத்திநி பாதம் வந்ததென்பார் புணராததாடலையிற் புணர்ந்ததெனவும், திருவருட்பதிவுவந்தபின் உடல்பொருளாவி மூன்றையும் அவ்விறைவனுக்கு ஒப்புவித்தனனென்பார் எனை உனக்குத்தந்து இரண்டற்றேன் எனவுங்கூறினர். (சஉ)

பழமையாம்வாதனையிற்படிந்தமனப்பந்தத்தின்
விழைவினாற்றலைமயங்கிவேறுவேறுருவெடுத்துச்
சுழல்குயவன்றிகிரியைப்போற்பவக்கடலிற்சுழல்வேனோ
மழவிடையாய்பால்வண்ணாவானவர்தங்கோமானே.

(இ-ள்.) மழவிடையாய் — இளமைதங்கிய இடப ஊர்தியையுடையவனே, பால்வண்ணா—பால்வண்ணனென்னுந் திருநாமமுடையவனே, வானவர்தம்கோமானே—தேவர்களுக்கிறைவனே, பழமை ஆம் வாதனையில்படிந்த கழலாதுதொன்று தொட்டுள்ள ஆணவமலவாதனையிலழுந்திய, மனம்பந்தத்தின்—மனத்தால்விளைந்த பந்தத்தின், விழைவினால்—விருப்பத்தினால், தலைமயங்கி—தடுமாறி, வேறுவேறு உருவு எடுத்து — வெவ்வேறு வடிவமெடுத்து, குயவன் சுழல்திகிரியைப்போல்—குயவன் சுழற்றச்சுழலுஞ் சக்கரத்தைப்போல, பவம் கடலில்—பிறவியாகிய கடலில், சுழல்வேனோ—சுழன்று அலைந்து வருந்துவேனோ, (வருந்தாதருளாயென்றபடி.)

பால்வண்ணனென்பது அத்தலத்தின் சிவபெருமானுக்கோர் திருநாமம் விழைவு தொழிற்பெயர். விழைபகுதி, வகரமெய்சந்தி, உ புடைபெயர்ச்சி விகுதி. (சங)

கோமானேகருவைவருங்குணக்குன்றேமலரிதழித்
தேமாலைபுனைந்தசடைச்செழுஞ்சுடரேயென்றென்று
பாமாலைவாய்பாடிக்கைகொட்டிப்பதம்பெயர்த்து
நாமாடவம்மின்காடொண்டராய்நமரங்காள்.

(இ-ள்.) கோமானே—இறைவனே, கருவைவரும் குணம்குன்றே-திருக்கருவையிலெழுந்தருளிய குணபர்வதமே, இதழிமலர் - கொன்றைமலரால் தொடுத்த, தேமாலை—தேன்சிந்துமாலையை, புனைந்தசடை—தரித்தசடாமுடியையுடைய, செழும் சுடரே—குறைவில்லாத பேரொளியே, என்று என்று பாமாலை—என்று தோத்திரப்பாமாலையை, வாய்பாடி — வாயாற்பாடி, கை

கொட்டி—கைபுடைத்து, பதம்பெயர்த்து — கால்பெயர்த்து, நாம் ஆட—நாம் ஆனந்தக்கூத்தாட, நமரங்காள் — நம்முடையவர்களே, தொண்டராய்—சிவ பெருமானுக்கு அடியவராய், வம்மின்கள்—வாருங்கள்.

தாமடையும் பயனை உலகினரடையக் கருதினராதலால் நமரங் காள் தொண்டராய் வம்மின்காள் என்றார். நமரங்காள், வம்மின்காள் கள் என் னும் விகுதி மேல்விகுதியின் ஈற்றயலெழுத்து நீண்டு நமரங்காள், வம்மின்காள் எனவருதல் விளிவேற்றுமை. நமரங்கள் நாமென்பது முதல் குறுகிநின்ற நம் பகுதி, அர் பலர்பால் விகுதி, அம்சாரியை, கள் விகுதிமேல் விகுதி. வம்மின் கள் முன்னிலைப்பன்மை ஏவல்வினைமுற்று. வா பகுதி, முதல் குறுகல்விகா ரம், மகரமெய் சந்தி, மின் முன்னிலைப்பன்மை ஏவல் விகுதி,கள் விகுதிமேல் விகுதி. என்றென்று பன்மைப்பொருளில் வந்த அடுக்குத்தொடர். (சச)

தொண்டுசெய்துவழிபட்டுச்சுருதிபுகழ்களாவீசன்
புண்டரிகமலர்த்தாளைப்போற்றிமுதற்பேறுபெற்றா
ரண்டர்பிரானுன்முகத்தோனுழியானிவரென்றான்
மண்டனிஞாலத்தெளியமானுடரோவழுத்துவார்.

(இ-ள்.) தொண்டு செய்து—திருத்தொண்டு செய்து, வழிபட்டு—வழி பாட்டில் நின்று, சுருதிபுகழ்—வேதம்புகழும், களாவீசன்—திருக்களாநிழலில் எழுந்தருளியிருக்கும் இறைவனது, புண்டரிகமலர்த்தாளை — தாமரைமலரை யொத்ததிருவடியை, முதல்போற்றி—முன்புவணங்கி, பேறுபெற்றார்—பதவி அதிகாரமுதலிய பயன்களைப்பெற்றவர்கள், அண்டர்பிரான்—தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனும்,நான்முகத்தோன்—நான்குமுகங்களையுடைய பிரம னும், ஆழியான்—சுதரிசனமென்னும் சக்கரத்தை யுடையவனுமாகிய,இவர் என்றால்—இவர்களானால், மண் தனிஞாலத்து - மிருத்திகை வடிவாகிய ஒப் பில்லாத நிலவுலகத்துள்ள, எளியமானுடர் ஓ—வலியில்லாத மக்கட்பிறப்பி னரோ, வழுத்துவார் - வணங்கிப்பயன் பெறுகின்றவர்கள்.

அடியார்க்கெளியனாயினும் சிவபெருமான் காண்டற் கரியனெனக்கூறி யது அவனதுபெருமை புலப்படுதலையும், அடியரல்லாதார் துதிக்கில்காட் சிதாரானென்பதையுங் குறிப்பித்து நிற்றலால் உதாரவணி. (சரு)

வழுத்திடுவேனுவாரமலரிடுவேன்கரங்கொண்டு
தொழத்தகுவேன்முடிதாழ்த்திச்சூழ்வருவேன் றுணைத்தாளா
லழுத்திடுவேன்மனத்துன்னையகம்புறமொன்றாயுருகிப்
பழித்திடுவேனருள்கனியப்பால்வண்ணுநம்பரனே.

(இ-ள்.) பால்வண்ணு - பால்வண்ணனே, நம்பரனே - நமதுபரமனே, அருள்கனிய—உனது திருவருள் சுரக்க, நா ஆரவழுத்திடுவேன்—எனது நா தெவிட்டத்துதிப்பேன், கரம்கொண்டு மலர் இடுவேன் — எனதுகை யால் மலர்கொண்டு அருச்சிப்பேன், முடிதாழ்த்தி தொழத்தகுவேன்—தலை யைவளைத்து வணங்குவேன், துணைதாளால் சூழ்வருவேன் — எனது இரண் டுகால்களால் பிரதக்ஷிணஞ் செய்வேன், மனத்து உன்னை அழுத்திடுவேன்

மனத்தில் உன்னைத்தியானிப்பேன், அகம்புறம் ஒன்றாய்உருகி-அகமும் புறமும் ஒருசேரவுருகி, பழித்திடுவேன் - துதிப்பேன்.

வழுத்திடுவேன் தன்மை யொருமை எதிர்காலவினைமுற்று. வழுத்து பகுதி, இடு பகுதிப் பொருள் விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, வகரமெய் இடைநிலை, என் தன்மை ஒருமை விகுதி. அழுத்திடுவேன், பழித்திடுவேன் என்பவையுமது. பழிச்சி என்னும் பகுதி, பழித்து எனவந்ததுமறுஉ. (சரு)

நம்பியுனதருள்வேட்டுநெடுக்கடலுட்கலங்கவிழ்த்து
வெம்புதுயர்மனத்தார்போன்மெலிகின்றேனெடுநாளாக்
கும்பமுனிக்கருள்புரியுங்கொற்றவனேமுகலிங்கா
தும்பைமுடித்தோய்புரக்கவிரக்கமின்னந்தோன்றாதோ.

(இ-ள்.) கும்பமுனிக்கு அருள்புரியும் கொற்றவனே—அகத்தியமுனிவருக்கருளிய வெற்றியை யுடையவனே, முகலிங்கா—முகலிங்கனே, தும்பைமுடித்தோய்—தும்பை மலராற்றொடுத்த மாலையை யுடையவனே, உனது அருள் நம்பி—உனதுதிருவருளை ஒருபற்றுக் கோடாகக்கொண்டு, வேட்டு-அதனைவிரும்பி, கடல் நடுவுள் கலம்கவிழ்த்து—கடலில் நடுவுள் தமதுமரக்கலத்தைக்கவிழ்த்து, வெம்புதுயர் மனத்தார்போல்—அதனைமீட்டும் பெறவருந்தும் துன்பம் வாய்ந்த மனத்தையுடையவர் போல, நெடுநாள் ஆக மெலிகின்றேன்—நெடுநாளாக மனமெலிகின்றேன், புரக்க -- என்னைப்பாதுகாக்க இன்னம்இரக்கம்தோன்றாதோ-இன்னமுந் திருவுள்ளத்தில் இரக்கம் வாராதா.

புரக்க நிகழ்காலவினையெச்சம். புரபகுதி,கு சாரியை, அ விகுதி,ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி கவிழ்த்து இறந்தகாலவினை யெச்சம், கவிழ்பகுதி. ()

தோன்றியபோதுடன்றோன்றித்தோன்றாதுமறைத்தென்னை
யான்றசெழுஞ்செம்பிலுறைகளிம்புபோலகலாம
லூன்றுமலத்துகளகற்றியுன்னருளும்பெறுவேனோ
மூன்றுலகுந்தொழுதேத்துமுகலிங்காமுதற்பொருளே.

(இ-ள்.) மூன்று உலகும்-சுவர்க்கமுதலிய மூன்றுலகமும், தொழுது ஏத்தும்—வணங்கித்துதிக்கும், முகலிங்கா—முகலிங்கனே, முதற்பொருளே, யாவர்க்கும் முதலாயுள்ளவனே, தோன்றியபோது உடன்தோன்றி—யான் தோன்றியபோது செம்பில் களிதம்போல் என்னுடன் றோன்றி, என்னை தோன்றாது மறைத்து—யான்தோன்றாமல் மறைத்துத்தான்றோன்றி, ஆன்ற செழும் செம்பில் — அமைந்த நிறத்தையுடைய செம்பில், உறைகளிம்பு போல்—வெட்டுவாய்தோறும் தோன்றுங்களிம்புபோல, அகலாது—என்னை விட்டகலாமல், ஊன்றும் மலம் துகள் அகற்றி — அழுந்திய மலக்குற்றத்தை யொழித்து, உன் அருளும் பெறுவேனோ — உனதுதிருவருளும் பெற்றுய்வனோ, (யானறியேனென்றபடி.)

மூன்றுலகும்—உம்மை இனைத்தென வறிபொருளின் கண்வந்த முற்றுப்பொருட்டு, தொழுது இறந்தகாலவினை எச்சம். தொழு பகுதி. பதிபசுபாசம் மூன்றும் அநாதியாதலால் தோன்றியபோதுடன் றோன்றியென்றார். (சஅ)

பொருள்வேட்டுநிலவேட்டும்பூவையர்தம்புணர்கலவி
மருள்வேட்டுநாடோறுமனவலிகெட்டயர்கின்றே
னருள்வேட்டுன்சன்னிதிப்பட்டருந்துயர்போயுய்வேனோ
தெருள்வேட்டார்க்கருள்புரியுந்திருக்களவிலுறைவோனே.

(இ-ள்.) தெருள் வேட்டார்க்கு - சிவஞானத்தினை விரும்புவோர்க்கு, அருள்புரியும் - திருவருள்செய்யும், திருக்களவில் உறைவோனே - திருக்களா நிழலில் எழுந்தருளிய இறைவனே, நாள்தோறும்—எந்நாளும், பொருள் வேட்டும்—பொன்னை விரும்பியும், நிலம்வேட்டும்—பூமியைவிரும்பியும், பூவையர்தம்—நாகணவாய்ப் பட்சிபோலுஞ் சொற்களையுடைய பெண்களோடு, புணர்கலவி மருள்வேட்டும்— புணரும்புணர்ச்சியின் மயக்கத்தை விரும்பியும், மனவலிகெட்டு அயர்கின்றேன் — மனவலியிழந்து சோர்கின்றேன், அருள் வேட்டு--உனது திருவருளை விரும்பி, உன்சந்நிதிப்பட்டு—உன்சந்நிதியையடைந்து, அருந்துயர்போய் உய்வேன் ஓ — நீங்குதற்கரிய பிறவித்துன்பத்தினின்று நீங்கி, நான்பிழைப்பேனோ, (அறியேனென்றபடி.)

பொன்முதலிய ஈஷணாத்திரயங்களை எந்நாளும் விரும்பித் தேடுகின்ற யான் உன்சந்நிதியையடைந்து திருவருள் பெறுதல் அரிதாதலால் அருந்துயர்போயுய்வேனோ என்றார். ஓ கராம் ஐயப்பொருட்டு. வேட்டு இறந்தகால வினையெச்சம்—வேள் பகுதி. (சகூ)

உறைவாய்நன்மனத்தன்பருடறோறுமுயிராகி
நிறைவாயெவ்வுலகனைத்துநீக்கமிலாதுணர்ந்தோர்க்கு
மறைவாயுய்த்துணரார்க்குமறைபயிலுங்கருவையில்வாழ்
இறைவாநின்றிருவிளையாட்டியான்வழுத்தவடங்காதே.

(இ-ள்.) நன்மனத்து அன்பர்—உன்னை வழிபடும் மனத்தையுடைய அடியாரது, உடல்தோறும்—சரீரமாகிய கோயில்கள்தோறும், உயிர் ஆகி அவர்கள் உயிரே நீயாகி, உறைவாய் — தங்கி அருள்வாய், உணர்ந்தோர்க்கு உன்னை உணர்ந்தசிவஞானிகளுக்கு, எ உலகனைத்தும்—எல்லாவுலகமுற்றும், நீக்கம் இல்லாது—எள்ளுக்குளெண்ணெய் போனீங்காது, நிறைவாய்—நிறைந்தருளுவாய், உய்த்து உணரார்க்கு—உன்னையாராய்ந்தறியாத நூலுணர்ச்சியில்லார்க்கு, மறைவாய்—மறைந்தருளுவாய், மறைபயிலும்—நான்குவேதங்களும் சஞ்சரிக்கும், கருவையில்வாழ் இறைவா—கருவையில் எழுந்தருளிய இறைவனே, நின்திருவிளையாட்டு—இவ்வாறுள்ள உனது திருவிளையாடலை, யான்வழுத்த — யான் எடுத்துத் துதிக்க, அடங்காது-யானெடுத்துத்துதிக்க என்துதியிலடங்காது.

காமிகளுக்குப் புலப்படும் பொருள்கள் யாவும் தான்விரும்பிய மகளிர் போல உருவெளித்தோற்றமாம், அதுபோலச் சிவஞானிகட்குத்தாம் விரும்பிய சிவமாக உலகிலுள்ள எல்லாப் பொருளும் உருவெளிப்படுதலால் உணர்ந்தோர்க்கு நிறைவாயெவ்வுலகனைத்து நீக்கமிலாதென்றார். நின் உன் என வந்தது மரூஉ. (ரு०)

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

காதற்பெருக்குமொருகோடிகோடிகவலைப்பெருக்குமிகலாய்
வாதைப்படுத்தவலைமாறுபோலமனமாலுழன்றுவிடவோ
வேதப்பெருக்குமுழவோசைவிம்முவிழவிற்பெருக்குமியல்கூர்
நாதப்பெருக்குமொழியாதுமல்குகருவேசஞானவுருவே.

(இ-ள்.) வேதம்பெருக்குஓசை—அளவில்லாத வேதங்களின் ஓசையும், முழவுஓசை—வாச்சியத்தின் ஓசையும், விம்மு — எங்கும் பரவிய, விழவின் பெருக்கும்—உற்சவங்களிலுள்ள ஆரவாரப்பெருக்கும், இயல்கூர் நாதம் பெருக்கும் — இலக்கணமமைந்த வீணைமுதலிய வாச்சியங்களின் ஒலியும், ஒழியாது மல்கும் — நீங்காதுநிறைந்த, கருவேச — திருக்கருவையி லெழுந்தருளிய இறைவனே, அலைமாறுபோல — கடலலை ஒன்றன்பின்னொன்று மாறுபட்டு வருதல்போல, காதல்பெருக்கும்—எனக்குள்ள ஆசைப்பெருக்கும்,ஒருகோடி-ஒருகோடியும், கவலைபெருக்கும் ஒருகோடி—கவலைப்பெருக்கும் ஒருகோடியும் ஆக, மிகலாய்—மிகுந்து, வாதைப்படுத்த—வாதைசெய்ய, மனம்மால் உழன்று விடவோ—எனது மனம் இம்மயக்கத்திற் சுழன்றுவிடவா (தேவரீர் திருவுள்ளம் யானறியேனென்றபடி.)

எழுவாயும் பயனிலையுந்தொக்கு நின்றன. நாதம் என்றமையால் முழவென்றது தோற்கருவியோசைகளை. வாதைப்படுத்த நிகழ்காலவினையெச்சம். வாதை என்னும் பெயர்ச்சொல் தன்னை வினைப்படுத்த வரும் படு விகுதியோடு கூடி ஒருசொற்றன்மைப்பட்டு நின்றவாதைப்படு பகுதி. து சாரியை, அ எச்ச விகுதி. தகரத்தோற்றமும் உகரக்கெடும் சந்தி. உழன்று இறந்தகால வினை எச்சம். உழல் பகுதி. (ருக)

உருவாகிநிற்றியருவாகிநிற்றியுயிரோடெவைக்குமுறவாய்
மருவாகிநிற்றிமலராகிநிற்றிமறையாகிநிற்றிமறையின்
பொருளாகிநிற்றியுனையானறிந்துபுகழ்கின்றவாறுமறியேன்
கருவாபுரிக்குளுறைதேவதேவகதியேதெனக்குமொழியே.

(இ-ள்.) கருவாபுரிக்கு உள் உறை தேவதேவ—கருவாபுரியில் எழுந்தருளிய திருமால் முதலிய தேவர்களுக்குத்தேவனே, உருவாகிநிற்றி—திருவுருவங்கொண்டு நிற்கின்றாய், அருவாகி நிற்றி—அரூபியாயும் நிற்கின்றாய், உயிரோடு எவைக்கும் உறவாய் — சித்துப்பொருள்களோடு எப்பொருளுக்கும் உறவாய் விரவி, மருவாகி நிற்றி மலராகி நிற்றி—வாசனையாய் நிற்கின்றாய் மலராகிநிற்கின்றாய், மறைஆகி நிற்றி—வேதமாகி நிற்கினறாய், மறையின் பொருளாகி நிற்றி—வேதத்தின் பொருளாகி நிற்கின்றாய், உன்னை யான் அறிந்து—நீ இவ்வாறு நிற்றலால் நான் உன்னை ஐயமறவுணர்ந்து, புகழ்கின்ற ஆறு உம் அறியேன்—உன்னை வாழ்த்தும்வகையையும் அறியேன், எனக்கு கதியேது—உன்னை வாழ்த்துதற்கியலாமையால் துணையேது, மொழி—கூறியருளாய்.

உருவென்றால் அருவொன்றுளதாதலால் உருவாகிநிற்றி அருவாகி நிற்றி எனவும், சித்தென்றால் அசித்தொன்றுளதாதலால் உருவோடெவைக்கு முற

லாகி எனவும், வாசமென்றால் மலரொன்றுளதாதலின் மருவாகி நிற்றி மலராகி நிற்றி எனவும், வேதமென்றால் அதன்பொருளொன்றுளதாதலால் மறையாகி நிற்றி மறையின்பொருளாகி நிற்றி எனவும், நீயே இவையாவுமாய் நிற்றலால் உன்னை எவ்வாறறிவே னென்பார் உனையானறிந்து புகழ்கின்ற வாறுமறியேன் எனவுங் கூறினர்.

நிற்றிமுன்னிலை ஒருமை நிகழ்கால வினைமுற்று. நில்பகுதி, து சாரியை இ விகுதி, லகர றகரத்திரிபும் உகரக்கேடும் சந்தி. (ருஉ)

மொழிகின்றவாறுசமயங்கடோறுமுழுதுஞ்சுழன்றுநிலையற்
றழிகின்றசிந்தையவலங்கெடுத்துன்னடிகண்டுநாடியறியும்
விழியுங்கொடுத்தமுகலிங்கநாதமிகுமன்பர்தேடுபொருளே
பொழியுங்கடைக்கண்ணருளாலளித்திபுரையற்றமுத்திநிலையே.

(இ-ள்.) மொழிகின்ற—சொல்லப்படுகின்ற, ஆறு சமயங்கள் தோறும்—அறுவகைப்பட்ட புறச்சமயங்கள் தோறும், முழுதும் சுழன்று — கூறும் பொருள்முற்றும் பொருட்டுணி புவரை யறையில்லாமையால் சுழற்சியை யடைந்து, நிலை அற்று—நிற்கும் நிலைகெட்டு, அழிகின்ற சிந்தை—அழியாநின்ற மனத்திலுள்ள, அவலங்கெடுத்து—துன்பத்தை யொழித்து, உன் அடி கண்டு—உன் திருவடியைத் தரிசிக்க, நாடி அறியும்—தேடியுணரும், விழியுங் கொடுத்த — ஞானக்கண்ணையும் அடியேனுக்குக்கொடுத்தருளிய, முகலிங்க நாத—முகலிங்க நாதனே, மிகும் அன்பர் தேடுபொருளே—முறுகிய அன்பினையுடையோர் ஈட்டும் ஞானச்செல்வமே, புரை அற்ற முத்தி நிலை—குற்றமற்ற மோக்ஷ நிலையை, பொழியும்—சுரக்கும், கடைகண் அருளால்—திருக்கடைக்கண் அருளால், அளித்தி—கொடுத்தருளாய்.

புறச்சமயங்களாறுவன உலோகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமீகம், வைபாடிகம், ஆருகதம். அவன்திருவருளே அவன் திருவடியைத்தரிசிக்கக்கூட்டுமாதலால் அடிகண்டு நாடியறியும் விழியுங்கொடுத்த எனவும், அதனால் புறச்சமய மயக்கொழியுமாகலால் சிந்தை யவலங்கெடுத்த எனவுங் கூறினார். கண்டுசெயவெனெச்சத்திரிபு, விழியும் உம்மை உயர்வு சிறப்புப்பொருட்டு

முத்திக்குவித்துன்னடியார்கள்சிந்தைமுளரிக்கருக்கன்மொழியெண்
சித்திக்குமூலந்தவயோகிகட்குத்தெளிகின்னலூறுமமிர்தம்
பத்திக்குநித்தமருள்வீசுகொண்டல்களவீசனெங்கள்பரம
னத்திக்குமுன்னம்வரமேயளித்தகருவேசனம்பனடியே.

(இ-ள்.) களவீசன்—திருக்களா நிழலில் எழுந்தருளிய இறைவனும், எங்கள் பரமன்—எங்கள் கடவுளுமாகிய அத்திக்கு முன்னம் வரம் அளித்த வெள்ளையானைக்குமுன்பு வரந்தந்தருளிய, கருவா ஈசன் — திருக்கருவையிலெழுந்தருளிய ஈசனது, அம்பொன் அடி—அழகிய பொன் போலும் அரிய திருவடி, முத்திக்குவித்து—மோக்ஷ நிலத்துக்கு ஓர் விதை, உன் அடியார்கள்-களுதும் அடியவர்களது, சிந்தை முளரிக்கு—சிந்தையாகிய தாமரை மலர்தற்கு, அருக்கன்—ஒருசூரியன், மொழி எண்சித்திக்கும்—கூறும் அட்டமாசித்

திக்கும், மூலம் — காரணம், தவயோகிகட்கு — தவஞ் செய்யும் சிவயோகிகளுக்கு, தெளிகன்னல் ஊறும் அமிர்தம்—முற்றிய கரும்பினூறும் இரசம். பத்திக்கு—அடியவர் செய்யும் பத்திக்கு, அருள் வீசுகொண்டல்—கருணை மழை பொழியும் மேகம்.

எண்சித்திகளாவன—அணிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம் ஈசத்துவம், வசித்துவம். அவற்றை விரிக்கிற்பெருகும். திருவடி ஒன்றையே பலவாகவுருவகஞ் செய்தமையால் ஏகாங்கவுருவணி. துருவாசமுனிவர் இட்ட சாபத்தால் வெள்ளையானை விண்ணினின்று மிழிந்து நிலவுலகில் காட்டானையாகச்சஞ்சரித்து மதுரையை யடைந்து சிவபெருமானைப் பூசித்து அச்சாப மொழிந்து பண்டுள்ள வடிவம் பெற்றது என்பது புராணவரலாறு. (௫௪)

அடியாரிழைத்தபிழைகோடிநெஞ்சினறியாதவாதிமுதல்வன்
கொடியார்புரத்தையழன்மூடவன்றுகுறுமூரல்கொண்டகுழக
னெடியோன்வழுத்துகளவீசனென்றுநினைதோறுமுள்ளநெகிழ
முடியேறுமங்கைபுளகிக்குமேனிமுகிழிக்குமென்கணிணையே.

(இ-ள்.) அடியார் இழைத்த—தனதடியவர் செய்த, கோடிபிழை—அளவில்லாத பிழைகளை, நெஞ்சில் அறியாத ஆதிமுதல்வன்—தனதுதிருவுளத்தில் எண்ணாத ஆதியாகிய முதல்வன், கொடியார் புரத்தை—தனது அடிமைத்திறத்தினின்றும் மாறுபட்ட கொடியவர் திரிபுரத்தை, அழல்மூட—அக்கினி போர்க்க, குறுமூரல் கொண்ட—புன்னகையரும்பிய, குழகன்—பேரழகுடையவன், நெடியோன் வழுத்தும்—திருமால் துதிக்கும், களவீசன்—திருக்களாநிழலிலெழுந்தருளிய இறைவன், என்று நினைதோறும்—என்று நினைக்குந்தோறும், உள்ளம் நெகிழ—எனது மனமிளக, அங்கைமுடி ஏறும்—அழகிய கைகள் எனது தலையிற் குவியும், மேனிபுளகிக்கும் உடல் புளகங்கொள்ளும் என்கண் இணை முகிழிக்கும்—எனது இரண்டு கண்களும் நீரரும்பும்.

அடியவர் செய்யும் மறங்களை அறங்களாகக் கொண்டருளுவோன் என்பார் அடியாரிழைத்த பிழை கோடி நெஞ்சினறியாத வாதிமுதல்வன் எனவும், தன்திருவடி பிழைத்த கொடியோர் செய்த மறங்களை மறங்களாகவேகொண்டு அன்றே ஒறுப்பனென்பார் கொடியார் புரத்தை யழன்மூடவன்று குறுமூரல்கொண்ட எனவும், திருமால் முதலிய தேவரினும் பேரழகுடையவனென்பார் குழகனெனவுங் கூறினார். அடியார்செய்யும் மறங்களை அறங்களாகக்கொண்டது சிவபூசைக்கிடையூறு செய்ததமது பிதாவின் காலைச்சேதித்து முத்தியடைந்த சண்டேச நாயனாரிடத்தும், கொடியவர் செய்யும் மறங்களை மறங்களாகக்கொண்டு அன்றே யொறுத்தலைத் திரிபுரவாசிகளாகிய அசுரர்கள் புத்தநூலைக் கைக்கொண்டு தனது வழிபாட்டினின்று மாறினதைத்திருமால் முதலியோரால் கேள்வியுற்று நான்கு வேதங்களையுங் குதிரையாகப்பூண்ட பூமியாகிய தேரின்மேலாரோகணித்து மேருவாகிய வில்லைக்கையிலேந்திச்சென்று நகைத்தெரித்தருளினமையைத் திரிபுராதிகளிடத்துங்காண்க. புளகிக்கும், முகிழிக்கும் பெயரடியாகப் பிறந்த நிகழ்காலவினை

முற்று. புளகி, முகிழி பகுதிகள். கு சாரியை, உம்முற்று வினை விகுதி, ககரத் தோற்றமும் உகரக்கேடும் சந்தி. (௫௫)

என்கண்ணிடத்தினகலாதசெல்வனெழிலார்களாவின்முதல்வன்
வன்கண்ணர்நெஞ்சுபுகுதாதநம்பன்மனமாசறுத்தபெருமான்
புன்கண்ணகற்றியடியாரைவீடுபுகுவித்துநின்றபுனிதன்
றன்கண்ணெனக்குமுடியாதவன்புதரவென்சொல்செய்ததவமே.

(இ-ள்.) என்கண் இடத்தில்—எனது அகக்கண்ணினின்றும், அகலாத செல்வன்—நீங்காத ஞானச்செல்வனும், எழில் ஆர்களாவின் முதல்வன்—அழகு நிறைந்த களாவினிழலில் எழுந்தருளிய முதல்வனும், வன்கண்ணர் பாவிகளது, நெஞ்சுபுகுதாத — நெஞ்சில் குடியேறுதல் சிறிது முணராத நம்பன்—எப்பொருட்கும் தலைவனும், மனமாசு அறுத்த பெருமான்—அடியே னது மனக்குற்றத்தை ஒழிக்கும் பெருமானும், புன்கண் அகற்றி — பிறவித் துன்பத்தை யொழித்து, அடியாரை—அடியவர்களை, வீடுபுகுவித்து—முத்தி வீட்டில் குடிபேற்றி, நின்ற புனிதன்—நின்றருளியமலரகிதனுமாகிய இறைவன், தன்கண்—தன்னிடத்து, எனக்கு முடியாத அன்புதர — அடியேனுக்கு அள வில்லாத அன்பு தந்தருள, செய்த தவம் என்சொல் — அடியேன் செய்த தவம்யாது (அறியேன் என்றபடி.)

சடசித்தாகிய எல்லாப்பொருட்குந் தலைவனாயினும் அடியவரிடத்தன்றி ஏனையோரிடத் திரானென்பது தோன்ற வன்கண்ணர் நெஞ்சு புகுதாத் நம்பன் என்றார். செல்வன் முதலிய பெயர்கள் ஒருபொருளின்மேல் வந்த பலபெயர். எழில் என்னுந்தொழிற்பெயர் தோற்றத்தின் மேனின்றது. எழு பகுதி, உகரக்கேடு சந்தி, இல்புடைபெயர்ச்சி விகுதி. (௫௬)

தவமுந்தவத்தினுறுபேறுமானதலைவாகளாவின்முதலே
புவனங்களாவையுயிர்வர்க்கமாவைநுகர்போகமாவைபுகலும்
திவசங்களாதிவருகாலமாவைதெளிவார்தெளிந்தவமையத்
திவையன்றிநிற்பையெனினையைநெஞ்சினெவரேமதிப்பருனையே.

(இ-ள்.) தவமும்—அடியவர்செய்யும் தவமும், தவத்தின் உறுபேறும் அத்தவத்தால் வரும் பயனும், ஆனதலைவா—ஆகிய இறைவனே, களாவின் முதலே — திருக்களாநிழலில் எழுந்தருளிய இறைவனே, புவனங்கள் ஆவை எல்லாப்புவனங்களுமாகின்றாய், உயிர் வர்க்கம் ஆவை — அவற்றிலுள்ள சீவ ராசிகளுமாவாய், நுகர்போகம் ஆவை—அவ்வான்மாக்கள் நுகரும்போகங் களும் ஆவாய், புகலும் — சொல்லும், திவசங்கள் ஆதி வருகாலம் ஆவை— நாள்முதலாக வரும் காலதத்துவமாவாய், தெளிவார் —உன்னை உணர்வார், தெளிந்த அமையத்து—உணர்ந்த சமையத்தில், இவை அன்றி நிற்பை. இவை களல்லாமல் நிற்பாய், எனின்—என்றால், ஐய—ஐயனே, உன்னை—உன்னை, நெஞ்சில் எவர்மதிப்பர்—(இவ்வாறுநீகலந்துநிற்றலால்) மனத்தில்கருதுவோர் யாவர், (௫௭)

ஊன்றும்மோதியுனையேவணங்கியுறுபூசைபேணுமுரவோர்
பேரன்றுடைளிக்கவரநல்குமாதிபுனிதாகளாவிலுறைவோய்

முன்னேயுனக்கி யானடியா னுமல்லன்முழுஞானியல்லனெளியே
னென்னேபிழைத்தபிழைகோடியுள்ளவெனினும்புரத்தல்கடனே.

(இ-ள்.) உன்நாமம் ஓதி—உனது திருநாமங்களை எடுத்துக் கூறி, உன்னையே வணங்கி உறுபூசை பேணும் உரவோர்—உன்னையே பணிந்து மிக்க பூசையையுஞ் செய்யும் பெரியோர், பொன் நாடு அளிக்க வரம் நல்கும்—பொன்னுலகத்தைக்காக்க வரந்தருளும், ஆதிபுனிதா—முதலாயுள்ள புனிதனே, களாவில் உறைவோய்—களாநிழலில் எழுந்தருளிய இறைவனே, எளியேன் — அறிவிற் சிறியேனாகியயான், முன்னே உனக்கு— முன்னமே தேவரீருக்கு, யான் அடியான் உம் அல்லன்—யான் தொண்டுபட்டொழுகுவானும் அல்லேன், முழுஞானி அல்லன் — சிவஞானியுமல்லேன், என்னே — ஐயோ, எளியேன் பிழைத்தபிழை— உனக்கு எளியேன் செய்தபிழை, கோடி உள்ள எனின் உம் — கோடியுள்ளனவானாலும், புரத்தல் கடன் — என்னைப் பாதுகாத்தல் உன்கடனாம்.

தேவரீர் அடியாரையும் சிவஞானிகளையும் பாதுகாத்தல் கடனாகக்கொண்டருளினும். கோடிபிழையுள்ள வென்னைப் புறக்கணியாது பாதுகாத்தல் உன் கடனென்பார் புரத்தல் கடனேயென்பார். உறைவோய் முன்னிலை யொருமை எதிர்காலவினைமுற்று. உ பகுதி, வகரமெய் இடைநிலை, ஆய் முன்னிலை யொருமை விகுதி, ஈற்றயல் ஆகாரம் "பெயர்வினையிடத்துனளரயவீற்றயல்" என்னுஞ் சூ—ஆல் ஓகாரமாகத்திரிதல் சந்தி. (௩௮)

கடவாரணத்தினுரிபோர்வைகொண்டகருவேசவாதிமுதல்வா
சடவாதனைக்குளவமேகிடந்துதடுமாறுநெஞ்சமுடையே
னடைவாய்வழுத்திவழிபாடுசெய்துன்னடிபேணவொன்றுமறியேன்
மடமாலகற்றியிடுமாறளிக்கும்வரநீகொடுக்கும்வரமே.

(இ-ள்.) கடவாரணத்தின் உரிபோர்வை கொண்டகருவேச—மதத்தையுடையயானையின் றோலைப்போர்வையாகக்கொண்ட கருவையிலெழுந்தருளிய வீசனே, ஆதிமுதல்வா—ஆதியாகிய முதல்வனே, சடவாதனைக்கு உள்—சடமாயுள்ள பொருள்களின் பழக்கத்துள், அவமே கிடந்து தடுமாறும் நெஞ்சம் உடையேன்—வீணேகிடந்து தடுமாறு கின்றமனத்தையுடையேன், அடைவாய் வழுத்தி—முறையாக வுன்னைத்துதிசெய்து, வழிபாடுசெய்து — தொண்டுபட்டொழுகி, உன் அடிபேண ஒன்றும் அறியேன்—உனது திருவடியை விரும்பச்சிறிதும் அறியேன்(ஆதலால்)மடமைமால்—அறியாமையாகிய ஆணவமலத்தால்வரும் மயக்கத்தை, அகற்றி இடும் ஆறு அளிக்கும் வரம—அகற்றும் வண்ணம் நீகொடுத்தருளும்வரமே, நீ கொடுக்கும் வரம்-நீ அடியேனுக்குக் கொடுக்கும் வரமாம்.

கயாசுரனென்பவன் தேவர்களுக்கு இடையூறுசெய்து வருங்கால் அதற்கஞ்சி அத்தேவர்கள் சிவபெருமானைச்சரணடைந்த காலத்தும் அஞ்சாது அங்கும் வந்தமையால் அவனைக்கொன்று தோலைப்போர்த்தனரென்பது புராண வரலாறு, சடப் பொருள்களுள் ஒவ்வோர் பொருளைக் கருதி நாள்கழித்தவனாதலால் உன்திருவடித்தொண்டு பூண்டொழுகலைச்சிறிதும் அறியேனென்

பார் உன்னடியேன் ஒன்றுமறியேன் எனவும், ஆயினும் இன்று உன்னைச் சரணடைந்தமையால் அம்மயக்கினை யொழிக்கவரமருள வேண்டுமென்பார் மடமாலகற்றி யிடுமாறளிக்கும் வரம் நீ எனக்கு அருளாயென்றார். (௯)

வரையாதியற்றியிடுபாவகாரிமறமன் றிவேறுபுரியேன்
விரைமாலைசுற்றுகுழலாரிடத்துமிகவாசைவைத்துமெலிவேன்
கரையாதிருக்குமனநீகரைத்துன்னடிபாடவைத்தகதைநா
னுரையானிறைக்கமுடியாதுமுக்கணுடையாய்களாவினொளியே.

(இ-ள்.) வரையாது—நன்று தீது என்பவற்றுள் தீதினை நீக்காது, இயற்றி இடு பாவகாரி—அதனைச் செய்யும் பாவமுடையேன் (ஆதலால்) மறம் அன்றிவேறு புரியேன் — அப்பாவத்தொழி லன்றிவேறு சிறிதுஞ் செய்யேன், விரைமாலை சுற்று குழலார் இடத்து — வாசமிக்க கூந்தலை யுடையபெண்களிடத்து, மிகவாசைவைத்து மெலிவேன்—மிகவும் ஆசைகொண்டு மெலியா நின்றேன், கரையாது இருக்கும்மனம் நீகரைத்து—உருகாதிருக்கும் என்மனத்தை நீயுருக்கி, முக்கண் உடையாய் — திரிநேத்திரங்களையுடையவனே, களாவின் ஒளியே—திருக்களா நிழற்கீழெழுந்தருளிய ஒளிப்பிழம்பே, உன் அடி பாடவைத்தகதை—உன்திருவடியைப் புகழ்ந்துபாடவைத்த கதையினை, நான் உரையால் நிறைக்கமுடியாது—நான் சொல்லால் அளவறுக்கவொண்ணாது.

பாவத்தை யன்றிச்சிறிதுஞ் சிவபுண்ணியத்தைச் செய்தறியேனென்பார் வேறுபுரியேனெனவும், அதனால் வந்த தொடர்பென்பார் குழலாரிடத்து மிகவாசைவைத்து மெலிவேன் எனவும், அத்தீவழிப்பட்ட என்னையும் உன் திருவடியைப்புகழ்ந்து பாடவைத்தது கேட்டறியாதகதை என்பார் உன்னடி பாடவைத்த வைத்தகதை எனவும், அக்கதை உரையால்நிறைத்தல் அரிதென்பார் நானுரையானிறைக்க முடியாதெனவும் கூறினார். இதனால் நின்திருவருளால் நிறையச்செய்தல் முடியுமென்பது போதரலால் உதாரவணி. (௬௦)

கோச்சகக்கலிப்பா.

ஒளிமதிமுடித்தவேணியொருவனேகருவையானே
தெளிவுறுநெஞ்சந்தன்னைத்தெருட்டிநின்னிலையைக்காட்டி
யருளினுலென்னையாண்டவருட்குன்றேயுன்னையின்னு
மெளியனேன்பிறவிவேட்டோவேத்திடாதிருக்கின்றேனே.

(இ-ள்.) ஒளிமதிமுடித்தவேணி ஒருவனே—ஒளிவாய்ந்த விளஞ்சந்திரனையணிந்த சடாமுடியையுடையவொருவனே, கருவையானே — திருக்கருவையிலெழுந்தருளிய இறைவனே, தெளிவு உறுதநெஞ்சம் தன்னை-தெளியாத என்மனத்தை, தெருட்டி—தெளியச்செய்து, நின்நிலையைக்காட்டி—நீ அருளும் நிலையை நீகொண்டருளிவந்த ஆசிரியத்திருவுருவாற்காட்டி, அருளினால் என்னைஆண்ட—திருவருளினால் என்னையடிமை கொண்ட, அருட்குன்றே, கருணைமலையே, இன்னும் எளியனேன் — இன்னும் எளியேன், பிறவிவேட்டோ—பிறவியை விரும்பியோ, உன்னை ஏத்திடாது இருக்கின்றேன்—உன்னை வணங்காதிருக்கின்றேன்.

திருவருட்பதிவு வாய்ந்தனனென்பார்—நின்னிலை யைக்காட்டியருளினு லென்னை யாண்ட வருட்குன்றே எனவும், அத்திருவருளினின்றும் நீங்கிய போது விட்டமலவாதனை வந்துதாக்குதலால் எளியனேனென்பார் பிறவி வேட்டோ ஏத்திடா திருக்கின்றேன் எனவுங்கூறினுர். தெருட்டி இறந்த காலப்பிறவினை வினை யெச்சம்.தெருட்டு பிறவினைவினைப் பகுதி,வேட்டு இறந்தகால வினையெச்சம். வேள்பகுதி, டகரமெய் இடைநிலை,ளகரம் டகரமாகத் திரிதல் சந்தி, உ எச்சவிகுதி, ஓ காரம்வினுப் பொருட்டு. (௬௧)

இருக்கினுநிற்கும்போதுமிரவுகண்டுயிலும்போதும்
பொருக்கெனநடக்கும்போதும்பொருந்தியேதுய்க்கும்போதும்
முருக்கிதழ்க்கனிவாயாரைமுயங்கிநெஞ்சழியும்போதுந்
திருக்களாவுடையநம்பாசிந்தையுன்பாலதாமே.

(இ-ள்.) இருக்கும்போதும் நிற்கும்போதும் — இருக்கும் பொழுதும் நிற்கும்பொழுதும், இரவுகண்துயிலும் போதும்—இரவில் நித்திரைசெய்யும் போதும்,பொருக்கு என நடக்கும்போதும்-விரைந்து நடக்கும்போதும்,பொருந்தியே துய்க்கும்போதும்—அறுசுவை யுணவோடு நுகருங்காலத்தும், முருக்கு இதழ்கனிவாயாரை—முருக்கமலர் போன்ற இதழையும் கோவைக்கனிபோலும் வாயையு முடையபெண்களை, முயங்கி — கூடி, நெஞ்சு அழியும்போது மனமழியும்போதும், திருக்களாஉடைய நம்பா—திருக்காளா நீழலிலெழுந்தருளிய இறைவனே, சிந்தை உன்பாலது ஆம்—அடியேன் மனம் உன்னிடத்ததாம்.

இதனுற்சிவோகம் பாவனைவந்து கூடியதென்பார் சிந்தையுன்பாலதாம் என்ருர். இருக்கினும் இன் நவிர்வழிவந்தசாரியை. முயங்கி இறந்தகாலவினையெச்சம் முயங்கு பகுதி. (௬௨)

சிந்தனையுனக்குத்தந்தேன்றிருவருளெனக்குத்தந்தாய்
வந்தனையுனக்குத்தந்தேன்மலரடியெனக்குத்தந்தாய்
பைந்துணருனக்குத்தந்தேன்பரகதியெனக்குத்தந்தாய்
கந்தனைப்பயந்தநாதாகருவையிலிருக்குந்தேவே.

(இ-ள்.) கந்தனைபயந்தநாதா—முருகக்கடவுளைத் தந்தருளிய இறைவனே, கருவையில் இருக்கும் தேவே — திருக்கருவையிலெழுந்தருளிய தேவனே, சிந்தனை உனக்குதந்தேன்—என்மனத்தை உனக்குக்கொடுத்தேன், திருவருள் எனக்குதந்தாய்-உனது திருவருளினை எனக்குத்தந்தருளினுய்,வந்தனைஉனக்கு தந்தேன்—வணக்கத்தை உனக்குத்தந்தேன், மலர் அடி எனக்கு தந்தாய்—தாமரைமலர்போன்றதிருவடியை எனக்குத்தந்தருளினுய், பைந்துணர் உனக்கு தந்தேன்—பசிய பூங்கொத்தை உனக்குத்தந்தனன்—பரகதி எனக்குதந்தாய் அதற்கீடாக முத்தியை எனக்குத்தந்தருளினுய்.

இடைய ரூதநியானத்தால்•திருவருள் கைகூடுதலும், வணங்குதலால்திருவடிப்பேறு கைகூடுதலும் சிவார்ச்சனையால் முத்திகூடுதலும் இதனுல் கூறப்பட்டன. இழிந்த பொருளைக்கொடுத்து உயர்ந்தபொருளைப் பெற்றமை கூறு

தலால் இதுமாற்று நிலையணி, இதனை வடநூலார் பரிவிர்த்தி யலங்கார மென்பர். (கூங)

தேவனேநின்னையல்லாற்பிறிதொருதேவையெண்ணேன்
பாவனைநின்னினல்லாற்பிறிதொருபற்றுமில்லேன்
யாவையுங்காட்டக்கண்டேனென்னுளேநின்னைக்கண்டேன்
காவலாகருவையானேயினிமற்றோர்காட்சியுண்டோ.

(இ-ள்.) தேவனே—அயன் முதலிய தேவர்களுக்குத் தேவனே, நின்னை அல்லாமல் பிறிது ஒருதேவை எண்ணேன் — உன்னையன்றி மற்றொருதெய் வத்தை ஓர் பொருளாகக் கனவிலுங் கருதேன், நின்னின் அல்லால் பிறிது ஒரு பாவனை சற்றும் இல்லேன்—உன்னையல்லாமல் பிறிதொருபாவனை பற்று தலுமில்லேன், யாவையும் காட்டகண்டேன் (அதனால்) உனதுதன்மை எல் லாவற்றையும் நீயே உணர்த்தவுணர்ந்தேன், (ஆதலால்) என் உள்ளே நின்னை கண்டேன்—என்னிதயத்தே உன்னைத்தரிசித்தேன், காவலா—எல்லாவுயிர்களை யுங்காத்தலில் வல்லவனே, கருவையானே —திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே, இனிமற்று ஓர் காட்சி உண்டோ—இனி இத்திருக்காட்சி யன்றி வேறொருகாட்சியு முளதோ, (இல்லை என்றபடி.)

கேள்வியால் விமரிசமும் பாவனையும் உடையே னென்பார் தேவனே யுன்னையல்லால் பிறிதொருதேவை யெண்ணேன் எனவும், அவனது திருவரு ளுணர்த்த அவன்றன்மை யுணரவேண்டுமென்பார் யாவையுங்காட்டக் கண் டேன் எனவும். அவனைத் தெரிசிக்கும் பயிற்சிகை கூடியதென்பார் என்னுளே நின்னைக்கண்டேன் எனவும், அக்காட்சி முத்தியருளுவதென்பார் இனிமற் றோர் காட்சியுண்டோ எனவுங் கூறினார். ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. அல்லால் இடைக்குறை விகாரம். (கூச)

உண்டெனமறைகளோதுமொருதனிமுதலேநாளு
மண்டருமுனிவர்தாமுங்காண்கிலரடியேனுன்னைத்
தெண்டிரைவளாகமுற்றுந்தேடினேன்றேடித்தேடிக்
கண்டனன்களாவினீழல்கருவைமாநகரத்தானே.

(இ-ள்.) கருவைமாநகரத்தானே—கருவை என்னும் பெரிய திருநகரத் தில் வாழ்கின்றவனே, உண்டு என்ன மறைகள் ஓதும்—உண்டென்று வேதங் கள்கூறும், ஒருதனி முதலே—ஒப்பில்லாத முதல்வனே, நாளும்—எந்நாளும், அண்டர்தாம் உம் முனிவர்தாம் உம் காண்கிலர்—தேவர்களும் முனிவர்களும் உன்னைக் கண்டறிகிலர், அடியேன் உன்னை—நாயிற் கடைப்பட்டேனாகிய யான் உன்னை, தெண்திரைவளாகம் முற்றும் தேடினன்—கடல் சூழ்ந்த வுலக முற்றும் தேடினேன், தேடி தேடி—அங்கு உன்னைத் தேடிக்காணாது, களா வின் நீழல் கண்டனன்—திருக்களா நிழலில் உன்னைத் தரிசித்தனன்.

திருக்களாநிழலில் எழுந்தருளிய இறைவன் தன்னையாண்டு கொண்டவ னென்பது தோன்றக்கண்டனன் களாவினீழல் என்றார். தெண்டிரை என்னுந் தானி தானமாகிய கடல்மேல் நிற்றலால் தானியாகுபெயர். தேடித் தேடி அவலப்பொருளில் வந்த அடுக்குத் தொடர். (கூரு)

தானெனவுருவமாகிச்சங்கற்பவிகற்பங்கொண்டு
வானகமாகிமண்ணைக்கடல்களாய்மலைகளாகி
யீனமாமனப்பேய்செய்தவிந்திரசாலந்தன்னா
லுனையுணரமாட்டேன்களாநிழனண்ணுவானே.

(இ-ள்.) களாநிழல் நண்ணுவானே—திருக்களா நிழலில் எழுந்தருளிய இறைவனே, ஈனம் ஆம் மனப்பேய்—இழிந்த எனது மனமென்னும்பேய், தான் என்ன உருவம் ஆகி—எல்லாப் பொருளுந்தானென்னும் வடிவமைந்து, சங்கற்ப விகற்பங்கொண்டு—சங்கற்பத்தையும் விகற்பத்தையுங்கொள்ளுதலால், வானகம் ஆகி—விண்ணுலகமாயும், மண் ஆகி—மண்ணுலகமாகியும் கடல்களாய்—கடல்களாகியும், மலைகளாய்—மலைகளாகியும், செய்த இந்திரசாலந் தன்னால்—செய்த இந்திரசாலத்தினால், நான் உன்னை உணரமாட்டேன்—நான் உனது இயல்பையறியாதொழிந்தேன்.

சங்கற்பமாவது-வான், மண், கடல், மலை என ஒருபொருளைக் கருதுதல். விகற்பமாவது வானுக்குமாறாய் மண்ணும், மண்ணுக்கு மாறாய்க் கடலும், கடலுக்கு மாறாய் மலையையுங் கருதுதல். உடைமைக்கும் உடையதற்கும் ஒற்றுமை யுண்மையால் மாயாவாதவழியிற் சென்றேனென்பார் ஈனமாம்மனப் பேய் செய்த இந்திரசாலந் தன்னால் எனவும், அதனால் நின்னை உணர்ந்திலனென்பார் நானுன்னையுணரமாட்டேன் எனவுங்கூறினார். (சுசு)

நண்ணருந்தவங்கள்செய்துநானுடல்வருந்தமாட்டேன்
எண்ணுமைம்புலனுஞ்செற்றங்கிருவினையறுக்கமாட்டேன்
கண்ணகன்ஞாலம்போற்றக்களாநிழலமர்ந்துவாழு
மண்ணலேயினியெவ்வாறேவடியனேனுய்யுமாறே.

(இ-ள்.) நண்ணரும் தவங்கள் செய்து—செய்தற்கரிய தவங்களைச் செய்து, நான் உடல் வருந்த மாட்டேன்—நான் சரீரம் வருந்த மாட்டேன், எண்ணும் ஐம்புலன் உம் செற்று—சத்தமுதலிய விடயங்களிற் சென்று கருதும் சுரோத்திர முதலிய இந்திரியங்களையும் ஒழித்து, அங்கு இருவினை அறுக்கமாட்டேன்—அதனால் விளையும் நல்வினை தீவினைகளை வேரோடறுக்க மாட்டேன், கண் அகன் ஞாலம்போற்ற-இடம்பரந்த நிலவுலகு துதிக்க, களா நிழல் அமர்ந்து வாழும்—திருக்களா நிழலில் விரும்பி வாழும், அண்ணலே—இறைவனே, அடியனேன் உய்யும் ஆறு—அடியேனாகிய யான் பிழைக்கும் வண்ணம், இனி எ ஆறு—இனி எவ்வகை.

புண்ணியமும் பொன் விலங்குபோறலின் இருவினை யென்றார். கண்ணகன் இடம் என்னும் பொருண்மேனிற்றலால் ஒருபொருட் பன்மொழி. வருந்த மாட்டேன் எதிர்மறைத் தன்மை ஒருமைத்தெரிநிலைவினைமுற்று. உணர் பகுதி. அ சாரியை, மாட்டு வன்மையுறுத்தற் பொருளில் வந்த விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, ஆ எதிர்மறை விகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்தும் ஒரு பகுதி. ஏன் தன்மை யொருமை விகுதி ஆகாரங்கெடுதல் சந்தி. வருந்துதல், அறுத்தலால் உய்தல் கூடாமையின், குற்றத்தால் குணமுண்டாதலைக்கண்டு அக்குற்றத்தைப் பிரார்த்தித்தலால் வேண்டலணி. (சுஎ)

உய்யவோருறுதிநாடாயுலகினிற்சமயமென்னும்
வெய்யவார்கலியின்வீழ்ந்துவெந்துயருழக்கின்றேற்குத்
தையலோர்பாகம்வைத்துத்தண்டமிழ்க்கருவைவாழு
மையன்வந்தாண்டுகொண்டததிசயம்விளைக்குமாறே.

(இ-ள்.) உய்ய ஓர் உறுதி நாடா—கடைத் தேறவோருறுதியை நாடி, உலகினில் சமயம் என்னும்—உலகில் வழங்கும் புறச்சமயங்க ளென்னும், வெய்ய ஆர் கலியில் வீழ்ந்து—கொடிய கடலில் வீழ்ந்தழுந்தி, வெம்துயர் உழக்கின்றேற்கு—கொடியதுன்பத்தில்வருந்துகின்ற எனக்கு, தையல் ஓர்பாகம் வைத்து—உமையம்மையை இடப்பாகத்தில் வைத்து, தண் தமிழ் கருவை வாழும் ஐயன்—தமிழ் வழங்கும் திருக்கருவைப் பதியில் வாழும் இறைவன், வந்து ஆண்டுகொண்டது—எழுந்தருளி வந்து அடிமைகொண்ட செய்தி, அதி சயம் விளைக்கும் ஆறு—நினைக்குந்தோறும் அதிசயத்தை விளைக்கும் வகையாம்.

யான் உய்யும் வகையை நாடிப் புறச்சமயத்திற்புக் கழுந்தி அதனையுணர்ந் திலேனென்பார் வெய்யஆர்கலியின் வீழ்ந்து வெந்துயருழக்கின்றேன் எனவும், ஆன்மாக்களுக்குப் பக்குவம் வருவித்து உய்யும் வண்ணம் அருளும் கருணை நிதி என்பார்தையலோர்பாகம் வைத்துவாழும்ஐயன்வந்து ஆண்டுகொண்டது என வும், ஆன்மாக்களின் குறிப்புணர்ந்து அருளுவதோர் வியப்பு என்பார் அதிசயம் எனவும் கூறினார். உழக்கின்றேன் தன்மை ஒருமை நிகழ்கால வினைமுற்று உழ பகுதி. புறச்சமயங்களாவன உலோகாயதம், சௌத்திராந்திகம், யோகா சாரம், மாத்திமீகம், வைபாடிகம், ஆருகதம். (கூஅ)

அதிசயமுளத்திற்காட்டியகம்புறந்தானுக்காட்டித்
துதிசெயக்கவிநாக்காட்டித்தொடக்கறுநேயங்காட்டி
மதியினிற்களிப்புங்காட்டிவந்தெனையாண்டுகொண்டான்
கதியெனவுலகம்போற்றக்களாநிழலமர்ந்தநாதன்.

(இ-ள்.) கதிஎன உலகம்போற்ற—நீயே கதிஎன்று உலகு துதிக்க, களாநிழல் அமர்ந்த நாதன்—களாநிழலில் எழுந்தருளிய இறைவன், அதிசயம் உளத்திற்காட்டி—அதிசயத்தை என் மனத்திற்காட்டி, அகம்புறம் தானாக காட்டி—ஒருபொருளின் உள்ளும் புறம்பும் தானாக நிற்றலைக் காட்டி, கவி துதி செய நாகாட்டி—கவியாற்றுதிசெய்ய நாவைத்தந்து, தொடக்கு அறுதநேயங் காட்டி—இடையறுத அன்பினையுங்காட்டி, மதியினில் களிப்பும் காட்டி—மனத் தில் ஆனந்தக் களிப்பையுங் காட்டி, வந்து என்னை ஆண்டு கொண்டான்—வந்து என்னை அடிமை கொண்டான்.

. அவரவர் கருத்திற்கேற்ப அடியவருளத்தில் நக்ஷத்திரம் சந்திர சூரியர் களைப்போல விளங்குவானென்பார் அதிசயமுளத்திற் காட்டி எனவும், அவ் விளக்கத்தால் எள்ளுக்குள் எண்ணெய்போல உள்ளும் புறம்பும் தான் விளங்கு தலை உணரக்காட்டுவானென்பார் அகம்புறந் தானுக்காட்டி எனவும், அக் காட்சியைப் புனைந்துகூற நாத்தந்தானென்பார் துதிசெயக் கவிநாக் காட்டி எனவும், அக்கவிமூறுதிய அன்[illegible] யத்தந்தானென்பார் தொடக்கறு நேயங் காட்டி எனவும், அந்நேயத்தால் இன்பம் விளைவித்தனனென்பார் மதியினிற்

களிப்புக்காட்டி எனவுங் கூறினர். மதிமுதனிலைத் தொழிலாகு பெயராய் மனத்தின் மேனின்றது. இது ஒன்றன் பின்னொன்று கூறுதலால் காரண காரிய மாலையணி. (௬௯)

நாதனேகவிஞனேவநள்ளிருட்போதிற்சென்ற
தூதனேயிமயவல்லிதுணைவனேகருவையானே
போதநேயத்தினின்பொலன்கழற்றொண்டுபூண்டு
மேதநீயகற்றிடாமலிருப்பதுமிசையதாமோ.

(இ-ள்.) நாதனே--இறைவனே, கவிஞன் ஏவ--நின்னைப்பாடும் ஒருகவிஞன் உன்னை ஏவ, நள் இருள் போழ்தில்—நடு இராத்திரியில், சென்றதூதனே பரவைநாய்ச்சியாரில்லிற்சென்றதூதுவனே, இமயவல்லி துணைவனே-இமயமலையிற் றோன்றிய உமையம்மையின் கேள்வனே, கருவையானே — திருக்கருவையில் எழுந்தருளிய இறைவனே, போதம் நேயத்தினால்—சிவஞானத்தின்வழி வந்த அன்பினால், நின்பொலன் கழல்—உன்பொன்போலும் அரியதிருவடிக்கு, தொண்டுபூண்டும்—அடியேனடிமை பூண்டும், நீ ஏதம் அகற்றிடாமல் —என்மலக்குற்றத்தை நீ ஒழிக்காமல், இருப்பது உம்—நீ வாளாவிருத்தலும், இசையது ஆம் ஓ—உனக்குப்புகழாகுமா.

உன்னைப்பாடுதற்றொழி லொன்றையே கொண்ட ஒருகவிஞர் இரக்கமில்லாமலேவவும் அவர் பால் நீ கொண்ட அன்பால் யாருஞ் செல்லுதற்கரிய நடுராத்திரியில் ஒருபெண்பா லிடத்தில் தூதுசென்றவன் நீயல்லவா அடியேன் அன்புமுதிர்ச்சியால் பலகாலுந் தொண்டு பூண்டொழுகவும் அதற்கு நீ இரங்கி யருளாதொழியில் உன்புகழ்க்கு ஓரிழுக்குவருமே என்பார் இருப்பதும் இசையதாமோ என்றார். ஆளுடைய நம்பிகள் சங்கிலி நாய்ச்சியாரைத்திருமணம் புணர்ந்தமையைப்பரவை நாயச்சியார்கேட்டு மிக்கமுனிவு கொண்டிருத்தலைத் தீர்த்தற் பொருட்டு அந்நாயனர் எழுந்தருளவும் அதற்கிணங்காமையைத் திருவாரூரி லெழுந்தருளிய இறைவனிடத்துக் குறையிரப்ப, அவ்விறைவர் அம்முனிவை நீக்கியருளுதற்பொருட்டு அந்நாய்ச்சியார்திருமனைக்குத்தூது சென்றன ரென்பதும், இமயபர்வத அரசன் உமையம்மையைத் திருமகளாய்ப் பெறப்பன்னாள் தவஞ் செய்யுங்காலையில் அதற் கிரங்கி அவ்வுமையம்மை அம்மலையினுள்ள ஒருதாமரை மலரில் வீற்றிருந்தன ரென்பதும் புராணவரலாறுகள். இசையது அதுபகுதிப் பொருள் விகுதி. (௭௦)

கலிவிருத்தம்.

இசையுஞ்செல்வமுந்திருவுமின்பமு
மசைவிலாதபேரறிவுமுத்தியும்
விசையமுந்தருங்கருவைமேவினோன்
றிசையுடுத்தவன்சீர்படிக்கவே.

(இ-ள்.) கருவைமேவினோன்—திருக்கருவையி லெழுந்தருளினவனும், திசை உடுத்தவன்—திக்கினையாடையாகவுடுத்தவனும், (ஆகிய இறைவனது) சீர்படிக்க—புகழைப்பாட, (அப்பாடுதல்) செல்வம் உம் திருவும்—செல்வத்தையும் பொலிவையும், இசையும் இன்பம் உம்—புகழையும் இன்பத்தையும்,

விசையம் உம்—வெற்றியையும், அசைவு இல்லாதபேர் அறிவும் முத்தியும் தரும்—கம்பித்தலில்லாத சிவஞானத்தையும் மோக்ஷத்தையுந் தாராநிற்கும்.

படிக்க என்னும் வினை யெச்சத்தினின்று பிரிந்த படித்த என்னுந் தொழிற்பெயர் வினைமுதலாய் நின்று தருமென்னும் பயனிலைகொண்டது. செல்வந் திருமுதலியன முன்பின்னாகமாறி நின்றன, செய்யுளாதலால். செல்வத்தாற் பொலிவும், பொலிவால் இசையும், இசையாலின்பமும், இன்பத்தால் விசையமும், விசையத்தால் பேரறிவும், பேரறிவால் முத்தியும் என ஒன்றற்கொன்று காரணமாய் நிற்றலால் காரணமாலையணி. (௭௪)

படியளந்தவன்பதுமமேயவ
னடிமுடித்தலமறியொணாதவன்
கடிகொண்மாமலர்க்களவினீழலான்
குடியிருக்கவென்னெஞ்சுகோயிலே.

(இ-ள்.) படிஅளந்தவன்—நிலவுலகை அளந்ததிருமாலாலும், பதுமமேயவன்—தாமரைமலரில் வசிக்கும் பிரமனாலும், அடித்தலம் முடித்தலம் அறியொண்ணாதவன்—தனது திருவடித்தலமும் திருமுடித்தலமும் அறிதற்கரியவனும், கடிகொள்மாமலர்—வாசமமைந்த வண்டுகள் மொய்த்த மலர்களை யுடைய, களவின் நீழலான்—திருக்களா நிழலில் எழுந்தருளின வனுமாகிய இறைவன், என் நெஞ்சுகோயில்—எனது நெஞ்சந் திருக்கோயிலாக, குடி இருக்க—குடி யிருக்கக்கடவன்.

சிவபெருமானுக்குப் பவன் புவன் என்னும் பெயர்க்காரணம் உண்மையால் என்னெஞ்சு கோயில் குடியிருக்க வென்றார். மா என்னும் பலபொருள் ஒரு சொல் மல ரென்னுஞ் சார்பால் வண்டின்மேனின்றது. (௭௫)

கோயில்சூழவுங்குடங்கைகொட்டவும்
வாயிற்பாடவும்வணங்கியாடவு
மாயிரம்பெயர்க்கருவையாதிப
னேயமுற்றுவாழ்தொண்டர்நேர்வரே.

(இ-ள்.) ஆயிரம் பெயர்—ஆயிரந்திருநாமங்களையுடைய, கருவை ஆதிபன்—திருக்கருவையி லெழுந்தருளிய இறைவனது திருவடிக்கீழ், நேயம் உற்றுவாழ் தொண்டர்—நேயமிகுந்து வாழும் அடியார், கோயில் சூழ உம் அவனது திருக்கோயிலைப்பிரதக்ஷிணஞ்செய்யவும், குடங்கைகொட்டவும்—உள்ளங்கைகொட்டவும், வாயில்பாட உம்—திருவாயிலி னின்று பாடவும், வணங்கி ஆட உம்—அவனைவணங்கியாடவும், நேர்வர்—உடம் படுவார். (௭௬)

நேர்ந்தநெஞ்சமேநெடிதுவாடிநீ
சோர்ந்ததுன்பமுந்துயரும்போக்குவான்
வார்ந்தசெஞ்சடைக்கருவைவானவ
னார்ந்தபேரருளருவியாடவே.

(இ-ள்.) நேர்ந்த நெஞ்சமே—என்வழி நின்றமனமே, வார்ந்த செஞ்சடைகருவை வானவன்—நீண்ட செவந்தசடையை யுடைய இறைவனது, ஆர்ந்தபேர் அருள் அருவி ஆட—வற்றாத பெரிய அருளாகிய அருவியில்

நீராட, நீ நெடிதுவாடி—நீ என்வழி நில்லாத காலையில்மிகவும் வாடி, சோர்ந்த துன்பம் உம் துயர் உம்போக்குவான்—நீ சோர்வுற்ற துன்பத்தையும் வருத்தத்தையும் போக்கி அருள்வான், (ஆதலால் ஆடுகென்றபடி.)

துன்பமாவதுதான் பெற்றதொன்றை யிழந்தகாலத்தும், தான்முயன்றதொருபொருள் கிட்டாதகாலத்துந் தோன்றுவது, அதனைத்துன்ப மென்னும் பெயர்க்காரணத்தால் உணர்க. துன் அடைதல் (பகுதி) பம் புடைபெயர்ச்சி விகுதி, துன்னுத லென்னும் பொருட்டு. வருத்தமாவது இகத்திற்குரிய சாதனங்களைப் பெறுமையால் என்று முள்ளது. இதனால் வேறுபாடறிக. (எ௪)

ஆடுமட்கலத்திகிரியொத்தலைந்
தோடுநெஞ்சமுங்கவலையோர்ந்துனை
நாடுமோதமிழ்க்கருவைநம்பனே
யேடுசேர்மலர்க்கருவையீசனே.

(இ-ள்.) தமிழ்கருவை நம்பனே—முத்தமிழ் வழங்கும் திருக்கருவையி லெழுந்தருளிய இறைவனே, ஏடு சேர்மலர்கருவை ஈசனே—இதழ்செறிந்த மலரையுடைய திருக்களா நீழலில் எழுந்தருளிய பெருமானே, ஆடும்—சுழன்றாடும், மட்கலம் திகிரி ஒத்து—மட்கல மமையுங்குயவன் சக்கரத்தை யொத்து. அலைந்து ஓடும் நெஞ்சம் உம்—விடயங்களி லலைந்து செல்லும் எனது மனமும், கவலை ஓர்ந்து—தான்செல்லுதால் நேருங்கவலையைச் சீர்தூக்கி, உன்னை நாடும் ஓ—அதனைப்போக்க வுன்னைச்சரணடையுமோ. (நீயேகூறுயென்றபடி)

ஓகாரம் வினாப்பொருட்டு. ஒத்து, ஓர்ந்து இறந்தகால வினையெச்சங்கள் ஒ உவமவுருபிடைச் சொல்லடியாகப் பிறந்த பகுதி, தகரமெய் இடைநிலை தகரமெய் சந்தி, உ எச்ச விகுதி. ஓர் வினைப் பகுதி. (எ௫)

ஈசனேயிடத்திமயவல்லியி
னேசனேயியற்கருவைநித்தனே
பூசியேனுனைப்புனிதவாகமம்
வாசியேன்பிறப்பென்றுமாயுமே.

(இ-ள்.) ஈசனே-எல்லாவற்றையு மாள்பவனே, இடத்து இமயவல்லியின் நேசனே—இடப்பாகத்தி லுள்ளவுமையம்மை யினிடத்து அன்புள்ளவனே, இயல்கருவை நித்தனே—இயற்றமிழ்வழங்கும் கருவையிலெழுந்தருளிய நித்தனே, உன்னை பூசியேன்—உன்னைப்பூசித்திடேன், புனித ஆகமம் வாசியேன்—களங்கமில்லாத சிவாகமத்தைவாசித்தலொழிந்தேன், என்றுபிறப்புமாயும்—எக்காலத்து என்பிறவியொழியும். (கூறியருளாயென்றபடி.)

உயிர்களிடத்துக்கருணை யுள்ளானென்பார் இடத்திமய வல்லிநேசனே யென்றும், என்றும் அழிதலில்லாதவனென்பார் நித்தனே என்றும், ஆ பாசமெனவும், க புசுவெனவும், ம பதி எனவும் பொருட்கு நிற்றலால் திரிபதார்த்தலக்ஷணமுணர்த்து நூலெனவும், ஆ சிவஞானம், க மோக்ஷம், ம மலநாசம் என்னும் பொருட்கு நிற்றலால் ஆன்மாக்களுக்கு மலத்தைநாசம், பண்ணிச் சிவஞானத்தையுதிப் பித்து மோக்ஷத்தைக் கொடுக்குநூலெனவும் நிற்றலால் ஆகமம்வாசியேனெனவுங் கூறினர். (எ௬)

பிறவிமாயவுமருள்பெருக்கவு
துறவியாய்வனந்துன்னல்வேண்டுமோ
விறைவனெம்பிரான்களவிலீசனென்
றறையுமுன்னமேயனைத்துமெய்துமே.

(இ-ள்.) இறைவன் என்று—எப்பொருட்குந் தலைவனென்றும், எம்பிரான் என்று—எமது பெருமானென்றும், களவில் ஈசன் என்று—திருக்களாநீழலில் எழுந்தருளிய ஈசனென்றும், அறையும்முன்னமே—வாழ்த்துதற்கு முன்னமே, அனைத்தும் எய்தும்—எல்லாநன்மைகளும் வந்து கைகூடும், (ஆதலால்), பிறவிமாய உம்—பிறப்பொழியவும், அருள்பெருக்க உம்—அவனது திருவருள் பெருகச்செய்யவும், துறவி ஆய் வனம்துன்னல் வேண்டுமோ, துறவறத்தையுடையவனாய்க் காட்டில் தவஞ்செய்ய ஒருவனடையவேண்டுமோ (வேண்டாமென்றபடி)

பிறவி, துறவி தொழிலாகுபெயராய்ச் சனனத்தின் மேலுந், துறந்தவன் மேலும் நிற்றலால்தொழிலாகுபெயர்கள். பிற, துற பகுதிகள், வி புடையொர்ச்சி விகுதி. துறந்தோனென்னும் பொருண்மேனின்றால் இ பெயர்ப்பொருள்விகுதி எனக்கொள்க. (௭௭)

எய்தியென்செயுங்கருவையெம்பிரான்
கொய்யுநாண்மலர்க்கொன்றைவேணியான்
செய்யபாதமென்சென்னிவைக்கவே
வெய்யகூற்றுவன்வீசுபாசமே.

(இ-ள்.) கருவை எம்பிரான்—திருக்கருவையிலெழுந்தருளிய எமது பெருமானும், கொய்யுநாள் மலர்கொன்றை—கொய்தற்குரிய அன்றலர்ந்த கொன்றை மலர்மாலையையணிந்த, வேணியான்—சடாமுடியையுடைய வனுமாகிய இறைவன், செய்யபாதம்—தனது செவந்ததிருவடியை, என்சென்னிவைக்க—எனது சிரத்தில் சூட்டுதலால், வெய்ய கூற்றுவன்—கொடிய இயமன், வீசுபாசம்—வீசாநின்றபாசம், எய்திஎன்செயும் — என்னையடைந்து யாதுசெய்யும், (அடையாதென்றபடி)

மலநீக்கத்தில் திருவருட்பதிவு செய்தன னென்பார் செய்யபாதமென் சென்னிவைக்க எனவும், அத்திருவருட்பதிவு வாய்ந்த என்னிடத்து இயமனுக்குவேலை இல்லையென்பார் கூற்றுவன்பாசம் எய்தியென்செயு மெனவுங் கூறினர். வைக்க காரணத்தின் மேனிற்றலால் இறந்த காலத்தின்மேல் வந்தவினையெச்சம். வைபகுதி. (௭௮)

பாசநீக்கிமூவகைப்பசுக்களை
மாசின்முத்தியாம்வனத்தின்மேய்த்திடு
மீசன்மின்னைநேரிடைச்சிகாதல
ளுசில்பால்வணத்தண்டர்நாதனே.

(இ-ள்.) மூவகை பசுக்களை—விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்று மூவகையான் மாக்களை, (பசுக்கூட்டங்களை) பாசம் நீக்கி — மலபந்தத்தினின்று நீக்கி, (கட்டினின்று நீக்கி) மாசு இல்—குற்றமில்லாத, முத்தி

ஆம் வனத்தில்—மோக்ஷமாகிய ஆரணியத்தில், ஈசன்—ஈசனும், மின்னே நேர் இடைச்சி—மின்னலை யொத்த இடையையுடைய உமையம்மைக்கு (ஆய்ச்சிக்கு) காதலன்—விருப்பஞ்செய்வோனும், ஆசு இல்—குற்றமில்லாத, பால் வண்ணத்து அண்டர் நாதன்—பால்போலும் நிறத்தையுடைய தேவர்களுக்கு (பாலாற்பொலிவுவாய்ந்த இடையர்களுக்கு) தலைவனும் ஆகிய இறைவன், மேய்த்திடும்—மேய்ப்பான்.

இது இயைபுபற்றிவந்த செம்மொழிச்சிலேடையணி. (எக)

அண்டகோளமுமகிலலோகமு
மண்டுசெந்தழல்வடிவமானவன்
முண்டகக்கழற்கருவைமூர்த்தியைக்
கண்டகண்ணிணைகளிதுளங்குமே.

(இ-ள்.) அண்டகோளம் உம்—அண்டகொளகைக் கப்புறத்திலும், அகில லோகம் உம்—எல்லாவுலகங்களுக்கு அப்புறத்திலும், மண்டு—மேற்பட்ட, செந்தழல் வடிவம் ஆனவன்—செவந்த தீப்பிழம்பின் வடிவாயமைந்தவனுகிய, முண்டகம் கழல்—தாமரை மலர்போன்ற திருவடிகளையுடைய, கருவைமூர்த்தியை—திருக்கருவையி லெழுந்தருளிய இறைவனை, கண்டகண் இணை—தெரிசித்த இரண்டு கண்களும், களிதுலங்கும்—ஆனந்தக் களிப்பிலழுந்தும்.

திருமாலும் பிரமனும் நாம்பிரமம் நாம் பிரமமென்று அகங்கரித்துத்திருமால் பன்றியாகவும், பிரமன் அன்னமாகவும் சென்று திருவடியுந் திருமுடியுங் காணுது வருந்த அவர்களுக்கிடையே சோதித்தம்பமாய் நின்முனென்பது புராணவரலாமுதலால் செந்தழல் வடிவமானவனென்முர். (அ0)

கலிநிலைத்துறை.

துளங்குநெஞ்சமேதுயருறுவகையொன்றுசொல்வேன்
வளங்கொள்செந்தமிழ்க்கருவையம்பெரும்பதிமருவி
விளங்குபானிறமேனியன்றிருவடிதொழுதா
லளந்துகாண்பருந்துறக்கவாழ்விம்மையினளிப்பான்.

(இ-ள்.) துளங்கு நெஞ்சமே—விடயங்களிற் கலங்குமனமே, துயர் உறுதவகை ஒன்று சொல்வேன்—நீ துன்பம் அடையாத வண்ணம் ஒருசெய்தி சொல்லா நின்றேன், வளம்கொள் செந்தமிழ்—வளமமைந்த செந்தமிழ் வழங்கும், கருவையம்பெரும்பதி மருவி—திருக்கருவையென்னும் அழகிய பெரிய திருப்பதியி லெழுந்தருளி, விளங்குபால் நிறமேனியன்—விளங்கா நின்றபால் போலும் வெள்ளிய நிறம்வாய்ந்த திருமேனியையுடைய பால்வண்ணர், திரு அடி தொழுதால்—திருவடியை வணங்கினல், அளந்து காண்பரும்—அளவு செய்து காணுதற்கரிய, துறக்கம் வாழ்வு—சுவர்க்க வாழ்க்கையை, இம்மையின் அளிப்பான்—இப்பிறப்பிற் கொடுத்தருளுவான்.

அளந்து இறந்தகால வினையெச்சம். அள பகுதி. (அக)

இம்மையின்பமுமிறுதியின்முத்தியுமளிக்கு
நம்மையாளுடைநாயகன்கருவைநன்னகரிற்

கொம்மைவெம்முலைக்கொடியொடுமினிதுவீற்றிருக்க
விம்மிமானுடர்வெந்துயருழப்பதென்விரகே.

(இ-ள்.) இம்மை இன்பம் உம்—இகத்திலின்பமும், இறுதியில் முத்தியும்—முடிவில் மோக்ஷத்தையும், அளிக்கும்—ஆன்மாக்களுக்குக் கொடுத்தருளும், நம்மை ஆளுடை நாயகன்—நம்மையாளாகவுடைய இறைவன், கருவை நல்நகரில்—திருக்கருவை யென்னு நல்ல திருநகரத்தில், கொம்மை—திரண்ட வெம்முலை கொடியொடும் — விருப்பந்தரும் தனங்களையுடைய பூங்கொடிபோன்ற உமையம்மையோடும், இனிது வீற்றிருக்க—நிகரின்றி எழுந்தருளியிருக்க, மானுடர் விம்மி—மக்கட் பிறப்பினர் ஆசையிற் பொருமி, வெந்துயர் உழப்பது கொடியதுயரத்தில் வருந்துதல், என் விரகு—என்ன வறிவோ வறியேன்.

இன்பம் பண்புப்பெயர், இன் பகுதி, பம் பண்புப்பெயர் விகுதி, உழப்பது எதிர்கால இடைநிலை பெற்றுவந்த தொழிற்பெயர். உழ பகுதி, பகரமெய் சந்தி, பகரமெய் இடைநிலை, அ சாரியை, து புடைபெயர்ச்சி விகுதி. இம்மை மை, கருமை, அது பண்பாகுபெயராய் ஆணவத்தின் மேலும், அது கருவியாகு பெயராய்ப் பிறப்பின்மேலும் நிற்றலால் அடையடுத்த இருமடியாகு பெயர். ()

விரகினாற்சிலர்செய்திடும்வினைகளுமுண்டோ
மருவியம்பரமறைந்துநின்றாட்டுவான்போல
வுரககங்கணக்கருவையானொருவனின்றாட்டப்
பரவைசூழ்நிலமன்பதைப்பரப்பெலாநடிக்கும்.

(இ-ள்.) விரகின் ஆல்—பேரறிவால், சிலர் செய்திடும்—உலகிற் சிலர் செய்யும், வினைகள் உம் உண்டு ஓ—தொழில்களும் உண்டா, அம்பரம் மருவி—ஆகாயத்திற் பொருந்தி, மறைந்து நின்று—தன்னுருக்கரந்து நின்று, ஆட்டுவான் போல—ஆட்டுமொருவனைப்போல, உரகம் கங்கணம்—சர்ப்பத்தைக் கங்கணமாகப் பூண்ட, கருவையான் ஒருவன்—திருக்கருவையிலெழுந்தருளிய ஒருவன், நின்று ஆட்ட—உடலினின்றாட்ட, பரவை சூழ்—கடல் சூழ்ந்த, நிலம்—நிலவுலகினுள்ள, மன்பதைபரப்பு எல்லாம்—மக்கட் பரப்பெல்லாம், நடிக்கும்—நடித்துத் திரிகின்றார்கள்.

ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு. பரவை தொழிலாகுபெயராய்க் கடன் மேனின்றது. பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் அஃறிணை முடிபுதந்து மன்பதை நடிக்கும் என்றார். நிலந்தொழிலாகு பெயராய் உலகின்மேனின்றது. நில் பகுதி, அம்புடை பெயர்ச்சி விகுதி. ()

நடித்ததாள்களுநகைமணிமுறுவலுமுகமும்
பொடித்தவேர்வெழும்புருவமுமருள்விலோசனமு
முடித்ததண்பிறைவேணியுமுகலிங்கன்மழுமான்
பிடித்தசெங்கையுங்காண்பவர்புவியிடைப்பிறவார்.

(இ-ள்.) முகலிங்கன்—முகலிங்கப் பெருமானது, நடித்ததாள்கள் உம்—ஆனந்த நடனஞ் செய்த திருவடிகளையும், நகைமணி முறுவல் உம்—விளங்கும் அழகியபுன்னகையையும், முகம் உம்-திருமுகத்தையும், பொடித்தவேர்வு எழும் புருவம் உம்—அரும்பிய வேர்வை தோன்றுந் திருப்புருவத்தையும், அருள்

விலோசனம் உம்—ஆன்மாக்களுக் கருளுந் திருக்கண்களையும், தண் பிறை முடித்தவேணி உம்—இளஞ்சந்திரனை யணிந்த சடாபாரத்தையும், மழுமான் பிடித்த செம்கை உம்—மழுவையும் மானையுமேந்திய செவந்த திருக் கரங்களை யும், காண்பவர்—கண்டுதரிசிப்போர், புவி இடை—நிலவுலகில், பிறவார்—கீட முதலிய யோனிகளிற் பிறந்தழியார்.

பொடித்த, முடித்த இறந்தகாலப் பெயரெச்சங்கள். பொடி, முடி பகுதி கள். நகை, வேர்வு தொழிற்பெயர்கள். நகு பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ புடை பெயர்ச்சி விகுதி. வேர் பகுதி, வகரத்தோற்றஞ் சந்தி, உ புடைபெயர்ச்சி விகுதி. (அச)

பிறந்தயாக்கைகளளப்பிலபெருங்கடற்புவிக்கு
ளிறந்துபோயதல்லாலவற்றெய்தியதுண்டே
கறந்தபாணிறவண்ணனைக்கருத் துறவிருத்திற்
சிறந்தயாக்கையீ திதற்குநான்செய்வதுமுளதோ.

(இ-ள்.) பெரும் கடல் புவிக்கு உள்—பெரியகடல் சூழ்ந்த நிலவுலகில் பிறந்தயாக்கைகள்—எடுத்த சரீரங்கள், அளப்புஇல—அளவில்லை, இறந்து போயது அல்லால்—அவைகள் அழிந்துபோவதல்லாமல், அவற்று—அச்சரீ ரங்களால், எய்தியது உண்டு ஓ— வந்தபயன் ஒன்றுளதோ, கறந்தபால் நிற வண்ணனை—கறந்தபால்போலும் நிறத்தையுடைய சிவபெருமானை, கருத்து உற இருத்தில்—மனத்தில் பொருந்த விருத்தினால், ஈது சிறந்த யாக்கை— இது மேம்பட்ட சரீரமாம், இதற்கு நான் செய்வது உம்—இச்சரீரத்துக்கு நான் செய்யுங் கைம்மாறும், உண்டோ (இல்லையென்றபடி.)

ஓகாரம் இரண்டும் எதிர்மறைப் பொருளன. யாக்கை கட்டப்படுவ தென்னும் பொருண்மேல் நிற்றலால் செய்யப்படு பொருளில் வந்த தொழிற் பெயர். யாபகுதி,கு சாரியை,ஐ புடைபெயர்ச்சி விகுதி, ககரத்தோற்றமும் உக ரக்கேடும் சந்தி. யா பகுதி, கை புடைபெயர்ச்சி விகுதி,ககரத்தோற்றஞ்சந்தி, எனத்தொழிலாகு பெயராகக்கொள்ளுதலும் அமையும். கருத்து செயப்படு பொருளில் வந்த ஐகார விகுதி குன்றிய தொழிற்பெயர். கருது பகுதி. ஐ புடை பெயர்ச்சி விகுதி, அதனைப் புணர்ந்து குன்றிய காலத்தில் தோன்றிய ககர மெய்சந்தி. (அரு)

உள்ளதில்லதென்றுரைத்திடும்பொருளையுய்த்துணராக்
கள்ளர்நாவினிலருந்திடாக்களாநறுங்கனியைத்
தெள்ளுசெந்தமிழ்க்கருவையிற்சினகரம்புகுந்து
மெள்ளநான்சென்றுகாண்டலுந்தீர்ந்ததுவிடாயே.

(இ-ள்.) உள்ளது இல்லது என்று உரைத்திடும் பொருளை—நிலையுள்ளது நிலையில்லாதது என்று நூல் கூறும் பொருள்களினுண்மையை, உய்த்து உண ராத கள்ளர் நாவினில்—ஆராய்ந்தறியாத வஞ்சகர் தமது நாவினால், அருந் திடாத—அருந்துதற் கெட்டாத, களாநறும் கனியை—திருக்களாவிற் கனிந்த இனிய கனியை, தெள்ளு செம்தமிழ் கருவையில்—தெளிந்த செந்தமிழ் வழங்கும் திருக்கருவைப்பதியிலுள்ள, சினகரம்-திருக்கோயிலில், நான்மெள்ள

சென்று புகுந்து—நான் மெல்லச்சென் றடைந்து, காண்டல் உம்—கண்டவப் பொழுதே, விடாய் தீர்ந்தது—பிறவிவிடாய் தீர்ந்தது.

கண்டகனியையுண்பே மென்னுந் துணிபு முளைத்தலால் விடாய் தீர்ந்தது என விரைவுபற்றிக் காலவழுவமைதி தந்து கூறினார். மெல்ல மெள்ள என வந்தது மரூஉ. (அசு)

விடக்கைமும்மலக்குழிசையைவிளிர்தபின்றீண்டாத்
தொடக்கைநோய்க்கணந்துணங்கையிட்டாடுமரங்கை
நடக்குஞ்சூத்திரப்பாவையைநான்சுமந்துழலல
கடக்கநீக்கியெனருளுவைகருவையுத்தமனே.

(இ-ள்.) கருவை உத்தமனே—திருக்கருவையி லெழுந்தருளிய வுத்தமனே, விடக்கு ஐ—மாமிசப் பொதியை, மும்மலம் குழிசை—ஆணவம் காமியம்மாயை என்னும் மும்மலங்களு நிறைந்த பாண்டத்தை, விளிர்த பின் தீண்டாத தொடக்கை—உயிர் நீங்கிய பின் உறவினரும் பரிசத்துவிலலாத தீட்டினை, நோய் கணம் துணங்கை இட்டு ஆடும் அரங்கை—நோய்களாகிய பசாசுகள் துணங்கையிட்டு ஆடும் நாடக சாலையை, சூத்திரம் நடக்கும் பாவையை—சூத்திரத்தால் நடத்தலவும் பதுமையை, நான் சுமந்து உழலல் கடக்க—நான் சுமந்து சுழலுதலினின்றுங் கடக்க, என்று நீக்கி ஆளுவை—எக்காலத்தில் நீக்கி ஆளுவாய்.

துணங்கை இருகையையுமுடக்கிப்பழுப்புடையொத்தியாடல் சரீரத்தை விடக்கெனவும், சூத்திரப்பாவை எனவுங் கூறினார். பிறவியை யொழிப்பா யென்பார் நீக்கியெனருளுவை என்றார். (அஎ)

உத்திவாளராமுடித்தபால்வண்ணனேயுனது
பத்திவேண்டுவதன்றியேநரகிடைப்படினு
முத்திவேண்டிலேன்றுறக்கமுமவேண்டிலேன்முனிவர
சித்திவேண்டிலேனறிசாதிபாசிறப்பே.

(இ-ள்.) உத்திவாள் அராமுடித்த பால் வண்ணனே—படப்பொறியை யுடைய பொலிவு வாய்ந்த பாமபினை முடித்த பால் வண்ணனே, உனதுபத்தி வேண்டுவது அன்றி — உன்னிடத்துப் பத்திமை வேண்டும வேண்டுகோளே யன்றி, நரகிடை படின் உம் முத்தி வேண்டிலேன—நரகில் எந்நாளும் அழுந்திக் கிடப்பினும் அதினின்றுங்கரையேற மோக்ஷத்தை விரும்பிலேன், துறக்கம் உம் வேண்டிலேன்—(அதுவன்றி) சுவர்க்க போகத்தையும வேண்டிலேன், முனிவர் சித்தி வேண்டிலேன—முனிவர் பெறும் அட்டமாசித்தியும் வேண்டிலேன், திசாதிபா சிறப்பும் வேண்டிலேன்—இந்திரன் முதலிய திக்குப் பாலகர்கள் பெருஞ் சிறப்பும் வேண்டிலேன். (அதனால் உன பால் பத்திமேவுற வேண்டும.)

நான்கனுருபு நிற்குமிடத்து ஆறனுருபு நின்றது உருபு மயக்கம். (அஅ)

சிறக்கத்தக்கதுகருவையான்றிருவடிநேய
மறக்கத்தக்கதுமறறுளசமயத்தினமயக்கம

துறக்கத்தக்கதிவ்வுடம்பையானென் றுறுதொடர்பு
பிறக்கத்தக்கதுசிவானந்தவாரியின்பெருக்கே.

(இ-ள்.) கருவையான் திருவடி நேயம்—திருக்கருவையி லெழுந்தருளிய சிவபெருமான் திருவடிக்கீழன்பு, சிறக்கத்தக்கது—எந்நாளும் தழைத்தோங்குக, மற்று உள்ளசமயத்தின் மயக்கம்—வேறுள்ள சமயங்களில் மயங்குதல், மறக்கத்தக்கது—இன்றே என்னை விட்டோடுக, இ உடம்பையான் என்றுறு தொடர்பு—இச்சரீரத்தை யானென்று கருதுஞ் சம்பந்தத்தை, துறக்கத்தக்கது—இன்று கட்டோடொழிக்கத் தக்கது, சிவானந்த வாரிப் பெருக்கு—சிவானந்தமாகிய வெள்ளப் பெருக்கு, பிறக்கத்தக்கது—இன்றே தோன்றக்கடவது.

தக்கது வியங்கோட் பொருட்டு. இன் வேண்டா வழிச்சாரியை. (அகூ)

பெருகுகாதல்கொண்டனுதினம்பேதைநெஞ்சுருகியே
னுருகிநாடவும்வெளிப்படாவுனையுளத்துணர்ந்தே
னிருகணாரவுங்காண்பதற்கென்றெதிர்ந்திடுவாய்
கருகுகண்டனேகருவையிற்களாநறுங்கனியே.

(இ-ள்.) அடியேன் பெருகு காதல் கொண்டு — அடியேன் மாறாத விருப்பங் கொண்டு, அனுதினம்—எந்நாளும், பேதை நெஞ்சு உருகி—அறியாமையையுடைய மன முருகி, நாடவும்—தேடவும், வெளிப்படா உன்னை — புலப்படாத வுன்னை, உளத்து உணர்ந்தேன் — அகத்து உன்னைக் கண்டேன், கருகு கண்டனே—விடத்தாற் கருகிய ஸ்ரீகண்டனே, கருவையில் களாநறுங் கனியே—திருக்கருவையில் களாவிற் கனிந்த இனிய கனியே, இருகண் ஆரவும்—அடியேன் இரண்டுகண்கள் தெவிட்டவும், காண்பதற்கு—அகத்திற்கண்டதுபோல் புறத்திலுங் காண, என்று எதிர்ந்திடுவாய்—எக்காலத்திற் காட்சி தந்தருளுவாய்.

களாநிழற் கீழ்ச் சிவபிரானெழுந்தருளி யிருத்தலால் அச் சிவபிரானைக் கனி என்று சொல்ல வந்தவர் களாக்கனியே எனவும், விடயவின்பம் நுகர்வோர்க்கு அவர் நுகர்ந்த பொருளை எடுத்துக் காட்டின் அவர்க்கு இன்பந் தோன்றுமாகலின் நறுங்கனியே எனவுங் கூறினர். (கூ0)

எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.

கனிவுறாமனங்கனியநின்பெருங்கருணைதந்தவாபோற்றிநாயினே
னினியபாடலாற்களவிலீசனென்றேத்தநாத்தருமிறைவபோற்றிவான்
பனிநிலாவுடன்கங்கைதுன்றுசெம்பவளவார்சடைப்பரமபோற்றிவிற்
குனிவுறாமுனம்புரமெரித்திடக்குருத்தவாணகைக்குழகபோற்றியே.

(இ-ள்.) கனி உறாதமனம் கனிய—கனியாத எனது மனங் கனிய, நின் பெருங்கருணை தந்தவா—உனது பெரியகருணையைத் தந்தருளியவனே, போற்றி—வந்தனம், நாயினேன் இனிய பாடலால்—நாயிற் கடைப்பட்டயான் இனிய செய்யுளால், களவில் ஈசன் என்று ஏத்த—களாநிழலில் எழுந்தருளி யிருக்கின்ற இறைவனே என்று துதிக்க, நா தரும் இறைவபோற்றி—எனக்கு நாவைத் தந்தருளிய இறைவனே வந்தனம், வான்பனிநிலாவுடன்—

வானிலுலவும் இளம் பிறையோடு, கங்கை துன்று—கங்கை நெருங்கிய, செம்பவளம்வார் சடைபரம—செவந்த பவளம்போன்ற நீண்ட சடையினை யுடைய பரமனே, போற்றி—வந்தனம், வில் குனி வுறுதமுன்னம்—மேரு வாகிய வில்வளைதற்கு முன்னமே, புரம் எரித்திட—திரிபுரத்தை எரிக்க, குருத்த—கோபித்த, வாள் நகை குழக—ஒள்ளிய புன்னகை செய்தபேரழகனே, போற்றி—வந்தனம்.

போற்றி வந்திக்கக் கடவேனெனப் பொருள் கொள்ளில் வியங்கோள் வினைமுற்றில் ஈற்றுயிர் மெய்கெட்டுநின்றதெனக்கொள்க. போற்றுவினைப் பகுதி, இய வியங்கோள் விகுதி, உகரக்கேடு சந்தி, போற்றி என்பது வந்தன மெனப் பொருள்கொள்ளு மிடத்து "உனக்கொரு கும்பிடு என்றாற்போல" வந்ததொழிற்பெயரெனக்கொள்க. போற்று பகுதி, உகரக்கேடு சந்தி, இ புடைபெயர்ச்சிவிகுதி. முதலுக்குஞ் சினைக்கும் ஒற்றுமையுண்மையால் முதல் வினையைச்சினைமேலேற்றிப் புரமெரித்திடக் குருத்தவாணகை என்றார். குருத்த இறந்தகாலப் பெயரெச்சம். குரு பகுதி, தகரமெய் சந்தி, தகரமெய் இடைநிலை, அ பெயரெச்ச விகுதி. (௬௧)

குழவிவெண்ணிலா வனையவெண் ணகைக்கொடி யிடத்துவாழ் குரிசில்
போற்றியென், பழைய தீவினைப் பகைதொலைத்திடும் பாவநாசனே போற்றி
காய்சினத், துழுவையின் வரித்தோலசைத்த பட்டுடை மருங்கினேய் போற்றி
செந்தமிழ்க், கழுமலப்பதிக்கவுணியன் புகழ்களவினீழலிற் கடவுள் போற்றியே.

(இ-ள்.) குழவி—இளமை வாய்ந்த, வெள்நிலா அனைய—வெள்ளிய நிலவையொத்த, வெள்நகை—வெள்ளிய புன்னகையையுடைய, கொடி இடத்து வாழ்—பூங்கொடிபோன்ற உமையம்மை இடப்பாகத்தில் வாழும், குரிசில்—இறைவனே, போற்றி—வந்தனம், என் பழைய தீவினைப்பகை — எனது தொன்றுதொட்டுள்ள தீவினையாகிய பகையை, தொலைத்திடு பாவநாசனே—தொலைத்தருளிய பாவநாசனே, போற்றி—வந்தனம், காய் சினத்து—வருத்தும் கோபத்தையுடைய, உழுவையின் வரித்தோல் அசைத்த — வலியமைந்த உரியைக் கச்சையாகக் கட்டிய, பட்டு உடை மருங்கினேய்—பட்டாடையை யணிந்த இடையையுடையவனே, போற்றி—வந்தனம், செம்தமிழ்—செந்தமிழ் வழங்கும், கழுமலப்பதி—சீகாழி என்னும் திருப்பதியில், கவுணியன் புகழ்—கவுணியகோத்திரத்தில் அவதரித்த ஆளுடையபிள்ளையார் புகழும், கடவுள் நீழலில்கடவுள்போற்றியே—களாநிழலின்கண் எழுந்தருளிய கடவுளே வந்தனம்.

தேவதாரு முனிவர் கொல்லவேவிய புலியை உரித்து அதன்றோலை அரைக்கசைத் தமையால் உழுவையின்வரித்தோலிசைத்த எனவும், இயற்கை யடையாதலால் பட்டுடைமருங்கினேய் எனவும், தொன்றுதொட்டுள்ளது சஞ்சிதவினை யாதலால் பழைய தீவினையெனவுங் கூறினார். (௬௨)

கடையுகத்தினிற்பொழில்களேழையுங்கனல்கொளுத்தியசுடலையம்பலத்
தடலைபூசியென்னம்மைகாணநின்றாடுமையனேபோற்றிபோற்றிநெஞ்
சிடைவிடாமலுன்சரணபங்கயத்திருக்கநல்கியவிறைவபோற்றிமால்
விடையின்மேவியேகருவைமாநகர்வீதிவாய்வரும்விமலபோற்றியே.

(இ-ள்.) கடையுகத்தினில் — ஊழியில், பொழில்கள் ஏழையும் — ஏழுலகங்களையும், கனல் கொளுந்திய—தமது திருவுருவாகிய அக்கினியால் எரித்தருளிய, சுடலை அம்பலத்து — மயானமாகிய பொது விடத்திலுள்ள, அடலை பூசி—சாம்பலைப் பூசி, என் அம்மைகாண—எனது தாயாகிய உமையம்மைகாண, நின்றுடும் ஐயனே போற்றி போற்றி—நின்றுடியருளிய ஐயனே வந்தனம் வந்தனம், நெஞ்சு—எனது மனம், இடைவிடாமல்—இடையே நீங்காமல், உன் சரணபங்கயத்து இருக்க—உனது பாததாமரையிலிருக்க, நல்கிய—அருள்செய்த, இறைவ போற்றி—இறைவனே வந்தனம், மால்விடையின் மேவி—திருமாலாகிய இடபத்தின்மே லாரோகணித்து, கருவைமா நகர்வீதி வாய்வரும் — திருக்கருவை யென்னும் பெருமைவாய்ந்த பெரிய நகரத்தில் எழுந்தருளும், விமல போற்றி—விமலனே வந்தனம்.

சர்வசங்கார காலத்திற்கொள்ளும் திருவுருவம் அனல்வடிவமாதலால் கனல்கொளுத்திய எனவும், யாவையும் நீற்றிய சாம்பல் நீறுதலால் சுடலையம்பலத்தடலை பூசி எனவுங் கூறினர். (கூரு)

விமலபோற்றிநின்பெருமைநாரணன்விரிஞ்சனாதியோரறியகிற்றிலா
வமலபோற்றிநானறியும்வண்ணமுன்னறிவுதந்தருளறிவபோற்றிதண்
கமலவாவிசூழ்கருவைமாநகர்க்களவினீழல்வாழ்காலகாலனே
யிமயமால்வரைக்குமரியொப்பனைக்கினியகாதலேபோற்றியெந்தையே.

(இ-ள்.) விமல போற்றி—இயல்பாகவே பாசங்களினின்று நீங்கினோய் வந்தனம், நின்பெருமை—உனது பெருமை, நாரணன் விரிஞ்சன் ஆதியோர்—திருமாலும் பிரமனும் முதலிய தேவர்கள், அறிய கிற்றிலாத—அறிய வொண்ணாத, அமல போற்றி—அமலனே வந்தனம், நான் அறியும் வண்ணம்—நான் உன்னை அறியும் வண்ணம், முன் அறிவுதந் தருள்—முன்பு சிவஞானந் தந்தருளிய, அறிவபோற்றி—அறிவனே வந்தனம், தண் கமலம் வாவி சூழ்—தண்ணிய தாமரை நிறைந்த பொய்கை சூழ்ந்த, கருவை மா நகர்களவினீழல் வாழ்—திருக்கருவை யென்னும் பெரிய நகரின்கண் திருக்களா நிழலில் எழுந்தருளிய, கால காலனே—காலனுக்குக் காலனாயுள்ளவனே, இமயமால் வரை—இமயமென்னும் பெரியமலையில் திருவவதாரஞ் செய்த, குமரி ஒப்பனைக்கு—குமரியாகிய ஒப்பனையம்மைக்கு, காதலா—இனிய மணவாளனே, எந்தையே போற்றி—என் தந்தையே வந்தனம்.

அவனருளால் அவனையுணரவேண்டுதலால் நானறியும் வண்ணம் உள்ளறிவறிவு தந்தருளெனவும், அறிவுதந்தருள்வோன் அறிவுவடிவனா யிருக்க வேண்டுதலால் அவனது திருவுருவாகிய உண்மையறிவானந்த மூன்றனுள் அறிவ போற்றி எனவும், மார்க்கண்டேயர் பொருட்டு காலனுயிர் வாங்கினமையால் கால காலனே எனவும், யாவையும் ஈன்றும் கன்னியா யிருத்தலால் குமரி எனவுங் கூறினர். அறியகிற்றிலா ஈறு தொக்க எதிர்மறைப் பெயரெச்சம், அறி பகுதி, ஆ-சாரியை, யகரமெய் சந்தி, கில் ஆற்றலுணர்த்தும் விகுதி. அனைத்தும் ஒரு பகுதி. து சாரியை, இல் எதிர்மறை விகுதி, லகரமுந் தகர

மும், ககரமாகத்திரிதலும் உகரக்கேடும் சந்தி. அ சாரியை, கெட்டு நின்றது என்னுஞ் சாரியையும் அ என்னும் எச்சவிகுதியும் தொகுத்தல். (௪௪)

எந்தையாயினுய்குரவனுயினுயிறைவனுயினுய்போற்றியென்மனப்
பந்தமாயினுய்வீடுமாயினுய்பரமுமாயினுய்போற்றிதென்புலச்
சந்தமால்வரைத்தமிழ்முனிக்குமைதனைமணந்தமெய்க்கோலங்காட்டினுய்
சுந்தரப்புயத்தழகுபோற்றிநற்சோதிபால்வணத்தாதிபோற்றியே.

(இ-ள்.) எந்தை ஆயினுய்—எனக்குத் தந்தையானவனே, குரவன் ஆயினுய்—எனக்கு ஆசிரியனுனவனே, இறைவன் ஆயினுய்—எனக்குத் தலைவனுனவனே, போற்றி—வந்தனம், என்மனப்பந்தமும் ஆயினுய்—என் மனஞ்செல்லும் பந்தமுமானவனே, வீடும் ஆயினுய்—முத்தியுமானவனே, பரம் உம் ஆயினுய்—இவையிரண்டுந் தரும் பரமுமானவனே, போற்றி—வந்தனம், தென் புலம் — தென்றிசையிலுள்ள, சந்தம்—சந்தனமரஞ் செறிந்த, மால்வரை—பெரிய பொதியமலையிலுள்ள, தமிழ்முனிக்கு—அகத்திய முனிவருக்கு, உமை மணந்த மெய்கோலம் காட்டினுய்—உமையம்மையைத் திருமணஞ்செய்த திருக்கோலத்தைக் காட்டினவனே, சுந்தரம் புயத்து அழகு போற்றி—சுந்தர வேடங்கொண்ட திருப்புயத்துக்கு வந்தனம், நல்சோதி—நல்லசோதி வடிவானவனே, பால் வண்ணத்து ஆதி—பால் போலும் நிறத்தையுடைய ஆதியே, போற்றி—வந்தனம்.

ஆன்மாக்களின் மலப்பிணிப் பொழிக்கத் தனுகரண புவனபோகங்கள் தந்து வினைக்கேற்ப உடலினின் றூட்டுதலால் பந்தமும் எனவும், அழுக்கா லழுக்கை யொழித்தல்போலப் பந்தத்தால் மலப்பந்தத்தை யொழித்துத் தன் றிருவடியிற் கூட்டியருளுதலால் வீடும் எனவும், ஊட்டுதற்கும் கூட்டுதற்கும் இறைவனுயுள்ளவனுதலால் பரமுமாயினுயெனவும், இமயமலையில் உமையைத் திருக்கலியாணஞ் செய்த காலையில் திருமால் முதலிய யாரும்வந்து கூடிய பொறையால் வடபாலுயர்ந்து தென்பால் தாழ்ந்தபோது சிவபெருமான் தன்னையொப்பாரொருவன் தென்திசையிற் சென்றுல் சமமாமெனத் திருவுளங்கொண்டு அகத்திய முனிவரையேவ, அவர் மனம் வருந்தி இத்திருக் காட்சியான் காணுதொழிந்தேனே என்று கவன்றபோது நீ அங்குச்சென்றிரு நாம் இத்திருமணக்காட்சி தந்தருளுவோம் என்று விடைதந்து பின்னர் அங் குக்காட்சி தந்தருளினமையால் உமைதனை மணந்த மெய்க்கோலங் காட்டினு யெனவும், ஆசாரிய திருவேடத்துக்குச் சுந்தரவேடமென்பது ஓர் பெயராத லால் சுந்தரம், எனவும், அத்திருவேடங்கொண்டு திருவருட் பதிவுசெய்து மும் மலச்சேட்டைகளையும் போக்கி யருள்வது திருப்புயமாதலால் புயத்தழகு போற்றி எனவுங் கூறினுர். (௪௫)

ஆதிநின்றிருத்தொண்டுகொதலித்தறிவுசென்றமட்டாகநின்புக
ழோதுசெய்யுளிற்குறையுரைத்ததிங்கொன்றுநின்செவிக்குற்றதில்லையோ

காதனண்புடைக்கவிஞனேவலுங்கங்குலிற்கழற்கால்செவப்புறத்
தூதுசென்றவாபோற்றிநாடொறுந்தொழுமவர்க்கருள்கருவையையனே.

(இ-ள்.) நாள்தொறும் தொழுமவர்க்கு—நாடோறும் வணங்கும் அடிய வருக்கு, அருள் கருவை ஐயனே—அருளுந் திருக்கருவையி லெழுந்தருளிய மேலோன் நீயே யாதலால், ஆதி—ஆதியே, நின் திருத்தொண்டு காதலித்து—உனது திருத்தொண்டினை விரும்பி, அறிவுசென்ற மட்டு ஆக—எனது அறிவு சென்றவளவாக, நின்புகழ் ஓது செய்யுளில்—உன் புகழைக்கூறுஞ் செய்யுளால், குறையுரைத்தது—என் குறைகூறியதில், இங்கு ஒன்று—இங்கு ஒன்று யினும், நின்செவிக்கு உற்றது இல்லையோ—உனது திருச்செவியிலேறவில்லையோ, காதல் நண்பு உடைய—ஆசைத் தோழமையையுடைய,கவிஞன் ஏவலும்—சுந் தரமூர்த்தி நாயனார் ஏவ, கங்குலில்—இரவில், கழல்கால் செவப்பு உற—வீர கண்டை கட்டிய திருவடிசெவப்பேற, தூதுசென்றவா போற்றி—தூதுசென்ற வனே வந்தனம்.

வணங்குவோர்க்கு அருளுங் கருணாநிதி என்பது கருதி, என் புல்லறி வுக்கேற்ப நின்னைப் புகழ்ந்துபாடி என் குறை கூற, அது நின் திருச்செவிக் கேறாத காரணம் யாது என்பார் நின்செவிக் குற்றதில்லையோ எனவும், அடி யேன் புல்லிய கவிஞனாயினும் என் குறைகேளாது உன் திருவருள் நிறைந்த வொரு கவிஞன் திருப்பாசுரத்தாற் குறையிரப்பத் திருச்செவிகொடுத்துக் கால் செவப்பேறத் தூதுசென்றது முறையோ வென்பார் கால் செவப்புறத் தூது சென்றவா போற்றி எனவுங் கூறினார். செவப்புற ஒருசொன்னீர்மைய. (கக)

ஐயனேசரண்போற்றியென்னையாளப்பனேசரண்போற்றிபொய்யிலா
மெய்யனேசரண்போற்றிவானவர்வேந்தனேசரண்போற்றிமான்மழுக்
கையனேசரண்போற்றிகாலனைக்காய்ந்தவாசரண்போற்றிதீநிறச்
செய்யனேசரண்போற்றிகாமனைச்செற்றவாசரண்போற்றிதேவனே.

(இ-ள்.) தேவனே ஐயனே சரண்போற்றி—தேவ தேவனே ஐயனே திருவடிக்கு வந்தனம்,என்னையாள் அப்பனே சரண்போற்றி—என்னை அடிமை கொள்ளும் அப்பனே உன் திருவடிக்கு வந்தனம், பொய் இல்லாத மெய்யனே சரண்போற்றி—பொய்யிகந்த மெய்யனே உன் திருவடிக்கு வந்தனம், வான வர் வேந்தனே சரண்போற்றி—தேவர்களுக் கிறைவனே உனது திருவடிக்கு வந்தனம், மான் மழு கையனே சரண்போற்றி—மானையும் மழுவையும் ஏந்திய திருக் கரங்களையுடையவனே உன் திருவடிக்கு வந்தனம், காலனை காய்ந்தவா சரண்போற்றி— இயமனை உதைத்தவனே உன் திருவடிக்கு வந்தனம், தீநிறம் செய்யனே சரண்போற்றி—செந்நிற முடையவனே உன் திருவடிக்கு வந்த னம், காமனை செற்றவா சரண்போற்றி — மன்மதனை அழற்கண்ணா லெரித்த வனே உன் திருவடிக்கு வந்தனம்.

மற்றைக் கடவுளர்போல நீ பொய்த்தேவனல்ல னென்பார் பொய்யிலா மெய்யனே என்றார். (கஎ)

தேவனேபிறர்க்கடிமையுற்றிலேன்சிந்தைநின்வசந்தந்தன்றியு
நாவினாற்றினம்பரவிவாழ்த்துவேனாளுமென்குறைதீர்ப்பதார்கொலோ
காவன்மூவரண்கனல்கொளுத்திடுங்கருவைநம்பனேபோற்றிபோற்றியான்
பாவகாரியேயெனினுமென்னைநீபாதுகாப்பதுன்பண்பதாகுமே.

(இ-ள்.) தேவனே—தேவ தேவனே, பிறர்க்கு அடிமை உற்றிலேன்—மற்றத் தேவர்கட்கு ஆட்பட்டிலேன், சிந்தை நின்வசம் தந்தது அன்றியும்—எனது மனத்தை உன்வசந் தந்த தல்லாமலும், நாவினால் தினம்பரவி வாழ்த்துவேன்—எனது நாவினால் அனுதினம் உன்னைத் துதித்து வாழ்த்துவேன், நாளும் என் குறை தீர்ப்பது ஆரோ—(ஆதலால்)எந்நாளும் என் குறையைத் தீர்த்தருள்வது நின்னையன்றி யாரோ, காவல் மூன்று அரண்—காவலமைந்த திரிபுரங்களையும், கனல் கொளுத்திடும் கருவை நம்பனே—புன் முறுவலா லெரித்தருளிய திருக்கருவையிலெழுந்தருளிய இறைவனே, போற்றி போற்றி—வந்தனம் வந்தனம், யான் பாவகாரியே என்னின் உம்—நான் பாவத்தொழிலை யுடையனே யானாலும், என்னை—உன்னையன்றித் திக்கில்லாத என்னை, நீபாது காப்பது— நீ பாது காத்தல், உன் பண்பு ஆகும்—உனது கடனாகும்.

பண்பது அது பகுதிப் பொருள் விகுதி. (௯௮)

பண்பயிற்றிவண்டாடுகொன்றையம்படலைமார்பனேபோற்றியம்பிகை
கண்களித்திடத்தில்லைமன்றினிற்கடிநடம்புரிகடவுள்போற்றிபூஞ்
சண்பகச்செழுஞ்சோலைவாவிசூழ்தண்களாவனத்தடிகள்போற்றிவான்
வெண்பிறைக்கொழுந்திலகுவார்சடைவெள்ளைமேனியாய்போற்றிபோற்றியே.

(இ-ள்.) பண்பயிற்றி—இசைபாடி, வண்டு ஆடு—வண்டுகள் திளைக்கும், கொன்றையம்படலை மார்பனே—கொன்றைமாலையை யணிந்த திருமார்பனே, போற்றி—வந்தனம், அம்பிகை கண் களித்திட — உமையம்மை கண் களிக்க, தில்லைமன்றின் இல்— தில்லையின் கண்ணுள்ள பொன்னம்பலத்தில், கடி நடம் புரி—விளக்கம் வாய்ந்ததிருநடனஞ் செய்யும், கடவுள் போற்றி—கடவுளே வந்தனம், பூம் சண்பகம்செழும் சோலை— பொலிவுவாய்ந்த சண்பக விருக்ஷங்கள் நெருங்கிய செழித்தசோலையும், வாவி சூழ்—தடாகமுஞ் சூழ்ந்த, களாவனத்து அடிகள் போற்றி—களாவனத்தின் கீழ் எழுந்தருளிய அடிகளே வந்தனம், வான் வெண்பிறைகொழுந்து—விண்ணிலுலவும் வெள்ளிய இளஞ்சந்திரன், இலகுவார்சடைவெள்ளை மேனியாய்—விளங்கும் நீண்ட சடையினையும வெள்ளிய திருமேனியையும் உடையவனே, போற்றி போற்றி — வந்தனம் வந்தனம்.

பூம்சண்பகம் அல் வழிக்கண் வருமொழிவல்லெழுத்துக்கு முன் இன வெழுத்துத் தோன்றுதல் "பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்" என்ற-சூ-ஆல். (௯௯)

வெள்ளைமேனியாய்ப ாற்றியொப்பனைமேவுமார்பனேபோற்றிபோற்றிபூங்
கள்ளலம்புதண்களவினீழலிற்கருணையங்கடற்கடவுள்போற்றிநா

உள்ளமொன்றிநின்னடிவழுத்திடவுதவிசெய்தவாபோற்றிநாவலர்
தெள்ளுசெந்தமிழ்க்கருவைமாநகாச்செல்வபோற்றிநின்சீர்கள்போற்றியே.

(இ-ள்.) வெள்ளைமேனியாய் போற்றி—வெள்ளிய திருமேனியையுடையாய் வந்தனம், ஒப்பனைமேவு மார்பனே போற்றி போற்றி—ஒப்பனை யம்மையோடு கலந்த திருமார்புடையவனே வந்தனம வநதனம், பூ—மலரில், கள் அலம்பு—மதுப பெருக்கெடுத் தொலிக்கும், தண் களவின் நீழலில்—தண்ணிய திருக்களா நீழலில எழுந்தருளிய, கருணையங் கடல் கடவுள் போற்றி—கிருபா சமுததிரமாகிய கடவுளே வநதனம, நான் — அடியேன், உள்ளம ஒன்றிநின்று அடிவழுததிட—மனம் ஒருப்பட்டு நினறு உன் திருவடியை வாழ்த்த, உதவிசெய்தவா போற்றி—அருள்செய்தவனே வநதனம, நாவலா தெள்ளு செந்தமிழ்—நாவலலோாபாடிய செந்தமிழ்ப்பாடல் பரவும, கருவைமா நகர்ச் செல்வ போற்றி—திருககருவை என்னும பெருமை வாய்ந்த நகரில் எழுநதருளிய அருண்ஞானச செலவனே வநதனம, நினசீர்கள் போறறியே—உனபுகழுக்கோா வநதனம.

புலவா பாடும பாடடொலி எனறும் அறாதநெனபார் நாவலர் தெள்ளு செந்தமிழ்க் கருவைமாநகர் எனறா. (கoo.

---

# திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி

முற்றிற்று.

—o—



# மறைசையந்தாதி,

## நல்லூர்: சின்னத்தம்பிப்புலவர்

இயற்றியது.

---

இஃது

உடுப்பிட்டி

**ஸ்ரீமத். அ. சிவசம்புப்புலவர்**

எழுதிய

**உரையுடன்**

**நூலாசிரியர் வரலாறுஞ் சேர்த்து**

யாழ்ப்பாணம்

சைவபரிபாலன சபையாரால்

தமது

சைவப்பிரகாசயந்திரசாலையில்

அச்சிடப்பெற்றது.

2-ம் பதிப்பு.

பவ ௵ ஆடி ௴.

1934.

பிரதிகள் 500] [விலை சதம் 30.

# நூலாசிரியர் வரலாறு.

இம் மறைசையந்தாதியை இயற்றிய வரகவியாகிய சின்னத்தம்பிப் புலவர் இற்றைக்கு இருநூறு வருடங்கட்கு முன்னர், ஒல்லாந்தர் இந்நாட்டை ஆண்ட காலத்தில், யாழ்ப்பாணத்து நல்லூரில் வாழ்ந்திருந்த வில்லவராயமுதலியாரென்னும் பிரபுவின் புதல்வராவர். வில்லவராயமுதலியார் உயர்குடிப்பிறப்பு, கல்வியொழுக்கம், செல்வம், செல்வாக்கு, அதிகாரம் முதலிய சுகுணங்களோடும் நற்செயல்களோடும் கூடியவர். இம்முதலியாருடைய கல்வித்திறமையையும் நற்குண நற்செய்கை செல்வம் செல்வாக்கு என்னும் இவைகளையும் அறிந்த ஒல்லாந்த அரசினர் தேசவழமையை எழுதுவதற்கு அக்காலத்து விளங்கிய அறிஞர் பன்னிருவரை, ஒருசபையாகக்கூட்டி அச்சபைக்கு வில்லவராய முதலியாரையே தலைவராக நியமனஞ் செய்தனர். இச்சபையார் எழுதிய தேசவழமையே இப்பொழுதும் கையாளப்பட்டுவருவதாகும். அருளம்பலமுதலியார், சந்திரசேகரமாணமுதலியார், மனப்புலி முதலியார், வன்னியராயமுதலியார், சயம்புநாதமுதலியார், சேனாதிராசமுதலியார், இராசரத்தின முதலியார் முதலிய பிரபுக்கள் நமது வில்லவராய முதலியாரின் தலைமையில் அச்சபையிலிருந்து தேசவழமையை எழுதியுள்ளார்கள்.

1707-ம் ஆண்டு ஏப்பிரல்மீ 5-ந் தேதி இவர்கள் தேசவழமையை எழுதி முடித்தவுடன், ஒல்லாந்த தலைவருக்கு எழுதிய கடிதம் தேசவழமைப்பிரதியிற் காணப்படுகின்றது.

இப்படியான அறிவிற் சிறந்த வில்லவராய முதலியாருடைய புத்திரராகிய இவர் சிறுபாராயத்திற் கல்வி கற்றலை அலட்சியஞ் செய்து விளையாட்டிலேயே தம் சிந்தை செல்லப்பெற்றிருந்தாரென்றும், இங்ஙனம் மாடுமேய்க்குஞ் சிறுவருடன் கலந்து தெரு

வில் விளையாடிக்கொண்டு நிற்குஞ் சமையத்தில், இவரது தந்தையாராகிய முதலியாரைக் காணும்படி இந்தியாவிலிருந்து இங்கே வந்த தமிழ்ப்புலவரொருவர், "முதலியாருடைய வீடு எவ்விடத்ததோ" என்று இவரைக் கேட்க, அப்பொழுது ஏழுவயசுப் பராயமுடையவராகிய இவர் வசனத்தில் அப்புலவருக்கு விடைசொல்லாமல்,

"பொன்பூச் சொரியும் பொலிந்தசெழுந் தாதிறைக்கும்
நன்பூ தலந்தோர்க்கு நன்னிழலாம்—மின்பிரபை
வீசுபுகழ் நல்லூரான் வில்லவரா யன்கனக
வாசலிடைக் கொன்றை மரம்.

எனவிடையிறுத்தாரென்றுஞ்சொல்வர். அதன்பின்பே இவர் வரகவியென்பது உலகோர்க்குப் புலனாயிற்று. இவர் வரகவியென்பதற்கு ஆதாரமாக இன்னும் பல ஐதிகங்கள் உண்டு. அவற்றுள் ஒன்றை மாத்திரம் இங்கே எடுத்துக் காட்டுகின்றோம். இப்புலவர் பால்யத்திற் கல்வி கல்லாது விளையாட்டிலேயே மனஞ்செல்வாராய்த் திரிவதைக் கண்ட தகப்பனார் பலமுறை புத்தி புகட்டியும் கடிந்தும் தண்டித்தும் இவரைத் திருத்த முயன்று இயலாமை கண்டு தம்வீட்டைவிட்டு அகற்றிவிட்டனர். தந்தையார் இவ்வண்ணஞ் செய்தாரேனும், "பொல்லாத சேயெனில் தாய் தள்ள நீதியோ, புகலிடம் பிறிதுமுண்டோ" என்றவாறாய் இவர் தாயார் தம்பிள்ளையை முதலியார் இல்லாத சமையம்பார்த்து வீட்டிற்குவந்து உண்டுவிட்டுப் போகும்படி இரகசியமாக ஒழுங்கு செய்திருந்தார். இப்படித் தினந்தோறும் களவாக வீட்டிற்கு வந்து தாயிடம் உண்டுசென்ற இவர் ஒருதினம் கூரையின் உட்புறத்தே ஒரு வெள்ளேடு சொருகி இருப்பக் கண்டு அதனை எடுத்துப் பார்த்தபோது, தமது பிதாவின் கையெழுத்தில் ஒரு அந்தாதிச் செய்யுளில் இரண்டு அடிகள் மாத்திரம் வரையப்பட்டிருத்தலைக் கண்டு, மற்றை இரண்டு அடிகளையும் எழுதி அச்செய்யுளைப் பூரணமாக்கி ஏட்டினைப் பழையபடி சொருகிவிட்டு விளையாடப் போய்விட்டார். அன்று சிறிது நேரஞ்செல்லத் தம் வீட்டிற்கு மீண்டு வந்த முதலியார் தாம்பாடிக் கூரையில் வைத்த செய்

யுளை நிரப்பும்படி அந்த ஏட்டை எடுத்துப் பார்த்தபோது ஈற்றடி யிரண்டும், தாம் எண்ணியிருந்ததினும்பார்க்க அதிக சொற்சுவை பொருட்சுவைகளோடு வரையப்பட்டிருத்தலைக் கண்டு அற்புதங்கொண்டு "இங்கு யார் நான் இல்லாத நேரத்தில் வந்தார்" என்று தம் மனைவியாரை வினவ, அவர் சிறிது யோசித்துவிட்டுப் பின்னர் "உங்கள் மகனைத் தவிர வேறு எவரும் இங்கே வரவில்லை" என்று தெரிவிக்க, முதலியார் அடங்கா மகிழ்ச்சிகொண்டு தன்மகனைக் கூப்பிடுவித்து அன்பு பாராட்டி வித்தை கற்பித்து வந்தனர். நமது புலவர் வரகவியாயிருந்ததோடு மாத்திரம் அமையாது இலக்கண இலக்கியங்களைச் சந்தேக விபரீதமற ஆசானிடத்திற் கிரமமாகப் பயின்றுள்ளா ரென்பது, அவர் இயற்றிய நூல்களை ஆராய்வார்க்குத் தெற்றெனப் புலப்படும்.

மேலும் நமது புலவர் புராணேதிகாசங்களை நன்கு ஆராய்ந்து அவற்றின்கண்ணுள்ள நுண்பொருளை யுணர்ந்துள்ளா ரென்பது கீழ் வரும் ஐதிகத்தால் இனிது விளங்கும். ஒல்லாந்தர்காலத்தில் உத்தியோகம் அரச சந்மானம் என்னுமிவைகளோடு வாழ்ந்த கணேசையர் என்பவர் தமது இல்லத்திற் பல வித்துவான்களை அழைத்து நாள்தோறும் இராமாயணத்திற்கு அர்த்தஞ் சொல்லுவித்துவந்தாரென்றும், ஒருதினம் அவ் வித்துவான்கள் கம்பசூத்திர மொன்றிற்குப் பொருள்காணவியலாது மயங்கியவிடத்து, இப்புலவர் அதன் பொருளை அச் சபையிலுள்ளார்க்குத் தெள்ளிதில் விளக்கிச் சபையோரை அற்புதமுறச் செய்தாரென்றும், அதற்கு மகிழ்ந்து கணேசையர் நல்லூரிலுள்ள பண்டாரக்குளம் என்னும் வயலைப் புலவருக்குச் சந்மானமாகக் கொடுத்தாரென்றும் வரலாறுண்டு.

சின்னத்தம்பிப்புலவரவர்கள் இயற்றிய நூல்கள் மறைசையந்தாதி, கல்வளையந்தாதி, கரவை வேலன்கோவை, பறாளை விநாயகர் பள்ளு என்னுமிவைகளாம். இவற்றுள் முதனின்ற இம் மறைசையந்தாதியை, நமது புலவர், சிதம்பரம் வேதாரணியம் முதலாம் சிவஸ்தலங்கட்கு யாத்திரை சென்ற காலத்து வேதார

ணரியேசுவ்பர் மீது பாடினரென்ப. இவ்வந்தாதிக்கு உடுப்பிட்டி, அ. சிவசம்புப் புலவரும், மதுரை மகாவித்துவான் சபாபதிமுதலி யாரும் தனித்தனி உரை இயற்றியுள்ளனர். இவ்வந்தாதி சிவசம் புப் புலவருடைய உரையோடு யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபையாரால் அச்சிடப்பெற்றுள்ளது.

இரண்டாவதாகவுள்ள கல்வளை யந்தாதி, சண்டிருப்பாயி லுள்ள புராதன தலமாகிய கல்வளைப்பதியில் எழுந்தருளிய விநா யகர்மீது பாடப்பெற்றதாகும். இதுவும் மேற்சபையாரால் இப் பொழுது புத்துரையோடு வெளியிடப்பெற்றுள்ளது. மூன்றாவ தாகவுள்ள கரவை வேலன்கோவை வடமராட்சியைச் சேர்ந்த கரவெட்டியில் வாழ்ந்த வேலாயுதம்பிள்ளை என்னும் பிரபுவின் மேற் பாடப்பெற்றதாகும். இக்கோவையிலுள்ள சில கவிகள் செந்தமிழ்ப் பத்திரிகையில், நல்லூரகம் அ. குமாரசுவாமிப்புலவர் எழுதிய உரையுடன் வெளிவந்துள்ளன. இந்நூல் முழுவதும் அகப்பட்டுள்ளதெனவும், இது விரைவில் அச்சாகி வெளிவரு மெனவும் அறிந்து மகிழ்ச்சியுறுகின்றோம்.

இறுதியிற் சொல்லப்பட்ட பறாளை விநாயகர் பள்ளு, சுழி புரத்தைச் சேர்ந்த பறாளை (பறளாய்) என்னுந் தலத்திற் கோயில் கொண்டருளிய விநாயகக்கடவுள்மேற் பாடப்பெற்றது; சொற் சுவை பொருட்சுவை மலிந்தது. இது மலாய—சுழிபுர ஐக்கிய சங்கத்தின் பொருளுதவிகொண்டு, வித்தியாபிமானியாகிய திரு மயிலை சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளையாற் பரிசோதித்து அச்சிடு விக்கப்பெற்று வெளிவந்திருக்கின்றது.

இந்நூலாசிரியர்காலத்து விளங்கிய தமிழ்ப்புலவர்கள், கூழங் கைத்தம்பிரான், சித்தாந்தசரபம் சொக்கலிங்கதேசிகர், சிவராத் திரி புராணம் ஏகாதசிபுராணம் முதலியவற்றை இனிது பாடிய வரதராஜகவிராசர், புலியூரந்தாதி யாழ்ப்பாணவைபவம் என்னும் இவைகளை இயற்றிய மாதகல் மயில்வாகனப்புலவர் முதலியவர் களாவர். வரதராஜகவிராசர் இயற்றிய சிவராத்திரி புராணத் திற்கு, இந் நூலாசிரியராகிய சின்னத்தம்பிப்புலவரும் மாதகல்

மயில்வாகனப் புலவரும் பாயிரம் பாடியுள்ளனர். இவற்றால் ஒல்லாந்தர் தமது யாழ்ப்பாணத்தைப் பரிபாலித்த காலத்தில் தமிழ்மொழி பெரிதும் விருத்தியடைந்த தென்பதும், பல அரிய நூல்கள் தமிழிற் செய்யப்பட்டன வென்பதும், இந்த ஆங்கில பரிபாலன காலத்திலேயே தமிழ்மொழி அதோகதி யடையலாயிற்றென்பதும் நன்கு புலப்படும்.

இவை இங்ஙனமாக, இப்புலவரது வரலாற்றை எழுதிய சரித்திர நூலாசிரியர்கள் சிலர் இவரது தந்தையாராகிய வில்லவராய முதலியாரையும் பிற்காலத்திலிருந்த வில்லவதாச முதலியார் என்பவரையும் ஒருவரென மயங்கி எழுதியிருப்பக் காணப்படுகிறது. வில்லவராயமுதலியார் நல்லூரை ஜெந்மஸ்தானமாகக் கொண்டவர்; இவர் தேசவழமைச் சங்கத்தில் தலைமை வகித்திருந்துத் தேச வழமையை எழுதி முற்றுவித்த தினம் 1707-ம் ஆண்டு ஏப்பிரல் மாசம் 5-ந் தேதி என்பதை மேலே காட்டியுள்ளோம்: இனி மற்ற வில்லவதாச முதலியார் காலம் இம்முதலியாருக்கு 140 வருடம் வரையிற் பிந்தியதாகும். இத்தாச முதலியாரின் இயற்பெயர் தாமோதரர் சிற்றம்பலமாகும். இவர் சங்கானை மடப்பத்தைச் சேர்ந்தவர்; ஜெந்மவூருஞ் சங்கானையாகும். பெண் கொண்டு வசித்த ஊர் சண்டிருப்பாயென்பர். சென்ற 1849-ம் ஆண்டு மேமீ 25உ இவ்வில்லவதாச முதலியார் தமது கைச்சாத்தோடு முடித்துக்கொடுத்த நன்கொடை உறுதிச் சாதனமொன்றை நாம் நேரிற்பார்த்துள்ளோம். இவரை நேரில் அறிந்த காலங்கண்ட முதியோர் சிலர் இப்பொழுதும் உள்ளனர். சண்டிருப்பாயில் "முதலியார் வளவு" என வழங்குங் காணியும் இவருடையதே யாகும். இந்த ஆதாரங்களால் நல்லூர் வில்லவராய முதலியார் வேறு, சண்டிருப்பாய் வில்லவதாச முதலியார் வேறு என்பது ஆசங்கையின்றி இனிது விளங்கக்கிடக்கின்றது.

---

கணபதி துணை.

# மறைசையந்தாதி

## மூலமும் உரையும்.

### காப்பு.

அந்தமு மாதியு மில்லா மறைசையி லத்தர் தம்மேற்
செந்தமிழ் நாற்பொரு ளந்தாதி பாடச் சிலம்பிலன்னை
யிந்தன வாணுதற் சுந்தரி யம்பிகை யீன்றெடுத்த
சுந்தர வீரகத் திச்சே தகன்றாட் டுணை துணையே.

(இதன் பொருள்.) அந்தமும் ஆதியும் இல்லா மறைசையில் அத்தர் மேல்-முடிவும் முதலும் இல்லாத வேதாரணியத்துச் சிவபெருமான்மேல், செந்தமிழ் நூல் பொருள் அந்தாதி பாட-செந்தமிழ் நூலில் வழங்கும் பொருளை யுடைய அந்தாதியைப் பாடுதற்கு, சிலம்பில் அன்னை இந்து அனவாள் நுதல் சுந்தரி அம்பிகை ஈன்று எடுத்த - (இமைய) மலையிலிருந்த மாதாவாகிய பிறையை யொத்த ஒளியைக்கொண்ட நெற்றியையுடைய பார்வதிதேவி பெற்ற, சுந்தர வீரகத்திச் சேதகன் துணைத்தாள் துணை-அழகையுடைய வீரக் கொலையாலாய (பழியைத்) துடைத்தவராகிய கணேசரது உபய திருவடிகளும் (எனக்குத்) துணையாகும் என்றவாறு;

இல்லா என்னுமீறுகெட்ட பெயரெச்சம், பெரியபுராணத்தில், "அங் கண ரோலைகாட்டி யாண்டவர் தமக்குநாடு" என்றவாறு பாலிமுக்கின்ற அத்தரோடு முடிந்தது. தம் சாரியை. சுந்தரத்தைத் தாளோடு சேர்ப்பினு மமையும். தாளென்பது, "எருமைநாற்கானீர்க்கீழவே" என்றதுபோல முற் றும்மை விகாரத்தாற்றொகின்றது. ஏ ஈற்றசை. அந்தாதியென்பது, தண்டி யலங்காரத்தில், "செய்யுளென்பவை தெரிவுறக் கிளப்பின்-முத்தகங்குளகந் தொகை தொடர் நிலையென-வெத்திறத் தனவு மீரிரண்டாகும்" என வரை யறுத்து, "சொல்லினும் பொருளினு மிருவகை தொடர்நிலை" என வகுத்து, "செய்யுளந்தாதி சொற்றொடர் நிலையே" என விரித்ததி லமைவதென்க. பஃ றொடையவாய் நேரிசை இன்னிசை யென்னும் பகுப்போடு பட்டவற்றின் மேற் பஃறொடைவெண்பாவென்னும் பெயர்வழங்காமைபோல, சொற்றொடர் நிலையவாய்க் கலம்பகம்நான்மணிமாலை யென்னும் பகுப்போடு பட்டவற்றின்மே லிப்பெயர் வழங்காதாயிற்று. இதுவுங் கலம்பகமும் முதலிய எழுத்துத் தொடர்நிலையாய் வருவனவுமுள; அவை யாண்டமையப்படுமெனிற் கமுகந் தோட்டமென்றாற்போல நின்ற இச்சொற்றொடர்நிலையிற்றானே யமையுமென் பது. இதனாற் சொற்றொடர் நிலையே சிறப்பும் பெருவரவும் ஆசிரிய ரிலக்க ணஞ்செய்த காலத்து நிகழ்வுமென்க.

## நூல்

**திருவா ரணங்கு மணமகன் பூசித்த செல்வர் வெள்ளைக்**
**கருவா ரணங்குமி றும்பண்ணை சூழ்மறைக் காடரிசை**
**மருவா ரணங்கு திரையாரைப் பாடுமென் வாய்க்கவிதைக்**
**கிருவா ரணங்குசெய் பூண்முலைப் பாமயி லென்றுணையே.**

இ—ள்: திரு ஆர் அணங்கு மணமகன் பூசித்த செல்வர்-இலக்குமியாகிய அருமையான தெய்வமாதுக்குத் தலைவரான புருஷோத்தமர் அருச்சித்த பகவரும், வெள்ளைக் கரு வாரணங் குமிறும் பண்ணை சூழ் மறைக்காடர்-வெண்மையாகிய சூலையுடைய சங்குகள் முழங்கும் வயல் சூழ்ந்த வேதாரணியத்தையுடையவரும், இசை மருவு ஆரணங் குதிரை யாரை-இசைபொருந்திய வேதமாகிய குதிரையை யுடையவருமாகிய சிவபெருமானை, பாடும் என் வாய்க் கவிதைக்கு-பாடுகின்ற எனதுவாயிற் பாட(லினிது முடிதற்)பொருட்டு, வார் அணங்கு செய் பூண் இருமுலைப்பாமயில் என் துணை-கச்சுக்கு வருத்தத்தைப் புரியும் ஆபரணத்தைததாங்கிய இரண்டு தனத்தையுடைய கலைமகள் எனது துணை எ-று.

திரு ஆர் அணங்கு என்பதற்கு இலக்குமிக்கும் பூமிதேவிக்கும் எனப் பொருள் கூறினுமமைம். ஆர் பூமிக்காதலை சூடாமணி நிகண்டில் "ஆர் கூர்மை யாத்தி சோதி பம்புவி பாகுமாமே" என்பதனுலுணர்க. ஆரணங் குதிரையாரை யென்பது, மெலிக்கும் வழி மெலித்தல். செல்வர் மறைக் காடார் குதிரையாரைப் பாடும் என்றதும் மேல்வருமின்னவும், "ஒருபொருண் மேற் பல பெயர்வரினுறுதி-யொருவினை கொடுப்ப" என்னும் நன்னூல்விதியிலமைவன. திரு என்பது மங்கலமொழி (க)

**என்று டலையொன்று காலனைத் தாக்கி யெழிற்கனக**
**மன்று டலைச்செய்து வான்பர வைப்பெயர் மண்ணும் விண்ணுஞ்**
**சென்று டலைக்கடை வாயிற் படியினிற் சேர்ந்துவைகு**
**முன்று டலைவைப் பதுமறைக் காட்டி லுறைபரனே.**

இ—ள்: மறைக்காட்டில் உறை பரனே-வேதாரணியத்தில் வீற்றிருக்கின்ற கடவுளே, ஆடல் ஒன்று காலனைத் தாக்கி - வலிபொருந்திய நமனையுதைத்தும், எழில் கனக மன்று ஆடலைச் செய்து-அழகையுடைய பொன்னம்பலத்திலானந்த நடனத்தைச் செய்தும், வான் பரவைப் பெயர் மண்ணும் விண்ணுஞ் சென்றுள் தலைக் கடைவாயில் படியினில் சேர்ந்து வைகும் உன் தாள்-பெருமையாகிய பரவையென்னும் பெயர் பூமியிலும் ஆகாயத்திலும் செல்லப்பெற்றுளது தலைவாயிற்படியினிற் சேர்ந்துமிருந்த நுமது திருவடியை, தலைவைப்பது என்று-(என்) சிரத்தில் வைப்பது எப்போது எ—று.

ஆட்டலை என்பதின் ஐ சாரியை. கடைவாயில் ஒருபொருட் பலபெயர். உன் தாள் என்பது, "உன்னன்புடையவொரு மகவுமீங்கிலை" என்னுங் கந்த புராணச் செய்யுள்போல நின்றது. (உ)

**பரமரம் பாலிகைச் செம்பவ ளக்கொடி பங்கர்சுரும்**
**பரமரம் பானை யெரித்தார் மறைசைப் பதியர்வரிப்**
**பிரமரம் பாடிய பொற்கொன்றைத் தாமரைப் பேசுதியோர்**
**தாமரம் பாவிநெஞ் சேவினை யாங்கருந் தாதினுக்கே.**

இ—ள்: பாவி நெஞ்சே-பாவியாகிய மனமே, பரமர்-முன்னானவரும், அம் பாலிகைச் செம்பவளக்கொடி பங்கர்-அழகாகிய அநாமாய செம்பவளத்தையுடைய வல்லிபோல்வாரைப் பாகத்தி லுடையவரும், சுரும்பர் அமர் அம்பானை எரித்தார்-வண்டுகளிருக்கின்ற மலர்ப் பாணத்தை யுடையானாகிய மதனை யெரித்தவரும், மறைசைப் பதியர் - வேதவனமாகிய பதியை யுடையவரும், வரிப் பிரமரம் பாடிய பொன் கொன்றைத் தாமரை-வரியைக்கொண்ட வண்டுகள் பண்ணைப் பாடும் பொன்போலுங் கொன்றைமாலையையுடையவருமாகிய சிவனை, ஓர் தரம் பேசுதி-ஒருமுறை துதி, வினை ஆங் கருந்தாதினுக்கு அரம்-(அத்துதி) வினையாகிய இருமபை தேய்த்தற்கு அரமாகும்.

பொன் அழகுமாம். பிரயோகவிவேகத்தில், "கொள்வோன் விடநிகழ் கின்ற குத்தாதர்த்தியாதி" என்ற சூத்திரத்தில் ஆதிசத்தத்தினாற் கருந்தாதினுக்கு என்பதின் நடுவில் தேய்க்கவென்னுஞ் சொல்லுப்பெய் துரைக்கப்பட்டது, "துன்பத்துக்கியாரே துணையாவார்" என்றதுபோல. மேல் மையற் பிணிக்கு என வருவது மிது. (௩)

**கருந்தாதை யன்ன கயவர்தம் மீதிற் கவிதை சொல்லி**
**வருந்தாதை யாநநன் வேதா ரணியன்வை வேற்குகனைத்**
**தருந்தாதை தெய்வ மணங்கமழ் சேவடித் தாமரைமேற்**
**பொருந்தாதை யோநினை வில்லாவென் சித்தப் பொறிச்சுரும்பே.**

இ—ள்: என் நினைவு இல்லாச் சித்தப்பொறிச் சுரும்பு-எனது நினைவு இல்லாத மனமாகிய பொறியையுடைய வண்டு, கருந்தாதை அன்ன கயவர் மீதில் கவிதை சொல்லி வருந்தாது-இரும்பை யொத்த (வன்னெஞ்சையுடைய) கீழ்மக்கள்மேற் பாட்டைப் பாடி வருந்தாமல், ஐயாநநன்-ஐந்து திருமுகங்களை யுடையவரும், வேதாரணியன்-மறைக்காட்டை யுடையவரும், வை வேல் குகனைத் தருந்தாதை - கூரிய சத்தியைக்கொண்ட குமாரக்கடவுளைத் தந்த பிதாவுமாகிய சிவனது, தெய்வ மணங் கமழ் சேவடித் தாமரை மேல் - தெய்வமணங் கமழாநின்ற செம்மையாகிய பாதாரவிந்தத்தின்மேல், ஐயோ பொருந்தாது-அந்தோ பொருந்துதல் செய்திலது எ—று. (௪)

சுரும்பர வைக்கிசை தாமரை யோவிடந் தொல்புவியோ
தரும்பர வைக்க ணியலேது தூதிருட் காலமுல்லை
யரும்பர வைப்பயி லும்வா ணகையல்கு லன்னமென்ன
வரும்பர வைக்கு நடந்தார் மறைசை வரையிறையே.

இ—ள்: முல்லை அரும்பு (பயிலும்) வாள் நகை - தளவமுகையை யொத்த வொளியைக்கொண்ட பல்லையும், அரவைப் பயிலும் அல்குல்-சர்ப்ப படத்தையொத்த நிதம்பத்தையுமுடைய, அன்னம் என்ன வரும் பரவைக்கு-அன்னத்தைப்போல நடக்கும் பரவையாரிடத்தில், இருள் காலந் தூது நடந்தார் மறைசை வரை இறையே-இருளையுடைய விராக்காலத்திற் (சுந்தரமூர்த்தி நாயனாருக்காகத்) தூதுபோன சிவபெருமானது வேதவனத்து மலையில் தலைவனே, கரும் பரவைக் கண் இடம் - (நின்னிறையை வாங்கிய) கரிய கடலை யொத்த கண்ணையுடையாளுக்கு இடம், சுரும்பர் அவைக்கு இசை தாமரையோ-வண்டுகளுக்கு ஏற்ற தாமரைமலரோ?, தொல்புவியோ - (அல்லது) பழைய பூமியோ?, இயல் ஏது-இயல் யாது? (சொல்லுதி) எ—று.

அவை பகுதிப்பொருள் விகுதி. வாணகையல்குலன்னமென்ன வரும் பரவைக்கு என்பது, திருமுருகாற்றுப்படையில் "பலர்புகழ் திணிதோ - ளுமையமர்ந்து விளங்கு - மிமையாமுக்கண் மூவெயின் முருக்கிய - முரண்மிகு செல்வனும்" என முடிந்ததுபோல முடிந்தது. அன்னமென்னவரும் பரவைக்கு என்பது, இலக்கணக்கொத்தில் "பலசொல்லினையே யொருசொல் லாகவும்" எனக் கூறிய விதியமைந்து, "வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்" என்பதுபோல நின்றதெனினுமாம். பரவைக்கு என்பது, "கிளையரிநாணற் கிழங்கு மணற்கீன்ற" என்பதுபோல "யாதனுருபிற் கூறிற்றாயினும் - பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்" என்ற தொல்காப்பிய விதியமைந்து நின்றது. பரவைக்கண் உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த வன்மொழித்தொகை. சொல்லுதி அகப்பாட்டுறுப்பினெச்சம். [எவ்விடத் தெவ்வியற்றென்றல்]. (கு)

வரைச்சங் கரிக்கு மணவாளர் கூடல் வளர்த்திடுமூ
வுரைச்சங் கரிக்கு வனஞ்சூழ் மறைசையி லுத்தமநா
தரைச்சங் கரிக்கு விடப்பாணி சக்கிரந் தானைதொட்ட
திரைச்சங் கரிக்குந் தெரியாப் பதநிழல் சேர்மின்களே

இ—ள்: வரைச்சங்கரிக்கு மணவாளர்-மலையிற் பிறந்த உமாதேவிக்கு நாயகரும், கூடல் வளர்த்திடும் மூவுரைச் சங்கர்-மதுரையில் வளர்ந்த முத்தமிழ்ச்சங்கத்தை யுடையவரும், இக்கு வனஞ் சூழ் மறைசையில் உத்தமநாதர்-கருப்பஞ்சோலை சூழ்ந்த வேதவனத்தில் வாழும் முதன்மையாகிய கடவுளுமாகிய சிவனது, கரிக்கு அச்சம் விட - யானைக்கு (முதலையா லடைந்த) பயம்

நீங்க, பாணி சக்கிரத் தானை தொட்ட-கையிற்றங்கிய சக்கிராயுதத்தைத் தாண்டிய, திரைச் சங்கு அரிக்குந் தெரியாப் பதநிழல் சேர்மின்கள்-கடலிலெழுந்த சங்கையுடைய மாயவனுக்குந் தெரியாத திருவடிநிழலிற் (பிறவிவெய்யி லினைப் பொழிய நீவிர்) சேருவீர் எ—று.

முத்தமிழ்: இயல் இசை நாடகம் என்பன. நாதர்பதமென வியையும். திரை ஆகுபெயர். (சு)

**மின்னஞ்சு கங்கைச் சடாதரன் சத்த விடங்கன்றிரை**
**வன்னஞ்சு கந்தவன் மாமறைக் காடற்கு மாதொரிராப்**
**பன்னஞ்சு கமென வேள்காம காண்டப் பகழியினு**
**லின்னஞ் சுகமில்லை யென்றந்தை யோது மிளந்தத்தையே.**

இ—ள்: இளந் தத்தையே-இளமையாகிய கிளியே, மின் அஞ்சு கங்கைச் சடாதரன்-(ஒளியினுல்) மின்னல் பயங்கொள்ளுங் கங்கையைத் தரித்த சடாமுடியை யுடையவரும், சத்த விடங்கன்-அழகிய விடங்க மூர்த்தமான வரும், திரை வல் நஞ்சு உகந்தவன்-கடலிலெழுந்த வலிய நஞ்சை விரும்பின வரும், மாமறைக்காடற்கு-பெருமையாகிய வேதவனத்தை யுடையவருமாகிய சிவனுக்கு, மாது ஓர் இரா பன்னஞ்சு உகம் என-(நமது) மங்கை ஓரிரவு பதினைந்து யுகமென்ன, வேள் காமகாண்டப் பகழியினுல்-மதனது காமகாண்டதனு (விலிருந்தெழும்) பாணத்தால், இன்னஞ் சுகம் இல்லை என்றந்தை ஓதும்-இன்னுஞ் சுகமில்லையென்று சொன்னதை (நீர்) சொல்லும் எ—று.

பன்னஞ்சு என்பதற்குச் சொல்லப்படும் ஐந்து என்னினு மமையும். கழிதுயர் விளைத்தலிற் காமகாண்டமென்றுள். தத்தையே ஓதுமென உவப்பினுல் "புறவே தமியேன் பெறவே புகல்வீர்" என்றவாறு முடிந்தது. அல்லது தத்தைபால்பகா வஃறிணைப்பெயராதலிற் கிளிகளேயெனக் கூறி, ஓதும் எனவழாநிலையாக்கினுமாம். இது கடவுண்மாட்டு மானுடப்பெண்டிர் நயந்த பக்கத்துக் கிளியைத் தூதுவேண்டல். (எ)

**தத்தலை வேலையன் காணுத வேதத் தனிவனத்து**
**முத்தலை வேலையன் வெற்பினம் மாது முளரியடி**
**யத்தலை வேலையன் முட்சொரி பாலை யருஞ்சுரத்து**
**வைத்தலை வேலையன் பாலென்னை காடி வரவெண்ணுமே.**

இ—ள்: தத்து அலை வேலையன் காணுத - தத்துகின்ற திரையைக் கொண்ட (பாற்) கடலையுடைய மாயவன் காணுத, தனிவேதவனத்து முத்தலைவேல் ஐயன் வெற்பில் நம்மாது-ஒப்பற்ற திருமறைக்காட்டில் வாழும் முத்தலைச் சூலத்தையுடைய சிவனது மலையில் நமது மங்கை, முளரி அடி - தாமரைமலரைப்போலும் (மெல்லிய) தாளை, அத் தலைவேல் அயல் முள்

சொரி-அவ்விடத்து வேலமரம் பக்கத்தின் முள்ளைச் சொரியும், பாலை அருஞ் சுரத்து வைத்து அலை வேலை-பாலைவனத்திலுள்ள அரிய நெறியில் வைத்து அலையும்போது, அன்பால் என்னை நாடி வர எண்ணும் - அன்பினு லென்னைத் தேடி (யிங்கு) வரக் கருதுவள் எ—று.

ஐயல் போலி. [தலைமகன் மென்மைத் தன்மைக் கிரங்கல்.] (அ)

வரபர சங்கர வேதா ரணிய மடங்கலஞ்சுஞ்
சரபர சங்கர ளம்பொதி வாய்விழித் தையல்பங்கி
னரபர சங்க ரவிபோ லொளியி னணிதிகழும்
புரபர சங்கர வாநம னூர்வரும் போதத்திலே.

இ—ள்: வர - அநுக்கிரகத்தைக்கொண்டவரே, பர - முன்னானவரே, சங்கர-சுகத்தைச் செய்பவரே, வேதாரணிய-மறைக்காடரே, மடங்கல் அஞ் சுஞ்சரப-நாரசிங்கம் பயந்த சிம்புள்வடிவானவரே, ரசம் (பொதி) வாய் களம் பொதி விழித்தையல் பங்கின் அர-அமுதைப் பொதிந்த வாயையும் நஞ்சைப் பொதிந்த கண்ணையுமுடைய உமாதேவியைக்கொண்ட பாகத்தையுடைய சங்காரகருத்தரே, பர-பரமாத்மாவே, சங்க ரவிபோல் ஒளியின் அணி திகழும் புர-கூட்டமாகிய சூரியரைப்போலச் சோதியினால் அலங்காரம் விளங்குந் திரு மேனியை யுடையவரே, பரசுக் கர-மழுவைத் தாங்கிய கையை யுடையவரே, நமனூர் வரும் போதத்தில் வா - (என்மாட்டுக்) காலன்வரும்போது (மரண வேதனை தீர) வந்தருளும் எ—று.

சங்கரவி என்பதற்குச் சங்கசூரியரொளினு மமையும். சங்கம் ஓரெண். பரசு- அங்க என வைத்து, துதிக்கப்படும் அங்கத்தையுடையவரே என்பது மொன்று. ரசம் ஆகுபெயர். அம்மும் அத்துஞ் சாரியை. (கூ)

போதவ னத்த னவிராழி விற்கதை பூட்டுசிலை
மாதவ னத்தன் மனுதிக்கெட் டாத வரதனங்கி
யாதவ னத்த நகுமதி மூன்றுகண் ணன்பொறியார்
வேதவ னத்தன் பதம்பேணிற் பாச விலங்கறுமே.

இ—ள்: போதவன்-தாமரைமலரின் வசிக்கின்ற பிரமனுக்கும், நத்தம் நவிர் ஆழி வில்கதை பூட்டு சிலை மாதவன் அத்தன் - சங்கையும் வாளையுஞ் சக்கிரத்தையும் ஒளியைக்கொண்ட தண்டையும் நாண் பூட்டும் வில்லையு முடைய மாயவனுக்கும் பிதாவானவரும், மனுதிக்கு எட்டாத வரதன் - மன முதலியவற்றிற்கு அதீதமான வரதரும், அங்கி ஆதவன் நத்தம் நகு மதி மூன்று கண்ணன்-அக்கினியுஞ் சூரியனும் இரவில் விளங்குஞ் சந்திரனுமாகிய திரிநேத்திரத்தை யுடையவரும், பொறி ஆர் வேதவனத்தன் - இலக்குமி வாழும் மறைக்காட்டை யுடையவருமாகிய சிவனது, பதம் பேணில் பாச விலங்கு அறும்-திருவடியைப் பேணினுற் பாசமாகிய விலங்கு அறும் எ—று.

**விலங்க லரிக்குலஞ் சூழ்மறைக் காடன் விரிந்ததுழா**
**யலங்க லரிக்கரு மாரூரி லோர்புற் றமர்ந்திருக்கு**
**மிலங்க லரிக்கட் களக்கறை யானைச்சற் றெண்ணுநெஞ்சே**
**கலங்க லரிக்குநந் தீவினை யான கருங்கலையே.**

இ—ள்: நெஞ்சே-மனமே, விலங்கல் அரிக் குலஞ் சூழ் மறைக்காடன்-மலையிற் சிங்கக்கூட்டஞ் சூழும் வேதாரணியத்திறைவன், விரிந்த துழாய் அலங்கல் அரிக்கு அரும் ஆரூரில் ஓர் புற்று அமர்ந்து இருக்கும் - அலர்ந்த துளவமாலையை யணிந்த மாயவனுக்கு மரிய கமலாலயத்தில் ஒரு புற்றிலும் மகிழ்ந்து வீற்றிருக்கும், இலங்கு அலரிக்கண் களக்கறையானை-(அங்ஙனம் வீற்றிருக்கின்ற) விளங்காநின்ற சூரியனாகிய கண்ணையுடைய களக்கறையானை, சற்று எண்ணு-சிறிது கருதுதி, நந் தீவினை ஆன கருங்கலை அரிக்கும் - (கருதில் அக்களக்கறையான்) நமது தீவினையாகிய கரிய வஸ்திரத்தை அரிக்கும், கலங்கல்-கலங்கேல் எ—று.

களக்கறையானென்பது கழுத்திற் கறையை யுடையானெனவும் களக் கறை யானெனவும் பொருள் பயந்தது. கறையானென்றதற்கிசைய வினையைக் கலையென்றார். மறைக்காடனாகிய களக்கறையானென விசைப்பாரு முளர். (கக)

**கருங்கலை மானுமென் சித்தா சனம்புகுங் கண்ணுதலோ**
**னருங்கலை மானுறை வேதா ரணிய னணிவரைமேன்**
**மருங்கலை மாநுதிக் கண்முலை யிருங்கள் வார்தடங்கண்**
**பொருங்கலை மானொன்று வந்ததுண் டாயிற் புகன்றிடுமே.**

இ—ள்: என் சருங்கலை மானுஞ் சித்தாசனம்புகும் நுதற்கண்ணோன்-எனது கருங்கல்லையொத்த (திண்ணிய) இதையபீடிகையிலும் புகுந்தருளும் நெற்றியிற் கண்ணை யுடையவரும், அருங் கலைமான் உறை வேதாரணியன் - அரிய பாமக ளிருக்கின்ற திருமறைக்காட்டை யுடையவருமாகிய சிவனது, அணி வரைமேல்-அழகைக்கொண்ட மலையில் (வாழும்), மருங்கு அலை மா நுதிக் கண் முலையீர் - இடையை யலைக்கின்ற கரிய நுதியைப் பெற்ற கண்ணை யுடைய தனத்தீர், உங்கள் வார் தடங்கண் பொருங் கலைமான் ஒன்று வந்தது உண்டாயின் புகன்றிடும் - நுமது நீண்ட விசாலமாகிய கண்ணைப்போலும் ஒரு கலைமான் (இப்புனத்து) வந்ததுண்டானாற் சொல்வீர் எ—று.

மாவை முலைக்கு அடையாக்கிற் பெரியவெனப் பொருளுரைக்க. கண் பொருங் கலைமானென்பது "கருநெடுங்கண் போலுங் கயல்கள்" என்பது போல நிற்றலின் விபரீதவுவமையணி. [தலைவனவ்வனைகவினுதல்.] (கஉ)

**புகாரானை யீரு முரியானை வெண்பொருப் பானையெண்ணம்**
**பகரானை மேய்த்துவெண் பற்றானை யாற்கைப் பகட்டைக் கவ்வி**
**யகராநை யச்சுட ராழிதொட் டாற்கரி யானைமறை**
**நகரானை யன்றிச்சொல் லாதிறைஞ் சாதென்ற நாச்சிரமே.**

இ—ள்: புகர் ஆனை ஈரும் உரியானை - கபிலநிறத்தைக் கொண்ட யானையி லுரித்த தோலை யுடையவரும், வெள் பொருப்பானை - வெள்ளிய கயிலைமலையை யுடையவரும், எண் அம்பகர்-எட்டுக் கண்ணைக் கொண்ட பிரம னுக்கும், ஆனை மேய்த்து-பசுவை மேய்த்து, வெள் பல் தானையால் கைப் பகட்டைக் கவ்விய கராநையச் சுடர் ஆழி தொட்டாற்கு அரியானை - வெள் ளிய பல்லாகிய படையாற் றுதிக்கையைக்கொண்ட யானையைக் கவர்ந்த முதலை வருந்தப் பிரபையையுடைய சக்கிரத்தைத் தூண்டிய மாயவனுக்கும் அரியவரும், மறை நகரானை அன்றி என் நாச் சொல்லாது சிரம் இறைஞ் சாது - வேதவனத்தை யுடையவருமாகிய சிவனை (ச் சொல்வதும் வணங்கு வது) மன்றி (ப் பிறதெய்வத்தை) எனது நாச் சொல்லாது, தலை வணங்காது.

முதலில் ஆனை கெடுதல்விகாரம் பெற்றது; இரண்டில் ஆனையில் ன் சாரியை. (௧௫)

**சிரவர விந்தம் புனைமறைக் காடத்ரி சூலங்கொண்ட**
**கரவர விந்தம் பணித்தோன் மலைத்தென்றற் கன்றுயிர்க**
**வரவர விந்த மடநடைக் கோமள வஞ்சியிரு**
**ளிரவர விந்த மெனக்கிடந் தாள்பின்னை யென்செய்வளே**

இ—ள்: அரவு இந்து அம் புனை சிர - பாம்பையுஞ் சந்திரகலையையுங் கங்கையையுந் தரித்த தலையை யுடையவரே, மறைக்காட - வேதவனத்தரே, திரிசூலங் கொண்ட கர - முத்தலைச் சூலத்தைக்கொண்ட (வலக்) கையரே, வர-அநுக்கிரகஞ் செய்பவரே, விந்தம் பணித்தோன் மலைக் கன்றுத் தென் றல்-விந்தமலையைத் தாழ்த்தவராகிய அகஸ்தியமுனிவரது (பொதிய) மலையில் (நின்றெழு) மந்தமாருதம், உயிர் கவர வர - ஆவியைக் கவர வர, மடநடைக் கோமள இந்தவஞ்சி - மடநடையையுடைய இளமையாகிய இப்பெண், இருள் இரவு அரவிந்தம் எனக் கிடந்தாள்-இருளையுடைய இரவில் தாமரைமலர்போ லக் (கூப்பிக்) கிடக்கின்றாள், பின்னை என் செய்வள் - (அவ்வாறு கிடத்தலன் றிப்) பின் யாது செய்வாள்! எ—று.

அர எனக் கொள்ளினுமாம். இது கடவுண்மாட்டு மானுடப்பெண்டிர் நயந்த பக்கத்துத் தலைவி மயலையிறையோன் முன்னர்த் தோழி சொல்லியது. "வாகைதன்பின் கொட்கும் பொதுவியல்பாடாண் புறப்புறம்" என வீரசோழி யத்திற் சொன்னமையின், இத்திறனெல்லாம் புறப்புறம் என்க. (௧௬)

**செய்யரைக் கோடிமை மாவுரியாரைச் செழுங்கனன்மான்**
**கையரைக் கோடி புனைமறைக் காடரைக் கண்ணிற்கண்டாற்**
**பையரைக் கோடிமின் னார்மய லால்வரும் பாவமெல்லா**
**மையரைக் கோடி யருந்துக ளாவ தறிசித்தமே.**

இ—ள்: சித்தமே-மனமே, செய்யரை-செம்மையை யுடையவரும், கோடு இமை மா உரியாரை-தந்தம் பொருந்திய யானையினது தோலை யுடையவரும், செழுங் கனல் மான் கையரை - அழகிய அக்கினியையும் மானையுந் தாங்கிய கையை யுடையவரும், கோடி புனை மறைக்காடரை - கோடி தீர்த்தத்தைத் தாங்கிய வேதவனத்தையுடையவருமாகிய சிவனை, கண்ணிற் கண்டால்-நேத்திரத்தால் தரிசித்தால், பை அரைக்கோடி மின்னார் மயலால் வரும் பாவம் எல்லாம்-நிதம்பத்தையுடைய அரையிலாடையைக்கொண்ட மகளிரது மயக்கத்தால் வரும் பாவம் முழுதும், அரும் ஐயரைக்கோடி துகள் ஆவது அறி - அரிய இரண்டரைக்கோடி துகளாகச் சிதைதலை யறிவாய் எ—று.

பை உவமவாகுபெயர். (கரு)

**சித்திர வன்னிக ருங்கொங்கை பங்கர்செற் றூர்புரமூன்**
**றத்திர வன்னிக் கருணகை யார்க்கிட மாகமநூன்**
**மித்திர வன்னியும் பூவையுங் கேட்டு வியந்துரைக்கும்**
**பத்திர வன்னி மரஞ்சேர் மறைசைப் பதியகமே**

இ—ள்: அகமே-நெஞ்சே, சித்திர வல் நிகருங் கொங்கை பங்கர்-அழகிய சூதாடு கருவியைப்போலுந் தனத்தையுடைய உமாதேவியைப் பாகத்திலுடையவரும், செற்றூர் மூன்று புரம்-பகைவரது முப்புரத்தையும், அத் திர வன்னிக்கு அருள் நகையார்க்கு இடம்-அந்த வலிய அக்கினிக்குக் கொடுத்த சிரிப்பையுடையவருமாகிய சிவபெருமானுக்கு இடமாவது, மித்திர வன்னியும் பூவையும் ஆகமநூல் கேட்டு வியந்து உரைக்கும்-சினேகத்தையுடைய கிளியும் நாகணவாயும் (ஆன்றோரோதும்) ஆகமசாஸ்திரத்தைக் கேட்டு வியந்து பேசுகின்ற, பத்திரவன்னிமரஞ் சேர் மறைசைப் பதி-இலையைக்கொண்ட வன்னிமரஞ்சேர்ந்த வேதவனபுரி எ—று.

சித்திரவன்னி கருங்கொங்கை என்பது அன்மொழித்தொகை. இதனைப் பிரயோகவிவேகத்தில், "இருமொழி பன்மொழி பின்மொழியெண்ணொ டிருமொழியெண்-டருமொழி யொற்றெழி திக்கந்தாளஞ் சகமுனிற்கு-மொருமொழியேனை விதிகார லக்கணத்தோடு வரும் - பெருமொழியாகி வெகு விரியன்மொழிப் பேரடைந்தே" என்னுஞ் சூத்திரத்தானறிக. அத்திர வன்னிக்கு என்பதற்குப் பாணத்தில் நுதியாகிய அக்கினிக்கு எனக் கூறினுமமையும். இதில் அத்திரம் ஆகுபெயர். கொங்கை பங்கர் என்பதற்குத்

தனத்தைப் பாகத்திலுடையவரென்பதுமொன்று. வியந்துஎன்பதை வினையெச்சத்திரிபாக்கி வியக்கவெனினுமமையும். அகமே என்பதை இடமாக்கினுமாம். (கசு)

**பதிகம் பரிக்குங் குழன்மாத ராயப் பரவையுள்ளே**
**வதிகம் பரிக்கு நிகர்விழி யாய்மலை மாதுகங்கா**
**ளிதிகம் பரிக்கு மணியாக மீந்தரு ளீசர்முத்தம்**
**பொதிகம் பரிக்குந் திரைவேலை வேத புரிவரைக்கே.**

இ—ள்: மலை மாது-(இமைய) மலையில் (உதித்த) மங்கையும், கங்காளி - முழுவெலும்பைப் புனைந்தவரும், திக் அம்பரிக்கு - திசையாகிய ஆடையையுடையவருமாகிய உமாதேவிக்கு, மணி ஆகம் ஈந்தருள் ஈசர்-அழகாகிய (பாதித்) திருமேனியைக் கொடுத்த இறைவரது, முத்தம் பொதி கம்பு அரிக்கும்-முத்தைப் பொதிந்த சங்கையரிக்கின்ற, திரை வேலை வேத புரிவரைக்கு-அலையையுடைய கடலை (யோர்சாரிற்கொண்ட) திருமறைக்காட்டு மலையில், அம்பு அரிக்கு நிகர் விழியாய்-பாணத்துக்கும் வண்டுக்குஞ் சமமாகிய கண்ணையுடையாய், பதிகம் பரிக்குங் குழல் ஆய மாதர்ப் பரவையுள் வதிக - பாசியை வருத்துகின்ற கூந்தலையுடைய தோழிப்பெண்களாகிய கடலுளிருக்கக்கடவை எ—று.

பதிகம் இப்பொருளாதலை இரகுவமசத்தில், "செறியணிப்பதிகத்திடைவளரிளஞ்சேல்கள்" என்னுஞ் செய்யுளானுணர்க. பரிக்குங்குழல் என்பதற்குத் தாக்கிஞற் போன்ற கூந்தலெனினுமாம். மிகுதிபற்றிப் பரவையென்றான். உள்ளே என்பதின் ஏ இசைநிறை. வதிக என்பது ஈறுகெட்டது. வதுநி என்பாருமுளர் [ஆபத்துய்த்தல்] (கஎ

**புரியார நந்த னறியாப் பதம்பெறப் பொற்கயிலைப்**
**பெரியா ரனந்தனை வென்னடை பாகர் பிறப்பினிலங்**
**குரியா ரனந்த வளமறைக் காட்டைக் குறித்திருந்து**
**மரியா ரனந்தன் சிரமேற் புவித்தல மானவரே.**

இ—ள்: புரி ஆர் அம் நந்தன் அறியாப் பதம் பெற-புரி பொருந்திய அழகாகிய சங்கையுடைய மாயவனுமறியாத பாதத்தைப் பெற, பொன் கயிலைப் பெரியார்-அழகைக்கொண்ட கைலாசத்தில் வீற்றிருக்கும் பெரியவரும், அனந்தனை வெல் நடை பாகர்-அன்னத்தை வென்ற நடையைக் கொண்ட உமாதேவியைப் பாகத்திலுடையவரும், பிறப்பினில் அங்குரியார்-பிறவியில் முளையாதவருமாகிய சிவனது, அனந்தவளமறைக் காட்டைக் குறித்திருந்து-அளவற்ற வளத்தைக் கொண்ட வேதாரணியத்தைக் கருதியிருந்து, அனந்தன் சிரப் புவித்தல மேல் மானவர் மரியார்-சேடனது தலைக்கட்டங்கிய நிலவுலகத்தின் மேலிடத்துள்ள மனுடரிறவார் எ—று.

அரந்தன் எனக் கொண்டு அந்தரந்தனென்றும், புரி ஆர நந்தன் எனக் கொண்டு புரியையும் முத்தையுமுடைய நந்தனென்று முரைக்கினு மமையும். (கஎ)

**மானத் தரக்கரந் தைப்பட வீர்ந்துரி வாங்கினர்கற்**
**றூனத் தரக்க ரரசுட்க வூன்றிய தாளர்குடப்**
**பானத் தரக்கர விந்தத்தின் மேற்றுயில் பண்ணைமறைக்**
**கானத்த ரக்கர மைந்துணர் வீர்வினைக் கட்டறுமே.**

இ—ள் மானத் தரக்கு அரந்தை பட ஈர்ந்து உரிவாங்கினர்-வலியைக் கொண்ட புலி இடருற இழுத்துத் தோலைக்கொண்டவரும், கல்தானத்து அரககர் அரசு உட்க ஊன்றிய தாளர்-(கயிலை) மலையாகிய இடத்தின்கண் இராக்கத இராசனாகிய இராவணன் அஞ்ச ஊன்றிய திருவடியையுடையவரும், குடப் பால் நத்து அரக்கு அரவிந்தத்தின் மேல் துயில் பண்ணை மறைக்கானத்தர் - குடத்தைப்போலும் வெண்மையாகிய சங்குகள் சிவப்பாகிய தாமரைமலரில் துஞ்சுகின்ற வயல் (சூழ்ந்த) வேதவனத்தையுடையவருமாகிய சிவபெருமானது, ஐந்து அக்கரம் உணர்வீர் வினைக் கட்டு அறும்-பஞ்சாக்கரத்தை அறிமின், வினைத்தளை அறும் எ—று.

அரந்தைப்பட விரித்தல் விகாரம். ஊன்றியது பெருவிரலாலாகவும் முதல் சினையொற்றுமை கருதித் தாளிலேற்றினர். தாள் ஆகுபெயரென் னினுமமையும். அரக்குத் தேனுமாம். (கஅ)

**அறுத்தவித் தாரச் சமைத்தபிள் ளைக்குகந் தார்பொதியக்**
**குறுத்தவித் தார முனிக்கருள் கோலக் குழகராரப்**
**பொறுத்தவித் தாரணி யேத்தா ரணபுரம் போந்துகரு**
**வறுத்தவித் தாக்கும தல்லாது வேறு மருந்தில்லையே.**

இ—ள்: அறுத்து அவித்து ஆரச்சமைத்த பிள்ளைக்கு உகந்தார்-அறுத்து அவித்து முற்றச்சமைப்பித்த (சிறுத்தொண்டநாயனாரது) பிள்ளைக் கறியை மகிழ்ந்தவரும், பொதிய வித்தார குறுத்த முனிக்கு அருள் கோலக் குழகர்-பொதியமலையில்வாழும் விற்பன்னத்தையுடைய அகஸ்திய ரிஷிக்குக் காட்டிய திருமணக்கோலவழகை யுடையவருமாகிய சிவனது, அராப் பொறுத்த இத்தாரணி ஏத்து ஆரணபுரம் போந்து-(சேஷனாகிய)சர்ப்பந் தாங்கிய இந்நிலத்தார்கள் துதிக்கும் வேதபுரியிற் போய், கருவறுத்த வித்து ஆக்கும்-கருவைவறுத்த விதைஆக்குமின், அதுஅல்லாது வேறுமருந்து இல்லை-(அங்ஙனம்ஆக்குதற்கு)அந்தவேதபுரியன்றிப் பிறிது மருந்தில்லை எ—று.

ஆரணபுரம் போந்து என்பது, "புலம் புக்கனனே" என்றது போல நின்றது. (௨0)

மருக்கர வீரநின் னோதியைக் காரென்று மாஞ்ஞையெல்லா
முருக்கர வீர வயில்விழி யாய்நட முற்றனவைந்
திருக்கர வீரகத் திச்சே தகன்றந்தை சீர்மறைசை
யெருக்கர வீர மதிவேணி வெற்பி லெழிலியன்றே.

இ—ள்: ஐந் திருக் கர வீரகத்திச் சேதகன் தந்தை-ஐந்து திருக் கைகளையுடைய வீரசத்திச் சேதகராகிய விநாயகரது தாதையும், சீர் மறைசை எருக்கு அரவு ஈர மதி வேணி வெற்பில்-செல்வத்தைக் கொண்ட வேதவனத்தில் வீற்றிருக்கும் எருக்கலரையும் பாம்பையும் குளிர்ச்சியுடைய சந்திர கலையையுந் தாங்கிய சடையையுடையவருமாகிய சிவனது மலையில், உருக்கு ஆர வீர அயில் விழியாய்-உருக்காரத்தையும் வீரத்தைப் பெற்ற வேலையுமொத்த கண்ணையுடையாய், மஞ்ஞை எல்லாம்-(இந்நிலத்து வாழும்) மயில்கள் யாவும், நின்மருக் கரவீர ஓதியைக் கார் என்று நடம் உற்றன எழிலி அன்று-நினது வாசத்தையுடைய அலரிப்பூவைப் புனைந்த கூந்தலை மேகமென்னக் கருதி நடித்தன; இது கார்காலமன்று எ—று.

விழிக்கு அரம் உவமையாதலைக் கம்பராந்தாதியில், "களங்கண் முகங் கம்பராந்தாதியைகஞ்சமன்னுள்பங்கனே" என்னுஞ் செய்யுளானுணர்க.
[இருளைவம்பென்றல்.] (உக)

அன்றாலி னாட்டந் துயின்றோ னிகரண்ண லேதிருமான்
பொன்றாலி நாட்டநஞ் சுண்டார் மறைசைப் பொருப்பகத்தி
லொன்றாலி நாட்டவழ் கார்போலும் வார்குழ லொண்டொடியூர்
குன்றாலி நாட்டவர் கொள்ளா ருனது குளிர்முத்தமே.

(இ—ள்) அன்று ஆடில் நாட்டந் துயின்றோன் நிகர் அண்ணலே—அக் காலத்தில் (ஆலிலையிற்) கண்வளர்ந்த புருஷோத்தமனையொத்த தலைவனே, திருமான் பொன் தாலி நாட்ட நஞ்சு உண்டார் மறைசைப் பொருப்பு அகத்தில்—இலக்குமியினது பொன்னாலாய தாலியை நாட்டுதற்கு நஞ்சை யுண்டாராகிய தம்பிரானாரது வேதாரணியத்து மலைக்கண், ஆலி ஒன்று நாள் தவழ் கார்போலும் வார் குழல் ஒள் தொடி ஊர் குன்றாலி—ஆலங்கட்டி பொருந்தாநின்ற மழைக்காலத்துத் தவழும் மேகத்தைப்போலும் நீண்ட கூந்தலையும் ஒள்ளிய வளையலையுமுடையாளது பதி மலையாதலால், இந் நாட்டவர் உனது குளிர் முத்தங் கொள்ளார்—இந்த நாட்டார்கள் உனது குளிர்ந்த முத்தமாலையை (இவள்மேற்கண்டாலதனை யிவளுக்குரிய அணி யென்று) கொள்ளார் (ஐயுறுவர்) எ-று.

நின்னைப் புரப்பேமென்பது படப் பொன்றாவிநாட்ட நஞ்சுண்டார் மறைசைப்பொருப்பென்றான். திருமான் பொன்றாவிநாட்ட நஞ்சுண்டார் என்னுந் தொடர் பிறிதினவிற்சி யணி [கையுறை மறுத்தல்.] (உஉ)

**முத்திரு மாதங்க வார்மூலை பாகர் முதுமறைசை**
**மெய்த்திரு மாதங்க மாற்கரி யானை விளம்புகிலீர்**
**பத்திரு மாதங்க கருவயி னூறிய பாழுடம்பை**
**வைத்திரு மாதங்கத் தென்றிசைக் கூற்று வருங்கடைக்கே.**

(இ-ள்)முத்து வார் மாதங்க இரு மூலை பாகர்—முத்தமாலையையுங் கச்சையையும்(புனைந்த)யானைத்தந்தத்தைப்போலும் உபயஸ்தனத்தையுடைய உமாதேவியைப் பாகத்திலுடையவரும், முது மறைசை மெய்த் திரு மாது அங்கமாற்கு அரியானை விளம்புகிலீர்—பழைய வேதவனத்தில் வீற்றிருக்கின்றவரும் மெய்ம்மையாகிய இலக்குமியை மார்பிற்கொண்ட மாயவனுக்கும் அரியவருமாகிய சிவனைத் துதிக்கின்றிலீர், பத்து மாதம் இருங் கருவயின் ஊறிய பாழ் உடம்பை வைத்து இரும்—பத்துத்திங்களளவும் பெரிய கருவிடத்திலூறிய பாழான காயத்தை வைத்துக்கொண்டு இரும், ஆதங்கத் தென்திசைக்கூற்று கடைக்கு வரும்—தாபத்தை விளைக்கின்ற தெற்குத்திக்கில் யமன் முடிவில் வருவன் எ-று.

பத்திருமாதம் என்பதற்குப் பன்னிருமதி யென்பதுமொன்று. அப்பொருள்கூறில், முதலடியில் இரும் எனவைத்துப் பெருமையாகியவென்க. ஆதங்கம் இப்பொருளாதலைப் பாரதத்தில், "இப்பாராதங்கமாற வருமைவரினைவர்மைந்தர்" என்னுஞ்செய்யுளானுணர்க. கூற்று என்பது, "உயர்திணையிறுபோலஃறிணை வருதலு-மஃறிணையிறுபோ லுயர்திணை வருதலும்" என்னும் இலக்கணத்திரட்டு விதியான்வந்தது. (உரு)

**வருநர நாக மகவான் பதமும் வனசப்பிரான்**
**பொருநர ளுகம் பிளந்தான் பதமும் புகலின்மிக்கோ**
**முருநர நாகர் பணிமா முகரத்தன் மூவர்தமிழ்க்**
**குருநர ளுக மருங்குழை யாற்பணி யொண்டவர்க்கே.**

(இ-ள்) அ நாகர் பணி முருகர் மாமுகர் அத்தன்—அத்தேவர்கள் வணங்குகின்றகுமாரக்கடவுளுக்கும் யானைமுகத்தையுடைய கணபதிக்கும் பிதாவும், மூவர் தமிழ்க்கு உருகு அரன்—(திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் சுந்தரமூர்த்திநாயனார் திருநாவுக்கரசு நாயனாராகிய) மூவரது தேவாரத்துக்கு உருகாநின்ற சங்காரகருத்தாவும், அமரும் நாகுக் குழையான் பணி ஒன் தவர்க்கு—பொலிவுற்ற சங்கக்குண்டலத்தை யுடையவரு

மாகிய சிவனை வணங்குகின்ற ஒள்ளிய தவத்தருக்கு, வரு கர நாக மக வான் பதமும்–சரிக்கின்ற துதிக்கையைக்கொண்ட(ஐராவத) யானையை யுடைய இந்திரனது பதவியும், வனசப் பிரான் (பதமும்)–தாமரைமலரி லிருக்கின்ற பிரமனது பதவியும், பொரு கரன் ஆகம் பிளந்தான் பதமும் புகலின் மிக்கோ–(வனத்திற்) பொருத கரனது மார்பைப் பிளந்த மாயவ னது பதவியும் சொல்லில் மேம்பட்டனவோ, அன்று எ-று.

ஆகம் உடலுமாம். தலப்பெயர் யாண்டும் வரல்வேண்டுமென்னும் யாப்புறவின்மையாலும், திருச்செந்திலந்தாதியில், "சாரங்கஞ் சங்கரி கட் கிச்சித் தேய்ந்தகைச் சங்கரனுர்-சாரங்கஞ் சங்கரி தாஞ்சக் கரங்கையிற் ருங்கினன்சேய்-சாரங்கஞ் சங்கரி யானண்ணி னர்க்கர்க்கத் தந்திரத்தா– சாரங்கஞ் சங்கரி தேயெனச் செய்கின் சரணடைந்ததே" என முடிந்தத ஞனும், இது வழுவுடைத்தன்றென்க. (உச)

ஒண்டூதை யுண்புற வீர்மறந் தாரெம தூரார்முன்னுண்
மண்டூதை யாக்கிய சோறீந் திடமகிழ்ந் தார்வயலி
னண்டூதை யால்வெயில் காய்மறைக் காட்டுறை நாகமணி
வண்டூதை யோதிக்குச் செம்பாதி யாதி மணிவரைக்கே.

(இ–ள்) ஒள் தூதை உண் புறவீர்–ஒள்ளியகோடாங்கல்லே யுண்ணும் புறக்காள், வயலில் நண்டு ஊதையால் வெய்யில்காய் மறைக்காட்டுறை– கழனியில் ஞெண்டுகள் குளிர்காற்றல் வெய்யில்காயும் வேதவனத்தில் வீற்றிருக்கின்ற, நாகம அணி வண்டு ஊது ஐயோத்திகதச் செம்பாதி ஆதி மணிவரைக்கு–டாம்பையணிந்த வண்டுகள்(மகரந்தத்தை) ஊதும் ஐவகை யாய் முடிக்கப்படுங் கூந்தலையுடைய உமாதேவிக்குச் செம்பாதி யாகிய சிவனது அழகாகிய மலைக்கண், எமது ஊரார்–நமது ஊரார், முன் நாள் மண் தூதை ஆக்கிய சோறு ஈந்திட மகிழ்ந்தார்– (யாக்கைசொன்றாக முயங்கிய) தலைநாளில் மண்ணாலாய தூதையிலும் அட்டசோற்றையுதவ மகிழ்ந்தவர், மறந்தார்–இந்நாள் மறந்தார் எ–று.

தூதையிலும் என்னும் இழிவு சிறப்புமமை விகாரத்தாற் ரெக்கது. நாகம் புன்னைமலருமாம். நாகமணி வண்டூதை யோதிக்குச் செம்பாதியாதி என்பது வல்லமெறிந்த நல்லிளங்கோசர் தந்தை மல்லல்யானைப்பெருவழுதி என்பது போன்ற பொருத்தமில் புணர்ச்சியாயினும் பெருவரவிற்றென்க. உறை அணி என்னும் எச்சவடுக்குகள், ஆதியோடு முடியும். ஐயோதி முடி கொண்டை குழல் பனிச்சை சுருள் என்பன. ஐ அழகுமாம். [பறவையொடு வருந்தல்.] (உரு)

மணிக்குட நாடகன் மாறன் பதாகை வரித்தநுதற்
கணிக்குட னுட்க வாழுமென் ருலிம்மை காயுமையற்

பிணிக்குட ளுடகப் பொற்கொன்றை வாங்கும் பெருமறைசை
யணிக்குட நாடக மால்பணி யாதி யரனிடத்தே.

இ—ள்: மணிக் குடநாடு அகன் பதாகை வரித்த நுதல் - அழகைக கொண்ட மேனாட்டிடத்தை யுடையானுடைய சேரனது துவசமாகிய வில்லை அமைத்தாற்போன்ற நெற்றியையும், மாறன் (பதாகை வரித்த) கணிக்கு - பாண்டியனது துவசமாகிய மீனை அமைத்தாற் போன்ற கண்ணையுமுடையாளுக்கு, உடல் நாள் தக வாழும் என்றால் இம் மை காயும் - காயந் தின மேற வாழுமானால் இத்தகரை வெட்டுதிர், மையல் பிணிக்கு (என்றால்)- மயக்கநோய் போதலுக்கானால், அணிக் குட நாடக மால் பணி - அலங்காரத்தைக் கொண்ட குடக்கூத்தையுடைய மாயவன் வணங்கும், பெரு மறைசை ஆதி அரன் இடத்து - பெரிய வேதவனத்தில் வீற்றிருக்கின்ற முதலானவருஞ் சங்கார கருத்தாவுமாகிய சிவனிடத்தில், ஆடகப் பொன் கொன்றை உடன் வாங்கும் - பொன்போலும் அழகிய கொன்றைமாலையை இப்போதே வாங்குமின் (மறியை யறுக்கவேண்டா) எ—று.

இலக்கணையா யமைத்தற்பொருண்மேல் நின்ற வரித்தவென்பது, கல்லாடத்தில், "கைதை முட்செறித்த கூரெயிற் றரவினை" என்பதுபோல நின்றது. மறைசையணி என நின்றபடி நிற்ப, மறைசையிற் கிட்டி எனப் பொருள் கூறில், தலைவி பிறபதியாளாம். இது கடவுண்மாட்டு மானுடப் பெண்டிர் நயந்த பக்கத்தில் வெறிவிலக்கி மாலை பெறுவிதல். (உசு)

இடங்க ரடக்கய மேனின்று கூப்பிட் டிரங்குமந்தத்
தடங்க ரடக்கயங் காதமேதான் சரமனைத் தையல்கன்ம
கடங்க ரடக்கய மேருகு நான்மறைக் கானபுவனி
விடங்க ரடக்கய நீர்போ லெனைமுத்தி மேல்வைப்பரே.

இ—ள்: இடங்கர் அடக் கயம் மேல் நின்று கூப்பிட்டு இரங்கும் - முதலை தெறக் குளத்தின்மேல் நின்று (ஆதிமூலமேயென்று) கூப்பிட்டு இரங்கிய, தடங் கரட அந்தக் கயங் காதமேதான் (ஆகும்) சரம் - பெருமையாகிய மதம்பாய் சுவட்டையுடைய அந்தக் (கஜேந்திரனுடைய) யானையைப் புரந்தோனாகிய மாயவனை பாணத்தையும், கல் மகள் (ஆகும்) மனைத் தையல் - (இமய) மலை (ராச) குமாரியாய உமாதேவியாகிய இல்லக்கிழத்தியையும், தம் ஏறு ஆகுங் கரடக் கயம் - தமது இடபமாய கையிற் கொடியை யுமுடைய, நான்மறைக் கான் புவனி விடங்கர் - நான்மறைக் காட்டில் வீற்றிருக்கின்ற புவனி விடங்கர், அயம் அடக்கும் நீர்போல் எனை முத்தி மேல் வைப்பர் - இரும்பு அடக்கிய சலத்தைப்போல என்னையும் மோக்கத்தின்கண் வைப்பர் எ—று. (உஎ)

**மேல்விண்டு நாயக வில்லார் மறைசை விமலரிடப்**
**பால்விண்டு வேதன் வலப்பாலு மாகப் படைத்தவர்வா**
**யால்விண்டு நூனிரை சுற்றுஞ் சிலம்பிக் கரசளித்தாற்**
**போல்விண்டு முத்தரு மெற்கு மருள்வ ரிப்புன்சொற்கொண்டே.**

இ—ள்: மேல் விண்டு நாயக வில்லார் - மேலாகிய மலைகளுக்குத் தலைமையாகிய மேருவாய வில்லையுடையவரும், மறைசை விமலர் - வேத வனத்தின் மலரகிதரும், விண்டு இடப்பா (லும்) வேதன் வலப் பாலும் ஆகப் படைத்தவர் - மாயவன் வாமபக்கத்திலும் பிரமன் வலப்பக்கத்திலு மாகப் படைத்தவரும், விண்டு முத்தரும் - மூங்கில் முத்தானவருமாகிய சிவன், வாயால் விண்டு நூல் நிரை சுற்றுஞ் சிலம்பிக்கு அரசு அளித்தால் போல் - வாயால் விட்டு நூல் நிரையைச் சுற்றிய சிலந்திக்கு இராச்சியத்தைக் கொடுத்தாற்போல, இப்புல் சொல் கொண்டு எற்கும் அருள்வர் - இப்புல்லிய பாடலைக்கொண்டு எனக்குந் திருவருள் செய்வர் எ—று. (உ௮)

**புன்னாக வேலி மறைக்காட ரன்பரைப் புண்டரிக**
**மின்னாக மாதவ னான்முகன் வாசவன் மேற்பதத்தின்**
**மன்னாக வைப்பவர் காடோடு மாடு மகிழ்ந்துபுன்றோல்**
**பன்னாக நஞ்சுடை பூணாண தாகப் படைத்தவரே.**

இ—ள்: புன்னாக வேலி மறைக்காடர் - புன்னையாலாகிய வேலியை யுடைய வேதபுரீசர், வாசவன் நான்முகன் புண்டரிக மின் ஆக மாதவன் பதத்தின் மேல் - இந்திரனும் பிரமனும் வனசமங்கையாகிய இலக்குமியைத் தாங்கிய மார்பையுடைய புருஷோத்தமனும் (சொர்க்க சத்தியலோக வைகுந்த) பதங்களுக்கு மேலாகிய சிவபதத்தில், அன்பரை மன் ஆக வைப்பவர் - அடியாரை நிலையாக வைப்பவர், காடு ஓடு மாடு மகிழ்ந்து - (நடன பூமியாக) மயானத்தையும் (பிக்ஷா பாத்திரமாக) ஓட்டையும் (வாகனமாக) ஏற்றையு முவந்து, புல் தோல் உடை (ஆக) - புல்லிய தோலை ஆடையாகவும், பல் நாகம் பூண் (ஆக) - பல்லையுடைய பாம்பைப் பணியாகவும், நஞ்சு ஊண் ஆகப் படைத்தவர் - ஆலகாலத்தை யுணவாகவும் பெற்றவர் எ—று.

அது பகுதிப்பொருள்விகுதி. மறைக்காடர் எழுவாய். வைப்பவர், படைத்தவர் பயனிலைகள். வைப்பவர் மறைக்காடர் எனவும், படைத்தவர் மறைக்காடர் எனவும், எழுவாயும் பயனிலையு மாக்கினு மாம். மறைக்காடரும் வைப்பவருமாகிய சிவன் படைத்தவரென்றும், வைப்பவரும் படைத்தவரு மானவர் மறைக்காடரென்று மிசைப்பினு மாம். மன் அரசரு மாம். பல் பல வுமாம். ஏனையுயிர்களது பற்போலாது விஷத்தை வெளிப்படுத்துந் துளையினைக்கொண்ட சிறப்புடைமையிற் பல்லென்றார். (உ௯)

**படைக்கந்த ரத்தர் திருமறைக் காடர் பனிவரைமே**
**லடைக்கந்த ரத்த நிறத்தா மரைமுகத் தன்னமன்ன**
**டொடைக்கந் தரத்தம ருஞ்சுரு ளோதிச் சுரும்பினங்கா**
**ளிடைக்கந் தரம்வரி னுங்களுக் கேபழி யேற்றிடுமே.**

இ—ள்: படைக் கந்தர் அத்தர் - வேலையுடைய சுப்பிரமணிய சுவாமிக்குப் பிதாவும், திரு மறைக் காடர், பனி வரை மேல் - வேதவனத்தை யுடையவருமாகிய சிவனது குளிர்ச்சியைக் கொண்ட மலையில், கந்தம் அடை-வாசமடுத்தலையுடைய, ரத்த நிறத் தாமரை முகத்து அன்னம் அன்னாள்—சிவப்பு நிறத்தைக்கொண்ட தாமரை மலர்போலும் முகத்தை யுடைய அன்னம் போல்வாளது, தொடைக்கந்தரத்துச் சுருள் ஓதி அமருஞ் சுரும்பு இனங்காள்—மாலையைப்புனைந்த மேகத்தையொத்த சுருண்ட கூந்தலில் வாழும் வண்டுத்தொகுதிகாள், இடைக்கு அந்தரம் வரின் உங்களுக்கே பழி ஏற்றிடும்—இடைக்கு முடிவுநேரின் (இறந்துபடின் அதனாலாய) பழி நுமக்கேயிசையும் எ-று.

படைக்கலங்களுள் தலைமையாதல் பற்றிப் படையென்றார், நால்வர் நான்மணிமாலையில், "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்றாற்போல. அடை இங்கேயென்னுமோவெனின், என்னும்; என்னை? அது சினைக்கின்மையின். தாமரையைப் பூவுக்குப் பெயரென்பாருமுளர். அன்னமன்னாள் என்பது, திருக்கோவையாரில், "அம்மாமுலைசுமந்து தேயுமருங்குற் பெரும்பணைத்தோளிச்சிறுநுதலே" என்றதிற் சிறுநுதல்போல நின்றது. மெய்தொட்டுப் பயிலுங் கழிகாதன்மையின் உங்களுக்கே பழியேற்றிடுமென்றான். [மெய்தொட்டுப்பயிறல்.] (௬0)

**ஏற்றுக் கொடியர் திருமறைக் கானத்த ரேழுலகப்**
**பேற்றுக் கொடியத்தர் திக்காடைநாதனைப் பேணிக்கொண்டேன்**
**கூற்றுக் கொடியுற்கு மஞ்சே னினியிக் குவலயத்திற்**
**றேற்றுக் கொடிவரை கேதன மாதுந் தொலைந்தனளே.**

இ—ள்; ஏற்றுக் கொடியர்—இடபத் துவசத்தையுடையவரும், திரு மறைக் கானத்தர்—திருமறைக் காட்டையுடையவரும், ஏழு உலகப் பேற்றுக்கொடி அத்தர்—சத்தலோகப் பேற்றையுடைய உமாதேவிக்குப் பிதாவானவரும், திக்கு ஆடை நாதரைப் பேணிக்கொண்டேன்—திகம்பர நாதருமாகிய சிவனைப் பேணிக் கொண்டேன், இனிக் கூற்றுக் கொடியற்கும் அஞ்சேன் – (அதனால்) மேல் நமனாகிய கொடியவனுக்கும் பயமுறேன், இக்குவலயத்துக் கொடி வரை கேதன மாதுந் தோறறுத் தொலைந்தனள்—இப்பூமியிற் காக்கையெழுதிய துவசத்தையுடைய மூதேவியுந் தோற்று அழிந்தனள் எ-று.

ஏழ் என்பாருமுளராசிரியர். "பரமசிவன் தன்னுடைய பராசத்தியரு ளாற் பகர்குடிலை தனினுதந் தோன்றுமதில் விந்து—வருமவைகள் சிவஞ் சத்தியென்னும்போம்" எனத் தத்துவப்பிரகாசத்திற் கூறியபடி சிவதத் துவத்தினின்றுஞ் சத்திதத்துவம் தோன்றினமையின், ஏழுலகப்பேற்றுக் கொடியத்தரென்றார். திருக்கோவையாரில், "தன்னொருபா லவளத்தனும்" என்றதூஉமிது. அத்தர் பாதியானவரெனினுமமையும். (௫௧)

**தொலைவே தனையர் கருக்குழி வாய்ப்படுந் தொல்லைச்சன்ம**
**நிலைவே தனையென் றுழலூசல் போல நினையுநெஞ்சி**
**னுலைவே தகைய வொருகாலஞ் சேலென் றுரைக்கினென்னுங்**
**கலைவே தனையன் பணிமறைக் காடவென் கண்முனின்றே.**

இ—ள்: வேத கலையன் ஐயன் பணிமறைக்காட - வேதநூலையுடைய பிரமனும் அவனது தந்தையாகிய மாயவனும் வணங்கும் மறைக்காடரே, அனையர் கருக் குழிவாய்ப்படுந் தொல்லைச் சன்ம நிலை வேதனை—தாயரது கருக் குழிக்கட்படும் பழமையாகிய பிறவியாகிய நிலைத்தீ வேதனை, தொலைவு ஏது என்று - அழிதல் யாது என்று, உழல் ஊசல்போல நினையும்- உழலும் ஊஞ்சலது திரிவுபோல நினைக்கின்ற, நெஞ்சின் உலைவு ஏதம் நைய- மனத்தினுலைவுந் துன்பமுங் கெட, என் கண் முன் நின்று - எனது விழிக்கு முன்னின்று, அஞ்சேல் என்று ஒருகால் உரைக்கின் என் - பயப்படேல்- என்று ஒருமுறை திருவாய்மலர்ந்தருளினுலென்னை! எ—று.

ஆம் அசை. என் ஆம் என்பதற்கு யாதாமெனக் கூறினுமாம். திருக் குறளில், "கற்றதனாலாய பயனென்" என்பதில் என் வினப்பொருளைக் குறி யாது இல்லையென்னும் பொருளைக் குறித்தல்போல, தொலைவேது என்பதி லுள்ள ஏது ஈண்டு இல்லை என்னும் பொருள் குறித்தது. (௫௨)

**கண்ணச் சிராக வரிசூழுங் காமறைக் காடன் செந்தீ**
**வண்ணச் சிராசல மேருவில் லாளி வரைவிடுதே**
**ருண்ணச் சிராக விழிக்கால வேலுறை விட்டுவிட்டுப்**
**பெண்ணச் சிராள்வல வாவிறங் காது பிடியன்னமே.**

இ—ள்: வலவா - பாகனே, கள் நச்சு இராக அரி சூழுங் கா மறைக் காடன் - தேனை விரும்புகின்ற இசையைப் பாடும் வண்டுகள் சூழுஞ் சோலை யை யுடைய வேதவனத்தை யுடையவரும், செந்தீ வண்ணச் சிராசல மேரு வில் ஆளி வரை - சிவந்த அக்கினி வண்ணத்தைப் பெற்ற மலைகளுள் தலைமையாகிய மேருவை வில்லாவாண்டவருமாகிய சிவனது மலையில், பெண் - மங்கை, உள் நச்சு ராக விழிக் கால வேல் உறை விட்டு விட்டு- அகத்தில் நஞ்சு நிறத்தைக்கொண்ட கண்ணாகிய காலத்தைச் செய்யும் வேல் றைவிட விட, பிடி அன்னம் இறங்காது - ஒருபிடி சோறும் உட்புகாது,

அச்சு இரான் - உயிர் தரியான், தேர் விடு - (ஆதலில் இறந்துபடமுன் ஆண்டுச் செல்லத்) தேரை (விரைந்து) தூண்டுதி எ—று.

நச்சி என வினையெச்ச மாக்கினுமாம். காலவேல் என்பதற்குச் சிந்தாமணியிலும் இப்பொருளுரைத்தார். விட்டுவிட்டு என்பன, "உரற்கால்யானையொடித்துண் டெஞ்சியயா" என்பதுபோன்ற வினையெச்சத் திரிபு. அச்சிரான் என்பது பாரதத்தில், "தன்னூட்ட மிகச்சிவந்தான்" என்பது போல நின்றது. அச்சிரா என்பது பாடமேல், பெண் என்பதை எழுவாயாக்காது நான்காவதாக்கி, உயிரிராது என்க. இப்பொருட்கு இராது என்பதனீறு கெட்டது. அன்னமும் என்பதினும்மை தொக்கது. [பாகனொடு சொல்லல்.]

**அன்னம் பலவ நறும்புன்னைச் சேக்கை யமர்மறைசை**
**முன்னம் பலவன் முடித்த சடாதர மூர்த்திதில்லைப்**
**பொன்னம் பலவன் பிநாகிகங் காளன் புராந்தகன்சீர்**
**வன்னம் பலவன் பசுபதிநா தனென் வான்றுணையே.**

இ—ள்: அன்னம் பலவ புன்னை நறுஞ் சேக்கை அமர் மறைசை முன்-அன்னங்கள் தளிரையுடைய புன்னைகளிலுள்ள நறிய படுக்கையிலிருக்கப்பெற்ற வேதவனத்து முதல்வரும், அம்பு அலவன் முடித்த சடாதர மூர்த்தி-கங்கையையுஞ் சந்திரகலையையுந் தரித்த சடாமுடியையுடைய அருள்வடிவரும், தில்லைப் பொன்னம்பலவன் - சிதம்பரத்துக் கனகசபையை யுடையவரும், பிநாகி - பிநாக வில்லையுடையவரும், கங்காளன்-முழுவெலும்பை யணிந்தவரும், புராந்தகன் - முப்புரங்களுக்குக் காலரும், சீர் வன்னம்பலவன் - நன்மையாகிய பல மந்திரத்தை யுடையவரும், பசு பதி நாதன் - பசுக்களுக்குப் பதியானவருமாகிய சிவன், என் வான் துணை-எனது பெரிய துணை எ—று.

முதலடி திணைமயக்கம்; "திணைமயங் குறுதலுங் கடிநிலை யிலவே" என்றார் தொல்காப்பியனார். பல அம் என வைத்து, காயை அல்லது கனியைக்கொண்ட அழகாகிய என்னினும், பலவு என வைத்து, பலாமரத்தினதும் என்னினுமமையும். வன்னம் இப்பொருளாதலைச் சிவஞானசித்தியாரில், "வந்திடு மந்திர மிரண்டு பதங்கண் மூவேழ் வன்னங்க ளொலாறு" என்பதனானறிக. அதற்கு நிறமென்பது மொன்று. (௩௪)

**வானப் பிறையையும் வாடைப் புலியையு மையல்செய்யுந்**
**தேனப் பிறையையுந் தென்றலை யுங்கண்டு சில்லரிக்கண்**
**மீனப் பிறைக்கு மடமானை மேவிலர் வேடனிடு**
**மூனப் பிறைச்சிக் குகந்தார் மறைசை யுகந்தவரே.**

இ—ள்: வேடன் இடும் ஊன் அப்பு இறைச்சிக்கு உகந்தார் மறைசை உகந்தவர்-கண்ணப்பநாயனாரிட்ட ஊன் அப்பிய இறைச்சியை விரும்பினவரும் வேதவனத்தை மகிழ்ந்தவருமாகிய சிவன், மையல்செய்யும் வானப்

பிறையையும் வாடைப்புலியையும் தேன் அப்பு இறையையுந்தென்றலையுங் கண்டு—மயக்கத்தை விளக்கும் ஆகாயத்தில் தோற்றும் பிறையையும் வடந்தையாகிய புலியையும் தேனைக்கொண்ட(மலர்ப்) பாணத்தையேந்திய மதனராசனையுந் தென்காலையுங் கண்டு, சில் அரிக் கண் மீன் அப்பு இறைக்கும் மட மானை மேவிலர்—சிலவாகிய அரியையுடைய கண்ணாகிய மீன் நீரிறைக்கப்பெற்ற இளமையாகிய மங்கையை அணைகின்றிலர். (இனிச் செய்யக்கிடந்ததுதான் யாது!) எ-று.

கண்மீன் தொகையுருவகம். இது கடவுண்மாட்டு மானுடப்பெண்டிர் நயந்தபக்கத்து இறைவனணையாமையைத் தோழிகூறி மெலிந்தது. (௬௫)

**உகந்தா வடிக்கு மிடையர்தம் பாலலை யுண்டுகடற்**
**சகந்தா வடியனுக் கெட்டாத ஞான தலத்துமுத்திச்**
**சுகந்தா வடிதமிழ் நான்மறைக் காட துணைவரியம்**
**பகந்தா வடிசெல் குழையாண் மருவிய பாகத்தனே.**

இ—ள்: வடி தமிழ் நான் மறைக்காட — (சங்கத்தாரால்) தெள்ளி தாக்கப்பட்ட தமிழைக்கொண்ட நான் மறைக் காட்டை யுடையவரே, வரித்துணை அம்பகம் தாவடிசெல்குழையாள் மருவியபாகத்தனே-வரியைப் பெற்ற இரண்டு கண்களும் போர்க்குச்செல்லுங் காதையுடைய உமாதேவி யணைந்த (வாம) பாகத்தரே, உகந்து ஆ அடிக்கும் இடையர் பால் அளை யுண்டு-மகிழ்ந்து பசுவை(மேய்த்தற்கு) அடிக்கின்ற ஆயரது பாலையுந் தயி ரையுமுண்டு, கடல் சகந் தாவு அடியனுக்கு எட்டாத ஞான தலத்து முத்திச் சுகந் தா-கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தையளந்த பாதத்தை யுடையமாயவனுக்கும் எட்டாத ஞானபூமியின்கணுள்ள மோக்ஷாநந்தத்தை (அடியேனுக்குத்) தந்தருளும் எ-று.

தாவடி இப்பொருளாதலைக் கந்தரலங்காரத்தில், "தாவடியோட்டு மயிலினும்" என்பதனுனுணர்க. வரி நீளமுமாம். அளையுங் குழையும் ஆகுபெயர். (௬௬)

**பாக னகனி மொழியாய் நினது பணிமுகமாங்**
**கோக னகநில வுந்துணைப் பானலிற் கோடல்கண்டே**
**னாக நகநிமி ரும்புலிப் பாதரு நாடவின்று**
**மாக னகநிலை மன்றாடி வேத வனமலைக்கே.**

இ—ள்: நாகம் நகம் நிமிரும் புலிப்பாதரும் நாட—பதஞ்சலியும் நக நிமிரும் வியாக்கிரபாதரும் மகிழ்ச்சிகொள்ள, மாநிலை கனக மன்று-மகத்துவம் நிலைத்த பொன்னம்பலத்தில், அன்று ஆடி வேதவன மலைக்கு—அந்நாளிலானந்ததாண்டவஞ்செய்தருளிய இறைவனரது திருமறைக்காட்டு மலையில், பாகு அன கனி மொழியாய் — பாலையொத்த கனிந்த சொல்லை

யுடையாய், நினது பனிமுகம் ஆம் கோகனகம் நிலவுந் துணைப்பானலில் கோடல் கண்டேன்—உனது குளிர்ச்சியைக்கொண்ட வதனமாகிய தாமரை மலரில் விளங்கும் இரண்டு கருங்குவளை மலரிலுங் காந்தட்பூவைக் கண்டேன் எ-று.

பாகு கனி அன என வைத்துப் பாலைபும் பழத்தையு மொத்த எனக் கூறினுமாம். கருங்குவளைமலர் விழி, காந்தட்பூ கை. துணைப்பானலிற் கோடல் என்னுந் தொடர் உருவகவுயர்வுநவிற்சியணி. [இடையூறு கிளத்தல்.] (கள)

**மலைக்கார் முகந்தர யாழைப் பழிமொழி மான்குறையா**
**நிலைக்கார் முகமதி யாள்பங்க னேநிறை காய்க்கந்திச்சூ**
**ழலைக்கார் முகந்திடும் வேதா ரணிய வருந்துயரந்**
**தொலைக்கார் முகந்தமியேன் சொல்லுவே னென்னசொன்னதிலே.**

இ—ள்: மலைங் கார் முகந் தர - (மேரு) கிரியாகிய வில்லைக்கொண்டவரே, குறையா நிலைக்கு ஆர் முக மதியாள் யாழைப் பழி மொழி மான் பங்கனே—நிறைந்த நிலையிலசைந்த வதனசந்திரனை யுடையாராகிய வீணைவாத விதூஷணியம்மையாரை (வாம) பாகத்தில் வைத்தவரே, நிறை காய்க் கந்திச் சூழலைக் கார்முகந்திடும் வேதாரணிய- நிறைந்த காயைப் பெற்ற கமுகஞ்சோலையை மேகமளக்குந் திருமறைக்காட்டை யுடையவரே, தமியேன் அருந் துயரந் தொலைக்க ஆர்முகஞ் சொல்லுவேன் சொன்னதில் என்—தமியேன் (இந்த) அரிய துன்பத்தை நீக்க யார் மாட்டுச் சொல்லுவேன்! சொன்னதினுலாகும் பயன்றுனென்னே? எ—று.

முகத்தல் ஈண்டு முகத்தலளவையைக் குறியாது அளத்தலென்னும் பொருண்மேல் நின்றது. தொலைக்க என்பதில் அகரந் தொக்கது. முகம் இடப்பொருள். (கஅ)

**சொன்னச் சிலம்பு குழைத்தவில் லான்சுரு திப்பதியான்**
**வன்னச் சிலம்பிக் கரசளித் தான்வெற்பின் மாணிழைகண்**
**மின்னச் சிலம்பு கலைகளை யாமன்மெய் வேர்வரும்பச்**
**சின்னச் சிலம்படி யாய்குடைந் தாயொரு தேன்சுனையே.**

இ—ள்: குழைத்த சொன்னச் சிலம்பு வில்லான்—வளைத்த பொன்மலையாகிய வில்லையுடையவரும், சுருதிப் பதியான்—மறைக்காட்டை யுடையவரும், வன்னச் சிலம்பிக்கு அரசு அளித்தான் வெற்பில்—அழகையுடைய சிலந்திக்கு இராச்சியத்தைக் கொடுத்தவருமாகிய சிவனது மலையில், சிலம்புச் சின்ன அடியாய்—சிலம்பைப் பூண்ட சிறிய தாளையுடையாய், மாண் இழைகள் மின்ன மெய் வேர்வு அரும்ப—மாட்சிமைப்பட்ட ஆபரணங்கள் விளங்கவுஞ் சரீரத்தில் வியர்வை பொடிக்கவும், சிலம்பு கலை

நனையாமல்—ஒலிக்கின்ற ஆடை நனையாமலும்,ஒரு தேன் சுனை குடைந்தாய் ஒரு வாசம் பொருந்திய சுனையில் ஆடினாய் எ-று.

பண்டில்லாத நாற்றநிகழ்ச்சியையுந் தெரிப்பத் தேன்சுனை என்றான். இதில் விரவியடுக்கியவினை காண்க. இது பரியாயவணி. [சுனைவியந் துரைத்தல்.]

**தேன்றதும் பிக்குளிர் தாமரைப் பீடிகைச் செல்வனும்வாய்**
**நான்றதும் பிக்கருண் மாயனும் வான்புவி நண்ணியதுங்**
**கீன்றதும் பித்தவ ராற்கிட்டு மோகிடை யாவுலக**
**மீன்றதும் பிக்குழல் சேர்மறைக் காட னிரண்டையுமே**

இ—ள்: தேன் ததும்பிக் குளிர் தாமரைப் பீடிகைச் செல்வன்வான் நண்ணியதும்-தேனிறைந்து குளிருகின்ற தாமரைமலராகிய ஆசனத்தை யுடைய பிரமன் அன்னமாய் ஆகாயத்திற் பறந்து போனதும், வாய் நான்ற தும்பிக்கு அருள் மாயவன் புவி கீன்றதும் பித்து—வாய் நான்ற யானைக்கு அருள்செய்த கண்ணன் (வராகமாய்ப்)பூமியைக் கீண்டதும் பித்தமே, உலகம் ஈன்ற தும்பிக் குழல் சேர் மறைக்காடன் இரண்டும் அவரால் கிட்டுமோ கிடையா—உலகத்தைப்பெற்ற வண்டைத்தாங்கிய கூந்தலையுடைய உமாதேவி சேர்ந்த வேதபுரீசரது (முடியும் அடியுமாகிய அவ்) விரண்டும் அவர்களுக்குக் கிட்டுமோ கிட்டா எ-று.

செல்வனும் மாயனும் என்னுநிரைநிறையின்உம்மையை நீக்கி, விளங்கு தற்பொருட்டு, ஆற்றொழுக்காகவுரைத்தாம். வாய்நான்ற தும்பிக்கு என்பது "வாய்வன்நாக்கை" போல நின்றது. அவரால் உருபுமயக்கம். அவ்வுருபாக நிற்பில் தேட என்னுமோர்சொல் வருவிக்கவேண்டும். இரண்டை என்பதின் ஐ சாரியை. (சO)

**இரண்டந் தகரங் கிருந்தன்ன பார்வை யிணைச்சுரும்பர்**
**புரண்டந் தகர மளவிய கோதையைப் பொன்னில்வைத்தார்**
**முரண்டந் தகரவை வேலா கடற்றிரை முத்தச்சங்கங்**
**குரண்டந் தகர வெறிமறைக் காடன் குளிர்கிரிக்கே.**

இ—ள்: முரண் தந்த கர வை வேலா — வலிமையைப் பெற்ற கையிற் கூரிய வேலையுடையாய், கடல் திரை குரண்டந் தகர முத்தச் சங்கம் எறி—ஆழியின் அலையானது (தன்மாட்டுள்ள மீனைக்கவரத் தாங்கியிருக்குங்) கொக்குத் தகரமுகத்தையுடைய சங்கையெறிகின்ற, மறைக்காடன் குளிர் கிரிக்கு— வேதபுரியிலிறைவனாரது குளிர்ந்தமலையில், அங்கு இரண்டு அந்தகர் இருந்தன்ன இணைப்பார்வை — அவ்விடத்தி லிரண்டு காலர்கள் இருந்தாற்போன்ற துணைவிழிகளையும், சுரும்பர் புரண்டு அந் தகரம் அளவிய கோதையைப் பொன் இல் வைத்தார்-வண்டு புரண்டு அழகிய சாந்திலளாவப்பெறுங் கூந்தலையுமுடையாளை(நமர்) அழகாகிய வீட்டிற் செறித்தார் எ-று.

இருந்தன்ன என்பது, காசிக்கலம்பகத்தில், "காந்தண்மலர்ந்தன்ன பாந்தளினிரையும்" என்பதுபோல நின்றது. மேல் நிரைத்தென்ன வருவதுமிது. முரண் போருமாம். கடற்றிரைமுத்தச்சங்கங் குரண்டந்தகா வெறியென்னவே, நீயும் வஞ்சித் தொழுகுவையேல் நமரான் மெலிவை யென உள்ளுறையுவமந் தொனித்தது. "அவற்றுள்,—உள்ளுறை யுவமமுய்த் துணர் வகைத்தாய்ப்-புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்" என்றார் பொருளிலக்கணத்தார். தம்மாட்டுள்ள தண்ணளியை யுணர்த்துவாள் குளிர்கிரியென்றாள். [இற்செறிப்புணர்த்தல்.] (சக)

**கிரிதா ரகையணிந் தாலென்ன முத்தங் கிடந்தகொங்கை**
**யரிதார மன்னவ ளம்பகங் காட்டு மருக்கன்மதி**
**யெரிதார வெற்பு விழியா சனத்த னெழின்மறைசை**
**விரிதார கப்பொரு ளானே றுகந்தவன் மெய்யொளியே.**

இ—ள்: அருக்கன் மதி எரி விழியன் —சூரியனுஞ் சந்திரனும் அக்கினியுமாகிய (மூன்று)கண்ணையுடையவரும், தாரவெற்பு ஆசனத்தன்—வெள்ளிமலையாகிய ஆசனத்தை யுடையவரும், எழில் மறைசை விரி தாரகப்பொருள்—அழகைக்கொண்ட வேதவனத்தில் வீற்றிருக்கும் பரந்த பிரணவப்பொருளானவரும், ஆன் ஏறு உகந்தவன் மெய் ஒளி—எருதை மகிழ்ந்தவருமாகிய சிவனது திருமேனியிற் செஞ்சோதியை, கிரி தாரகை அணிந்தால் என்ன முத்தங்கிடந்தகொங்கை—மலையில் உடுக்களணிபட்டாற் போல நித்திலத்தொடை தங்கிய தனத்தையுடைய, அரிதாரம் அன்னவள் அம்பகங் காட்டும்-மாயவனது மனைவியாகிய இலக்குமியை யொத்தாளது கண்கள் காட்டும் எ-று.

கொங்கை தாரத்துக்கடை. பொருளான் எனவும் ஏறு எனவும் பிரிப்பினுமாம். கண்கள் சிவந்தமையிற் புணர்ச்சியுண்மை யுணர்ந்தபடி. [தோற்றத்தாலாராய்தல்.] (சஉ)

**மெய்த்துத்தி யான பணியா பரணன் விரைமருவுங்**
**கொத்துத்தி யானஞ் செறிமறைக் காட்டுறை கோனை யெண்ணிப்**
**பொய்த்துத்தி யானம் புறுசெருக் கற்றுப் புலனடங்க**
**வைத்துத் தியான சமாதிசெய் வார்க்கில்லை வன்பிறப்பே.**

இ—ள்: மெய்த் துத்தி ஆன பணி ஆபரணன் - படத்திற் பொறி யுண்டாகப் பெற்ற சர்ப்பாபரணத்தை யுடையவரும், விரை மருவுங் கொத்து உத்தியானஞ் செறிமறைக்காட்டு உறை கோனை எண்ணி—வாசம் பொருந்திய கொத்துகளையுடைய சோலை நெருங்கிய வேதவனத்தில் வீற்றிருக்கின்ற தலைவருமாகிய சிவனைக்கருதி, பொய்த்த உத்தியால் நம்புறு செருக்கு அற்று-பொய்த்த புத்தியால் நம்புஞ் செருக்கு ஒழிந்து, புலன் அடங்க வைத்துத் தியான சமாதி செய்வார்க்கு வல் பிறப்பு இல்லை—(ஐம்)புலனையும் அடங்கவைத்துத் தியானசமாதி செய்பவருக்கு வலியபிறவியில்லை எ-று. மெய் ஆகுபெயர். (சங)

வன்போ தகவல் லியநெடுங் கான்சென்று மார்புடம்பி
னென்போ தகவல் லியன்மா தவம்புரிந் தேனிளைப்பீர்
பொன்போ தகவல்லி யன்பார் சுருதி புரத்தபத்த
ரன்போ தகவல்லி யங்கொன்றை யாயென் றறைந்திடுமே.

இ—ள்: வல் போதக வல்லிய நெடுங்கான் சென்று - வலிய யானையையும் புலியையுங் கொண்ட நெடிய வனத்திற்போய், மார்பு உடம்பின் என்பு ஓதக - மார்பிலும் (மற்றை) யங்கத்திலுமுள்ள எலும்புகள் (வலி) யொழிதல் பொருந்த, வல் இயல் மாதவம் புரிந்து என் இளைப்பீர் - கிடம்மிகுந்த பெருமையாகிய தவத்தைச செய்து எனிளைக்கின்றீர், பொன் போதகவல்லி அன்பு ஆர் சுருதி புரத்த - இலக்குமியும் ஞானச்செல்வியாகிய வாணியும் அன்பாகச் சேர்ந்த வேதபுரீசரே, பத்தர் அன்பு ஓது அக அல்லிக் கொன்றையாய் என்று அறைந்திடும் - மெய்யடியார் அன்பாற் றுதிக்கின்ற அகவிதழைக் கொண்ட கொன்றைமாலையை யுடைய இறைவரேயென்று (மனைக்கண் இருந்து உண்டு உடல்வலி குன்றாம லிளைப்பின்றிச்) சொல்லும் (சொல்லில்) அத்தவந்தர் பெறும்பேறு எளிதிலடைவீர் எ—று.

ஓதகவில் ஓ முதனிலைத்தொழிற் பெயர்; 'ஓசுகு செயலிலா வுலகத்தேவையும்" என்றதில் ஓவும் இது. உடம்பு என்பு ஆகு பெயர். "நாவின் கிழத்தி யுறைதலா னண்ணுளோ—பூவின் கிழத்தி புலர்ந்து' என்பார் மதம் ஈண்டமையாதென்பார், பொன்போதக வல்லியன்பார் சுருதி புரத்த வென்றார். சிந்தாமணியிலுங் "கோவீற்றிருந்த திருநாட்டணிக்கு முதலணியாக, நாவீற்றிருந்த கலைமா மகளோடு நன்பொற் - பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல" என்றார். அம் சாரியை. (சச)

அறைக்கண் டவழரு விக்கிரி வேத வனத்தண்ணினோ
மறைக்கண் டரிய பிரானிறந் தோரைப்பொன் மானத்துய்த்துப்
பிறைக்கண்ட வேணியிற் பாணியும் பாணியிற் பேர்மழுவுங்
கறைக்கண்ட முந்தரச் செல்லுதல் பார்த்தி கருங்குழலே.

இ—ள்: கருங்குழலே – கருமையாகிய கூந்தலையுடைய மாதே, அறைக்கண் தவழ் அருவிக் கிரி வேத வனத்து அண்ணினோம்-முழையிலே தவழாநின்ற அருவி நீரைப்பெற்ற மலையையுடைய திருமறைக்காட்டிற் கிட்டினோம், மறைக்கு அண்ட அரிய பிரான்-வேதத்துக்குக்கிட்ட அரிய சிவன், இறந்தாரைப் பொன்மானத்து உய்த்து –(அத்திருப்பதியில்) இறந்தவர்களைப் பொன்விமானத்திலேற்றி, பிறைக் கண்ட வேணியிற் பாணியும் பாணியில் பேர்மழுவுங் கறைக் கண்டமுந் தரச் செல்லுதல் பார்த்தி- பிறைத்துண்டைக் கொண்ட சடையிற்றங்கிய கங்கையையும் (வலத்) திருக்கையிற் பொருந்தின்ற பரசையுங் காளகண்டத்தையும் (அவர்களுக்குக்) கொடுத்தருளும்வண்ணம் போதலைப் பார் எ-று.

[தலைவன்றன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.] (சரு)

கருமந் திரிகா ரணம்வேறு மாறு கயவர்ப் பற்றித்
தருமந் திரியு மெனை யாள்வை யோவெற்றித் தானவர்தம்
பெருமந் திரியை யுதரத்தில் வைத்த பிரானளகை
யொருமந் திரிநண்ப னேமறைக் காநுறை யுத்தமனே.

இ—ள்: வெற்றித் தானவர் பெருமந்திரியை உதரத்தில் வைத்த பிரான் - ஜெயத்தையுடைய அசுரரது பெரிய அமைச்சனாகிய சுக்கிரனை வயிற்றில் வைத்த கடவுளே, அளகை ஒருமந்திரி நண்பனே - அளகாபுரியில் வசிக்கும் ஒப்பற்ற குபேரனது தோழரே, மறைக்கான் உறை உத்தமனே - வேதாரணியத்தில் வீற்றிருக்கின்ற முதல்வரே, திரிகாரணங் கருமம் வேறு மாறு கயவர்ப்பற்றித் தருமந் திரியும் எனை ஆள்வையோ - முக்காரணத்தையும் (அவற்றாலாகும்) தொழிலையும் வேறாக மாறுகின்ற கீழ்மக்களைப் பிடித்துப் புண்ணியத்தோடு மாறுபட்டுத் திரியும் என்னையும் ஆள்வீரோ எ—று.

ஆள்வை எனக்கொண்டு, ஆள்வீர் எனப் பொருள்கூறி, ஓ வை அசையாக்கினுமாம். பிரான் என்பது திருவாசகத்தில் "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்" என்பது போல விளியாய் நின்றது. (௪௬)

உத்தம ரத்தி யுரியார் மறைசை யொருத்தர் வெள்ளோ
லத்தம ரத்தி னிறைகங்கை வேணிய ராலெரிந்த
நத்தம ரத்தி முராசான் செழுங்கணை நல்க முன்னாள்
வைத்த மரத்தின்மெய்த் தூரில்வெந் நீர்விடு மங்கையரே.

இ—ள்: மங்கையரே - மாதரே, உத்தமர் - முதல்வரும், அத்தி உரியார் - யானைத்தோலை யுடையவரும், மறைசை ஒருத்தர் - வேதவனத்தில் ஏகநாதரும், வெள் ஓலத் தமரத்தில் நிறை கங்கை வேணியரால் எரிந்த - வெள்ளிய திரையின் பேரொலியால் நிறைந்த கங்கையைத் தாங்கிய சடையை யுடையவருமாகிய சிவபெருமானால் எரிந்த, நத்து அமர் அத்தி முராசான் செழுங்கணை நல்க - சங்குகள் வசிக்கின்ற கடலாகிய முரசையுடைய மன்மதனுக்கு அழகிய (மலர்ப்) பாணத்தைக் கொடுக்க, முன் நாள் வைத்த மரத்தில் மெய்த் தூரில் வெந்நீர் விடும் - முற்பகலில் வைத்த தருக்களது மூலவேரில் வெந்நீரை விடுமின் (விட அவை படும், பட மதனுக்கு மலரின்றாதல், ஆக மடவார் சுகமுறுவர்) எ—று.

"பிரிந்துழி நெஞ்சொடும் பிறரொடும் வருந்திச் - சொல்லவு முரியள்" என்ற ஓத்துப்படி தலைவி தன்றுயரைத் தோழியர்க்குரைத்தல். இது அகப்பொருட் பெருந்திணைப்பாற்படும். (௪௭)

மங்கல மந்தர முன்னுத நின்கண்ட வண்ணாய்கண்டு
சங்கல மந்தர வங்கொண்டு கூனிச் சுரிமுகஞ்சார்க்

திங்கல மந்தர மததான் கையிற்புக் கிருந்ததுகா
கங்கல மந்தர தம்புலி யான்மறைக் கானமின்னே.

இ—ள்: கலம் நாகம் அந்தரம் புவியான் மறைக்கான மின்னே - ஆபரணம் பாம்பும் அத் தேர் பூமியுமாகக் கொண்டவராகிய சிவனது வேத வனத்தில் மாதே, மங்கலம் அந்தரம் உன்னுத நின்கண்ட வண்ணங் கண்டு - மங்களத்துக்கு வேறுபாட்டைக் கருதாத உனது கழுத்தின் அழகைக்கண்டு, சங்கு அலமந்து அரவங்கொண்டு கூனிச் சுரிமுகஞ் சார்ந்து - சங்கானது சுழன்று ஏங்குதலையுற்று வளைந்து சுரித்த முகத்தை யடைந்து, இங்கு அல மந்தரமத்தான் கையில் புக்கு இருந்தது - இவ்விடத்துமன்று மந்தர மலையாகிய மத்தையுடைய மாயனது கரத்திற் போயிருந்தது எ—று.

அந்தம் - அழகுமாம். தற்குறிப்பேற்றவணி. [பொய்பாராட்டல்] (௬அ)

கானவண் டானக் களிற்றைவர்க் காகக் கழுவிற்றங்கு
மானவண் டானது காணுத தாமரை யானுஞ் செவ்வி
ஞானவண் டானத் துறைவோனும் வாவிபி னுடிக்கொந்து
மீனவண் டானந் திரிமறைக் காட்டுறை வித்தகனே.

இ—ள்: கானவன் தானக் களிற்று ஐவர்க்கு ஆகக் கழுவில் தங்கும் - காட்டிற் சஞ்சரிக்கும் வளவிய மதத்தைக்கொண்ட யானைப் படையை யுடைய பஞ்சவர்களைக் காகதும்பொருட்டாகக் கழு (நுனியி) லிருந்த, ஆன வண்டானது காணுத தாமரையானும் - பசுக்களையுடைய மாயவனுகிய வண்டு காணுத தாமரைமலரையுடையவரும், செவ்வி அண ஞான தானத்து உறைவோனும் - அழகு சார்ந்த ஞான நிலத்தில் எழுந்தருளியிருப்பவரும் (யாரென்னில்), மீனம் நாடிக் கொத்து வண்டானம் வாவியில் திரி மறைக் காட்டு உறை வித்தகன் - மீனைத் தேடிக் கொத்துகின்ற நாரைகள் வாவியிற் சஞ்சரிக்கும் வேதவனத்தில் வீற்றிருக்கும் பெரியோர் எ-று.

வித்தந் தியாக முதவா வுலோபர்க்கு வீணிற்சொற்பாட்
டைத்தந் தியாக பதியென்ப ரான்முத லாம்பிள்ளையை
மைத்தந்தி யாகப் பெறுமறைக் காடர் வயங்குமுண்மைச்
சித்தந்தி யாக தியாகரைப் பாடிலர் திங்கறவே.

இ—ள்: வித்தம் தியாகம் உதவா உலோபர்க்கு - பொன்னைக் கொடையாக உதவாத உலுத்தர்கள்மேல், சொல் பாட்டை வீணில் தந்து யாகபதி என்பர் - சொல்லையுடைய பாவை வாளா பாடி மகத்தலைவனுகிய இந்திரனே என்று சொல்லும் புலவர்கள், முதல் ஆம் பிள்ளையை மைத் தந்தி ஆகப் பெறு மறைக்காடர் - மூத்த பிள்ளையைக் கருமையாகிய யானையாகப் பெற்ற வேதவனத்தரும், வயங்கும் உண்மைச்சித்து - விளங்காநின்ற உண்மையா

கிய சிற்சொரூபரும், அர்த்தி ஆக தியாகரைத் தீங்கு அறப் பாடிலர் - செவ் வானத்தை யொத்த திருமேனியையுடைய தியாகருமாகிய சிவனைத் தீமை யொழியப் பாடிலர் (இவர் மதியிருந்தவாறென்னை!) எ—று.

என்பர் வினையாலணையும் பெயர். உறுப்புகளிற் சிறந்தது முகம்; அவர்க்கு அது யானைமுகமாதலில், தந்தியாக என்றார். பெரியபுராணத் தில் "கடக்களிற்றைக் கருத்து ளிருத்துவாம்" என்றதுமிது. இவ்வாறு எல்லா வாசிரியரும் கூறுப. இக பர சுகமெலா மடையலாமென்பதும் எத் தீமைகளும் ஒழியலாமென்பதும் படத் தியாகரைத் தீங்கறப் பாடிலர் என்றார். (௫0)

தீங்கரும் பாரஞ் செறிவயல் வேதத் திருவனத்துக்
கோங்கரும் பார மணிமுலைச் சாமளக் கோமளப்பெண்
பாங்கரும் பாரண சூலாயு தாவிப் படிவச்சுமை
தாங்கரும் பார மினிப்பிற வாமுத்தி தந்தருளே.

இ—ள்: தீம் கரும்பு ஆர் அம் செறிவயல் திரு வேதவனத்து - மதுர மாகிய கரும்புகள் பொருந்திய நீர் செறிந்த வயலைக்கொண்ட திருமறைக் காட்டில் எழுந்தருளியிருக்கின்ற, ஆரம் அணி கோங்கு அரும்பு முலைச் சாமளக் கோமளப் பெண் பாங்கர் உம்பா - முத்தமாலையை யணிந்த கோங்க முகையை யொத்த தனத்தையுடைய பசுமையையும் இளமையையுங்கொண்ட மங்கையைப் பங்கிலுடைய தெய்வமே, ரண சூலாயுதா - போரை விளைக் குஞ் சூலப்படையை யுடையவரே, இப்படிவச் சுமை தாங்க அரும் பாரம்- இத்தேகச் சுமை தாங்க அரிய பாரமாயிற்று (ஆகலா லிதை யொழித்து), இனிப் பிறவாமுத்தி தந்தருள் - மேற் பிறவாவண்ணஞ் செய்கின்ற (பர) முத்தியைத் தந்தருளும் எ—று.

கரும்பு ஆரம் எனப் பிரித்து கரும்பினது முத்தெனக் கூறி, இரண் டா மடியில் ஆரத்தைச் சந்தனம் என்னினும் இழுக்காது. தீங்கரும் பார் அஞ்சு எறி என வைத்து, கொடியரானவரும் பிரபஞ்சவாழ்வையும் ஐம் புலனையும் வென்ற என்றும், பூமியிற் பஞ்சபாணத்தை வென்ற வென்றும், தீங்கு அரும்பார் அஞ்சு எறி என வைத்து, தீமை சிறிதுமில்லாதவர்கள் புலனையும் பாணத்தையும் வென்றவென்றும், பொருள் கூறினுமாம். (௫௧)

தந்தம் படைத்த களிறொன்று தாக்கத் தனிபுரந்து
நுந்தம் படைத்தலை வேல்விழிக் கன்னியை நோக்கியதா
னந்தம் படைத்தலைச் சால்வழி யூர்ந்திடு நான்மறைநகை
யிந்தம் படைக்க சடையான்வெற் பாடவ' வென்கிங்கமே.

இ—ள்: தந்தம் படைத்த களிறு ஒன்று தாக்க - கொம்பைப் பெற்ற யானையொன்று எதிர்ப்ப, நந்தம் படைத் தலைச்சால் வழி ஊர்ந்திடும் - சங்குகள் கலப்பையாலுண்டாகிய உழவுசால்வழியே ஊர்கின்றன, நான் மறைசை இந்து அம்பு அடைத்த சடையான் வெற்பு - நான்மறைக்காட்டில் வீற்றிருக்கின்ற சந்திர கலையையும் நீரையுஞ் சேர்த்த வேணியை யுடையாரது மலையில், தலை வேல் படை விழி நும் கன்னியை, தலைமையாகிய வேலாயுதத்தை யொத்த கண்களையுடைய உமது கன்னியை, ஆடவன் எண் சிங்கம் தனி புரந்து நோக்கியது - காளையால் மதிக்கப்படுஞ் சிங்கம் தனியே காத்துப் பார்த்தது எ—று.

ஆடவனைச் சிங்கமாக வுருவகித்தமையின், நோக்கியதென்னும் பயனிலைகொண்டது. சிந்தாமணியிலும், "சீவக வேழுயர் போதக மினத் தொடேற்றதே" என்றது மிது. தனி என்றமையில் வீரம் விளங்கியது. [களிறு தருபுணர்ச்சியா லறத்தொடு நிற்றல்]. (௯உ)

சிங்க முருக்குவன் றென்கால னாவியைச் செப்பிலின்னே
கங்க முருக்குர லாய்விருந் துண்ணக் கனத்திடுமென்
னங்க முருக்கும் பிணியங்கு மிங்கு மலையவைத்தாய்
பங்க முருக்கிதழ் சேர்மறைக் காட்டுறை பண்ணவனே.

இ—ள்: முருக்கு இதழ் சேர் பங்க - முருக்கம்பூவை யொத்த அதரத்தை யுடைய உமாதேவி சேர்ந்த பாகரே, மறைக்காட்டு உறை பண்ணவனே - வேதவனத்தில் வீற்றிருக்குங் கடவுளே, தென் காலன் என் ஆவியைச் சிங்க முருக்குவன் - தென்திசையில் நமன் எனது உயிரைக் குன்ற வருத்துவன், செப்பில் - (இன்னும்) சொல்லில், கங்கம் உருக்குரல் நாய் விருந்து உண்ணக் கனத்திடும் அங்கம் பிணி உருக்கும் - பருந்தும் அச்சப்படுத்து முழக்கையுடைய நாயும் விருந்து உண்ணக் கனத்த காயத்தை நோய்வருத்தும், இன்னே அங்கும் இங்கும் அலைபவைத்தாய் - இவ்வண்ணமாகவே அவ்விடத்தும் இவ்விடத்தும் அலையும்படி வைத்தீர் (இவ்வலைவு மாறும் வகை இனியருள் செய்வது தான் என்றோ?) எ—று.

இதற்கு, பங்கரே பண்ணவரே கங்கமும் நாயும் விருந்துண்ணக் கனத்த என் அங்கத்தை மெலிவிக்கும் பிணியால் அங்கும் இங்கும் அலைய வைத்தீர்; அக்கடும் பிணியாற் காலன் ஆவியை இப்போதே முருக்குவன் எனவும் பொருள் கூறலுமொன்று. இதன் கருத்து: பிணிகளுக்கரசான பெரும் பிணியால் எனது காயம் பீடிக்கப்படுகை இப்போதே யிறப்பதனோடொக்குமென்பதாம். (௯௩)

பண்ண முதலையின் சொல்லிபங் காளன் பகைவிடம்வன்
கண்ண முதலையி னேமியை யேவிய கண்ணனுயி
ருண்ண முதலயின் றோன்மறைக் காடனை யுண்டென்பதே
யெண்ண முதலயின் கானிடைப் பூவி னினிநெஞ்சமே.

இ—ள்: ஐக் கான் இடைப் பூ நெஞ்சமே - சோலைக் காட்டிலுள்ள பூப்போன்ற மனமே, பண் அமுது அலை இன் சொல்லி பங்காளன் - பண்ணையும் அமுதையும் வென்ற இனிய சொல்லையுடைய உமாதேவியைப் பாகத்திலுடையவரும், வன் கண்ணை முதலையில் நேமியை ஏவிய கண்ணன் உயிர் - வன்கண்மையையுடைய முதலையிற் சக்கிராயுதத்தைத் தூண்டிய மாயவனது ஆவியை, பகைவிடம் உண்ண முதல் - பகைத்த நஞ்சு உண்ண முன், அயின்றோன் - அதைத் தாமுண்டவரும், மறைக் காடனை - வேதவனத்தை யுடையவருமாகிய சிவனை, உண்டு என்பதே இனி முதல் எண்ணம் - உண்டு என்னத் துணிதலே இனி முதலாகிய எண்ணம், (அந்திய காலத்துக்கு அவரே துணை, ஒழியாது கருது) எ—று.

இனி என்றதினால் இத்துணைக் காலமெல்லாம் வாழ்நாளை வீணாள் படக் கழித்தனை என்பது போதரும். ஈற்றடியில் இன் இரண்டுஞ்சாரியை. ஐயின்றோன் போலி. (௫௬)

நெஞ்சத் திருக்கு மறிநீயைம் பூத நிலயமுநீ
கஞ்சத் திருக்கு மரிசேருங் கண்ணனெண் கண்ணனுநீ
வஞ்சத் திருக்கு மலமாயை நீங்கிய மாதவத்தோர்
தஞ்சத் திருக்கு வனத்துறை காரண தற்பரனே.

இ—ள்: வஞ்சத் திருக்கு - கொடுமையாகிய ஆணவ மலத்தையும், மலம் - கன்ம மலத்தையும், மாயை நீங்கிய மாதவத்தோர் சத்து - மாயா மலத்தையும் ஒழித்த தவத்தார்களது சத்தாகிய, இருக்கு வனத்து உறை காரண தற்பரனே - வேதாரணியத்தில் வீற்றிருக்குந் (சகத்துக்கு) நிமித்த காரணமாகிய பதியே, நெஞ்சத்து இருக்கும் அறி நீ - மனத்திலிருக்கும் அறிவும் நீ, ஐம்பூத நிலையமும் நீ - பஞ்சபூதங்களுக்கு இடமும் நீ, கஞ்சத் திருக்கு அரி சேருங் கண்ணன் (நீ) - (செந்) தாமரை மலரிலிருக்கின்ற இலக்குமியாகிய கன்னி சேர்ந்த மாயவனும் நீ, எண் கண்ணனும் நீ - எட்டு நேத்திரத்தையுடைய பிரமனும் நீ எ—று.

வஞ்சத்திருக்கு என்றமையின் ஆணவம் போதரும். திருக்கு மலம் என நன்றாக்கினும் காத்தலும் படைத்தலும் அழிப்பவன்மேலவாத

வின் அது சொல்லாதமைதலானும் காரண தற்பரனே யென்றதினாலும், நீயே முழுமுதற் கடவுளாதலின்; நின்மாட்டடைந்தேன் என்பது கருத்து. மதி புத்தியுமாம். (௫௫)

தற்கோல மென்ற கனிவாயை வேட்டுத் தயங்குமணப்
பொற்கோல மென்றடி யேன்காண் குவன்புவி புக்கிடந்த
முற்கோல மென்றவி சம்புயன் போகி முதலமரர்
நிற்கோல மென்ற பொழுதால முண்ட நிருமலனே.

இ—ள்: முன் புவி புக்கு இடந்த கோலம் - முன்னாளிற் பூமியைப் புகுந்து கிழித்த பன்றியாகிய மாயவனும், மெல் அம்புயத் தவிசன் - மெல்லிய தாமரை மலர்ப் பீடிகையையுடைய பிரமனும், போகி முதல் அமரர்- இந்திரன் முதலிய தேவர்களும், நிற்கு ஓலம் என்ற பொழுது ஆலம் உண்ட நிருமலனே - நுமக்கு ஓலமென்று நொந்தபோது (அவர்களைப் புரப்ப) நஞ்சை யுண்டருளிய மலரகிதரே, தற்கோலம் மென்ற கனி வாயை வேட்டு- தக்கோலத்தை மெல்லாநின்ற (கொவ்வைப்) பழத்தைப் போலும் வாயை யுடைய உமாதேவியை விவாகஞ்செய்து, தயங்கும் பொன் மணக் கோலம் அடியேன் என்று காண்குவன் - விளங்காநின்ற (நுமது) பொன்போலும் அரிய திருமணக் கோலத்தை அடியேன் எப்போது காண்பேன் எ—று.

இறப்பை யொழிக்க ஓலமென்றார். அமராரகவும் அவரை அமாரென் பது முகமனுமென்னலே 'வலியுறுத்தத் தாமுமங்ஙனங் கூறினர். இழித்தா ரெனினுமாம். நிற்கு என்பது "இன்னுமோர் கோடியாண்டிருந்து நிற் கியாம் பன்னினும்" எனக் கந்தபுராணத்தில் வந்தது போல வந்தது. (௫௬)

திருமல ரஞ்சனை சேய்பணி மாலத்தர் நீள்விசயற்
பொருமல ரஞ்சனை யக்கிடும் வேத புரிவரைக்கோன்
மருமல ரஞ்சனை யன்னார் மறார்சொல் வருவர்வன்க
ணருமல ரஞ்சனை யாதொழி யாய்மதி யாய்மனமே.

இ—ள்: மனமே - நெஞ்சே, திருமலர் - மலரகிதரும், அஞ்சனை சேய் பணிமால் அத்தர் - அஞ்சனாபுத்திரனாகிய அனுமன் வணங்கிய மாயவனுக் குப் பிதாவானவரும், நீள் விசயன் பொரு மலர் - நெடிய அருச்சுனனோடு பொருத மல்லருமாகிய சிவனது, அஞ்சம் நயக்கிடும் வேதபுரிவரை - அன் னங்கள் மகிழ்ந்து (உலாவுந்) திருமறைக்காட்டு மலையில், மரு அஞ்ச மலர்க் கோலனை அன்னார் - வாசத்தைக்கொண்ட பஞ்ச புஷ்பபாணத்தையுடைய மதனையொத்த தலைவர், சொல் மறார் - (தெய்வத்தின் முன்னுரைத்த) சூளுரையை மறார், வன்கணரும் அலர் - வைராமுடையவருமல்லர், அஞ்சல்-

(இகந்துவிடுவாரென்று) பயமுறேல், நையாது ஒழியாய் - துன்புறேல், வருவர்-(இன்னே) வருவர், மதியாய் - தெளிதி எ-று. [தேற்றாவு] (௫௭)

மனக்காக்கை மூவர் தமிழ்க்குயில் வாணியை வைத்தகுழை
யுனக்காக்கை வஞ்ச வினையேன்புன் னாவி லுரைத்ததமிழ்
சினக்காக்கை வாயி னுறுங்குரற் சொல்லொக்குஞ் சேண்முகிற்சந்
தனக்காக்கை நீட்டு மறைக்காட்டில் வாழ்சிவ சம்பரனே.

இ-ள்: சேண் முகில் - ஆகாயத்து மேகமண்டலத்தில், சந்தனக் கா கை நீட்டு மறைக்காட்டில் வாழ் சிவசம்பு அரனே - சந்தனச்சோலை கை நீட்டுகின்ற வேதவனத்தில் வீற்றிராநின்ற சிவசம்புவே சங்காரகருத்தரே, மனக்காக்கை மூவர் தமிழ்க் குயில் வாணியை வைத்த குழை உனக்கு - மனக்காப்பையுடைய மூவரது தேவாரமாகிய குயிற்சொல்லை அடக்கிய திருச்செவியையுடைய நும்மேல், ஆக்கை வஞ்ச வினையேன் புல் நாவில் உரைத்த தமிழ் - காய (மெடுத்தற்கு ஏதுவாகிய) கொடுமையாய வினையை யுடையேன் எளிய நாவாற் பாடிய பாடல், சினக்காக்கை வாயின் உறுங் குரற் சொல் ஒக்கும் - கோபத்தையுடைய காகத்தினது வாயில் நின்றுந் தோற்றும் வெடிசொல்லையொக்கும் எ-று.

புன்னாவிலெனவே இழிவாகவு மமையாமையின் உவமைமுகத்தானுங் கூறினார். சிவசம்பரனே என்பதைச் சிவ எனப் பிரித்துச் சிவனேயென வும், சம்பரனேயெனப் பிரித்து மானை அல்லது கங்கையைத் தரித்தவரே யெனவுங் கூறினு மமையும். (௫௮)

சம்பாதி யந்தச் சடாயுவும் போற்றுந் தலைவன்புரம்
வெம்பாதி யந்த மிலாமறைக் காடன் விரைக்குழல்சேர்
செம்பாதி யந்தண் சமயமல் லாது திரிநெஞ்சமே
நம்பாதி யந்தகர் பொல்லாச் சமயங்க ணன்றெனவே.

இ-ள்: திரி நெஞ்சமே - (மெய்யறியாது தடுமாறித்) திரியுமனமே, அந்தச் சம்பாதி சடாயுவும் போற்றுந் தலைவன் - (முன்னிலைமைமாறிப் புள்வடி வாகிய) அச்சம்பாதியுஞ் சடாயுவுந் துதிக்குந் தலைவரும், புரம் வெம்பு ஆதி அந்தம் இலாமறைக்காடன் - முப்புரத்தையும் எரித்த உற்பத்திநாசம் இல்லாத வேதவனத்தரும், விரைக் குழல் சேர் செம்பாதி - வாசத்தைக்கொண்ட கூந்தலையுடைய உமாதேவி சேர்ந்த செம்பாதியானவருமாகிய சிவனது, அந் தண் சமயம் அல்லாது - அழகிய அருளையுடைய சமயம் (ஒன்றை) யன்றி, அந்தகர் பொல்லாச் சமயங்கள் நன்று என நம்பாதி - (அகச்)குருடரது பொல்லாச் சமயங்களை நன்றென்ன நம்பேல் எ-று.

சுட்டு பண்டறிசுட்டு. நம்பினோர்க்கு இன்பத்தையும் நம்பாதார்க்குத் துன்பத்தையும் அளிப்பாரென்பது போதரப் புரம் வெம்பு என்றும், எத்துதியையுங் கொண்டருள்வாரென்பது போதரச் சம்பாதி சடாயு போற்றுந் தலைவனென்றும், நித்தியானந்தத்தைத் தருவதென்பது போதர அந்தண் சமயமென்றுங் கூறினர். அந்தகரெனவே சமயமுமதுவாக, பொல்லாவெனல் வேண்டாவாயினும் வலியுறுத்தற்கு வேண்டுமென்க. (௫௯)

நன்றென் புலமைந்தில் வாயொன்று மேதவை யாயினுஞ்சீர்
நின்றென் புலவு கறையாக்கை துஞ்சுமு னீள்பொதியக்
குன்றென் புலவர்முன் னோர்கவி யாயினுங் கூறியதால்
வன்றென் புலவனைத் தாக்கிய வேத வனத்தனையே.

இ—ள்: என்பு உலவு கறை சீர் நின்ற யாக்கை துஞ்சும் முன் - எலும்பையும் உலாவுகின்ற இரத்தத்தையுமுடைய சிறப்பு நிலைத்த காயம் அழியுமுன், வல் தென்புலவனைத் தாக்கிய வேத வனத்தனை - வலிய தென்றிசையை யுடையனாகிய நமனை யுதைத்த வேதபுரீசருக்கு, நீள் பொதியக் குன்று என் புலவர் முன் - (மக்களுயிர்க்குத் தமிழ் சுரத்தலால்) நெடிய பொதியமலையென்னும் பண்டிதருக்குமுன், ஓர் கவியாயினுங் கூறியதால் - ஒரு பாவையேனும் பாடியபடியால், என் ஐந்து புலனில் நவை ஆயினும் வாய் ஒன்றுமே நன்று - எனது பஞ்சப்புலனில் குற்றத்தையுடைத்தாயினும் வாயொன்றுமே நன்று எ—று

"திரைக்கடல் குடித்த கரத்தமா முனிக்குந் - திங்கள் வாழ்குலந் தங்கு வேந்தற்கு - மமுத மூற்றெழுந்து நெஞ்சகங் களிக்குந் - தமிழெனுங் கடலைக் காணி கொடுத்த - பொதியப் பொருப்பு" எனக் கல்லாடத்திலும், "கவுணியர்க்குத் தமிழ் சுரக்குங் - காட்சியாலே வண்ணமுலை மலயமலை மானும்" எனச் சேதுபுராணத்திலும் கூறியதுபற்றி, 'பொதியக் குன்றென் புலவர்' என்றார். வேதவனத்தனை என்றது, இலக்கணக்கொத்தில் "எல்லா வுருபொடுங் கொள்வோ னெழுமே" என்ற விதியமைந்து "அவ்வித் தழுக்காறுடையானைச் செய்யவள் தௌவையைக் காட்டிவிடும்" என்னுங் குறள் போல நின்றது. (௬௦)

வனக்கோதை யேபு மறுநா றுவைத்துவன் டேன்பிழிந்த
கனக்கோதை யேனளித் நீர்கரும் பாட்டிய கட்டிநல்கா
தெனக்கோதை வாரித் திருவே மதிமலி யென்றமிழ்விற்
பனக்கோதை பால்விடுத் தான்மறைக் காடன் பனிவரைக்கே.

இ—ள்: மதி மலி என் தமிழ் விற்பனக் கோதை பால் விடுத்தான் மறைக்காடன் பனி வரைக்கு - மதிமலி என்ற (முதற் குறிப்பையுடைய) செய்யுளை (ப் பாடியருளிப் பாணபத்திர ரிடத்திற் கொடுத்து) வித்தாரத்தை

யுடைய சேரமான்பெருமாணாயனாரிடத்தில் அனுப்பினவரும், வேதவனத்தை யுடையவருமாகிய சிவனாது குளிர்ச்சியைக் கொண்ட மலையில் (வாழும்) ஓதை வாரித் திருவே-சத்தத்தையுடைய (பாற்) கடலில் வந்த இலக்குமியே எனக்கு ஆட்டிய கரும்புக்கட்டி நல்காது - எனக்கு (ஆலையில்) ஆட்டியத னாலாய கருப்பஞ் சாற்றாலமைந்த கட்டி (போலும் வசனத்தைத்) தாராமல், வனக் கோதை எயும் அறுகால் நுவைத்து வள் தேன் பிழிந்த கனக்கோதை என் அளித்தீர் - அழகாகிய மாலையிற் பொருந்திய வண்டுகள் நுவைத்து வளவிய தேனைப் பிழிந்தெடுத்த மேகத்தைப்போலுங் கூந்தலை என் தந்தீரீஎ-று

மதிமலி என்றசெய்யுளாவது: "மதிமலி புரிசை மாடக் கூடற் - பதிமிசைநிலவும் பானிற வரிச்சிற - கன்னம் பயில்பொழி லாலவாயின் - மன்னிய சிவன்யான் வரைதரு மாற்றம் - பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்-குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ் - குருமா மதி புரை குலவிய குடைக்கீழ்ச் - செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க - பண்பால் யாழ் பயில்பாண பத்திரன் - றன்போ லென்பா லன்பன் றன்பாற் - காண்பது கருதிப் போந்தனன் - மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே". இது கட்டி உவமவாகுபெயர். மொழிபெற வருந்தலாதலின் வசனத்தைத் தாராமல் என் தலைசாய்ந்து நிற்கின்றீரென்றான். கரும்புக்கட்டியைத்தாராது கனத்தகோதை என் தந்தீரென்று மொருபொருள் போதரும். இப்பாட்டை அகத்தமிழ் புறத்தமிழ்த் திறனறியார் தோன்றியவாறே புறங்காட்டலெனப் புதிதொன்று படைத்துக் கூறுவர். திருவே எனளித்தீர் என்னுமுடிபு கந்தபுராணத்தில் "நாவலோய் நீருநடந்தருளும்" என்னுஞ் செய்யுள்போல முடிந்தது. திருவே என்பது தொல்காப்பியனார் விளியெழுத்தைப் பொதுமையிற் கூறி "உகரந்தானே குற்றியலுகரம்" எனவிதந்த விதி பிற்காலத்து ஒருசார் வீழ்ந்ததற்கு உரையாளர் "திருவே எனச்சிறுபான்மை முற்றுகா வீறுமுளவேனும்" எனக் கூறியதும், முற்றும் வீழ்ந்ததற்கு நன்னூலார் "இஉ ஊவோ டையோ னளரல" என்ற பொதுவிதிமேற் சிறப்புவிதி கூறியவற்றோடமையாதும், விருத்தியுரையாளர் எடுத்தமையாதும், நேமிநாதத்தார் "ஏயாம் உகார வோகார வுயிர்கள்" எனப் பொதுமையிற் கூறியதும் சான்றாதலானும், இராமாயணத்தில் "சிலமின்னதென்றருந் ததிக் குதவிய திருவே" எனவும், "தெரிவைமார்க்கொரு கட்டளையெனச்செய்த திருவே" எனவும்,தாயுமானார் பாடலில் "மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன் மரபில்வரு மவுனகுருவே" எனவும், தஞ்சைவாணன் கோவையில் "கார்தனைக்குங் குழற்றிருவே" எனவும், காரிகையில் "தென்னைச் செந்துறையாகுந் திருவே" எனவும், வந்ததுபோல, பன்னூல்களினும் பயின்றுவருதலானும், இன்னோசையுடைமையானுஞ் சிறுவரவிற் றென்னக் கூறுதலினியேலாது. இன்னுந் தொல்காப்பியத்தின் வழியாய

நன்னூலெழுந்தகாலத்து முற்றும் வீழ்ந்த விதியைப் பின்னூல்செய்த தமது காலத்தும் நிகழ்ந்ததாக்கக் கருதிய கருத்துக்கேற்பவுந் தொல்காப்பியனார் விதந்தது போலவும் நன்னூலாருந் தாமும் பிறவெழுத்துக்களை விதந்தது போலவுஞ் சூத்திரியாது "இ ஐ ஆ வோ டையோ னளரல -யவ் வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு - ணஃகா னுவீ றுகும் பொதுப் பெயர் - மெய்யுயிரனைத்திற் றஃறிணை விளிப்பன - வொல்வழி யறிதல் வழக்கத்தான" எனக்கூறிக் குற்றுகரம் பெரும்பான்மையும் முற்றுகாஞ் சிறுபான்மையும் வருதலை ஒல்வழி என்பதனு லிடர்ப்பட்டமைத்த இலக்கண விளக்கத்தார் கருத்து நன்னூலாரோடு மாறுபட்டெழுந்த மதமுதிர்ச்சியெனத் தெளிக.

(௬௧)

பனிச்சந் திரனணி வேணியுந் தாங்குஞ்செம் பஞ்சினுட
னனிச்சந் திரளன்னத் தூவியிற் சேக்குமஞ் சீறடிபாற்
றனிச்சந் திரவி னடந்தான் சிகர தளம்பொலிமே
தினிச்சந்திரவரை வில்லான் மறைசையிற் செந்துருவே.

இ—ள்: செம் பஞ்சினுடன் அனிச்சந் திரள் அன்னத் தூவியில் - செம் பஞ்சினும் அனிச்சமலர்த்திரளினும் அன்னச்சிறையினும் (மிதித்து நடப்பினுங் கன்றி), சேக்கும் அஞ் சீறடி பால் இரவில் தனிச் சந்து நடந்தான் - சிவக்கின்ற (மெல்லிய அழகாகிய சிறிய தாளையுடைய பரவையாரிடத்தில் இராக்காலத்தில் தனியே தூதுசென்றவரும், மேதினிச் சிகர தளம் பொலி சந்திர வரைவில்லான்-பூமியில் முடிக்கணம் பொலியப்பெற்ற பொன்மலையாகிய வில்லையுடையவருமாகிய சிவனது, மறைசையில் செந்து உரு - வேதாரணியத்தில் (வாழும்) செந்துக்களாய உருவுடையனவும், பனிச் சந்திரன் அணிவேணியுந் தாங்கும் - குளிர்ச்சிபொருந்திய சந்திர கலையை அணிந்த சடாமுடியையுந் தாங்கும் எ-று.

வேணியுமென்னு மும்மையால் அத்தொடக்கத்தன பிறவும் ஒழிந்தபிறவு மமையும். செந்துருவுமென்னுமும்மை விகாரத்தாற்றொக்கது. தொக்கதன் றேல், இவையே சாரூபத்தை யடையுமென்றும், பிறவுயிர் அதை யடையா வென்றும் பொருள்பட்டு, இறைவனூலோடு பகைக்கும். திரைமுன்னினும் பின்னினுஞ் சேர்ப்பினும் பொருளிசையும்.

(௬௨)

உருப்பவனுசன வாய்த்தேரை யிற்பிணிக் குள்ளுடைந்தேன்
கருப்பவ காச நதிமணி கன்னிகைக் கான்மறைசை
நெருப்பவ னுசன காதியர் தேசிக நீள்பதுமத்
திருப்பவ னுசனப் பாற்கட லான்பணிந் தேத்திறையே.

இ—ள்: கருப்பவ நாச மணிகன்னிகை நதி மறைசைக் கான் - கருவை யும் பாவத்தையுந் துடைக்கின்ற மணிகன்னிகை நதியைக் கொண்ட வேதவனத்தில் வீற்றிருக்கும், செருப்ப வனு-அக்கினியினது நிறத்தை யுடையவரே, சனகாதியர் தேசிக-சனகர் முதலியோரது குரவரே, நீள் பதுமத்து இருப்பவன் ஆசனப்பாற் கடலான் பணிந்து ஏத்து இறையே-நெடிய தாமரைமலரிலிருக்கின்ற பிரமனும் ஆசனமாகிய பாற்கடலையுடைய மாயவனும் வணங்கித் துதிக்குந் தலைவரே, உருப்பவனுசன வாய்த் தேரை யில் பிணிக்கு உள் உடைந்தேன்-அச்சத்தை விளைக்கின்ற பாம்பினது வாயிற்பட்ட தேரையைப்போல நோயாலுள்ளமுடைந்தேன் (இதை நீரன்றி நீக்குவார் பிறரில்லை) எ-று.

பிணிக்கு உள்ளுருவுடைந்தேனெனப் புணர்ப்பினுமமையும்

ஏத்திரப் பாண்டி யெனவைய மேற்கு மிறைவன்மதிக்
கோத்திரப் பாண்டிய னுகிமண் ணுண்டவன் கோலநகரைக்
காத்திரப் பாண்டின மறைக்கா டனைமல காயமென்னுஞ்
சூத்திரப் பாண்டி லிறுமிறுங் காணுந் தொழுமுன்னமே.

இ—ள்: மலகாயம் என்னுஞ் சூத்திரப் பாண்டில் இறும் இறும்-மலத்தை யுடைய உடலாகிய சூத்திரப்பண்டி (இன்றிருப்பினும் நாளை) முரியும் முரியும், முன்னம்-அது முரியமுன் [இப்போதே என்றபடி], ஏத்து இரப்பு ஆண்டி என ஐயம் ஏற்கும் இறைவன்-துதிக்கின்ற இரப்பையுடைய ஆண்டியாகப் பிச்சையை ஏற்ற தலைவரும், மதிக்கோத்திரப் பாண்டியன் ஆகி மண் ஆண்டவன்-சந்திரகுலத்துப் பாண்டியனாகிப் பூமியையாண்ட வரும், கோல நகரைக் காத்திரப் பாண்டில் மறைக்காடனை-அழகாகிய வெண்மையையுடைய காயத்தைக்கொண்ட ஏற்றையுடைய வேதவனத் தருமாகிய சிவனை, தொழும்-வணங்குமின் எ-று.

ஐயமேற்றூரே இகபரசுகத்தையெல்லா முற்றுயிர்க்கு அருளவல்லாரென் பனகத் தேற்ற இறைவனென்றும், எல்லாஞ் செய்ய வல்லாரென்பார் ஆண்டியென்றும், மண்ணுண்டவனென்றும், கூறினர். காணும் முன்னிலை யசை. (௯௪)

முன்னுவ லாரிசை யுங்கடற் சங்கர் முடியவெள்ளை
நன்னுவ லாரியன் மாமறைக் காடர் நயங்கொள்பச்சை
மின்னுவ லாரிவ ரைக்காண வேண்டும் விழிசதப்பத்
தென்னு வலாரி படைத்தா னவையு மிமைப்பிலவே

இ—ள்: மூன் நாவலார் இசையுங்கூடல் சங்கர் - முன் புலவர்களிருந்த மதுரைச் சங்கத்தையுடையவரும், முதிய நல் வெள்ளை நாவலார் - பழைய நல்ல வெண்ணாவலை யுடையவரும், இயல்மா மறைக்காடர் - இயற்றமிழைக்கொண்ட பெருமையாகிய வேதவனத்தை யுடையவரும், நயங் கொள் பச்சை மின் ஆவலார் இவரை - நயத்தைக்கொண்ட பசுமையாகிய உமாதேவிக்குக் காதலருமாகிய இச் சிவபெருமானை, காண சதப் பத்து விழி வேண்டும் என்று - தரிசித்தற்கு ஆயிரங் கண்கள் வேண்டுமென்று, வலாரி படைத்தான் அவையும் இமைப்பில் - இந்திரன் பெற்றான் அவையு மிமையாதன எ—று.

இசை நாடகமும் வழங்குவவேனும், அவை முதனூலை யுணர்தற்குக் கருவியின்மையிற் கூறாராயினர். தமிழில் முற்றுரை யுடையாரென்பதைத் தேற்ற நாவலார் இசையுஞ் சங்கர் என்றும் இயமன் மறைக்காடரென்றுங் கூறினர். இக்கருத்துப் பற்றியன்றே திருவிளையாடற் புராணத்திலும் "கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோடமர்ந்து — பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழேனை - மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழி போ — லெண்ணிடைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ" எனக் கூறினர். இயலென்பதற்குச் சிலப்பதிகாரத்தில் "குணவாயிற் கோட்டத் தரசு வீற்றிருந்த" என்னுஞ் செய்யுளுரையினும் தொல்காப்பியத்தில் "வடவேங்கடந் தென்குமரியாயிடை" என்னுஞ் சூத்திர விருத்தியினுங் கூறியபடி இலக்கண மென்னினு மமையுமெனினும், இலக்கியத்தை ஒழித் தற்கு ஓரியைபு மின்மையானும், அதனமைதியே இலக்கணமாதலானும், அதினிரம்பார்க்கு இலக்கணத் தெளிவு பிறவாமையானும், அக்கருத்து நண்டைக்காகாதென்க. தற்குறிப்பேற்றவணியும் நிகழ்தலிற் புராணகாவிய சரிதத்தோடு இது மாறுபடாது. (௬௫)

இமையாத வம்பகச் சூழ்மறைக் கானத் திறைவகங்கைச்
சுமையாத வம்பக வன்செயச் சென்னி துளக்கரனே
கமையாத வம்பகல் வீசிய வாரிதிக் காசினியோ
ருமையா தவம்பக ரார்வேட னெச்சிலை யுண்டதற்கே.

இ—ள்: இமையாத அம்பகர் சூழ் மறைக்கானத்து இறைவ - இமையாத நாட்டத்தையுடையாராய தேவர்கள் சூழும் வேதபுரியில் இறைவரே, கங்கைச் சுமையா - கங்கையாகிய சுமையை உடையவரே, பகவன் தவஞ் செயச் சென்னி துளக்கு அரனே - பிரமன் தவத்தைச் செய்ய (நன்றென்று மகிழ்ந்து) சிரத்தையசைத்த சங்கார கருத்தரே, வேடன் எச்சிலை உண்டதற்கு - (நீர்) கண்ணப்பநாயனார் எச்சிலை யுண்டதற்காக,

கமை ஆதவம் பகல் வீசிய வாரிதிக் காசினியோர் - (சூரியனது வெம்மையைப் பலவுயிர்களும் பொறுக்கலாற்ரு என்று நினைந்த தேவவிருடிகள் அவ்வெம்மையைப் பொறுத்தலாற்) பொறுமையாக வெய்யில் பகலில் வீசப்படுகின்ற கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தார், உமை யாது அவம் பகரார் - நும்மை என்ன தோஷஞ் சொல்லார் (எல்லாத் தோஷமுஞ் சொல்வார்) எ—று.

பகல் சூரியனுமாம். கமையா தவம்பகல் வீசிய என்பதற்குரைத்ததை "நிலமிசை வாழ்ந ரலமர றீரத் - தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக் - காலுணவாகச் சுடரொடு கொட்கு - மவிர்சடை முனிவரு மருள" என்னும் புறப்பாட்டாலறிக. இடை குறைந்த உம்மையென்பது இராமாயணத்தில் "யாரென விளம்புவேனே னெங்குலத் தலைவற்கும்மை" என்றது போலப் பெருவரவிற்ருகவும், புதியன புகுதலென்பார். (சுசு)

உண்டலத் தானையன் பின்வந்த வண்டின மூதுந்துழாய்க்
கொண்டலத் தானைய னஞ்சுடர் மூன்றையுங் கொண்டமுக
மண்டலத் தானையன் கொண்டாடும் வேத வனத்தன்சிறு
கண்டலத் தானையன றீருரி வாங்குங் கருணையெற்கே.

இ—ள்: அலத்தானையன் பின் வந்து வண்டு இனம் ஊதுந் துழாய்க் கொண்டல் அத்தான் - கலப்பைப் படையைத்தாங்கிய பலதேவனுக்குப் பின் பிறந்த வண்டுக் கூட்டங்கள் ஊதுகின்ற துளவமாலையைப் புனைந்த மேகம் போலும் மாயவனுக்கு அத்தானும், சுடர் மூன்றையும் நயனங் கொண்ட மண்டல முகத்தான் - சூரியனும் சந்திரனும் அக்கினியுமாகிய முச்சுடர்களையும் விழியாக் கொண்ட விம்பமுகத்தை யுடையவரும், அயன் கொண்டாடும் வேதத் தலத்தன் - பிரமன் கொண்டாடுகின்ற மறைக்காட்டை யுடையவருமாகிய சிவன், அன்று -(அஞ்சித் துன்புழந்து அடியாரானோர் காசியில் அபயம் புகுந்த) அந்நாளில், சிறு கண் தலத்து ஆனை ஈர் உரி வாங்குங் கருணை எற்கு உண்டு - சிறிய கண்ணையுடைய யானையில் இழுத்த தோலைக்கொண்ட கிருபைஎனக்கும் உண்டு எ—று. (சுஎ)

எற்பதங் கன்று வளர்சோம னங்கி யிவர்செய்கையாய்
நிற்பதங் கன்று திருமறைக்காட னிறைவைகுந்த
கற்பதங் கன்று நிரைமேய்த் தவற்கருணைதன் பெண்பாற்
சிற்பதங் கன்று மெனச் சென்ற தூதன் செயல்வண்ணமே.

இ—ள்: எல் பதங்கன் து வளர் சோமன் அங்கி - ஒளியையுடைய சூரியனுஞ் சுத்தம் பெருகாநின்ற சந்திரனும் அக்கினியுமாகிய முச்சுடர்

கள், இவர் செய்கையாய் அங்கு நிற்பது அன்று - இவரது தொழிலாய் அங்ஙனம் நிற்பதன்று, திருமறைக்காடன் - திரு மறைசையை உடையவரும், கன்று நிரை மேய்த்தவற்கு நிறை நல் வைகுந்த பதம் அருள் நாதன் - கன்றுப்பசுவை மேய்த்த மாயவனுக்கு நிறைந்த நல்ல வைகுண்ட பதத்தை உதவிய கடவுளும், சிற் பதங் கன்றும் எனப் பெண்பால் சென்ற தூதன் செயல் வண்ணமே (நிற்பது) - ஞானமயமாகிய திருவடிகள் கன்றும் என்று (கண்டோர்) சொல்லப் பரவையாரிடத்திற் சென்றருளிய தூதருமாகிய சிவபெருமானது தொழில் வண்ணத்தாற்றான் நிற்பது எ—று.

தூ கந்தரந்தாதியிற் "செப்புங்கவ சங்கரபாலக" என்பது போலக் குறுகியது. ஈற்றில் ஏ தேற்றப்பொருட்டு. (௬அ)

வண்ணவெண் கண்ணன் மரையா ளுறைமறைக் காட்டிறைவர்
திண்ணவெண் கண்ணான் மதமாத் திரியுஞ் சிலம்பகம்பூ
வுண்ணவெண் கண்ண னணையே நிதம்ப முயர்சுருதிப்
பண்ணவெண் கண்ணன் மனையே முகநண்ப பைந்தொடிக்கே.

இ—ள்: நண்ப - பாங்கனே, பைந்தொடிக்கு அகம் - (என்னிறையை வாங்கிய) பசிய வளையலையுடையாளுக்கு இடமாவது, நள் நல் வெள் வண்ண மரையாள் உறை - தேனைக்கொண்ட நல்ல வெள்ளை நிறமாகிய தாமரைமலரையுடையாளாய வாணி இருக்கும், மறைக்காட்டு இறைவர் - வேதவனபுரீசரது, திண்ண எண்கு அண்ணல் மதமாத் திரியுஞ் சிலம்பு - வலிமையையுடைய கரடியும் பெருமையான மதயானையுந் திரியும் மலையே, நிதம்பம் - அல்குலாவது, பூ உண் அ எண் கண்ணன் அணையே - பூமியை உண்ட அந்த மிடலைப்பெற்ற மாயவனது படுக்கையாகிய பாம்பினது படமே, முகம் - வதனமாவது, உயர் பண்ண சுருதி எண்கண்ணன் மனையே - உயர்ந்த பண்ணைப்பெற்ற வேதத்தையுடைய பிரமனது வீடாகிய தாமரை மலரே எ—று.

அறிவைக் கொடுத்தலின் நல்லென்றார். எண் இப்பொருளாதலை "எண்வலி யெள்ளிலக்க மெளிமைசோ திடம் விசாரம்" என்னுஞ் சூடாமணி நிகண்டானுணர்க. [அவனடு நிவ்விடத் திவ்வியற்றென்றல்] (௬௯)

தொடிப்பாணி நித்திரை யாகாளொன் காதிற் றுளைக்குமட்டோ
கொடிப்பாணி னித்தில தென்னும் விழுமெழு கோமிப்பிவாய்
வெடிப்பாணி நித்தில மையோ சுடுமென்னும் வேதவன
முடிப்பாணி நித்தியப் பெம்மான் பவனி முறையிற்கண்டே,

இ—ள்: வேத வன முடிப் பாணி நித்தியப் பெம்மான் பவனி முறையில் கண்டு - திருமறைக்காட்டில் எழுந்தருளியிருக்குஞ் சிரத்திற் கங்கையைக் கொண்ட நித்திய நாதராகிய சிவனது திருவுலாவை முறையாற் றரிசித்து, தொடிப் பாணி நித்திரை ஆகாள் - வளையலையணிந்த கையையுடையாள் துயில் கொள்ளாள், நொடிப் பாண் இனித்திலது என்னும் -சொல்லுதலைக்கொண்ட பண் இனித்திலது என்பாள், விழும் - விழுவாள், எழும் - எழுவாள், நோம் - நோவாள், வெடிப்பு வாய் இப்பி ஆணி நித்திலம் - வெடிப்பாகிய வாயையுடைய இப்பியினது ஆணிமுத்தம், ஐயோ சுடும் என்னும் - ஐயோ சுடுமென்பாள், என்காதில் துளைக்கும் மட்டோ - (இவ்வாறு வருந்தும் வகை) எனது காதைத் துளைக்குமளவோ அதிலும் விஞ்சியது எ—று.

என்காதிற் றுளைக்குமட்டோ என்பதற்கு எனதுகாதிற் றுளைக்குமளவோ அயலார் காதையுந் துளைத்தது என்னினுமமையும். காமச்சுவையணி. இது கடவுண்மாட்டு மானுடப் பெண்டிர் நயந்த பக்கத்தில் இறைவனுலாக்கண்டு மயலுற்றாள் தயைரத் தோழி சொல்லியது. (௭0)

கண்டங் கடுத்தவி ராமாலை வேதன் கழிந்ததலை
முண்டங் கடுத்த மிசைந்திடும் வானின் முளைத்தபிறைத்
துண்டங் கடுத்த நுதலிமை யாசலத் துய்யபச்சைப்
பெண்டங் கடுத்தது பார்மறைக் காட்டுறை பேரொளிக்கே.

இ—ள்: மறைக்காட்டு உறை பேர் ஒளிக்கு - வேதவனத்தில் வீற்றிருக்கும் பெரிய சோதிக்கு, கடு கண்டந் தவிரா - நஞ்சு கழுத்தை நீங்காது, மாலை வேதன் கழிந்த தலை முண்டங்கள் - மாலையாவது பிரமனது கழிந்த தலைகள், அங்கு அடுத்தது - அவ்விடத்து அவரைச் சார்ந்திருப்பது, வானில் முளைத்த துத்தம் இசைந்திடும் பிறைத் துண்டங் கடுத்த நுதல் - ஆகாயத்திலே தோற்றுகின்ற பாலையொத்த (வெள்ளிய) பிறைத் துண்டம் போலும் நெற்றியையுடைய, இமை யாசலத் துய்ய பச்சைப் பெண்டு - இமையமலையிலெழுந்த சுத்தமாகிய பச்சைப்பெண், பார் - (தோழீ) பார்க்குதி எ—று.

இவ்வொழுக்கங்கள் களவொழுக்க மாகையானும், தலைமகள் பெருநாணினளாகையானும், தோழியாற் கூறப்பட்ட கூற்றுகட்கு வெளிப்படையாக மறுமொழி கொடாது, மறைக்காட்டுறை பேரொளிக்குப் பெண்டடுத்ததெனக் குறிப்பாற் கொடுத்தாள். கொடுக்கவே, முன்னர்ப் பாங்கற் கூட்டம் பெற்றவாறு மமைந்து பின்னிஞய கூட்டம் பெறுகை காரணமாக பின்னிடத்து வந்திரந்து குறையுறு நின்றார்க்கு வேண்டியது செய்வாயாக என்பது மமைந்தது. [இறைவியறியாள் போன்று குறையால்கூறல்]

ஒளியா னிறையுந் திவாகரக் கண்ண னுலகத்துயி
ரளியா னிறையுந்தி யம்புயன் வேதற் கருஞ்சின்மய
வெளியா னிறையுந்தி முந்நீர் மறைசையில் வெற்பணங்கே
தெளியா னிறையுந் திகைத்தங் கிரேன்வந்து சேருவனே.

இ—ள்: ஒளியால் நிறையுந் திவாகரக் கண்ணன் - சுடரால் நிறைந்த சூரியனாகிய கண்ணையுடையவரும், உலகத்து உயிர் அளி ஆன் இறை உந்தி அம்புயன் வேதற்கு - உலகிற்றங்கிய ஆவிகளைக்காக்கும் பசுக்களுக்குத் தலைவனும் நாபிக்கமலத்தை யுடையவனும் இராநின்ற மாயவனுக்கும் பிரமனுக்கும், அருஞ் சின்மய வெளியான் - அரியஞானமய வெளியானவருமாகிய சிவனது, இறை உந்தி முந்நீர் மறைசையில் வெற்பு அணங்கே - பெருமையாகிய யாறுங் கடலுஞ் சூழ்ந்த வேதவனத்து மலையில் மாதே, யான் இறையுந் திகைத்து அங்கு இரேன் வந்து சேருவன் தெளி - நான் இறையளவு நேரமுந் திகைந்தங்ஙனமிரேன் (இங்ஙனம் விரைவில்) வருவேன் இதைத் தெளிதி எ—று.

உந்திமுந்நீர் ஒருபொருட் பலபெயரெனக் கொண்டு கடலென்று உரைப்பினுமாம். "முந்நீர்ப் பிறந்த பவனத்தொடு சங்குமுத்தும்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளில், முந்நீர் படைத்தல் காத்தல் அழித்தலாகிய முக்குணமென்றார் நச்சினார்க்கினியர் [பிரிந்துவருகென்றல்] (எ௨)

சேரு வரிக்கடை யாளமில் லாவுருச் சித்தர்போ
லாரு வரிக்கடை யேநிற்ப ராலணங் கேசெழும்பூந்
தாரு வரிக்கடை பண்பாடும வேதத் தலத்திறைமுந்
நீரு வரிக்கடை வெங்கால போசன னீண்மலைக்கே.

இ—ள்: செழும் பூந் தாரு வரிக்கடை பண் பாடும் வேதத் தலத்து இறை - அழகிய பூந்தருவில் வண்டுகள் பண்ணைப்பாடும் வேதபுரியில் வீற்றிருக்குந் தலைவரும், முந்நீர் உவரிக்கடை வெங்கால போசனன் நீள் மலைக்கு - முந்நீரையுடைய கடற்கட்டோன்றிய வெய்ய நஞ்சவுணவை யுடையவருமாகிய சிவனது நீண்ட மலையில், அணங்கே - மாதே, இக்கு அடையாளம் இல்லாத சித்தசர் போல் உருச்சேருவர் - கருப்பு வில்லாகிய அடையாளம் இல்லாத மதனரைப்போல உருவத்தையுடையவரும், இக்கடையே நிற்பர் - (ஈண்டுள்ள பலவிடத்திலுமின்றி) இவ்விடத்திற்றானே (பயின்று) நிற்பவருமாகிய, உவர் ஆர் - உந்தக் காளையர் யார் (நீயறிவையேற்) சொல்லுதி எ—று.

உவப்பிற்சித்தசரென்று பால்வழுவக் கூறியதற்கிசைய உவரென்றான். "தண்கால்கடையிடை" என நன்னூலார் கூறினமையின் ஏண்டுக்

கடை அப்பொருட்டு. கடையே என்பதில் ஏ தேற்றம் வரிக்கடை இப்பொருளாதலை இரகுவமிசத்தில் "வரிக்கடைபாண்செயு மருதமெய்தினான்" என்னுஞ் செய்யுளானுணர்க. சேருவர் நிற்பர் என்பவற்றிற்குச் சேர்ந்தவராகி நிற்பவராகிய எனக் கூறலுமொன்று. [இறைவன்றனக் குக்குறைநேர் பாங்கியிறைவிக் கவன்குறையுணர்த்தல்.] (எஙு)

நீண்ட வராக மலைமா நிலம்பிண்டி நின்றறியா
னாண்ட வராக மலைகுனிந் தான்மறை நற்பதியான்
மாண்ட வராக மலையாமல் வைப்பவன் வான்புகழை
வேண்ட வராகம லைக்குமுன் றோற்றும் வெறுந்தவ்வையே.

இ—ள்: நீண்ட வராகம் அலை மாநிலம் பிண்டி நின்று அறியான்-நெடிய (மாயவனாகிய) பன்றி கடலாற் சூழப்பட்ட பெரிய பூமியை யிடந்து நின்றறியப்படாதவரும், நாண் தவர் ஆக மலை குனித்தான் - நாரியை யுடைய வில்லாக மேரு கிரியை வளைத்தவரும், நல் மறைப்பதியான்-நல்ல வேதவனத்தையுடையவரும், மாண் தவர் ஆகம் அலையாமல் வைப்ப வன்-மாட்சிமைப்பட்ட தவத்தர்களது காயத்தை அலையாமல் வைப்பவருமாகிய சிவனது, வான் புகழை வேண்ட — பெருமையாகிய கீர்த்தியை வேண்ட, கமலைக்கு முன் தோற்றும் வெறுந் தவ்வை வராள் - (அவரிடத்தில்) இலக்மிக்குமுன் பிறந்த வெறிய மூதேவி வாராள் எ—று.

அலை ஆகுபெயர். அறியான் என்பது, "முதனிலை தொழிற்பெயர் முற்றீ ரெச்சம் - வினைமுதல் செயப்படு பொருளே யாதிபுட் - படுசொலற்றே படுபொருளாயும்" என்னும் இலக்கணக் கொத்துவிதியால், 'இல்வாழ்வானென்பான்" என்பதுபோல நின்றது. வாராள் ஈறு கெட்டது வாராது என்னக் கொள்வது மொன்று. (எச)

வெறும்பாத்தி நிச்சயமில்லெனை யாட்கொண்டு வீட்டில்வைப்பா
யுறும்பத்தி னிற்பத்து மாமகன் மாலய னும்பருக்கு
மெறும்பத்தி நிற்குங் கடை முதலாவி யெவைக்குமருள்
பெறும்பாகத் திரிபங்க னோமறைக் கானப் பெருஞ்சுடரே.

இ—ள்: பத்தினில் உறும் பத்து மா மகன் மால் அயன் உம்பருக்கும் - நூறாகிய அசுவமேதத்தையுடைய வாசவனுக்கும் மாயவனுக்கும் மலரோனுக்கும் வானவருக்கும், அத்தி முதல் எறும்பு கடைநிற்கும் ஆவி எவைக்கும் அருள் - யானைமுதலாய் எறும்புமுடிவாய் நிற்கின்ற உயிர்களெவற்றுக்கும் அருளுகின்ற, பத்தினி பெறும் பங்கனே - உமாதேவி பெற்ற பாகத்தை யுடையவரே, மறைக் கானப் பெருஞ் சுடரே - வேதா

ரணியத்திற் பெரிய சோதியே, பத்தி நிச்சயம் இல் வெறும் எனை ஆள் கொண்டு வீட்டில் வைப்பாய் - பத்திநிச்சயமில்லாத வெறியகடையேனையும் அடிமைக்கொண்டு மோக்ஷத்தில் வைத்தருளும் எ—று.

அருள்பெறும் எனைத் த்து அருளைச் சுரக்கின்ற வென்பது மொன்று; [பத்தி நிச்சயம் - திடபத்தி; உம்மைத்தொகையுமாம்]. (எரு)

பெருங் காசினித்தலங் கொண்டாடி யாடிப் பிறங்குகங்கை
யருங்காசி நீத்த முறைவோர் மறைசை யமலர்வெற்பின்
மருங்கா சினித்தலை கொள்ள விடாவென்ன மார்பகத்திற்
பருங்காசி னித்தகைப் பூட்கொங்கை மங்கைக்குப் பாரித்தவே.

இ—ள்: பெருங்காசினித் தலங்கொண்டாடி ஆடிப் பிறங்கு - பெரிய நிலவுலகத்தார் கொண்டாடி முழுகி உயர்வடைகின்ற, அருங் கங்கை காசி நீத்தம் உறைவோர் மறைசை அமலர் வெற்பில் மங்கைக்கு - அரிய கங்கைநதியைக் கொண்ட காசியில் எக்காலத்தும் வீற்றிருக்கின்றவராகிய மறைக்காட்டிறைவனுரது மலையில் மங்கைப்பருவமுடையாளுக்கு, மருங்கு ஆசு இனித் தலை கொள்ள விடா என்ன - இடையைச் சிறிதேனும் மேல் தலைகொள்ள விடாவென்னும் வண்ணம், மார்பு அகத்திற் பருங் காசின் இத் தகைப் பூண் கொங்கை பாரித்த மார்பின்கண் பருத்த மணிகளை யுடைய இத்தகுதியாகிய ஆபரணத்தையணிந்த தனங்கள் பணைத்தன எ-று.

உறைவோர் அமலர் என்பவற்றுக்கு உறைகின்றவரும் மலரகிதரு மாகிய சிவனது எனக் கூறலும் வழுவன்றென்க. இயற்கைப்புணர்ச்சி புணர்கின்ற காலத்துப் பதினொராண்டும் பத்துத்திங்களும் புக்காளாதலின், மங்கை ஈண்டுக் காலவாகுபெயர். அக்காலத்தான் பன்னிரண்டும் பதின் மூன்றுமாய இருவற்சரங் கொண்டதென்ப. [பருவங்கூறி வரவுவிலக்கல்]

பாரிக்கு மார முலையுமை யாட்கும் பகிரதியா
நாரிக்கு மாரப் புரமுஞ் சிரமு நயந்தளித்தோன்
மூரிக்கு மாரனைத் தந்தான் மறைசையின் மூர்த்திதந்தான்
றூரிக்கு மாரனுக் கில்லையென் மேற்பகை சாதிப்பதே.

இ—ள்: பாரிக்கும் ஆர முலை உமையாட்கும் பகிரதி ஆம் நாரிக்கும் - பருத்த முத்தமாலையை அணிந்த தனத்தையுடைய உமாதேவிக்கும் கங்கையாகிய பெண்ணுக்கும், ஆரப் புரமுஞ் சிரமும் நயந்து அளித் தோன் - அவர் தங்கும்வண்ணம் (நிரலே பாதித்) திருமேனியையுந் தலை யையும் மகிழ்ந்து கொடுத்தவரும், மறைசையில் மூர்த்தி - வேதவனத்தில் அருள்வடிவுகொண் டமர்பவருமாகிய சிவன், தார் தந்தான் - (நானிரந்த

கொன்றை) மாலையைத்தந்தனர், இக்கு மாரனுக்கு என்மேல் பகை சாதிப்பது இல்லை -(அதனாற்) கருப்புவில்லையுடைய மதனுக்கு (இற்றைவரையுஞ் சாதித்ததுபோல இனி) என்மாட்டுப் பகைசாதித்தலில்லை எ—று.

மூன் கொன்றை வாங்கும் என்றதினாலும், சிதம்பரச்செய்யுட்கோவையில் "தண்ணென் கடுக்கை கொணர்ந்தாரோ தம்மினொன" என்றதினாலும், காசிக்கலம்பகத்திலே "தண்ணென்று நறையிதழித் தாரென்றாள்" எனவும், "நல்காரே யின்னங் கடுக்கை யிவட்கு" எனவுங் கூறியதினாலும், பொதுமையிற் கிடந்ததார் என்றதற்குக் கொன்றைமாலை என்றாம். இது கடவுண் மாட்டு மானுடப்பெண்டிர் நயந்த பக்கத்துக் கொன்றை மாலை பெற்ற துறைத்தல். இதுவுங் கிளிமுதலியவற்றைத் தூதுவிடுதலுமுதலிய இன்னோரன்னவா யகத்தமிழ் நெறிப்படாது வருவனவெல்லாம், புறப்பொருளில், "கடவுட்பக்கத்து மேனோர்பக்கத்து மடவரன் மகளிர மகிழ்ந்த பக்கமும்" என்ற விதிப்பாற்படும்; கடவுண் மாட்டு மானுடப் பெண்டிர் நயந்தபக்கத்து வெண்பாமாலையில் இசைத்த செய்யுள், "அரிகொண்ட கண்சிவப்ப வல்லினென் னாகம் - புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி - வரிவண்டு - பன்னலங் கூட்டுண்ணும் பனிமலர்ப்பா சூரென் - னுண்ணலங் கூட்டுண்டானூர்" என்பதே. மகிழ்ந்தபக்கமும் என்ற பற்றியே நூலியற்றுமாசிரியர் தத்தமக்கு வேண்டியவாறே விரிப்பாராயினர். (௭௭)

சாதிப்ப ராகம மென்பயன் வேட்டுவன் சாதிப்புழு
வேதிப்ப ராகம் பெறல்போல மெய்க்குரு வாற்பெற்றியான்
பூதிப்ப ராக மணிந்தன்ப னாவதெப் போதருளா
யாதிப்ப ராகவி னான்மறைக் கானத்தெண் ணம்புயனே.

இ—ள்: ஆதிப் பரா - முதற்கடவுளே, கவின் நான்மறைக் கானத்து அம் எண் புயனே - அழகை யுடைய நான்மறைக்காட்டில் வீற்றிருக்கும் அலங்காரத்தைப்பெற்ற எட்டுப்புயத்தை யுடையவரே, ஆகமம் சாதிப்பர் பயன் என் - அறு (பவஞானமின்றி) ஆகமத்தைச் சாதிப்பார் அதனாற் பயன்யாது?, வேட்டுவன் சாதிப்புழு வேதிப்ப - வேட்டுவன் ஓர் சாதிப் புழுவை வேதிப்ப, ராகம் பெறல் போல -(அது அவ்வேட்டுவனது) வடிவத்தைப் பெறுதல்போல, யான் - நான், மெய்க் குருவால் பெற்று - உண்மையையுடைய ஞானாசாரியரால் (உபதேசத்தைப்) பெற்று (முன்னிலை மாறி), பூதிப் பராகம் அணிந்து அன்பன் ஆவது எப்போது அருளாய் - திருவெண்ணீற்றைப் புனைந்து மெய்த்தொண்டனாவது எக்காலத்தில் உரைத்தருளும் எ—று. (௭௮)

புயற்கூடு போம்பொழில் வேதா ரணியன்பொன் னாட்டகத்தே
மயற்கூடு மாடவர் நாரிய ராருயிர் வாரியுண்ணு
முயற்கூடு தாக்க விறற்கூ டுடைய முடிச்சிலம்பா
கயற்கூடு கண்ணிடை யாகாயந் தீட்டுதல் கைக்கரிதே.

இ—ள்: மயற்கு ஊடும் ஆடவர் நாரியர் ஆர் உயிர் வாரி உண்ணும்- மயக்கத்தாலூடுகின்ற காளையரதும் மாதரதும் அரிய ஆவியை வாரியுண்ணுகின்ற, முயற்கூடு தாக்க இறால் கூடு உடையும் முடிச்சிலம்பா - சந்திரன் தாக்கத் தேன்கூடு உடையப் பெற்ற சிகரத்தைக் கொண்ட மலையையுடையாய், புயற்கு ஊடு போம்பொழில் வேதாரணியன் பொன்னாட்டு அகத்து - மேகமண்டலத்துக்கு ஊடாகப் போதுஞ் சோலைசூழ்ந்த மறைக்காட்டில் இறைவரது பொன்னாட்டுக்கண் வாழும், கயல் கூடு கண் இடை ஆகாயந் தீட்டுதல் கைக் கு அரிது - கயல் சேர்ந்தாற்போன்ற கண்ணையுடையாளது இடையானது ஆகாயமாயிற்று (ஆதலாலதனை மனத்தாலெழுதலாமன்றிக்) கையாலெழுதுதல் அரிது எ—று.

இடையாகாயம் என்பதற்கு இடையாகிய ஆகாயமென்னினுமாம் [பாங்கி தலைமக ளவயவத் தருமை சாற்றல்.] (௭௧)

அரிதிரி கைக்கு வடுவாழ் மறைசை யரன்வறுமை
பெரிதிரிகைக்கு வந் தாண்டான் மெய்ஞ்ஞானப் பிறங்குசுடர்
விரிதிரி கைக்கும் வினையே னிடத்தினின் மேவியசக்
கிரிதிரி கைக்கு நிகராம் பிறப்புங் கெடுவிப்பனே.

இ—ள்: அரி திரி கைக்குவடு வாழ் மறைசை அரன் - சிங்கமும் யானையும் வாழும் வேதவனத்தில் வீற்றிருக்கின்ற சங்கார கருத்தரும், வறுமை பெரிது இரிகைக்கு வந்து ஆண்டான் - (அருளின்மையாகிய) வறுமை முற்றாய் நீங்கும் பொருட்டு (எளிது) வந்து அடிமைகொண்டவரும், பிறங்கு மெய்ஞ்ஞானச் சுடர் விரி திரி - விளங்காநின்ற மெய்ஞ்ஞானவிளக்கில் விரிந்த திரியானவருமாகிய சிவன், கைக்கும் வினையேன் இடத்தினில் மேவிய - (நல்லோரால்) வெறுக்கப்படும் வினையேன்கட் பொருந்திய, சக்கிரி திரிகைக்கு நிகர் ஆம் பிறப்புங் கெடுவிப்பன் - குயவனது திரிகைக்கு நேராகிய பிறவியையும் (தமது அருளால்) கெடுவிப்பவர் எ - று

திரிகை கைக்குவடு திரியுங் கையையுடைய மலை என்னவே யானையாம்; அது "வருங்குன்ற மொன்றுரித்தோன்" போல்வது. "அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்றலின் வறுமை அருளின்மையென்றும். இரி

கைக்கு உவந்து என வைத்து மகிழ்ந்து எனக் கூறுவதுமொன்று. பிறப்பும் என்புழி உம்மை இழிவுசிறப்பு. (௮௰)

கெடுப்போன கந்தையை நான்முகன் கேசவ னார்க்கு முண்டோன்
கடுப்போன கந்தையற் பங்கில்வைத் தான்மறைக் கானுவந்தா
னடுப்போன கந்தை யுடையான் சிலம்பினம் மாதையொப்பாய்
வடுப்போன கந்தை மணிமுலை நின்குறை மற்றில்லையே.

இ-ள்: நான்முகன் கேசவனார்க்கும் அகந்தையைக் கெடுப்போன் - பிரமனுக்கும் மாயவனுக்கும் ஆணவத்தைக் கெடுத்தவரும், கடுப்போன கம் உண்டான் - நஞ்சுணவை அமுதுசெய்தவரும், தையல் பங்கில் வைத்தான் - சத்தியை (வாம) பாகத்தில் வைத்தவரும், மறைக்கான் உவந்தான் - வேதவனத்தை மகிழ்ந்தவரும், கந்தை போன நடு உடையான் சிலம்பில் நம் மாதை ஒப்பாய் - ஆடை நீங்கிய அரையை யுடையவருமாகிய சிவனது மலையில் நம் மங்கையையொத்த அணங்கே, வடுப் போல் நகந்தை மணி முலை நின் குறைமற்று இலை - வடுவைப்போல நகந்தைத்த மணி போலும் (அரிய) தனமே (அவளோடு நின்மாட்டுள்ள) குறை பிறிது இல்லை எ-று.

கெடுப்போன் இயல்பிற் காலம்பிறழ்ந்தது; திருவாதவூரர் புராணத்தில் "அந்தமால்விதி தேடுவார் மதிகூடினோர்" என்றதுபோல. நடுப்போன கந்தையுடையான் என்பதற்கு அரையில் நீங்கிய உடையையுடையவரென்றலில் "கழித்த பற்றுடை வசிட்டன திருக்கையாய்" என்பதுபோல நின்றதென்க. இது திகம்பரனென்னும் பொருட்டு; நகந்தைக்கப்படுதல் முலைக்கு அழகென்று மகிழ்வித்து உட்கொளுணர்வாள் மணிமுலையென்றாள். மணி அழகுமாம். [தகையணங்குறுத்தல்.] (௮௧)

மற்றலத் தேரைய மின்றிநெஞ் சேயென்ன மாயந்தாலோ
முற்றலத் தேரை விடுஞ்சாலிற் சங்க முழங்கு பண்ணைப்
பொற்றலத் தேரை மறைமறைக் கானப் புனிதன்கல்லுட்
பற்றலத் தேரைக்கு மேயளந் தானெனப் பாடிப்பாடியே.

இ-ள்: நெஞ்சே - மனமே, ஏரை விடும் முற்று அலத்த சாலில் - ஏற்றைத் தூண்டாநின்ற (தொழில்) முழுதும் அமைந்த கலப்பையாலுண்டாய உழவுசாலில், சங்கம் முழங்கு பண்ணை - சங்குகளாரவாரிக்கும் வயலாற் சூழப்பட்ட, பொன் தலத்து ஏரை மறை மறைக்கானப் புனிதன் - (தன்மாட்டுள்ள பெரியதோரழகினாற்) பொன்னிலத்துள்ள அழகைச் (சிறிதாகும்வண்ணம்) மறைக்கின்ற வேதவனத்தில் வீற்றிருக்குஞ் சிவபெருமான், கல்லுள் பற்றல் அத்தேரைக்குமே படி எப்படி அளந்தான் - கல்

லுட் பற்றுதலாகிய அத்திறத்தையுடைய தேரைக்குமே படியை எவ்வண்ண மளக்தார், என்ன மாயங்கொல் - இது யாது மாயமோ, ஐயம் இன்றித் தேர் - சங்கையின்றி யறிதி, மற்று அல - அதற்கு உணவு கிடைப்பது பிறிதொரு வழியானுமன்று எ—று.

ஓ அசை. மாயமோ வென்றுக்கி; கொல்லே அசையாக்கினுமாம். பொற்றலத்தேரை மறை என்பது சிலப்பதிகாரத்தில் "மங்டேய்த்த புகழினர்" என்பது போலும். பற்றலத் தேரைக்கும் என்றது கோயிற்புராணத்தில் "பொன்றிகழ் பங்கய மூழ்கி" என்பது போன்றது. (அஉ)

படிகத் தனையனை யான்மறைக் காடன்பொற் பாணியில்வேல்
பிடிகந் தனையரு டாதைய னாடகப் பேரவனைக்
கடிகந் தனைமுகில் காணுனை யேத்தக் கருதுநெஞ்சே
விடிகந் தனைய மடவார் கலக விழிமையமே.

இ—ள்: நெஞ்சே - மனமே, படிகந்தனை அனையான் - பளிங்கை ஒத்தவரும், மறைக்காடன் - வேதாரணியத்தை யுடையவரும், பொன் பாணியில் வேல்பிடி கந்தனை அருள் தாதையன் - பொன்போலும்(அருமைத்) திருக்கரத்தில் வேலாயுதத்தை யேந்திய குமாரக்கடவுளை உதவிய தந்தையாரும், ஆடகப் பேரவனைக் கடி கந்து அனை முகில் காணுனை - இரணியன் என்று பொன்னினது பெயரை யடுத்தவனைக் கொன்ற தூணாகிய தாயையுடைய முகில்போலும் மாயவனாற் காணப்படாதவருமாகிய சிவனை, ஏத்தக் கருத - துதிக்க எண்ணுதி, அனைய மடவார் கலக விழி மையல் இகந்து விடு - (நீ இத்துணை நான்று மணந்து களித்த) அம்மகளிரது கலகத்தையுடைய கண்ணாலாகும் மயக்கத்தை நீக்கி விடு (நிச்சயம் முத்தி சித்திக்கும்) எ—று.

"தயாபரகரும சாதாக்கியரைத் தியானவுணர்விற் சேர்வு செய்பிற் படிக நிறம்" எனச் சதாசிவ ரூபத்திற் கூறினமைபற்றிப் படிகந்தனை யனையானென்றார். தாதையன் என்பது கல்லாடத்தில் "சின்முலைக்கொடி மடந்தையள்" என்பது போலும்; கந்தனை முகில், புலியூரந்தாதியில், "கந்தனை யூர்கவந் தாற்கரி யானை" என்பது போலும்; அனைய என்பதை அல் நைய எனப் பிரித்து, அஞ்ஞானமாகிய இருள்கெட என்றுரைப்பினுமமையும்.

மையகற் றானை முகன்றுதை மாணிக்க வாசகனை
மெய்யகற் றானை மகிழ்மறைக் காடனை வேண்டிபுன்னுஞ்
செய்யகற் றானைமுக் கோலந்த ணீர்சுரஞ் சென்றனரோ
துய்யகற் றானைப் புரந்தகனன் றனூசுக் தோகையுமே.

இ-ள்: மை அகற்று ஆனை முகன் தாதை - (தம்மை வழிபடுவார்களது) குற்றத்தைத் தவிர்க்கின்ற யானை முகத்தையுடைய விநாயகரது தந்தையும், மாணிக்கவாசகன் ஆம் மெய்ய கற்றனை மகிழ் மறைக்காடனை - மாணிக்கவாசகராகிய மெய்ம்மையையுடைய பண்டிதனை யுவந்த வேதவனத்தருமாகிய சிவனை, வேண்டி உன்னுஞ் செய்ய கல்தானை முக்கோல் அந்தணீர் - வேண்டித் தியானிக்கின்ற காவிக்கல் அளைப்பட்ட ஆடையையும் திரிதண்டத்தையுங் கொண்ட வேதியரே, தூய்ய கற்று ஆனைப் புரந்தான் அன்னனும் மந்தோகையுஞ் சார்ந்து சென்றனரோ - சுத்தமாகிய கன்றையுடைய பசுவைக் காத்த மாயவனை யொத்தானொருவனையும் (இலக்குமியை யொத்த) நமது மங்கையுஞ் சார்ந்து போயினரோ கண்டீரேற் சொல்லும்? எ-று.

கன்று ஆன் என்பது கற்றன் என நின்றது. திருவாசகத்தில், "கற்றா வின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" என்றது போல. "மென் றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற் - றம்மின வன்றொட ராகா மன்னே" என்பது விதி. [ஆற்றிடை முக்கோற்பகவரை வினாதல்.] (சச)

தோகை யிராமன் மதன்பாண மங்க துளைத்தது கா
ரீகை யிராமன் விதிகற்ப மானதென் மீதிற்சற்று
மோகை யிராமன் மறந்தா ரிராவண னுட்கவென்ற
வாகை யிராமன் பணிமறைக் காடர்வந் தாரில்லையே.

இ-ள்: தோகையிர் - மாதரே, ஆ - ஆ, மன்மதன் பாணம் அங்கந் துளைத்தது - மதனது பூவம்பு சரீரத்தைத் துளைக்கவும், கார் ஈகை இராமன் விதி கற்பம் ஆனது - கருமையைத் தருதலையுடைய இரவும் நிலைபெற்ற பிரமகற்பமாகவும், இராவணன் உட்க வென்ற வாகை இராமன் பணி மறைக் காடர் வந்தார் இல்லை - இராவணன் அஞ்ச வென்ற வெற்றியையுடைய இராகவன் வணங்கிய திருமறைக்காடர் வந்திலார், என் மீதில் சற்றும் ஓகை இராமல் மறந்தார் - (அதனால்) என்மேற் சிறிதும் அன்பிராமல் மறந்தார்; (இனிச் செய்யக்கிடந்தது யாது? சொல்லுமின்!) எ-று.

துளைத்தது ஆனது என்னும் முற்றுக்கள், சொற்றிரியினும் பொருள் திரியா வினையெச்சமாய்க், "கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடு - மானினம் பெயர்ந்ததாய ரார்த்தன ரணிந்த திண்டோ - டானென்று முடங்கிற் றென்று நிமிர்ந்தது சரப்பெய் மாரி - போனின்ற தென்ப மற்றைப் பொருவருஞ் சிலையினாற்றே" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுள்போல நின்றன. நின்றபடி நிற்ப மறந்து வந்திலாரென்னினுமமையும். அப்பொருட்கு வினைமுற்றெச்சமாயிற் றென்க. வினைமுற்றே எச்சமாகுமென்றும், முற்றுகள் திரிந்து எச்சமாகுமென்றும், எச்சமே முற்றுமென்றுங் கூறுவார் கருத்தை ஆங்காங்குக் காண்க. [இது கடவுண்மாட்டு மானுடப்பெண்டிர் நயந்த பக்கத்தில் இரவினீட்டம்.] (சரு)

வந்தித் திக்குங் கணையுங்கொண்ட வேள்பணி மான்குழற்கா
டித்தித் திக்குங்கனி வாயும்வெண் மூரலு மொண்குழையும்
பந்தித் திக்கும்பெறத் தோன்றிய வேதப் பதியன்பொற்றா
ளந்தித் திக்குந்தகு மென்னமன் றாடு மரன்கிரிக்கே.

இ—ள்: வேதப் பதியன் - மறைக்காட்டை யுடையவரும், பொற் றாளந் தித் திக்குந் தகும் என்ன மன்று ஆடும் அரன் கிரிக்கு - அழகாகிய தாளந் தித்திக்குந் தகும் என்ன (ப் பொன்) அம்பலத்தில் ஆடுகின்ற சங்கார கருத்தருமாகிய சிவனது மலையில், இக்குங் கணையுங் கொண்ட வேள் வந்தித்துப் பணி மான் குழல் காடும் - கருப்பு (வில்லையு) (மலர்) அம்பையுங் கொண்ட காமனும் வழிபட்டு வணங்குகின்ற மங்கையுடைய கூந்தலாகிய வனமும், திதிக்குங் கனி வாயும் - மதுரிக்கும் பழத்தையொத்த வாயும், வெள் மூரலும் - வெள்ளிய நகையும், ஒள் குழையும் - ஒள்ளிய காதும், பந்தித் திக்கும் பெறத் தோன்றிய - வரிசையாகிய (இந்த வெய்ய) திசையும் பெறும் வண்ணந் தோற்றின (இஃதென்ன மாயமோ நெஞ்சே சொல்லுதி).

குழற்காடு தொகையுருவக மாயினமையில் காடு மிகுதிப்பொருட்டன்று. தகுதியின்மையணி. [தலைமகன் றலைமகளதுருவு வெளிப்பாடு கண்டு சொல்லியது.] (அசு)

ஆரம்பையங் காட்டக வேதா ரணியத்த னாவியச்சுக்
குரம்பையங் காட்டவல் லான்சித சித்தன் குருஉச்சடில
சிரம்பையங் காட்ட வணிந்தோ னரவிந்தச் சேவடியென்
பரம்பையங் காட்டெரி முற்பஞ்ச சாகப் பறந்திடுமே.

இ—ள்: ஆரம்பை காடு அக வேதாரணியத்தன் - வாழைக் காட்டிடத்தைக் கொண்ட திருமறைக்காட்டையுடையவரும், ஆவி அச்சுக் குரம்பை அங்கு ஆட்ட வல்லான் - உயிரது காயமாகிய கூட்டை அங்ஙனம் ஆட்டவல்லவரும், சித் அசித்தன் - சித்தும் அசித்தும் ஆனவரும், குருஉச் சடில சிரம் பயம் காட்ட அணிந்தோன் - (செந்) நிறத்தைக் கொண்ட சடாமுடியிற் கங்கையைக் காட்டப் புனைந்தவருமாகிய சிவனது, அரவிந்தச் சேவடி - தாமரைமலர்போலுஞ் செம்மையாகிய திருவடி, என் பரம் - எனக்குப் பாரமானது, பயங் காட்டெரிமுன் பஞ்சு ஆகப் பறந்திடும் - (அதனாற் பிறப் பிறப்பாதியவற்றால் வரும்) பயமெல்லாம் விறகிற் பற்றிய அக்கினிக்கு முற்பட்ட பஞ்சுபோல விரைவில் அழியும் எ-று.

பட்டினத்துப்பிள்ளையார்பாடலில் "ஆட்டவல்லானுமொருவனுண்டே தில்லையம்பலத்தே" என்பதுகொண்டு அங்காட்ட வல்லானென்றார். பறந்திடும் என்பது விரைவிலழியுமென்னும்பொருள்தருவதோரிலக்கணை. (அஎ)

பறக்கும் பருந்துவக் குங்கழி யூன்முடைப் பற்றுளதா
யிறக்கும் பருந்துவக் காக்கையை நீக்கி யினிப்பொதிய
வறக்கும் பருந்து தமிழ்மறைக் காட னருளைக்கொண்டு
திறக்கும் பருந்துதித் தற்கரி தாமுத்திச் சீர்க்கதவே.

இ—ள்: பறக்கும் பருந்து உவக்குங் கழி ஊன் முடைப் பற்று உளது ஆய் - பறக்கின்ற பருந்துக்கள் மகிழும் மிகுந்த மாமிசத்தின் நாற்றப்பற்றுள்ளதாகி, இறக்கும் பருந்துவக்கு ஆக்கையை நீக்கி - துஞ்சுகின்ற பருத்த தோலையுடைய காயத்தை யொழித்து, உம்பருந் துதித்தற்கு அரிது ஆம் சீர் முத்திக் கதவு - தேவருந் துதித்தற்கரிதாகிய சிறப்பையுடைய வீட்டுங் கதவை, பொதிய அறக் கும்பர் உந்து தமிழ் மறைக்காடன் அருளைக் கொண்டு இனித்திறக்கு - பொதியமலையில் வீற்றிருக்கின்ற புண்ணியத்தையுடைய அகஸ்தியமுனிவர் உயர்த்திய தமிழையுடைய திருமறைக்காட்டில் இறைவரது திருவருளைக்கொண்டு இனித்திறப்பேன் எ - று.

ஆக்கையை நீக்கி அருளைக்கொண்டு மோக்கக் கதவைத்திறப்பேனென்றியைக்க. "கடதற வென்னும், அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோ - டென்னே னல்லென வருஉ மேழுந் - தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே" எனத்தொல்காப்பியத்திலும், "குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ - டல்லன் னென்னே ளுரு மீற்ற - விருதிணை முக்கூற் றொருமைத் தன்மை" என நன்னூலிலும், "புல்லுங் குடுதுறு மென்னேனும் பொற்றொடியா - யல்லுந் தனித்தன்மையாம்" என நேமிநாதத்திலும், குடுதுறு வென்னுங் குன்றியலுகரமோ - டல்லன் னென்னே ளுரு மீற்ற - விருதிணை முக்கூற் றொருமைத் தன்மையும்" என இலக்கணவிளக்கத்திலுங் கூறியதனானும், திருக்கோவையாரில் "மடுக்கோ" "படுக்கோ" என்றற் றொடக்கத்தனவற்றுக்குத் தன்வினையாகப் பொருளுரைத்த நச்சினார்க்கினியர் சிந்தாமணியில், "தளர்கு" என்பதைத் தன்வினையுரைக்குந் தன்மைச்சொல்லெனக் கூறுதலானும், அகப்பொருளில் பிரிந்துவருகென்றலின் பொருள் வருவேனெனப்படுதலானும், அதனிலக்கியமாகிய தஞ்சைவாணன்கோவையில், "நின்றே வருவல்" எனக் கூறுதலானும் சீர்காழிக் கோவையிலும் வெங்கைக் கோவையிலுங் கோடீசுரக் கோவையிலும் அப்பொருள்பட வருதலானும், திறக்கு என்பதற்கு இதுவே பொருளெனத் தெளிக. (௮௮)

கதவாயு நீங்கி மண்காய மான கடவுளெனை
யுதவாயு மப்பனு மானவன் வேத முறைவனத்தான்

பதவாயு தக்கொடி வேடாதை கீர்த்தியைப் பாடுதற்குச்
சதவாயு நாவுந்தந் தானில்லை வாணி தலைமகனே.

இ—ள்: காயம் கதவாயு அங்கி நீர் மண் ஆன கடவுள் - வானமும் உக்கிரத்தையுடைய காற்றும் அக்கினியுஞ் சலமும் பிருதுவியுமாகியதேவும், எனை உதவு ஆயும் அப்பனும் ஆனவன் - என்னையும் பெற்ற தாயுந் தந்தையுமானவரும், வேதம் உறை வனத்தான் - ஆரணங்களிருக்குங் காட்டையுடையவரும், பத ஆயுதக் கொடிவேள் தாதை கீர்த்தியைப் பாடுதற்கு - கோளிக்கொடியையுடைய முருகக்கடவுளது பிதாவுமாகிய சிவனது கீர்த்தியைப் பாட, வாணிதலைமகன் சத வாயு நாவுந் தந்தான் இல்லை - சரசுவதியுடைய கணவனாகிய பிரமன் நூறு வாயையும் நாவையும் (எனக்குத்) தந்திலன் எ - று.

தோற்றமுறைக்கும் அரதனமாலையணிக்கும் பிறழ்ந்து, தொல்காப்பியத்தில் "தலையினு நெஞ்சினு மிடற்றினு நிலைஇ" என்பதுபோலச் செய்யுளின்பம் படநின்ற முதலடியை முறைதந்து பொருளுரைத்தாம். (அகூ)

மகர சலந்தர ளந்தரு வேத வனத்தன்புய
சிகர சலந்தர னாவியுண் டானடல் சேர்ந்திலங்கு
முகர சலந்தர வாலாச னுவுரி யய்கையொன்றைப்
புகர சலந்தரப் போர்த்தா யெனவினை பொன்றிடுமே.

இ—ள்: மகர சலந் தரளந் தருவேத வனத்தன் - சுறுமீனையுடைய கடல் முத்தைத் தருகின்ற மறைக்காட்டை யுடையவரும், புய சிகர சலந்தரன் ஆவி உண்டான் - புயமலையையுடைய சலந்தராசுரனைக் கொன்றவருமாகிய சிவனை, அடல் சேர்ந்து இலங்கும் உகர - வலிமைபொருந்தி விளங்காநின்ற உகரமெனப்பட்ட, சலந் தர ஆலாசனு - வயிரத்தைக் கொண்ட காளபோசனரே, அம் ஒற்றைக் கைப் புகர் அசலம் உரி தரப் போர்த்தாய் என வினை பொன்றிடும் - அழகாகிய ஒரு கையையுங் கபில நிறத்தையுமுடைய யானை தோலைத் தரப் போர்த்தவரே யென்று துதித்துக் கொள்ளப் (பிறவிக்கேதுவாகிய) இருவினைகளும் அழியும் எ - று.

சங்காரத்தொழிலையியற்றலால் அடல்சேர்ந்து என்றார். உவ்வென்பது சிவனுக்கும் பெயராதலைக் கந்தரலங்காரத்தில் "ஆலுக்கணிகலம் வெண்டலைமாலை" என்பதனு லுணர்க. (கூ௦)

பொன்றுதை யம்புயத் திண்கால னஞ்சிப் புரண்டுவிழ
நின்றுதை யம்புயத் தான்மறைக் காட னிழல்வெற்பினீ
ரொன்றுதை யம்புயங் கன்வாய் விழுங்கிய தோமணித்தே
ரென்றுதை யம்புயன் மூடிய தோவின் றியம்பிடுமே.

இ—ள்: பொன் துதை அம்புயத் திண் காலன் அஞ்சிப் புரண்டு விழ - ஆபரணம் நெருங்கிய அழகாகிய புயத்தையுடைய வலிய நமன் பயந்து புரண்டு வீழ, நின்று உதை அம்புயத்தான் மறைக்காடன் நிழல் வெற்பினீர்- நின்று உதைத்த திருவடியாகிய தாமரைமலரை யுடையராய வேதபுரீசரது குளிர்ச்சியைக் கொண்ட மலையில் வாழும் மடவீர், ஐயம் ஒன்றுது - சங்கை பிறக்கின்றது, மணித்தேர் என்று உதை - மணியைக்கொண்ட தேரை யுடைய உந்தச் சூரியனை, இன்று புயங்கன் வாய் விழுங்கியதோ - இன் றைக்குக் கேது வாய் விழுங்கிற்ரே, அம்புயல் மூடியதோ - (அன்றேல்) நீர்மேகம் மூடிற்ரே, இயம்பிடும் - (தெரிதிரேற்) சொன்மின் எ—று.

ஒன்றுகின்ற தெனற்பாலது, பட்டினத்தடிகள், "வேகுதே தீயதனில் வெந்துபொடி சாம்ப - ராகுதே" எனக் கூறியதுபோல மரீஇயிற்று. புயங்கன் என்பது பாரதத்தில் "உரகருந் தங்கள்வாய் விடங்கள் கொன்றென வீழ்ந் தார்" என்றாற்போல நின்றது. உது பண்டறிசுட்டு. [இரவினீட்டம்.]

இயக்கோடை யாம்பன் முசுகுந்த னேத்து மிறைவவண்டு
முயக்கோடை யாம்பன் மலர்மறைக் கான்முத லேசுருதிச்
சயக்கோடை யாம்பன்முந் தேயடியேன்சட் டகம்விடுநாண்
மயக்கோடை யாம்பன் மருந்தே நின்பார்வை வழங்குதியே.

இ—ள்: இயக்கு ஓடை ஆம்பல் முசுகுந்தன் ஏத்தும் இறைவ - (பாகர்) நடத்துகின்ற (நெற்றியில்) பட்டத்தைக் கொண்ட யானையையுடைய முசுகுந்தச் சக்கிரவர்த்தி துதித்த தலைவரே, ஓடை வண்டு முயக்கு ஆம்பல் மலர் மறைக்கான் முதலே - ஓடையில் வண்டுகளைப் புணர்க்கின்ற ஆம்பற் பூ மலரைப்பெற்ற வேதவனத்து முதல்வரே, சுருதிச் சயக்கோடை ஆம்பல் முந்தே - வேதமாகிய வெற்றியைக்கொண்ட குதிரையையுடைய மூங்கில் முத்தே, மயக்கோடு ஐ ஆம் பன் மருந்தே - (அன்பாது) மயலுக்குங் கோழைக்குமான நெருங்கிய ஔஷதம் போல்வாரே, அடியேன் சட்டகம் விடும் நாள் நின்பார்வை வழங்குதி - அடியேன் காயத்தைத் துறக்கும் நாளில் (மரணவேதனை நீங்க) நுமது திருநோக்கத்தைத் தந்தருளும் எ—று.

கோடைக்கியைந்தமையிற் சயமென்ருர். (௬௨)

குதிக்குஞ் சிதாரிக் கட்கயற் பாவை கொழுநன்மன்றிற்
சதிக்குஞ் சிதநடத் தான்கொன்றை மாலை தவழ்குழவி
மதிக்குஞ்சி தங்கிய வேணியன் வேத வனத்தலத்தி
னுதிக்குஞ் சிதலை யெறும்பாதி பேறு முரைக்கரிதே.

இ—ள்: குதிக்குஞ் சிதர் அரிக்கண் கயல் பாவை கொழுநன் - குதிக்கின்ற சிதறும் வரியையுடைய விழியாகிய கயலைக்கொண்ட உமாதேவிக்கு நாயகரும், மன்றில் சதிக் குஞ்சித நடத்தான் - பொன்னம்பலத்திற் (புரிந்தருளுஞ்) தாளவொத்துக் (கிசைந்த) குஞ்சித நடனத்தை யுடையவரும், கொன்றை மாலை தவழ் குழவி மதிக் குஞ்சி தங்கிய வேணியன் - கொன்றை மாலையுந் தவழும் இளம்பிறையையும் புனைந்த குஞ்சி பொருந்திய சடையை யுடையவருமாகிய சிவனது, வேத வனத் தலத்தின் உதிக்குஞ் சிதலை எறும்பு ஆதி பேறும் உரைக்க அரிது - திருமறைக் காட்டிற் பிறக்குங் கறையான் எறும்பு முதலியவற்றின் பேறுஞ் சொல்ல அரிது எ—று.

குதிக்கும் வினையகன்மேற்று உரைக்கரிது என்பதை உரைக்கு அரிது என வைத்துச் சொல்லுக்கு அரிது எனக் கூறினுமமையும். (கூரு)

உரைத்தென்ன வன்மை பரன்மறைக் கானுறை யோங்கன்முகி
னிரைத்தென்னவன்மலி பூங்குழலாளென்செனுமிரும்பைக்
கரைத்தென்ன வந்நகைப் பூண்மார்பஞ் சேரக் கருதுபொதி
வரைத்தென்ன வன்கொடி சாடிய வேல்விழி வானகையே.

இ—ள்: பொதி வரைத் தென்னவன் கொடி சாடிய வேல்விழி வால் நகையே - பொதிய மலையையுடைய பாண்டியனது துவசமாகிய சேலை வென்ற வேற்கண்ணையும் வெண்மையாகிய பல்லையுமுடைய மாதே, வன்மை உரைத்து என்ன - சமர்த்தைச் சொல்லி (அதனாற் பெறுவது) யாது, பரன் மறைக் கான் உறை ஓங்கல் - சிவனது வேதவனத்திலிருக்கு மலையில், முகில் நிரைத்தென்ன அல் மலி பூங் குழலாள் - மேகம் நிரைத்தாற் போல இருள் நிறைந்த மலரைக்கொண்ட கூந்தலை யுடையாள், என்ன அம் நகைப்பூண் மார்பஞ் சேர - எனது அழகாகிய ஒளியைக்கொண்ட ஆபரணத்தைப் புனைந்த மார்பைத் தழுவ, நெஞ்சு எனும் இரும்பைக் கரைத்துக் கருது - (நினது) மனமென்னப்பட்ட இரும்பைக் கரைத்து எண்ணுதி எ—று.

வால் நகையே பூங்குழலாள் என் மார்பைச் சேர நீ நெஞ்சைக் குழைத்து எண்ணுதி என முடியும். உரைத்து என்னும் வினையெச்சம், வருவித்த பெறுவது என்பதின் முதனிலையோடு முடிந்தது, "செய்வி யென்வினைபுட் செய்வினை சிலவே" என்னும் இலக்கணக்கொத்து விதி

யால் நிரைத்தென்ன நின்றது. "நிரையாமாச் சேர்க்கு நெடுங்குன்ற நாட" என்னும் நாலடியார்ச் செய்யுளு மிது. நிரைத்தாற்போல எனப் பொருள் கூறில், மூகில் இரண்டாவதாம். பொதி என்பது, "பொதியிலே விளைகின்றது சந்தனப் பொதியி னதியிலே விளைகின்ற முத்தம்" என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுள்போல நின்றது. வேற்கண் ஒருசொல்; கந்த புராணத்தில் "கூற்றமன்ன வேற்கண்ணி" என வந்ததுமிது. [தன்னிலை தலைவன் சாற்றல்.] (௬௪)

வானண்ட ருண்டு வழங்குஞ்செவ் வாய்ச்சி மணிகறங்கு
மானண்டர் வேயிசை கேட்கப் பொறாளணை வாய்கவைத்த
கானண் டளையினி னந்தீனு முத்தினைக் காமரன்னந்
தானண்ட மென்றணைக் கும்மறைக் காட்டுறை சங்கரனே.

இ—ள்: கவைத்த கால் நண்டு அளையினில் நந்து ஈனும் முத்தினை- கவர்பட்ட காலையுடைய ஞெண்டினது அளையிற் சங்கு ஈன்ற முத்தை, காமர் அன்னம் அண்டந் தான் என்று அணைக்கும் மறைக்காட்டு உறை சங்கரனே - அழகையுடைய அன்னம் (தனது) முட்டையேயென்று அணைக்கின்ற வேதவனத்தில் வீற்றிருக்குஞ் சங்கரனே, வான் அண்டர் உண்டு வழங்குஞ் செவ்வாய்ச்சி - ஆகாயத்தில் வாழுந் தேவர்களது உணவாகிய அமுதைக் கொடுக்கின்ற சிவந்த வாயையுடைய (நம்) மாது, மணி கறங்கும் ஆன் அண்டர் வேய் இசை கேட்கப் பொறாள் அணை வாய்-(நும் மாட்டு வைத்த காதலால்) மணி ஒலிக்கும் ஏற்றையுடைய ஆயரது வேய்ங்குழல் (வெழுமினிய) இசையையுங் கேட்கப் பொறாளாய்ப் (பெரிது படருறுகின்றாள் அது தீர அவளைத்) தழுவுதிர் எ—று.

வானண்டர், திருக்கோவையாரில் "கருங்கண் ணனையறி யாமை நின்றோன்" என்பது போல நின்றது. வான் பெருமையுமாம். ஆன் ஏற்றுக்குமாதலைத் திருச்செந்திலந்தாதியில், "அங்கயிலையை யேய்ந்த தகையானைக்கு" என்பதனானறிக. காமர் காதலுமாம். தான் அசையுமாம். தானுக என்னினு மமையும். சங்கரனே அணைவாய் என்றமையிற் கருத்தடையடையணி. மறைக்காட்டு உறை சங்கரனே, ஞெண்டளையிற் சங்கு ஈன்ற முத்தை, அன்னம் அண்டம் என்று அணைக்கும், அதுபோலச் செவ்வாய்ச்சி மணியொலிக்கும் ஆனண்டரது வேயிசையையுங் கேட்கப்பொறாது மயலுறுகின்றாள், அம்மயலொழிய அவளைத் தழுவுதி; தழுவில், (நீ யின்றும் அயின்றறியாத) தேவாமிர்தத்தைத் தருவள் எனக் கூறலுமொன்று. அமிர்தத்தைச் செவ்வாயில் தருவள் என்பதுபடச் செவ்வாய்ச்சி யென்றாள். கடவுண்மாட்டு மானுடப்பெண்டிர் நயந்த பக்கத்தில் தலைவியோடணைய இறைவனை வருகவெனத் தோழி யிரத்தல். (௬௫)

சங்க மடங்கலை சூழ்மறைங் காடன் றடஞ்சிலம்பிற்
றுங்க மடங்கலை யன்னான் புரியுஞ்சொற் சூதையெண்ணேன்
பைங்க மடங்கலை நேரும் புறவடிப் பார்வைதக்கோர்
சிங்க மடங்கலை கற்பாரென் றார்பொற் சிலைநுதலே.

இ—ள்: சங்க மடங்கு அலை சூழ் மறைக்காடன் தடஞ்சிலம்பில் சிலை நுதலே - சங்குகளையுடைய மறியுந் திரைபொருந்திய கடல் சூழ்ந்த வேதவனத்திலிறைவரது பெருமையாகிய மலையில் வாழும் வில்லையொத்த நெற்றியையுடைய மாதே, துங்க மடங்கலை அன்னான் - உயர்ச்சியாகிய சிங்கத்தையொத்த (சயத்தையுடைய) தலைவர், பைங் கமடம நேரும் புறவடி கலை நேரும் பார்வை - பசிய கூர்மத்தைப் போலும் புறந்தாளையும் மானைப் போலுங் கண்ணையுமுடையாய், மடஞ் சிங்கத் தக்கோர் கலை கற்பார் என்றார் - அறியாமைகுன்றப் பெரியோர் சாஸ்திரங்களைப் படிப்பாரென (னென்னற்) சொல்லிவைத்தார், புரியுஞ்சொல் சூதை எண்ணேன் - அன்று சொல்லிய சொற்சூதைத தேற்றிலேன் (இன்று அவர் பிரிந்ததினாற் றேறினேன்) எ - று.

உயர்வுடை முயற்சியிற் கிளர்ந்ததினால், அன்னான் என்ற ஒருமை என்றார் என்ற பன்மையோடு மயங்கிற்று. திருவள்ளுவநாயனாரும் "எனைத் துணைய ராயினு மென்னாந்தினைத்துணையுந் - தேரான் பிறனில்புகல்" எனப் பான்மயங்கக் கூறியதையுணர்க. பிரிவு ஆறனுள் "ஓதலுந்தூது முயர்ந் தோர்மேன" எனத் தொல்காப்பியனார் கூறுதலின் இது உயர்ந்ததாயிற்று. விளியிரண்டில் ஈற்றது தலைவியைத் தோழி விளித்தது. மற்றது பாங்கியைத் தலைவன் விளித்தது. [கல்விகருதிப் பிரிவு தலைமகனானுணர்ந்த தோழி தலைமகட்குரைத்தல்.] (௯௯)

சிலைக்கோடு மேல்வைத்த கோற்றே னுடைந்ததண் டேறல்வயற்
றலைக்கோடு வேத வனப்பெரு மான்மலைச் சங்கரிதன
முலைக்கோடு பட்ட தழும்பான் சடில முடிமணியாங்
கலைக்கோடு வெண்பிறை பைச்செங்கை கூப்புதி கார்மயிலே.

இ—ள்: கார் மயிலே - கார்காலத்து மயில்போல்வாளே, சிலைக் கோடு மேல்வைத்த கோல் தேன் உடைந்த தண் தேறல் - மலைமுடிமேல் (ஈகள்) வைத்த கொம்பர்த் தேன்கூடு உடைந்ததனாலெழுந்த குளிர்ந்த தேன் வயல் தலைக்கு ஓடு வேதவனப் பெருமான் - கழனிக்கண் ஓடுந் திருமறைக் காட்டிற் பெரியவரும், மலைச் சங்கரி முலைக்கோடு பட்ட தழும்பான் - (இமய) மலையிலுதித்த உமாதேவியாரது தனக்கொம்பு பட்டதனாலாக, வடுவை யுடையவருமாகிய சிவனது, சடில முடி மணி ஆங் கலைக்கோடு

வெள் பிறையைச் செங்கை கூப்புதி - சடையானியன்ற முடிக்கு மணியா கிய கலையையுடைய வளைந்த வெள்ளிய பிறையைக் கைகூட்டு எ—று.

உடைந்த சண்டேறலும் கோடுபட்ட தழும்பும், கல்லாடத்தில், "தேவர்கோமான் சிறையரி புண்ணுக்காற்றாது" என்பதிற் சிறையரி புண்ணுக்கு என்பது போல்வன. ஆட்டிய கரும்பும் இது. புணர்ச்சிக் களிப் புடைமைபற்றி நகையாடுவாள் கார்மயிலே யென்றாள். [பிறைதொழு கென்றல்.] (௬௭)

காரண னோமத் தலைவே திகைமறைக் கானப்பரி
பூரண னோமத்த மானவன் வில்லிடம் பொன்வெள்ளிமா
வாரண நோமத்த வாரணங் காத்திடு மாழிப்புவி
பாரண னோமத்த வேணியைத் தாங்கிய பால் விடையே.

இ—ள் காரணன் - (சகத்துக்கு நிமித்த) காரணரும், ஓமத் தலை வேதிகை மறைக் கானப் பரி பூரணன் - யாகத்துக்குரிய தலைவேதிகையை யுடைய வேதாரணியத்துப் பரிபூரணரும், ஓம அத்தம் ஆனவன் - பிரண வப்பொருளானவருமாகிய சிவனது, வில் பொன் - தனுப்பொன் (னாகும்),- இடம் வெள்ளி - தானம் வெள்ளி (யாகும்), மா ஆரணம் - குதிரை வேத (மாகும்), மத்த வேணியைத் தாங்கிய பால் விடை - உன்மத்தம் பூவை யணிந்த சடையையுடைய (அச்) சிவனைப் பரித்த வெள்ளையேறு, நோம் மதவாரணங் காத்திடும் ஆழிப் புவி பாரணன் - (முதலையால) நொந்த மத யானையைக் காத்த கடலாற் சூழப்பட்ட பூமியையுண்ட மாயவன் எ - று.

ஓ சிறப்புப்பொருளில் வந்தது. இக்கவி "ஔவையைக் கிழவன் வயங்கு தார் மாணகலந் - தையலாய் நீயின்று நல்கினை - நல்காயே ற் - கூடலார் கோவோடு நீ யும்படுதியே - நாடறியக் கௌவை யொருங்கு" என்பது போல வந்ததனாற் பிரிந்துவழீஇயதன்றென்க. (௬௮)

பாலம் பகவன் மயிலுரைக் கோவியற் பாவைபங்கன்
ஞாலம் பகவன் மருப்பினிற் கீன்றிடு நாரணனுங்
கோலம் பகவ னவின்மறைக் காடன் குருஉச்சடில
மேலம் பகவ னமையாண் டருளுவன் மேதகவே.

இ—ள்: பால் உரை அம்புக் கோ அகவல் மயில் இயல் பாவைபங்கன் - பாலையொத்த சொல்லையும் பாணத்தை யொத்த கண்ணையும் நடித்தலைக் கொண்ட மயிலை யொத்த இயலையுமுடைய உமாதேவியைப் பாகத்திலுடை யவரும், ஞாலம் பக வல் மருப்பினில் கீன்றிடுங் கோலம் ஆம் நாரணன் — பூமிபிழிய வலிய எயிற்றாற் கிழித்த பன்றியாகிய மாயவனும், பகவன்

நவில் மறைக்காடன் - பிரமனுந் துதிக்கும் வேதவனத்தை யுடையவரும், குரூஉச்சடில மேல் அம் பகவன் - (மின்) நிறத்தைக்கொண்ட சடையின் மேல் நீரைத் தரித்த செல்வருமாகிய சிவன், மேதக நமை ஆண்டு அருளுவன் - மேன்மைதக எம்மையும் அடிமைக் கொண்டருள்வன் எ-று. (௯௯)

தகர நகரமுன் றுமைந் தெழுத்தர் தறுகண் முகப்
புகர னகரத் தரவேழுப் போர்வையர் பொங்கனலம்
பகர நகரத்தர் வேதங்கள் பூசித்த பான்மைபெற்ற
சிகர நகரத்த ரெற்களிப் பார்முத்திச் செந்திருவே.

இ—ள்: தகர நகர முன் ஆம் ஐந்து எழுத்தர் - தந்நகரமுதலியபஞ்சாக்கரத்தையுடையவரும், தறுகண் முகப் புகர் சரத் தர அன வேழப் போர்வையர் - மறமாகிய முகத்தையுங் கபிலநிறத்தையுந் துதிக்கையையும் வலிமையையுமுடைய அந்தக்கயாசுரனது தோலையுடையவரும், பொங்கு அனல் அம்பகர் - பொலிந்த அக்கினிக்கண்ணையுமுடையவரும், அநகர் - மலரகிதரும், அத்தர் - (சகத்துக்குப்) பிதாவானவரும், வேதங்கள்பூசித்த பான்மை பெற்ற சிகர நகரத்தர் - வேதங்களருச்சித்த தன்மையைப்பெற்ற முடி பொருந்திய திருக்கோயிலையுடையவருமாகிய சிவன், எற்கு முத்திச் செந்திரு அளிப்பார் - (நாயிற்கடைப்பட்ட) எனக்கும் மோக்கலக்குமியைத் தந்தருள்வர் எ-று.

திருவாசகத்தில் "நமச்சிவாய வாஅழ்க" எனவும் தேவாரத்தில் "நற்றுணையாவது நமச்சிவாயவே" எனவும் அருளப்பட்டமைபற்றி நகரமுன்றுமைந்தெழுத்தர் என்றார். (௧௦௦)

மறைசையந்தாதியுரை

முற்றிற்று.

௳

# பிழையும் திருத்தமும்.

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 3 | தரும் பரவைக்கண் | கரும்பரவைக்கண் |
| 6 | 24 | ணவிராழி | நவிராழி |
| 7 | 9 | ஒரு புற்றிலும் | ஒரு புற்றில் |
| | 24 | இதைய | இதய |
| 8 | 30 | (கூப்பிக்) | (கூம்பிக்) |
| | 34 | பாடரண் | பாடாண் |
| 9 | 30 | யெண்ணெ | யெண்ணே |
| 10 | 21 | தாக்கினுற் | தாங்கினுற் |
| | 23 | வகுதி | வதிகு |
| 12 | 11 | ஆர வீர அயில் | அர வீர அயில் |
| | 23 | ஆடில் | ஆவில் |
| 13 | 3 | பொன்றுவி | பொன்றுவி |
| | 7 | மாதங்க | மாதங் |
| | 10 | கச்சையையும் | கச்சையும் |
| | 17 | தாபத்தை | ஆபத்தை |
| 14 | 9 | யாப்புறலின்மையாலும் | யாப்புறவின்மையாலும் |
| | 11 | யானண்ணி | யாநண்ணி |
| | 12 | சரணடைந்ததே | சாண்டந்ததே |
| | 19 | வெய்யில் | வெயில் |
| | 21 | ஐ யோத்திக்கு | ஐ யோதிக்கு |
| | 25 | சொன்றாக | யொன்றாக |
| 15 | 4 | நாடு அகன் | நாடகன் |
| | 25 | கயம் மேல் | கயமேல் |
| | 31 | கரடக் கயம் | கர டக்கயம் |
| 16 | 15 | புண்டிரிக | புண்டரிக |
| 19 | 6 | டெஞ்சியயர் | டெஞ்சிய யா |
| 21 | 10 | கார் முகந்தர | கார்முக தா |
| | 16 | லசைந்த | லமைந்த |
| | 21 | என் | என்ன |
| 22 | 20 | கிரைகிறை | நிரனிறை |
| | 32 | முகத்தையுடைய | முத்தையுடைய |
| 23 | 34 | கொத்துகளை | கொத்துக்களை |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 24 | 10 | தவத்தைச | தவத்தைச் |
| | 15 | (சொல்லில்) | (சொல்லில் |
| | 16 | எளிதிலடைவீர் | எளிதிலடைவீர்) |
| | 19 | னண்ணுளோ | னண்ணுளே |
| | | புலர்ந்து | புலந்து |
| | 21 | "கோவீற்றிருந்த | கோவீற்றிருந்த |
| | 22 | நாவீற்றிருந்த | "நாவீற்றிருந்த |
| 26 | 21 | செவ்வி அணை | செவ்வி அண் |
| 27 | 5 | உறுப்புகளிற் | உறுப்புக்களிற் |
| | 33 | பதடத்தலை | படைத்தலை |
| 28 | 4 | உழவுசால் | உழவுச்சால் |
| | 32 | எனவும் | எனப் |
| 30 | 19 | ஓலமென்றார். அமரராகவும் | ஓலமென்றார் அமரர்; ஆகவும் |
| | 24 | ரஞ்சனை | ரஞ்சநை |
| 31 | 2 | நையாது ஒழியாய் | நையாதொழியாய் |
| | 21 | எனவுங் | எனக் |
| 32 | 24 | சுரக்குங் - காட்சியாலே | சுரக்குங் காட்சியாலே |
| 33 | 16 | விடுப்பதுவே". இது | விடுப்பதுவே" என்பது |
| | 28 | கூறியவற்றோ | கூறி அவற்றோ |
| | 29 | ஏயாம் உகார வோகார | ஏ யாம் - உகரவோ கார |
| | 37 | றென்னக் | றெனக் |
| 34 | 19 | (மெல்லிய | (மெல்லிய) |
| 36 | 9 | இமைப்பில் | இமைப்பில |
| | 12 | கருவி யின்மையிற் | கருவி யன்மையிற் |
| | 13 | இயமன் | இயன்மா |
| | 24 | வணியும் | வணி |
| | 26 | வம்பகச் | வம்பகர் |
| 37 | 18 | வந்து | வந்த |
| 38 | 18 | நள் | கள் |
| 39 | 35 | குறையால் | குறியாள் |
| 40 | 17 | பவனத்தொடு | பவளத்தொடு |
| | 18 | முந்நீர்படைத்தல் | முந்நீர் - படைத்தல் |
| | 35 | ஏண்டு | ஈண்டு |
| 41 | 9 | வராக | வராக |
| | 19 | இலக்மி | இலக்குமி |
| | 24 | என்னக் | எனக் |
| | 32 | நிற்கின்றன | நிற்கின்ற |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 42 | 4 | அடிமைக் கொண்டு | அடிமைகொண்டு |
| | 5 | என  ை  த்து | எனவைத்து |
| 43 | 27 | அநு (பவ | (அநுபவ |
| 44 | 25 | அடிமைக் கொண்ட | அடிமைகொண்ட |
| | 26 | மெஞ்ஞானச் | மெய்ஞ்ஞானச் |
| | | மெஞ்ஞான | மெய்ஞ்ஞான |
| | 31 | கெடுவிப்பவர் | கெடுவிப்பார் |
| | 32 | திரிகை | திரி |
| 45 | 10 | உண்டான் | உண்டோன் |
| | 16 | (அவளோடு நின்மாட்டுள்ள) | (அவளோடு ஒத்தற்கு) நின்மாட்[டுள்ள |
| | 31 | உழவு சாலில் | உழவுச்சாலில் |
| 46 | 33 | புரந்தநனன் | புரந்தரனன் |
| 47 | 11 | போயினரோ | போயினரோ? |
| | 12 | சொல்லும்? | சொல்லும் |
| | 13 | நின்றது. | நின்றது, |
| | 35 | முற்றுகள் | முற்றுக்கள் |
| 48 | 6 | ொ  ான் | பொன் |
| | 19 | அரம்பயங் | அரம்பையங் |
| | 20 | சடில | சடிலச் |
| 49 | 7 | பருந்துக்கள் | பருந்துகள் |
| | 25 | பொருளுரைத்த | பொருளுரைத்தமையானும் |
| | 30 | கோடீசுர | கோடீச்சுர |
| 50 | 5 | பிருதுவி | பிருதிவி |
| | 9 | கோளி | கோழி |
| | 18 | யொன்றை | யொற்றை |
| | 30 | சிவனுக்கும் | சிவனுக்குப் |
| 51 | 2 | னஞ்கி | னஞ்சி |
| 52 | 2 | சிதாரி | சிதாரி |
| | 10 | மாலேயூர் | மாலேயையூர் |
| | 14 | விநாயகன் மேற்று | விநா யகன்மேற்று. |
| | 26 | நிரைத்தாற் போல | நிரைந்தாற் போல |
| 53 | 2 | நிரைத் தென்ன | நிரைத்தென |
| | 5 | றனு சந்தனப் | றன சந்தனம் |
| | | விளேகின்ற | விளேகின்றன |
| | 28 | கருத்தடை | கருத்துடை |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 54 | 9 | உயற்சி | உயர்ச்சி |
| | 30 | (சகள்) | (சக்கள்) |
| | 34 | பட்டதனுலாக, | பட்டதனுலான |
| | 35 | கலைக்ோோடு | கலைக்கோடு |
| 55 | 12 | பாாணை | பாரணை |
| | 15 | ஓம | ஓம் |
| | 20 | மதவாரணங் | மத்த வாரணங் |
| | 23 | நல்கிளை - | நல்கிளை |
| 56 | 5 | அடிமைக்கொண் டருள்வன் | அடிமைகொண்டருள்வன் |

77 - ம் கவியி னுரையில், மறைசையில் மூர்த்தி யென்னுந் தொடரின்முன் பின்வருவதைச் சேர்த்துக்கொள்க.

மூரிக் குமாரனைத் தந்தான் - (சரண்புக்க தேவர் துன்பங் களைதற் பொருட்டு அசுரரை யழிக்கத்தக்க) வலிமை படைத்த முருகக்கடவுளை உதவியவரும்,



திருவான்மியூர்

# கலித்துறை அந்தாதி



பேராசிரியர்

**E. S. வரதராஜய்யர், B.A,**

நூலகர்

டாக்டர் சாமிநாதையர் நூலகம்

திருவான்மியூர் சென்னை-41.

இந்நூல், திருச்சி பிஷப் ஹீபர் கல்லூரியிலும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும் பேராசிரியராகப் பணியாற்றியவரும், தொல்காப்பியம் பொருளதிகாரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவரும், இலக்கிய வரலாறு, உழவெழுபது, நேர்எழுபது, குமரகுருபரர் இரட்டைமணி மாலை, குமரகுருபரர் புகழ்மாலை முதலியவற்றை இயற்றியவரும், அண்மையில் கம்பராமாயணம் யுத்தகாண்டத்துக்கு விரிவுரை வரைந்தவரும், சென்ற 19 ஆண்டுகளாக இந்தியன் எக்ஸ்பிரஸ், ஹிந்து முதலிய செய்தித் தாள்களுக்கு நூல் விமர்சகரும், திருவான்மியூர் டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்தின் நூலகருமான திரு. E. S. வரதராஜய்யர், B.A., அவர்களால் இயற்றப்பெற்றுத்,

திருவான்மியூர் மருந்தீச்வரர் தேவஸ்தானத் தருமகர்த்தரும், பிரபல வழக்கறிஞரும் ஆன திருவாளர் T. S. சாமிநாதையர் அவர்கள் M.A.,B.L., அவர்களின் பொருள் உதவி கொண்டு,

சென்னை, தங்கசாலை
எண் 298, குமரன் அச்சகத்தில்
பதிப்பித்து வெளியிடப்பெற்றது.

## திருவான்மியூர்

தொண்டை நாட்டுத் தலம். தேவாரப் பாடல் பெற்றுள்ளது. கோயில் கொண்டுள்ள இறைவன் பெயர் மருந்தீச்வரர். தேவி திரிபுர சுந்தரி. இந் நகரில் தியாகராசப் பெருமான் நடிக்கும் பதினெட்டுத் திருநடனக் காட்சி ஒப்புயர்வற்ற தொன்றாகும். மார்க்கண்டேயர் கட்டளைப்படி வான்மீகி முனிவர் இத் தலத்தில் தவம் புரிந்து இறைவன் திருக்கோலம் காணப்பெற்றாராதலின், அவர் பெயராலேயே திருவான்மியெனப் பெற்றது என்பர்.

## தீர்த்தங்கள்

காம நாசினி, ஜன்ம நாசினி, ஞான தாயினி, பாப நாசினி, மோட்ச தாயினி.

மருந்தீசப் பெருமான் மேற்கு முகமாக எழுந்தருளியுள்ளார். அரக்கர்களால் பீடிக்கப்பட்ட சூரியபகவான் அப் பீடை நீங்க, அந்திப் போதில் வந்து வழிபடுவதற்குதவியாகவே, இவ்வாறு கோலம் கொண்டார் என்ப. பெரும் புகழ்வாய்ந்த ஸ்ரீ அப்பைய தீட்சிதர் இத் தலத்தை வழிபட்டனர் என்ப. அவருடைய உருவச் சிலையையும் கோயில் உட்புறத்தில் காணலாம். மற்றும் இத் தலத்தைப்பற்றிய பல விவரங்களை அச்சிடப்பெற்றுள்ள தல வரலாற்றிற் காண்க.

## ஓர் குறிப்பு

சில ஆண்டுகட்கு முன் இந் நூலாசிரியற்கு வலது கரத்தில் ஒரு கடுமையான வலி தோன்றிப் பல மாதங்கள் தொந்திரவளித்தது. அப்போது ஓரிரவில் ஆசிரியர் குலதெய்வமான திருச்செந்தில் சண்முகப் பெருமான் கனவில் காட்சி தந்தருளித் திருநீறு கொண்டு கரத்தாற் தடவ அவ் வலி உடனே மறைந்தது. மறைந்தவுடன் இயற்றியன இதில் சேர்க்கப்பட்டுள்ள மூன்று பதிகங்களும். இப் பதிகங்களையும் அன்பர்கள் படித்துப் பயன் பெறுவாராக.

# அணிந்துரை

என்னுடைய ஆசிரியப் பெருந்தகை முதுபெரும் புலவர் பேராசிரியர் உயர் திரு. இ. எஸ். வரதராஜ ஐயர் அவர்கள் திருவான்மியூர் மருந்தீசர் மீது புதுவதாகப் புனைந்து சூட்டியிருக்கும் கலித்துறை யந்தாதி என்னும் இப் பாமாலையை முழுதும் படித்துப் பேருவப்பும் பெருவியப்பும் ஒருங்கே எய்தினேன். பிறவி நோய்க்கு மருந்தான பெருமானைப் பக்தியுடன் பாடித் துதித்துப் பரவுவதற்கு ஒப்பற்ற சாதனமாய் விளங்கும் இந் நூல் எளிதில் மனப்பாடம் பண்ணுவதற்கு வாய்ப்பான கலித்துறைப் பாவகையில் அமைந்திருப்பதாலும், மனப்பாடம் செய்வதைத் தொடர்ச்சியாக நினைவில் வைத்துக் கொள்ளுவதற்கு ஏற்றவாறு அந்தாதித் தொடையில் அமைந்திருப்பதாலும், திருவாசகத்தைப் போல நாள்தோறும் சிவ பெருமானைத் தோத்திரம் செய்வதற்குரிய அழகிய திருப் பாட்டுக்களைப் பெற்றிருப்பதாலும், எவரும் படித்தவுடனே எளிதில் பொருள் விளங்கிக் கொள்ளுமாறு செம்பாகமான நடையில் அமைந்திருப்பதாலும் பெருங் களிப்புக் கொண்டேன். உரை நடையே பெருகி வளர்ந்துவரும் இக் காலத்திலும் இறைவனைத் தோத்திரம் செய்வதற்கு ஏற்றது பாட்டே யாகலான், இப்படிப்பட்ட மிக அருமையான தெய்வப் பாமாலையை ஆசிரியரவர்கள் மூன்றே நாளில் இயற்றி முடித்தார்கள் என்பதைக் கேட்டுப் பெரு வியப்புற்றேன்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் முதன்மைத் தமிழ் விரிவுரையாளராகப் பல்லாண்டுகள் பணியாற்றியுள்ள இப் பேராசிரியவர்களிடம் யான் 1954 —57 ஆம் ஆண்டுகளில் மாணவனுயிருந்து பாடங் கேட்டதுடன் நெருங்கிப் பழகும் பேறும் பெற்றேன். பேராசிரியரவர்கள் அடிக்கடி தில்லைக் கூத்தப் பெருமானைத் தரிசித்து வருவதற்காக அண்ணாமலை நகரிலிருந்து சிதம்பரம் செல்வார்கள். யானும் அவருடன் பல முறை சென்றிருக்கிறேன். திருக் கோயிலுக்குச் செல்லும்போதும், இறைவனைத் தரிசிக்கும்போதும் அவர்கள் நினைத்தமாத்திரத்தில் பல பாடல்களைப் பாடியதைக்கேட்டு இன்புற்றிருக்கிறேன்.

பேராசிரியரவர்கள் தம்முடைய நாட் குறிப்பேடுகளில் எல்லாம் தாமியற்றியுள்ள தமிழ்ப் பாக்களையே எழுதியுள்ளார்கள். அவற்றுட் பெரும்பாலன இறைவனின் திருப்புகழைப் பாடுவனவாகவே உள்ளன. இறைவனைப்பற்றி ‘பேசாத நாளெல்லாம் பிறவா நாளே’ என்ற கொள்கையுடைய பேராசிரியரவர்கள், உயிரீரும்வாளாகிய ஒவ்வொரு நாளிலும் செய்யத்தக்க சிறந்த செயல் செம்மேனி எம்மானின் சீர்மையைப் பாடுவதேயாகும் எனக் கொண்டிருக்கிறார்கள். கூற்று

தைத்த சேவகனின் சேவடியைத் தினந்தோறும் சிந்தை செய்யும் அடியார்களைக்கண்டு, வாழ்நாளின் காலத்தைக் கணித்துவரும் காலன் கதிகலங்குவான் என்று ஆன்றோர்கள் அருளியிருக்கின்றனர்.

பேராசிரியர் அவர்கள் தமிழில் நிறை புலமை எய்தியவர்கள்; ஆங்கிலத்திலும் வல்லவர்கள். தமிழுக்கு அளப்பிலாத தொண்டுகள் ஆற்றியிருக்கின்றனர். தமிழ் லெக்சிகனில் பதிப்பாளராகச் சில ஆண்டுகள் பணியாற்றியிருக்கிறார்கள். முப்பதாண்டுகளுக்கு மேலாக ஆசிரியப்பணி புரிந்திருக்கின்றனர். ஐந்நூறு புத்தகங்களுக்குமேல் மதிப்புரைகள் வரைந்திருக்கின்றனர். பல நூல்களை எழுதி வெளியிட்டிருக்கின்றனர் அவற்றுள் தமிழ் இலக்கிய வரலாறு, (Elephants in Tamil Land) தொல்காப்பியம், பொருளதிகாரத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பு முதலிய அரிய ஆராய்ச்சி நூல்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. தமிழிலக்கத்திலேயே ஒப்பற்ற பெருங் காப்பியமான கம்பராமாயணத்தின் கடைசிப் பகுதியான யுத்த காண்டத் திற்கு ஒப்புயர்வற்ற உரையும், திறனாய்வும், ஆராய்ச்சியுரைகளும் எழுதிப் பெருந்தொண்டு செய்திருக்கிறார்கள். அந்த உரையை நான்கு பகுதி களாகத் திருவான்மியூர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூலகம் வெளியிட்டுள்ளது.

பேராசிரியரவர்கள் இதற்கு முன், குமரகுருபரர் இரட்டை மணிமாலை குமரகுருபரர் புகழ்மாலை, உழவெழுபது, ஏரெழுபது முதலிய பாமாலை களை வெளியிட்டிருக்கிறார்கள். இன்னும் அச்சில் வராத பாக்கள் ஆயிரக் கணக்கில் உள்ளன. அன்பர்களின் ஆதரவுமூலம் அவையும் விரைவில் வெளிவந்து பலர்க்கும் பயன்படுமாறு இறைவனருள் கிட்டும் என்று நம்புகிறேன்.

இத் திருவான்மியூர்க் கலித்துறை யந்தாதியுடன் முருகப்பிரான்மீது பாடப்பெற்றுள்ள 'மயில் பதிகம்', 'வேல் பதிகம்', மயில் பதிகம்' ஆகியனவும் அச்சிடப் பெற்றுள்ளன. மயில்மீது வேலாயுதத்துடன் முருகனது காட்சியை விரும்புவோருக்கு, முருகனை அழைக்கும் இப் பாட்டுக்கள் பேருதவியாகவிருக்கும்.

பேரும் புகழும் வேண்டாத இம் முதுபெரும் புலவரின் நூல்களைத் தமிழ் மக்கள் வாங்கிப் படித்துத் தமிழின்பத்தை நுகர்ந்து இன்புறு வார்களாக.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை. 27—2—'64

மு. சதாசிவம்.

உ

ஸ்ரீ மருந்தீஸ்வரர் துணை

# திருவான்மியூர்
# கலித்துறை அந்தாதி

விநாயகர் துதி

சீராருஞ் செல்வத் திருவான்மி யூரிற் றிகழதருமக்
காராருங் கண்டன் மருந்தீசன் மீது கலித்துறை நூல்
நேரார்க் கசனி நினைவார்க்குச் சீனி திருமுடியென்
பேரான் விகடன் மலர்த்தாள் உளங்கொண்டு பேசுவனே.

பூமகளிர் நாளும் புரிந்தமரும் வான்மியூர்
மாமருந்தந் தாதி வகுத்திடுவேன்—சோமன்
நதியணியும் முக்கண்ணன் நால்வா யரன்சேய்
துதிக்கையனை யென்னகங் கொண்டு.

மருந்தீசர் துதி

விருந்தாக வந்தேன் விமலாவுன் ஊருக்
கரந்தைப் பவமருந்தே ஐயா—பெருந்தகாய்
முப்புரப் பேரழகி மொய்ம்பனையும் வான்மியூர்
அப்பனே செய்க அருள்.

### திரிபுரசுந்தரி துதி

அன்னாய் திரிபுரை அம்பிகை யேதிரு வான்மியென்னும்
பொன்னூர் நகரில் பொருந்தும் மருந்து புகல்மருந்தே
என் நாவில் இன்கவி கொண்டுன்னைப்பாடுவ தென்கடன்வான்
மின் நாண் மருங்குல்யான் வேண்டுவ தீவதுன் மெய்க்கடனே.

### யோகேசர் துதி

விடையரசை வாகனமா வெண்கொடியாக் கொண்ட
கொடையரசே வான்மியூர்க் கோவே—முடியா
வடிவுடையாள் மேவும் அழகனே யுன்றன்
அடி பணிவார்க் குண்டோ வல் லல்.

### முத்துக்குமரன் துதி

நின்று பணிமின் நினைமின் அவன் சீரை
நன்றவன் றன் நாமம் நவிலுமின்—என்றென்றும்
வித்தமா யுள்பெருகும் மெய்ப்புகழார் வான்மிநகர்
முத்துக் குமரனடி முன்.

### தக்ஷிணாமூர்த்தி துதி

முன்னாளில் நால்வர்க்கு மோனத்து மெய்ப்பொருளை
யன்னார் தெளிய அறிவுறுத்தப்—பொன்னாரும்
மேனியனைத் தென்முகமா வீற்றிருக்கும் மெய்ப்பொருளை
நீ நினைதி நெஞ்சே நிதம்.

### சண்டேசர் துதி

ஈசன் நின் மாலியத்தை யேந்திச் சிரத்தணியும்
நேசன்சண் டேசப்பேர் நின்மலனைப்—பாசத்
தளையறுத்தோர் போற்றும் தகுதிசால் தேவை
யுளத்திருத்த வில்லை யுளைவு.

## நூல்

பேசிற் பெருகும் புகழ்கொண்ட வான்மிப் பெருநகரான்
நேசர்க்குத் தன்னையும் நல்கிநின் றேயிந் நிலவுலகில்
மாசற்ற வாழ்வும் உதவிநின் றம்மையும் வானுலகில்
தேசுறும் வீடும்அளிக்கும் மருந்தீசத் தெய்வதமே. 1

தெய்வம் பலவென்பர் காரென்பர் வெண்மை தெரிகவென்பர்
மைவந்த நீல வருணமென்பர் பாரோர் வடிவுநிறம்
வைவந்த சூலப் படைக்கரன் வான்மியூர் வாசனுக்கென்
றெவ்வகைப் பேரும் உருவமு மின்றென்ப தெண்ணிலரே. 2

எண்ணாருன் நாம மெழுதாருன் வான்புக ழீசவுனைக்
கண்ணாரக் கண்டு களியார் தலைவணக் கம்புரியார்
பெண்ணாரும் பாக மருந்தீச வான்மிப் பெருநகரோய்
மண்ணாகு மிம்மட மையர் நிலப் பொறை மற்றில்லையே. 3

இல்லாமை துன்ப மிழிவுல வாமிடி யெள்ளிரவு
பொல்லாப் பிணிகள் பகைநுன் மரணம் புலப்பறுவல்
கல்லாமை யாவும் திருவான்மி யூரிருங் காவலவ
அல்லாருங் கண்டநின் சீர்பக ராத வறிவிலர்க்கே. 4

அறிவாற் புகழ்கொண்ட வாதி கவியென் றவிர்புலத்தின்
செறிவாற் சிறந்தவன் வான்மீக நாதன் திருப்பெயர்கொள்
பொறிவா ரிசமகள் என்றென்றும் வாழூர்ப் புனிதசைவ
நெறியாளர் போற்றும் திரிபுரை பாகங்கொள் நேயத்தனே. 5

நேயத்தின் நின்னை நினைவார் தமக்கு நிதிபலவும்
ஆயுளும் நோய்மிடி யற்றநல் வாழ்வும் அறிவுநிந்த
தூயநல் மக்களும் கீர்த்தியு மீந்து தொடர்ந்துழற்றும்
மாயப் பிறவி தனைப்போக்கும் வான்மியூர் வானவனே. 6

வானாளும் செல்வம் துரும்பா மதிப்பனிம் மண்ணரசும்
ஆனா நிதியமும் வேண்டு கிலேனுன் னடியமர்ந்து
கானாருங் கொன்றைய நின்புகழ் பாடிக் களிக்குமந்தத்
தேனாரும் வாழ்க்கை நினதருள் நோக்கில்வந் தெய்திடினே. 7

எய்தாருன் கோயி லிடத்தே வலம்வந் திடத்துணியார்
கய்தான் தலைவைத்துக் கண்ணீர் அரும்பிக் கசிந்துருகார்
நெய்தான் அவிர்தரும் சூலத்த வான்மித் திருத்தலத்தாய்
பொய்தான் விடுத்திலர் என் செய்வர் காலன் புகுதரினே. 8

புகுவது மூப்புத் தருக்கு மிளமையும் போயதினி
மிகுவது நோயு முலவாத் துயரு மெனி லினிமேல்
தருவது வான்மித் தலத்துறை நின்னடித் தாழ்வதுகாண்
நருதலை பூண்டொளிர் முப்புரச் செல்விதன் நாயகனே. 9

நாயகன் மூன்று தலத்துக்கும் வான்மித் தலத்தணைந்து
சாயகன் தன்னை யெரித்தோன் பிரமன் தலைதடிந்தோன்
மாயகன் மங்கள் தமைமாற்றி யின்ப மருவச் செய்வோன்
தூயவர் நெஞ்சுறை தோன்றல் புரமூன் றழித்தவனே. 10

நவத்தாற் சிறந்தநல் வான்மீகன் பேர்கொள் தலமதில்வாழ்
சிவத்தா னுவினைத் திரிதரை சேர்ந்து திகழொளியைப்
பவத்தா னிகழிடர்ப் பாட்டினைப் போக்கும் பராபரனை
நவத்தாண்ட வம்செயும் பால்வண்ண னைத்துதித் தாடுமினே. 11

ஆடுமின் காலுயர்த் தங்கைகள் கொட்டி யகமகிழ்ந்தே
பாடுமின் தோத்திரம் பற்பல வெம்சொல்லிப் பண்ணவனைக்
கூடுமின் நல்லடி யார்கூட்டம் கூடிக் குழைந்துமனம்
சூடுமின் சென்னியில் வான்மியூ ரீசன் துணைப்பதமே. 12

துணையென் றுளங்கொள்ளும் தாய்தந்தை சோதரர் சுற்றமெல்லாம்
பணையென் றறைதரு தோளிபங்காள பரிந்துதவார்
கணையொன்றில் முப்புரம் தீய்த்தனை வான்மியூர்க் கண்ணுதல்நின்
இணையொத்த பாத மலரன்றி யாதர வேதெனக்கே. 13

கேடு பயக்கும் வழிகளை யேநாடிக் கெட்டலைவேன்
பாடிப் பணியத் துணிகிலென் நின்சிறப் பார்புகழை
மாடங்கள் ஓங்கி வளர்வான்மி யூர மகிழ்ந்துனையே
நாடும் மதியினை யீந்தருள் போகந் தருமருந்தே. 14

மருந்தாகி நிற்பை பவப்பிணி கட்குமை வாமத்தனே
பொருந்தாரை வாட்டிப் புகழ்வார் தமக்கருள் புண்ணியனே
கருந்தா தெனுமென் உளம்திருந் தச்செய்க கண்ணுதலே
இருந்தா மரைமகள் வாழ்வான்மி யூரில் இருப்பவனே. 15

இருப்பது பொய்யுயிர் போவது மெய்யென் றெனது நெஞ்சே
தருப்பம் ஒழித்திட் டுனை நீ யுணர்ந்தொரு தையலிடம்
விருப்புடன் கொண்டருள் வான்மியூர் வாழும் வியன் மருந்தின்
திருப்பதம் போற்ற விலையாகும் எவ்வகைத் தீமையுமே. 16

தீப்பட முப்புரம் புன்னகை செய்து திரிபுரைதன்
பூப்பொரு மேனி புணர்குவை வான்மிப் புரியுறைவாய்
பாப்பினை நேரும் புலன்மயக் கோட்டிப் பரிந்தருளாய்
மூப்பற நின்ற மருந்தேநின் தாளென் முடிக்கணியே. 17

அணியேது நின்பதப் போதன்றி நான்மறை யாரியனே
பணியேது நின்பதச் சேவைப் பணியன்றிப் பான்மதியத்
துணியேந்து செஞ்சடை வான்மிப் பெருநகர்த் தொன்மையபொன்
மணியே திரிபுரை வாமத் தமர்ந்திய வான் மருந்தே. 18

வான்மதி தன்னுடன் வானதி கொண்ட மதிச்சடையோய்
தேன்மலி கொன்றைய வேழத் துரிவைகொண் டேமகிழ்வாய்
சூன்முகி லென்ன வருள் பொழி வான்மிச் சுடருருவே
ஆன்மத் தொகுதிகட் காநட மாடிடும் அற்புதனே. 19

அற்புதன் வான்மி யணிநக ராதி யசலமருள்
நற்பரை வாமத் தமர்த்திநின் றேன்சிவ சங்கரனும்
விற்பனர் போற்றும் விரகன் மலைவில்லன் வேற்கையனைப்
பொற்புறத் தந்தவன் நாகத் தணிகொண்ட பூரணனே. 20

பூரணன் மூன்று புராந்தகன் சூலப் பொரு படையன்
ஆரணம் இன்னும் அறியாத வன்னில் வகிலமுதற்
காரணன் வான்மியூர்க் கண்ணுதல் அன்பக் கணி தருவோன்
வாரணி கொங்கைத் திரிபுரை சேர்ந்துறை வாமத்தனே. 21

மத்துறு தண்டயிர் ஒப்பக் கலங்கி மனவமைதி
நித்தலு மின்றித் திரிவேனை வஞ்சக நீர்மையனை
அத்த நெறிப்பட நின்றுன் மலரிடத் தன்புகொளச்
சித்த மகிழ்ந்தருள் வான்மிப் பெருநகர்ச் செய்யவனே. 22

செய்யார் கழனித் திருவான்மி யூருகந் தேற்றவனே
பையா ரரவப் பணிபுனை வோய்கிரு பாகரனே.
ஐயா அடியவன் யான்படு மின்னல் அகற்றியருள்
கையா றிரண்டுடைக் கந்தற் பயந்திட்ட கண்ணுதலே. 23

கண்ணுரைக் கண்டுனைக் காதலி யார்தம் கரங் குவியார்
பண்ணுர் துதிகொண்டு பாடு கிலார்நின் பதம் பணியார்
நண்ணுர்க்குச் சேயன் அடியார்க்கெளியவன் ஆகுமுனை
எண்ணுர் திருவான்மி யூரிறை வாவிவர்க் கென்சொல்வதே. 24

சொல்லார் கழனிகள் சூழ்வான்மி யூரெனும் தொல்பதிக்கண்
நல்லாள் திரிபுரை வாமத் தமர விந் நானிலம்வாழ்
எல்லா வுயிர்க்கும் அருள்வாள் திருமேனி யேற்றமர்ந்த
மல்லாரும்தோள பிறவிப் பிணிக்கு மணிமருந்தே. 25

மருந்தாகித் தப்பா மரமன்ன செல்வ மழவிடையாய்
பொருந்தாரைச் செற்ற விறலோய் அடியார் புகலிடமே
விருந்தாக வந்தவென் புன்மொழி யேற்று விரைந்தருளாய்
பிருந்தா வனத்தனும் போற்றிடும் வான்மிப் பெருஞ்செல்வனே. 26

செல்வானி னின்றும் மாரி வழங்கும் திருவான்மியில்
நல்வாழ்வு கொண்டொளிர் முப்புரச் சுந்தரி நாயகனே
பல்வா னவருய நஞ்சேற்ற கண்ட பரவுமறை
சொல்வான் மதிநதி செஞ்சடை மீக்கொண்ட சுந்தரனே. 27

சுந்தர உன்பெய ரோதியுன் பாதத் துணை பணிந்து
சந்ததம் நீயுறை கோயில் தனைவலம் வந்தன்புட ன்
அந்தமும் ஆதியும் அற்றவ வான்மி யமர்ந்த கறைக்
கந்தர வென்கிலர் பூச்சுமை யேயிக் கயவர்களே. 28

கயலன்ன கண்ணி திரிபுரை பாகவுன் கான்மலரை
முயங்கிய மாணிப் பொருட்டால் யமனை முனிந்துதைத்தாய்
அயன் தலைகொய்திட் டனங்கன் உருவை யனற்படுத்தாய்
புயல்திகழ் வான்மிப் புரியமர் செல்வ புராந்தகனே. 29

அந்தமில் வாழ்வினுக் குண்டென் றறிந்தும் அமைந்துநிற்கும்
பந்துக்க ளும்பிற ரும்முதவா ரெனப் பார்த்திருந்தும்
எந்தையுன் தன்னை நினைந்திலர் வான்மி யிருந்தருளும்
சுந்தரி பாகநின் தாள்கதியென்று துணிவுகொண்டே. 30

துணியார்நின் கோயில் வலம்வரப் பாதத் துணை மலரை
பணியார் சிரத்தில்நின் சீரைப் புகழ்ந்துரை யாடுகிலார்
செவியார் புயத்தநின் பல்புகழ் கேட்டுனைப் பாவிக்கிலார்
கணியாப் புகழ்கொண்ட செல்வா திருவான்மிக் கற்பகமே. 31

கற்பகம் ஆன்ற கருணைக் களஞ்சியம் கார்க்குழலி
பொற்பக மான திரிபுரை காவலன் பொய்தவிர்ந்திட்
டற்பகம் கொண்ட அடியவர்க் காரமு தாகுமவன்
தற்பரன் வான்மித் தலத்துறை தாயன்ன சங்கரனே. 32

சங்கக் குழையன் தவத்தினர் பன்னியர் தம்மை யந்நாள்
பங்கப் படுத்தவர் ஆணவம் தீர்த்தவன் பாரழிந்த
சிங்கந் தனையோர் சரபம் என நின்று செற்றவன்காண்
கங்கைச் சடையன் திருவான்மி யூர்நகர்க் காரணனே. 33

காரணன் மூவுல கங்கட்கும் தத்தம் கருமமதால்
நாரணி யெய்தும் உயிர்ப்பன்மை கட்குத் தனுகரணம்
பூரண போகம் இவைநல்கி முத்தி புணர்த்துவன்காண்
வாரணத் தீருரி போர்த்தவன் வான்மி வளர்வள்ளலே. 34

வள்ளாலுன் பாதம் வணங்கிலர் உன்றன் வளர்சிறப்பை
யுள்ளாருன் கோயி லுழை யணு காரடி யார் குழுவை
நள்ளாரெல் லாமுன் செயலென்று ஞர் நமன் நண்ணிடுங்கால்
கள்ளார் குழலியொர் பாகா விவர்தமக் கார்துணையே. 35

கார்மேக வண்ணனைப் பாகத்துக் கொண்டு கருங்குழலி
வார்மே கலைகொள் திரிபுரை தன்னைவா மத்தமர்த்தி
நேர்மே வலரைப் படுத்தடி யார்க்கருள் நின்மலனே
நீர்மேவு செஞ்சடை வான்மித் தலத்துறை நதியனே, 36

நீதியன் வான்மித் தலத்துறை நீர்மையன் நேரிழையோர்
பாதியன் வேழ முகத்தன் தனைப்பெற்ற பண்ணவன் மெய்ச்
சோதியன் மெய்ப் பொருள் செல்வக் குமரன் சொலவிழைந்த
வேதியன் ஓங்கல் மருமகன் நீறணி வித்தகனே. 37

வித்தகன் வான்மி விதரணன் அன்பர் விழைவதருள்
உத்தமன் என்பணி மார்பன் உவணனொ டன்னமிவர்
சுத்தக் கமலைதன் பாகனும் வேதனும் தோத்திரம் செய்
அத்தன் திரிபுரை கேள்வன் வழுத்துநர்க் காரமுதே. 38

ஆரா வமுதன் அகில புவனம் அழித் தளிப்போன்
பேராக் கருணையன் வெவ்வினை தீர்த்தின்பம் பெய்ய வல்லோன்
காரார் குழலி திரிபுரை கொண்கன் கடல் வான்மியூர்
நீராரும் செஞ்சடை வெள்விடை யூர்ந்தருள் நின்மலனே. 39

நின்மலன் தீர்த்தன் நிராமயன் நிர்க்குணன் நீலகண்டன்
பொன்மலை வில்லன் புரங்கள் எரியிட்ட புங்கவன்செந்
நெல்மலி யும்வயல் நீள்கவுக்கோடு நிறைந்து நிற்கும்
பொன்மகிழ் வான்மிப் புரிவதி வோன் செல்வப் புண்ணியனே. 40

புண்ணியன் சுந்தரி பாகன் புராதனன் பூங்கடுக்கைக்
கண்ணியன் தக்கன் மகத்தைச் சினந்து கலைத்தழித்தோன்
தண்ணியன் மாமதி தன்னைச் சிரங்கொண்ட தாதைதனை
யெண்ணி யவர்விழை யெப்பேறும் ஈயும் இறையவனே. 41

இறைவ வெனக்கு னடிபோற்று முள்ளத் தினையளித்த
பிறைவதி செஞ்சடை யீசா மருந்துப் பெயரண்ணலே
குறையுள னேனும் மதியில னேனும் குறிக்கொளெனை
மறைவலர் வாழும் திருவான்மி யூருறை வானவனே. 42

உறைவா னடியர்தம் உள்ளத்தும் மேருவின் உச்சியிலும்
மறைவாணர் இல்லிலும் பொன்னம் பலத்தும்என் வன் மனத்தும்
கறைவாழ் தருகண்டன் வான்மிப் பெருநகர்க் கண்ணுறை வோன்
பிறைவா ணுதலியொர் பங்கன் மருந்தீசப் பேரண்ணலே. 43

அண்ணலுன் கோயில் அணுகார் வலம் சுற்றி யாநந்தியார்
எண்ணருந் நாமம் இயம்பாருன் சீர்ப்பதத் தேபணியார்
பண்ணுர் இசைகொண்டு பாடார் மறலி படர்வரின்தீ
வண்ண திருவான்மி யூரா விவர்க்கெவர் வன்புகலே.. 44

எவரேனும் நீற்றுடன் கண்டிகை மேற்பூண் டெழுந்தருளின்
அவரே நமையாட் கொளுமவர் என்றுள் ளகத்திருத்திச்
சிவனே யிவரெனச் சிந்திப் பவருளத் தேகுடிகொள்
பவனே திருவான்மி யூரா வருளார் பசுபதியே. 45

பதியேயுனு நாமமென் நெஞ்சக் கழனியில் பாக்களுடன்
துதியேனுன் ஆலயம் சூழ்வந்தி லேன்புகழ் சொல்லுகிலேன்
விதியேன் பிறந்திருந் தெய்ப்பேன் புனையொன் றும் பேணுகிலேன்
கதியே தெனக்குத் திருவான்மி யாயுன் கழலன்றியே. 46

அன்றுடம் பண்டிப் பெருமான் பொருட்டிங் கலைந்துழல்வேன்
உன்றாள் நினைவெனக் கென்றுமின் றலிடை யூறுபல
குன்றுட கங்கொண்டு முப்புரம் தீயிட்ட கொற்றவனே
மன்றுடி வான்மி வளநகராய் விழிவைத் தருளே. 47

அருளே யுனது வடிவென்பர் அன்புரு வாகுமென்பர்
இருளே நிறைந்தவென் உள்ளத் தொளிதந் திரங்கி யென்றன்
மருளேகச் செய்தருள் வான்மியில் வாழும் அரும்பொருளே
சுருளேர் குழலி திரிபுரை பாகங்கொள் தொன்மையனே, 48

தொன்மைய பொன்வெள்ளி யோங்க லிருப்புன் துணையெழுவன்
மன்னும் இருநிதிக் கோமான் இருவர் மகவுனக்குப்
பன்னும் இருநாழி நெற்கொண் டுலகளிப் பான்மனையாள்
என்னே கபாலத் திரப்பது வான்மி யிருந்தவனே. 49

இருந்தவ மேற்கொண் டிடுவார் உணவின்றி யேயிருப்பார்
பெருந்தலம் தீர்த்தங்கள் பேணிநின் றல்லல் பெரிதுழப்பார்
முருந்திள மூரல் திரிபுரை நாதவொரு தடவை
மருந்தெனக்கூற வரும்யாவு மென்றுளம் வைத்திலரே. 50

வைத்தேன் மகளி ரிடத்தென் மனத்தை மகிபொருட்கா
எய்த்தேன் அலைந்தலைந் தென்னது யானெனும் எண்ணத்திலைல்
பொய்த்தேன் அழுக்காறு பூண்டே பிறர்க்குப் பொல் லாங்
கிழைத்தேன்
தெத்தேயென அளி சூழ்சோலை வான்மிச் செழுஞ்சுடரே. 51

ஏதத் திருக்கை யகந்தைச் கிருப்பிடம் ஊனமெனும்
சோதத்தின் பெட்டகம் காமம் வளரும் குடிலகம்நற்
போதம் சிறிதுமில் பேதையென் உள்ளம் புகுந்தருளாய்
சீதமதி புனை வான்மித் தலத்துறை சீரியனே. 52

சீரியன் நஞ்சுண் டமரரைக் காத்தருள் செய்துநின்ற
வீரியன் வையைக்கண் மண்ணுஞ் சுமந்தடி வேட்டுநின்றோன்
நேரிழை யங்கயற் கண்ணி மணாள னிமலனிம்பத்
தாரன் திருவான்மி யூரிற் றிகழ்தரும் தாண்டவனே. 53

தாண்டவன் ஆளுடைநம்பி திருமனத் தைத்தடுத்தே
யாண்டவன் பாம்பு மதியும் நதியும் அறுகெருக்கும்
மாண்டவர் என்பும் மணிந்தவன் வான்மி வளநகரான்
காண்டற் கினியன் விடைப்பரி யூரும் கவுரியனே. 54

ஊரில்லை யுற்றார் உறவில்லை பெற்றெடுத் தோருமில்லை
பேரில்லை யாயிரம் பேரவன் என்பர்பே ரம்பலத்தே
நேரில் நடஞ்செயும் வான்மித் தலத்துறை நீர்மையனைக்
காரியல் கண்டனை யேத்துமின் மேலாம் கதிகிட்டுமே. 55

மேதிப் பரியனும் வெள்ளன்னம் ஊரும் விதிமகனும்
காதிக் கயிறெழுத் தாணிகொண் டென்பாற் கடுகுவரோ
சோதியன் வான்மித் திருநகர்ச் சுந்தரன் சுந்தரிசேர்
பாதியன் கால்கரம் தந்த கடுந்துன் பதைமறந்தே. 56

மறந்தரு தீநெறி சேர்வர் உயிரை வதைத்தலைவர்
அறந்தரு மேலவர் பாலணுகார் அருள் அன்பிலராய்ப்
பிறந்த பயனைப் பெறநினையார் பெரிதும் பிழைப்பர்
சிறந்தவர் வாழும் திருவான்மியூரநின் சேவைவிட்டே. 57

சேயைப் பயந்த குரவர் மகிழ்வுடன் செய்தமைத்த
தூய வுணவை விழைந்துநின் றுயுனைத் தூயசைவன்
ஆயவன் என்குவர் ஈதென் வழக்கறி நல்லறிதால்
வேயன்ன தோளியோர் பங்கா திருவான்மி வேட்டவனே. 58

வேட்டார்க்கு வேட்ட தளிக்கும் தருவும் விதிவலிதேல்
மாட்டாது நன்மை விளைத்திட வெண்பரிம் மண்ணிடத்துன்
தாட்டா மரையிற் பணிவார்க் கிருமையும் தந்துமுத்தி
கூட்டா நிற்கும்முன் குரைகழற் கொப்புமை கூறரிதே. 59

அரியன் அமரர் தமக்கும் எளியன் அடியவர்க்குக்
கரியன் விழிமலர் சார்த்தத் திகிரி கனிந்தனித்தான்
பெரியன் புராணன் உமையொரு பாகன் பிறப்பிறப்பில்
எரியன்ன மேனியன் வான்மித் தலம்புரிந் தேற்றவனே. 60

ஏற்றான் இரவினை யேற்றனெர் பார்ப்பா னிடர்தவிர்ப்பான்
மாற்றா னெனவந்த கூற்றை யுதைத்தான் வனப்புமிகு
நீற்றான் நிலவணி செஞ்சடை யான்மருந் தீசனடி
போற்றார் புலையர் பிறரல்லர் உண்மை புகன்றிடினே. 61

மையார் விழியர் தனத்திடத் தேமிக மையல்கொண்டு
பொய்யான இன்பம் புரிந்தலைந் தேனினிப் புந்தி கொண்டேன்
மெய்யான இன்பம் விளைப்பதுன் தாளன்றி வேறிலையென்
றையா திருவான்மி யூரரசேயெனையாண்டு கொள்ளே. 62

ஆண்டு முதிர்ந்தும் அறிவு முதிரா தலக்கணுற்றேன்
வேண்டுவ வெல்லாம் அளிக்கும் கருணை விரிகடலே
காண்டற்கும் உன்னை விழையேன் உன் சீரிற் கருத்துவையேன்
ஈண்டெனைப் போல் மட வாரார் திருவான்மி யீச்சுரனே. 63

ஈயாத புல்லன் அறத்தா றிதுவென் றினுமறியேன்
ஆயாதுன் பேரருள் பொன்மாதர் பூமிக்கண் ஆசைவைத்தேன்
தீயாடு நைய திருவரன்மி யூர திருத்தியெனைத்
தூயா நின் பாதத் தினியன்பு கொள்ளத் துணிந்தருளே. 64

அருளிற் சிறந்த திருவேடம் நின்னடி யார்வடிவம்
தெருளுற் றுணர்ந்திதைச் சீரடியார் குழுச் சேர்ந்து நிதம்
பொருளுற்ற சொற்கள் செவிக்கொண்டு போற்றியென்
புன்மையெனும்
மருளற்றிடச்செய் திருவான்மி யூருறை மாணிக்கமே. 65

மாணிக்க வாசகன் தன்பாலன் பின்றென்று வந்துரைத்தான்
ஆணிக் கனகப் பொதுநடத் தோய்கலப் பற்றபொய்யே
வேணிக் கவின்சடை யீசயான் அன்பிலன் மெய்யிதெனே
பேணிக் கடைக்கணித் தின்பருள் வான்மிப் பெருந்தவனே. 66

பெருங்காற் றெரியிலென் பூமிகம் பிக்கிலென் பெய்மழைகள்
வருங்கால் உருமிடிப் பேரொலி கேட்கிலென் வாரிதிரு
தருங்கால் உலகம் தலைதடு மாறிலென் நஞ்சமுண்ட
கருங்காள கண்டன் திருவான்மி யன்னடி கண்ணுநர்க்கே. 67

கண்ணால் அரன்றனைக் காணு கிலார்கை கொடுவணங்கார்
பண்ணார் இசைமலி நால்வர்கள் பாட்டைப் பரிந்துகொண்ட
தண்ணார் கடுக்கையன் வான்மித் தலத்துறை சங்கரனை
யெண்ணார் பலகோடி எண்ணுவர் தம்செய லென்செயலே. 68

என்செய லேதுமின் றெல்லா மிறையவ நின்செயலே
புன்செயல் நன்செயல் கண்டறி யேனுன்றன் பொன்னடியில்
முன்செயும் செம்பணி செய்வேன் முனைப்புற்றுனை மறவேன்
நன்செய் நிறைந்தொளிர் வான்மித் தலத்துறை நல்மருந்தே. 69

நல்லார் இணக்கம்தனை விழைவேன் பிறர் தம்மை யுறேன்
பொல்லாங் கனைத்தையும் போக்க முயல்வனுன் பொற்புகழைக்
கல்லா தவரைக் கருதே னுனதருள் கைவரினே
அல்லாரும் கண்ட திருவான்மி யூருறை அச்சுதனே. 70

அச்சுதன் முக்கணன் கண்டிகை நீறு மணியழகன்
நச்சர வத்தினைப் பொற்றொடி பொற்கழல் நாணரையில்
கச்சை யெனக்கொளும் கண்ணுதல் ஓட்டிற் கவின் மறுகில்
பிச்சை புகுதரும் வான்மித் தலத்துறை பித்தனன்றே. 71

பித்தன் வனத்து முனிமனை யார்மனம் பேதுறச்செய்
கத்தன் முயலகன் தன்னை வதைத்துக் கரியுரிகொள்
நித்தன் மழுக்கையன் வான்மித் தலத்து நிலவுமரன்
பத்தர்க் கருள்தரு பால்வண்ணன் பேர்கொள் பரம்பரனே. 7[illegible]

பரனே வடநிழற் பால்நால்வர் தேற மவுனமதாய்க்
கரத்தா மலக மெனப்பொருள் காட்டினை காதகராம்
புரநே ரலரை யழித்தனை வான்மிப் புரிவதியும்
அரனே திரிபுரை பங்கா பவத்திற் கருமருந்தே. 73

தேனே புரையும் திருமொழிச் சுந்தரி தேவிமகிழ்
கோனே குமரனைத் தந்தே சுரரிடர் கொன்றவனே
வானே நிலனே கதிரே மதியமே வான்மியுறை
ஆனேற்றுக் கேதன ஆனஞ்சு கொண்டருள் ஆரணனே. 74

ஆரணங் கையிடத் தேயமைத் தோன்புவ னம் மமைத்த
காரணன் பொற்பொது விற்புலி பாம்பு களிக்கநடம்
நாரதன் தும்புரு யாழிசைச் சசற்ப நடித்த பரன்
தாரணி வாழ்தர வான்மித் தலத்தமர் நன்மருந்தே. 75

தேனார் கடுக்கை புனைவோன் மழுவும் தெறித்தநவை.
மானார் கரத்தன் மதிப்பிஞ் சணிந்து மகிழ்சடையன்
பானுளிற் சுந்தரன் வேண்டப் பரவை யிடம்படர்ந்த
வானார் கருணையன் வான்மியின் வாழும் மறையவனே. 76

வாழ்த்தும் படியெழில் நாவளித் தாய்கை வணங்க வைத்தாய்
தாழ்த்தும் படிக்குயர் சென்னியை வாய்புகழ் சாற்றவைத்தாய்
சூழ்த்து நல்வண்டு முரலும்பைந் தாரணி சுந்தரனே
பாழ்த்த பிறவியைப் பாற்றுக வான்மிப் பதிப்பரனே. 77

பதிக்கில ரைந்தெழுத் தையுள்ளம் தன்னில் பரவியுனைத்
துதிக்கிலர் தொண்டு புரிகிலர் நின்னடித் தொண்டர்தமை
மதிக்கிலர் நின்புகழ் பாடிலர் வான்மி வளரரசே
விதிக்குள் அகப்பட் டுழல்வர் பிறவி வியன்கடற்கே. 78

கேதம் தரும்பவம் பாற்றிட வேண்டிற் கிரிமகள்சேர்
நாதன் திகழ்பொதுக் கூத்தன் அமரர் தணிந்துபணி
பாதன் திருவான்மி யூரில் வதிந்தருள் பாக்கியத்தை
நீ தருக் கோட்டித் துதிமனமே யுப தேசமிதே. 79

தேசும் நிதியும் மதியொடு கல்வி நிறையுளமும்
பேசும் புகழும் நிறையா யுளும் நன்று பெற்றுறைவீர்
வாசக் குழலி திரிபுரை கூடி மகிழ்தருமவ்
வீசன் திருவான்மி யூரன் திருவடி யேத்துமினே. 80

மின்னல் அனையது செல்வம் உடல மிளமைநிலா
தென்ன விருந்தவ னின்றிலை யென்னும் நிலையுணர்விர்
பொன்னன்ன மேனிய னன்பர்க்கெப் பேறும் புரிந்தருள்வோன்
தன்னிக ரில்லவன் வான்மி மருந்தடி தாழ்மின்களே. 81

மின்னே ரிடையும் விரிபூங் குழலும் விழை நுதலும்
தன்னே ரிலாத கருணையும் கொள் சுந்தரியுடனே
பொன்னேர் திருமேனி வான்மிப் பெருநகர்ப் பூரணவென்
முன்னே யெழுந்தருள் பால்வண்ணப் பேர்கொண்ட முன்னவனே.

முன்னவன் தேவர்க்கும் மாலய னுதி முனைவருக்கும்
தென்னவ னுகித் தடாதகை யைமணந்தே மதுரைத்
தொன்னகர் ஆண்ட நற்சுந்தரன் வான்மியூர்ச் சுந்தரியாள்
தன்னுடன் காட்சிதந் தேயருள் கூரும் தனிமருந்தே. 83

கூராழி மாயவன் ஓர்பாதி யாகக் குணக்கடலாம்
வாராள் தனத்தி யொருபாதியாக மலர்க் கடுக்கைத்
தாரா னிசைந்திரு தேசமொன் றுயினன் தண்கடல்சேர்
சீரார்ம் வான்மி மருந்தீசன் என்னும் திருவுருவே. 84

உருக்கிய செம்பொத் தொளிர்வன் மிளிரும் ஒளிச் சடையான்
திருக்கற் றவருளம் கோயில்கொண் டாளும் திருவனவன்
மருக்குழல் சுந்தரி வாமன் திருவான்மி வாழ்தருவன்
கருக்குழி போக்கும் மருந்தினை யானின்று கண்டனனே. 85

கண்டேன் மருந்தைக் கவலை பிணிமிடி கையறவை
விண்டேன் பிறிதொன்றும் வேண்டுகி லேனற மேபுரிவேன்
பண்டே புரிந்த பழவினை தீர்த்துப் பதம் பெறுவேன்
தொண்டே புரிந்தெழில் வான்மிப் பதிதிகழ் தூயனுக்கே. 86

தூயன் துறவோர் துணைவன் வினையின் தொடக்கறுப்போன்
சேயன் குமரன் முதிய னெனநின்ற சித்தனவன்
நேயன் நினைபவர் நெஞ்சக லாத நிமலனுயர்
தாயன்ன வன்திரு வான்மித் தலத்துத் தழைதருவே. 87

தருவென்றும் சிந்தா மணியென்றும் ஆவென்றும் சாற்றி நின்றும்
பொருவில் மதனென் றும் இந்திர னென்றும் புகன்று மண்மேல்
மருவிய லோபரைப் பாடினன் வான்மி வளம்பதியாய்
இருவினை தீர்க்கும் திருவநின் பாதவிணை மறந்தே. 88

இலையாரும் இன்றிப் பொதுவினில் ஐந்தொழில் ஏற்றவனே
கலையாக மாற்கொண்ட கண்ணுத லேபுரங் கள்ளெரித்தாய்
புணையாகும நின்னடி வெம்பிற விக்கடல் போக்கு தற்கென்
றணையார்நின் பக்கல் திருவான்மி யூர அறிவிலரே. 89

அறிவார் உலகப் பனுவல் பலவு மகங் களிப்பார்
பொறிவா தனையற நீயருள் நூல்கள் புரிந்து கல்லார்
செறிவா னுதலியொர் பங்கா திருவான்மிச் செம்பொருள் நல்
நெறிவாழ் நருக்குப் பரமுத்தி யீயும் நெடுந்தகையே. 90

ஈயேன் சிறிது பொருளேனும் வேண்டி யிரந்தவர்கு
நாயேன் பிறர்க்கொரு வேலை யுணவதும் நல்கி நில்லேன்
வேயே நிகர்த்த மென் தோளி பங்கா வியன்வான் மியெனும
தூய தலத்து மருந்தே ஒளி திகழ் சோதியனே. 91

சோதியன் அம்பலமைந்தி னடித்தருள் தொல் நடன்பெண்
பாதியன் இன்னருள் பாலிப்பன் தாளிற் பணிகு நர்க்கே
வேதியன் வான்மி வியனகர் ஈசன் விரி புகழை
யோதி யன்பால் விடை யீமின் விதிசெய்யும் ஊழலுக்கே. 92

விதியால் நிகழ்வன யாவுமென் பார்மனம் வெந்து மூல்வார்
மதியால் விதியையும் வெல்லுதும் மென்று தம் மார்தட்டுவார்
பதியால் நிகழ்வன வின்பதுன் பென்று பகுத்தறியார்
நதியார் சடைய திருவான்மி யூரத்த நாரியனே. 93

நாரியர் பால்மனம் வையா தவர்க்கே நடந்து முத்தி
நேரிதின் ஈவோம் எனச் சொல்லு நீயொரு நேரிழைபால
ஓரியும் கண்ணயர் நள்ளிர வில்லடி யோன் பொருட்டாச்
சீரிய தூதெனச் சென்ற தென்வான்மித் தியாகையனே. 94

மையா றிரண்டுடைக் கந்தன் மறையின் கருப்பொருளைத்
துய்யா வுன துபயமீ திருந்து தொகுத் துரைப்ப
ஐயா மகிழ்ந்தனை யுன்னன் பின் தன்மை யளப்பரிதால்
செய்யார் திருவான்மி யூர்குடி கொண்ட திகம்பரனே. 95

திகம்பரன் வான்மித் தலத்தன் திரிபுரை நேயனவன்
இகம்பரம் அன்பர்க் கினிதளிப் போன் மருந் தீசனவன்
சுகம்பெற வேண்டின் பிறவிப்பிணி தொலைந் துய்ய வெனின்
நகம் பயந்திட்ட உமைநா தன் பாதம் தலைக் கொண்மினே. 96

கொண்மின் சிரத்தில் மருந்தீசன் தாளிணை கொண்டு நிதம்
உண்மின் அவற்குநி வேதித் தடியவர்க் கூட்டிய பின்
விண்மின் அனையவிவ் யாக்கையைப் பேணல் விடுத் துளத்தில்
எண்ணுமின் அன்பர் பிறப்பறுக் கும் அருள் ஏந்தலையே. 97

ஏந்தால் உனக்கொரு விண்ணப்பம் மக்க ளிருவ ருளர்
பூந்தா ரணியிரு நாழி நெற்கொண்டு புரப்ப ளில்லாள்
தேந்தா ரணியும் தனதனின் அன்பன் தெருத் தெருவாய்ச்
சேர்ந்தைய மேற்றல் தவிர்வான் மியம்பிகைசேர் பரனே. 98

அம்பிகை பங்கன் அருளுரு வான அமலனவன்
தும்பிக்கை யானை முருகனைத் தந்தருள் தொன் மையினான்
பம்பும் புகழன் திருவான்மி யூருறை பார்த்திபனும்
நம்பியை வான் மருந் தீசனைப் போற்ற நைவண்ணமின்றே. 99

வண்ணத் திரிபுரை வாமன் திருவான்மி வள்ளலொரு
வண்ணமும் பேருரு மில்லாதவன் எழிற் பால்வண் ணனும்
அண்ணல் நனைவர தன்புனை ந் தேத்துமந் தாதியிது
பெண்ணொடு பாகன் மருந் தீசனார் புகழ் பேசுவதே. 100

மருந்தீசர் திருவடிகளே சரணம்.

முருகன் துணை

# முருகன் வாவாப் பதிகம்

## காப்பு

பூவாழ் தருவோர் புகலாகும் வேலன்மேல்
வாவாப் பதிகம் வகுத்திடுவேன் — தேவாதி
தேவன் திருநடத்தான் சேயாகும் கற்பகத்தின்
சேவடியைக் கொண்டென் சிரத்து.

## நூல்

ஆரணவா செய்ய வறுமுகவா நோய்பலநி
வாரணவா செந்திலுறை வாணவா — காரணவா
வீரவா வென்னில் விளங்கவா வெவ்வினைகள்
தீரவா வேலேந்தி வா.

ஐயாவா செந்திற்சுப் பையாவா வேலேந்து
கையாவா மோகனசிங் காராவா — துய்யாவா
என்னவாத் தீர வெழுந்துவா வள்ளிமகிழ்
மன்னவா சத்திபுதல் வா.

அண்ணவா செந்தில் அமராவா பொன்போன்ற
வண்ணவா வள்ளிமண வாளவா — நண்ணார்க்
கசனிவா அன்பர்க் கமுதவா என்பால்
வசனிவா மால் மருகா வா. 3

ஐயவா மஞ்ஞை யமர்ந்துவா ஆரணத்தின்
மெய்யவா என்பால் விரைந்துவா — பொய்யவா
நீக்கவா அன்பு நிலைக்கவா வெவ்வினைகள்
போக்கவா ஆர்வம் புரிந்து. 4

மாலோன் மகிழு மருகவா மங்கையுமை
பாலோன்றன் பாலமரும் பாலவா — சீலமிகுங்
கந்தவா நெஞ்சிற் குகந்தவா வென்னுயிர்க்குச்
சொந்தவா நீயே துணை 5

காவலவா செந்திற் கதிபவா செம்புகழ்சேர்
பாவலவா என்பாற் பரிந்துவா—நாவலவா
நாதவா மஞ்ஞையிவர் நம்பவா பங்கயப்பொற்
பாதவா வேல்முருகப்பா. 6

வேலவா சத்தியருள் விண்ணவா தேவரநு
கூலவா வள்ளிக் குறவவா—நீலவான்
மஞ்ஞைமிசை வாவெந்தன் வல்வினையைத் தீர்க்கவா
சங்கடங்கள் தீரவரந் தா. 7

பாடவா என்றன் பருப்புகழை யெந்தனுடன்
கூடவா பாடிக் குதிக்கவா—சூடவா
யானுதவும் பாமலரை யாடுமரன் வாமமுறை
மானுதவும் செவ்வேல வா. 8

புலவவா செந்திற் புனிதவா செல்வம்
நிலவவா நல்வாழ்வு நீதா—கலவ
மயில்மிசைவா பன்னிருகை வானவவா கூர்மை
அயில்மிலையும் ஆறுமுகா வா. 9

நிருதவா சாந்தி நிறுவவா நல்லாண்மை
சீராநம் புகலுமெழிற் புண்ணியவா—சீராநம்
புகழவா மஞ்ஞைப் புறத்துவா யரனுள்
மகிழவா வள்ளிகண வா. 10

நூற் பயன்

நாளும் பயில நவைதீரும் இன்பமுண்டாம்
கேளும் பொருட்செல்வம் கிட்டுமால்—கோளிழைக்கும்
இன்னா லிரியும் இனிமையுற வேலவர தன்
பன்னு துதியைப் பரிந்து.

செந்திலாண்டவர் துணை

# முருகன் வேற் பதிகம்

பூமகள் கேள்வன் புகழ்மருகன் செந்திலுறை
கோமகன்றன் வேற்பதிகங் கூறவே—ஏமமுறப்
பாவடியான் கொள்ளப் பரிந்துதவுந் தில்லைவளர்
பாவடியானைக்கற் பகம்.

## நூல்

சக்திவேல் வாட்டம் தவிர்க்கும்வேல் இன்பருளும்
முத்திவேல் செந்தில் முதல்வன்வேல்—புத்தியுளோர்
பன்னும்வேல் சான்றோர் பணியும்வேல் பல்கதிரின்
மின்னும்வேல் சண்முகன்கை வேல். 1

உட்ககற்றும் வைவேல் உறுபகையைத் தீர்க்கும்வேல்
வட்காரை வாட்டிவதைக்கும் வேல்—புட்கிரியைக்
கீண்டவேல் தேவர்க் கினியவேல் மற்றவர்கள்
வேண்ட வரமீந்த வேல். 2

வன்னவேல் இன்பம் வளர்க்கும்வேல் மின்னொளிசேர்
சொன்னவேல் அன்பர் துதிக்கும்வேல்—இன்னலறப்
போக்கும்வேல் மாறாப்புனிதவேல் வென்றிதனை
ஆக்கும் வேல் ஆறுமுகன் வேல். 3

வேலை சுவற விடுத்தவேல் விற்புருவ
மாலைக் குறத்திவிழி மானும்வேல்—மாலகற்ற
வந்தவேல் கொல்லுலைமே வாதவேல் நீதிபுரி
விந்தைவேல் குன்றெறிந்த வேல். 4

கூர்மைவேல் மாற்றார் குருதி தனிற்படிவேல்
நேர்மைவேல் அன்பர் நினைக்கும் வேல்—போர்முகத்துக்
கொற்றவேல் சூரனுயிர் கொண்டவேல் வாகைபுனை
வெற்றிவேல் சீர்க்குமரன் வேல். 5

ஆரணத்தான் தீட்டை யழிக்கும்வேல் நீள்புழைக்கை
வாரணத்தான் வாழ்த்தி மகிழும்வேல்—தாரணியை
வாழ்விக்க வந்தவேல் வல்வினையை வெம்பவத்தை
வீழ்விக்க வந்தவடி வேல். 6

செய்யதுதி கொண்டு சிறந்தவேல் நல்லருளைப்
பெய்து மகிழ்வூட்டும் பெரியவேல்—நையவரும்
வாத முதற் பிணியை மாய்க்கும்வேல் தன்னிகரில்
வேத மகிழ்ந்துபுகழ் வேல். 7

நல்லவேல் போகங்கள் நல்கும்வேல் துன்பகற்ற
வல்லவேல் பேராண்மை வாய்ந்தவேல்—சொல்லரிய
ஏற்றமிகுந்த வெழில்வேல் குகன் கரத்தில்
வீற்றிருக்கும் தெய்வவடி வேல்.

இன்றையிடர் போக்கும் இனியவேல் சின்னைகள்
சென்று வருந்துயரந் தீர்க்கும்வேல் துன்றுபொய்
வஞ்சனைகள் அற்றார் வணங்குவேல் மாற்றலரை
வெஞ்சமர்க்கண் வீட்டு மயில்வேல். 9

அள்ளிலைவேல் வானோ ரரசருள் தெய்வானையுடன்
வள்ளி மகிழுங்குமரன் மானவேல்—துள்ளியெழுந்
தன்பரிடர்தீர வருளும்வேல் பல்கோடி
மின்படிந் தென்ன வொளிர்வேல். 10

நூற் பயன்

வரதன்கை வேலின் மகிமைதனைச் சொன்னவ்
வரதனிந்த நூலோது மன்பர் - சரதம்
நிதிபெருக வாட்டும் நிரப்பிடும்பை நீங்க
மதிபெருக நீடுவாழ் வார்.

இன்பம் பெருகும் இடர்போம் நல்வாழ் வெய்தும்
பொன்மல்கும் வெம்பிணிகள் பொன்றுமால்— அன்பரென
மாற்பிரமன் போற்றும் வயக்குமரன் கைக்கணியாம்
வேற்பதிகம் ஓதீர் விழைந்து.

உ

செந்திலாண்டவன் துணை

# முருகன் மயிற் பதிகம்

பாலகுகன் செந்திற் பரமன் றனைப்பரிக்கும்
கோல மயிற் பதிகங் கூறுவேன்—ஞாலமுய
ஆடும் நடத்தன் அணிதில்லைக் கற்பகத்தின்
ஏடவிழ்பூந் தாள் வணங்கி யே.

## நூல்

நீலமயில் காந்தி நிலவுமயில் நீள்கடப்பஞ்
சோலைமயில் ஆடிவருந் தோகைமயில்—ஆலமயில்
அண்ணல் மகன்முருகற் கானமயில் கானமயில்
வண்ணமயில் சேவல் மயில். 1

ஆலுமயில் வாகை யணியுமயில் காந்தாரத்
தோலுமயில் வானின் உயருமயில்—ஞாலமெல்லாம்
ஓர்கணத்திற் சுற்றிவரும் ஓங்கார ரூபமயில்
வார்கழலோன் வேலன் மயில். 2

கையாறிரண்டுடையோன் கண்ணுமயில் மூவுலகும்
வையாளி வந்து மகிழுமயில்—ஒய்யார
மாக வுலவுமயில் மால்மகடன் சாயலுடன்
நாக மஞ்சு மாகமயில். 3

அன்றசுர ரஞ்ச வதிர்ந்தமயில் மாற்றலரைக்
கொன்றமயில் காரிற் குனிக்குமயில்—என்றுமின்பம்
செய்யுமயில் கொண்டை சிறந்தமயில் நீர்புடைசூழ்
வையமுய்ய வந்த மயில். 4

சூரன் உடல்துணியத் தோன்றுமயில் பேராண்மை
வீரன் முருகனிவர் வீறுமயில்—வாரமுடன்
போற்றுவார் நெஞ்சிற் புகுதுமயில் வெம்பிறவி
மாற்று மினிய மயில். 5

ஆரணமே ஓர்வடிவ மானமயில் தூம்புடைக்கை
வாரணத்தான் வாழ்த்தி மகிழுமயில்—பேரருளைப்
பெய்யு முகில்போன்ற பிணிமுகப்பேர் கொண்டமயில்
மையல் தவிர்க்கு மயில். 6

ஏறுமயில் அன்பர்க் கிரங்குமயில் எத்தனையோ
தூறுமயில் ஓர்நொடியி னேடுமயில்—நீறணிந்து
நிற்குமயில் போதம் நிலேத்தமயில் ஆறெழுத்தைக்
கற்குமயில் கான மயில். 7

நாலுமறை போற்றும் நடனமயில் மேதியிவர்
காலனெனைப் பற்ருது காக்குமயில்—சூலமங்கைக்
கொண்டான் குரவன் குகனுற் கிசைந்த விசை
வண்டா ரணிந்த மயில். 8

தையலார் சாயல் தழுவுமயில் மாதர்மால்
மையலார் காணவொண்ணு மாயமயில்—மொய்யமர்க்கண்
முன்னின்ருென் ஞரை முருக்குமயில் செந்திலுறை
மன்னனுர் ஏறு மயில். 9

கூர்அலகால் வெம்பகையைக் குத்திக் குமைக்கு மயில்
ஆரமுதம் போற்று மன்பர்க் கானமயில்—தோரணங்கொள்
வாயிலலே வாய்முதலா மாறுபடை வீட்டினுறை
வாய மயில் நேய மயில். 10

நூற் பயன்

அன்பன் வரதன் அறைந்த மயிற்பதிகம்
இன்பமுடன் கற்பார்க் கிசைவளரும்—துன்பகலும்
வாழ்வார் மகவு பெற்று மாண்பார் நிதிபெருகத்
தாழ்வகன் ருயுள் தழைத்து.

---

# செய்யுள் முதற் குறிப்பகராதி


அ
அச்சுதன்
அண்ணுலுன்
அந்தமில்
அம்மிசை
அரியன்
அருளேயுளது
அறிவார்
அறிவாற்
அற்புதன்
அன்ருடம்
ஆ
ஆடுமின்
ஆண்டுமு
ஆரணங்கை
ஆராவமுதன்
இ
இணையாரும்
இருந்தவ
இருப்பது
இல்லாமை
இறைவ வெனக்கு
ஈ
ஈயாத
ஈயோன்
உ
உருக்கிய
உறைவான்
ஊ
ஊரில்லே
எ
எண்ணுனுள்
எய்தாருள்
எவரேனும்
என் செயவேது
ஏ
ஏதத்திருக்கை
ஏந்தாய்
ஏற்ருன்
க
கண்டேன்
கண்ணுர
கண்ணுல்
கயலன்ன
கற்பகம்
கா
கார்மேக
காரணனள்
கூ
கூராழி
கே
கேடு
கேதந்தரும்
கை
கையாறி
கொ
கொண்மின்
ச
சங்கக் குழை
சீ
சீரியன்
சு
சுந்தர
செ
செய்யார்
செய்வானின்
சே
சேயைப்
சொ
சொல்லார்
த
தருவென்னும்
தவத்தாற்
தா
தாண்டவன்
தி
திகம்பரன்
தீ
தீப்பட
து
துணியார்நின்
துணையென்
தூ
தூயன்
தெ
தெய்வம்
தே
தேசுந்
தேனுர்
தேனே
ந
நதியான்
நல்லாரி
நா
நாயகன்
நி
நின்மலன்
நீ
நீதியான்
நே
நேயத்தின்
ப
பதிக்கிலர்
பதியேனுள்
பரனே
பா
பாதியன்
பி
பித்தன்
பிருந்தா
பு
புகுவது
புண்ணியன்

பூ
பூரணன்
பெ
பெருங்காற்
பே
பேசிற்
ம
மத்துறு
மருந்தாகி
மறந்தரு
மா
மாணிக்க
மி
மின்னல்
மின்னப்
மின்னேரிடை
மு
முன்னவன்
மே
மேதிப்பரியன்
மை
மையார்
வ
வண்ணத் திரிபுரை
வள்ளாலுன்
வா
வாழ்த்தும்படி
வான்மதி
வாளுளும்
வி
வித்தகன்
விதியால்
வே
வேண்டார்க்கு
வை
வைத்தேன்


